உ

திருச்சிற்றம்பலம்

கச்சியப்பமுனிவரர்



இயற்றியருளிய

# தணிகைப் புராணம்

கா. நமச்சிவாய முதலியார்

பதிப்பித்தது

சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1927

விலை ரூபா ஐந்து

திருச்சிற்றம்பலம்

# கச்சியப்ப முனிவரர் சரித்திரம்*

வேற்கரச்சேவ் வேண்மருவுந் தணிகைமான்
மியந்தமிழின் விளங்கச் செய்தான்
பாற்கவபு ராணமேழிற் றிருவானைக்
காவேனுஞ்சீர்ப் பதிப்பு ராணம்
நாற்கயிலை சூழ்பேரூர்ப் புராணமோடு
திருக்காஞ்சி நகர்ப்பு ராணம்
ஏற்கவட மொழிபெயர்த்த கச்சியப்ப
முனிவனிருங் கவிஞ ரேறே.

இந் நூலாசிரியர் பெயர் கச்சியப்ப முனிவர். ஸ்ரீகைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் மரபில் அநுக்கிரகம் பெற்றவரும், தமிழ்ப் பாஷை தழைத்து ஓங்கும்வண்ணம் அவதரித்த மஹான்களுள் ஒருவருமாய இச் சிரேஷ்டாசிரியர் இற்றைக்கு ஏறக்குறைய நூற்றைம்பது வருஷத்திற்கு முன், தொண்டை மண்டலத்திலே, தணிகைத் திருப்பதியிலே, காஞ்சிபுரத்துப் பரம்பரைச் சைவவேளாளர்* குலத்திலே, அபிஷிக்தர் மரபிலே அவதரித்து ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களோடு வளருவாராயினர்.

* இச் சரித்திரம் முதற்பதிப்பின் முகத்தில் செந்தமிழறிஞர் ராவ் பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்கள் எழுதியது.

தந்தை தாயர்களால் தக்க பிராயத்திலே வித்தியாரம்பஞ் செய்விக்கப் பெற்றுச் சிறிது கல்விகற்ற அளவிலே, அவர், சிவபுண்ணிய மேலீட்டினுலே, சிவக்ஷேத்திர யாத்திரை செய்யத் தொடங்கினர். தொண்டை நாட்டிலுள்ள சிவ ஸ்தலங்கள் யாவுந் தரிசித்துக்கொண்டு, சோழ நாட்டிலே விராட்புருடனுக்கு இருதயஸ்தானமாகிய சிதம்பரம் முதலிய திருப்பதிகளைத் தரிசித்தார். பின்னர், ஸ்ரீ ஞானக்கோமுத்தி நவகோடி சித்தவாசபுரம் அரசவனம் ஆதியாகிய திருப்பெயர்கள் பூண்ட திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, திருக்கைலாச பரம்பரைச் சித்தாந்த சைவ பானுவாகிய ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளைத் தரிசித்து, திருவருளைக்கஞ் சித்திக்கப் பெற்று, அப்பொழுது அத் திருமரபிற் சின்னப்பட்டணத்தில் எழுந்தருளியிருந்த ஞானசாரியராகிய பின்வேலப்ப தேசிகரை ஒடுக்கத்திலே போய்த் தரிசித்துப் பேரன்போடு வணங்கினர். வணங்கியபின், அந்த ஞானதேசிகரிடத்திற்றனே சைவசந்நியாசமும் சிவதீக்ஷையும் பெற்றுக்கொண்டனர்.

அங்ஙனம் சிவ தீக்ஷைபெற்ற கச்சியப்பமுனிவர், அகத்திய மஹாரிஷியின் வரத்திற் றென்னாட்டில் அவதரித்து, எளிதிலே வடமொழி தென்மொழிக் கடல்கள் கரைகண்டுணர்ந்து, அவ் வேலப்பதேசிகராகிய ஞானசாரியரிடத்தே அனுக்கிரகம்பெற்று, மெய்யுணர்வின் முதிர்ந்து, சித்தாந்த சைவ சிவஞானபோத திராவிட மஹாபாஷ்யகர்த்தராய் எழுந்தருளியிருந்த சிவஞான யோகீசுவரரை வித்தியாகுரவராகக் கொண்டு, அம்மெய்ஞ் ஞான முனிவரிடத்தே தென்மொழியாலே பல இலக்கண நூல்களும் இலக்கியங்களும் தருக்கமும் சிவஞான நூல்களாகிய மெய்கண்டசாஸ்திரம் பதினன்கும் பண்டாரசாஸ்திரம் பதினன்கும் மற்றும் பலநூல்களும் ஓதியுணர்ந்து, கல்வி கேள்விகளில் முற்றுப் பேறுடைய மஹாவித்துவான் எனப் பெயர் பெற்று, அச் சிவஞான யோகிகளுடைய மாணக்கராகிய இலக்கணம் சிதம்பரநாத முனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர், காஞ்சிபுரம் சரவண பத்தர், சிதம்பர பத்தர், இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளை முதலிய பல்லோருள்ளும் மிகச் சிறந்தவராய் வீற்றிருந்தார்.

'இணரூழ்த்து நாறு மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.'

எனவும்,

'உய்த்துணர்ந்துஞ்
சொல்வன்மை யின்றெனி னென்னு மஃதுடைத்தேற்
பொன்மலர் நாற்ற முடைத்து.'

எனவும்,

நாயனாராதியர் கூறியதற்கு இவரோர் இலக்கியமாகத் திகழ்ந்தனர். இவரது வாக்கு வல்லபத்தையும் பிரசங்க சாதுரியத்தையும் புகழாதார் இல்லை. இவர் செய்யுளியற்றும் விரைவு நெட்டுருப்பண்ணிய பழம்பாடம் ஒப்பித்தல்போல் இருந்ததென்று சொல்லுவர். இது மட்டோ, காலம் இடங்கட்குத் தக்க பிரகாரம் நூதன நூதனமான யுக்திகள் வேண்டியவாறு அவரது வாயினின்று சனித்துக்கொண் டிருக்குமாறல் அவர் பெருமை இத்துணைத்தென்று சொல்லற்பாலதா !

பின்பு, கச்சியப்ப முனிவரர் சிவபெருமான் அப்புலிங்க மூர்த்தியாக எழுந்தருளியிருக்கப் பெற்ற திருவானைக்காவில் அமர்ந்திருந்தபொழுது, திருவானைக்காப் புராணமும் மொழிபெயர்த்தருளினர்.

பின்னர்க் கொங்கநாட்டிலே விராட்புருடனுக்கு விந்துஸ்தானமாகிய ஆதிபுரி யென்னுந் திருப்பேரூரிற்கு எழுந்தருளி, ஆண்டுச் சின்னாள் வதிந்து, பேரூர்ப் புராணம் மொழிபெயர்த்தருளினர்.

அதன்பின் திருத்தணி சென்று ஆங்குச் சிலகாலம் வீற்றிருந்து, இயற்றமிழ்ப் போதகாசிரியர் விசாகப்பெருமாளையர், வித்துவான் சரவணப் பெருமாளையர் இருவருக்கும் பிதாவாகிய கந்தப்பையர் முதலாயினோர்க்குக் கல்வி கற்பித்தருளினர். அப்பொழுது அன்னோரும் அன்னோரன்ன பிறரும் தமிழிற்கு ஒரு புறச்சமயியாற் செய்யப்பட்ட சீவக சிந்தாமணியைப் பேரிலக்கியமாகக் கொண்டாடுதலைப் பார்த்துத் தமிழில் அவ்வித மாட்சிமை பொருந்திய இலக்கியம் பிறிதின்மையான் மனக் கவற்சியுடையராய், அக் குறையைத் தாமே முடித்தல் வேண்டும்

என்று திருவுளத்தமைத்து இத் தணிகைப் புராணத்தை அருளிச் செய்தார். சொல்வளம், செய்யுணடை, சந்தம், பொருட்சுவை யென்றிவற்றில் தமிழிலுள்ள எந்த இலக்கியமும் இதற்கு மேற்பட்டில தென்பது இதனை வாசிப்போருக்கு எளி-தில் விளங்கும். சீவக சிந்தாமணியின் சந்தமும் வனப்பும் இதில் யாண்டுங் காணலாம்.

தம் மாணுக்கரிற் சிறந்தவராகிய கந்தப்பையருக்கு வயிற்-றிலே ஓர் குன்மநோயுண்டுபட்டபொழுது தணிகையாற்றுப் படையைப் பாடி அவர் நோயை மாற்றியருளினர். அதனுல் அவர் எத்துணைச் சிவானுபூதிமானென்பது தெள்ளிதிற் புலப்-படும். இவையன்றித் திருத்தணிகைப் பதிற்றுப் பத்தந்தாதி-யும் வேறு சில பிரபந்தங்களும் அங்கே இருந்தபொழுது இயற்றினர்.

பின்பு, சென்னைமாநகர்க்குச் சென்று ஆங்குச் சிறிது காலம் வதிந்தார். அப்பொழுது அவ்விடத்துப் பக்தஜனங்-களுட் பிரபுக்களா யுள்ளோர் பலரது வேண்டுகோட்கிசைந்து விநாயகபுராணம், சென்னைவிநாயகர் பிள்ளைத்தமிழ் முதலியன இயற்றி, அவர்கள் அடியுறையாக இரண்டாயிரம் வராகனிட, அதைக்கொண்டு திருவாவடுதுறையில் ஆதீன பரமாசாரிய-ராகிய ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் சந்நிதி மண்டபப்பணி அணிபெறச் செய்வித்தருளினர்.

விநாயக புராணம் அரங்கேற்றிய சபைக்கு ஐயாப்பிள்ளை என்னும் ஒரு பெரிய பிரபு, 'நாம் வர இதென்ன இராமாய-ணமா!' என்று சற்றிகழ்ந்தனர். மற்றப் பிரபுக்கள் முனிவர்க்கு அதனை மறைத்தும், அவர் யாரும் பிரமிக்க, தமது புரா-ணத்தை ஆரம்பியாது, இராமாயணத்தை எடுத்துக்கொண்டு, முதல் ஆறு செய்யுளில் நூறு குற்றம் ஏற்றினர். உடனே அப் பிரபு, நூறு வராகனும் மிக உயர்ந்த பட்டு வஸ்திராதி-களும் கொண்டுபோய், பாத காணிக்கையாக வைத்துத் தீர்க்க தண்டஞ்சமர்ப்பித்து, 'தேவரீர், சுவாமிகள் மகத்துவம் அறி-யாத ஏழையை மன்னித்தருள்க' என்று விண்ணப்பஞ்செய்ய, அதன்மேற் றமது புராணத்தை ஆரம்பித்து அரங்கேற்றினர்.

இம் முனிவர் சென்னப்பட்டணத்தில் இருக்கும்போது, காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருந்த அவராசிரியராகிய சிவஞானயோகிகள்பால் ஆங்குள்ள தமிழ்வித்துவான்கள் ஒருங்குசேர்ந்து, நீவிர் காஞ்சிமான்மியம் செய்யப்புகுந்து அதன்கட் கடவுள் வாழ்த்திற்,

'சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு
மறைக்கோவுந் தழல்கால் சூழ
மங்கேந்து மம்மானுந் தத்தமது
தொழிறலைநின் றுற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
விருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும்
பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்.'

என்னுஞ் சபாநாயகர் துதியை முன்னர் அமைத்து,

'தணந்தபெருந் துயர்க்கடன்மீக் கூர்தலினுன்
மலைபயந்த தரள மூரற்
கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந்
தரியாம லிடையே கம்பை
யணங்கினைத்து தெனவிடுத்து வலிந்திறுகத்
தழீஇக்கொள்ள வமையாக் காதன்
மணந்தருளிக் குறிபூண்ட வொருமாவிற்
பெருமானை வணக்கஞ் செய்வாம்.'

எனத் தலநாயகராகிய ஏகம்பநாதர் துதியைப் பின்னர் வைத்தது தவறென்று சாதித்தனர். அவர் தமது மாணுக்கனைக் கொண்டு அவர்களைப் பங்கப்படுத்துவதே தகும் என்று திருவுளத் தமைத்து அதனைக் கச்சியப்பமுனிவருக்குத் தெரிவித்தார். உடனே, முனிவரர் சென்னையினின்றும் புறப்பட்டுக் காஞ்சிக்குச்சென்று அனைவரையும் ஏகம்பநாதர் மண்டபத்திற் சேரச்செய்து பிரசங்கம்பண்ண ஆரம்பிப்பாராகி, அந்த ஸ்தலத்து ஓதுவாரை நோக்கிச் சமயகுரவர்களாகிய நாயன்மாராற் பாடப்பட்ட தேவாரத்திருமுறையில் இந்த ஸ்தலத்துப் பதிகங்களுள் ஒன்றனை முதலிலே ஓதும்படி சொல்ல, அவர்கள், 'திருச்

சிற்றம்பலம்' என்று தொடங்கினர். அப்பொழுது அவர் வித்துவான்களை நோக்கி, 'இவர்கள் "திருச்சிற்றம்பலம்" என்று ஆரம்பிக்கின்றார்களே, இது உங்கட்குச் சம்மதிதானா? இவர்களை-யெல்லாம் நீங்கள் சேர்ந்து இச் சந்நிதியில் இந்த ஸ்தலத்துப் பதிகங்களை "பிருதுவியம்பலம்" என்று சொல்லி ஆரம்பிக்-கும்படி செய்யக்கூடாதா?' என்ன, அனைவரும் வாயெடாது ஊமர்கள்போலத் தலைவணங்கியிருந்தனர். அதன்மேற் கடவுள் வாழ்த்தில், முன்னர் விநாயக வணக்கமும், அதன்பின் சபா நாயகர் துதியும் கூறுதலே சிறந்ததென்று பலபல பிரபல நியாயங்கள் காட்டி அவ் வித்துவான்கள் அவமானமடையச் செய்தனர்.

பின்னர், ஸ்ரீ காஞ்சிநகரத்தில் எழுந்தருளியிருக்கத் திரு-வுளங்கொண்டார். அங்கே வீற்றிருந்தபோது தமது ஆசிரியர் சொல்லைத் தலைமேற்கொண்டு காஞ்சிபுராணத்து இரண்டாங்-காண்டஞ் செய்தருளி, பின்பு கச்சியானந்த ருத்திரேசர் வண்டு விடுதூது, கச்சியானந்த ருத்திரேசர் பதிற்றுப்பத்தந்தாதி, பஞ்-சாக்கரவந்தாதி என்று இன்னோரன்ன பலநூல்கள் இயற்றி-யருளினர்.

இங்ஙனம் லோகோபகாரமாகப் பலநூற்கள் இயற்றிப் பல நன்மாணாக்கர்களுக்குக் கற்பித்துத் தமிழ்மொழியை அபி-விர்த்தி செய்து, சிவப்பேற்றிற்குக் காரணமாகிய சிவத்தியானா-திகளினுறைப்பில் வதிந்தருளி, கச்சியப்பமுனிவரர் ஸ்ரீ காஞ்சி புரத்திலே சாலிவாகன சகாப்தம் ௧௭௧௨ - க்குச் சரியான சாதாரணவரு சித்திரைமீ ௧௧௳ யாகிய மங்களவாரத்தில்-புனர்பூச நக்ஷத்திரமும் பூருவபக்ஷத்துச் சத்தமியுங்கூடிய கும்ப-லக்கினத்திற் பரிபூரணதசை யடைந்தனர்.

மெய்கண்டதேவன் திருவடிவாழ்க

---

உ

வேலு மயிலுந் துணை




விநாயகர் காப்பு:

மும்ம தத்தனென் றொருபெயர் தனக்குமொய் கூந்தற்
கொம்மை வெம்முலைக் கோற்றொடிக் கொடிச்சியை யிலைவேற்
கைம்ம லர்த்தனி யிளவற்குங் கஃஃறெனுங் கானத்
தம்ம முந்துபுக் குறுத்தவ னடிமலர் பணிவாம். (க)

ஊற்றிருக்கு மதக்கலுழி யுன்னுமடி
யாருளத்துக் கறையை மண்ணக்
கூற்றிருக்குங் கூர்நுதிவெண் கோடுவெளிற்
றறிவிரண்டுங் குமைப்ப மேனி
தோற்றிருக்கு மளப்பரிய சுடர்நிறைப்பத்
தோரணக்கம் பத்தெஞ் ஞான்றும்
வீற்றிருக்கும் பெருமானை விரைமலர்தூய்ப்
பணிந்தெழுந்தெம் மெலிவு தீர்வாம். (உ)



## கடவுள் வாழ்த்து

சிவபெருமான் :

உலகிரு ளுருவத் தொளிகளி னிரித்தாங்
குறுபொரு ளெவற்றையுந் தெரித்துள்
விலகிருண் முழுது மருள்கொடு துமித்து
விராயொளிர் தன்னையுந் தன்னால்
இலகுயிர் தனையுந் தெரித்தறி வுறுக்கு
மியல்பினெக் காலமும் பிறழா
தலகிலற் புதக்கூத் துமையினைக் காட்டு
மடிகள்சே வடிகளைப் பணிவாம். (க)

சிவசத்தி :

சீரணி சிருக்கு மணிவடஞ் சங்கு
திகிரிசூ லப்படை யிலைவேல்
போரணி பாச மங்குசங் கழைவில்
பூங்கணை வேறுவே றணியா
ஆரணன் மாய னரனிப முகத்த
னனங்கனென் றிவர்தொழிற் கெல்லாம்
காரண மாத றெளித்தருள் கொழிக்குங்
கன்னியை யுன்னியேத் தெடுப்பாம். (உ)

ஆபத்சகாய விநாயகர் :

பண்ணிய மேந்துங் கரந்தனக் காக்கிப்
பானிலா மருப்பமர் திருக்கை
விண்ணவர்க் காக்கி யரதனக் கலச
வியன்கரந் தந்தைதாய்க் காக்கிக்
கண்ணிலா ணவவெங் கரிபிணித் தடக்கிக்
கரிசினேற் கிருகையு மாக்கும்
அண்ணலைத் தணிகை வரைவள ராபச்
சகாயனை யகந்தழீஇக் களிப்பாம். (ங)

சுப்பிரமணியர் :

ஓங்கொளியாய் விசும்பாதி தொறுமியலுந்
தனதியல்பை யுருவின் மாட்டும்
பாங்குபெறத் தெரித்ததுபோற் பலபொறியாப்
பரமர்விழி பயந்த ஞான்று
தேங்கொளியாய் வெளியடர்ந்து வளிதொடர்ந்தொள்
ளொளிபடர்ந்து தெளிநீர்ப் புக்கு
நீங்கிவிளை யாட்டயர்ந்து தணிகையமர்
பெருவாழ்வை நினைந்து வாழ்வாம். (௪)

தெய்வயானையம்மை
வள்ளியம்மை :

இறைகதித்த சூர்முதலை யிறுப்பவர
னேயிளையோ னென வாற்றுன்
முறைகதித்த விருசுடரே முகத்துவிழி
யெனத்தெரிக்கு முறைமை யேய்ப்ப
நறைகதித்த மலர்க்கழுநீர் நளினமவன்
விழியருகு நலக்க வேந்தி
நிறைகதித்த வுளத்தொ*டிடம் வலமமர்ந்த
மாதர்பத நினைத்தல் செய்வாம். (௫)

திருநந்திதேவர் :

கள்ளகந் தளித்த மலர்த்தலைச் சேக்குங்
கடவுளு ரணன்முத லானோர்
உள்ளகந் தழும்ப மலர்ப்பத மமைத்திட்
டெல்லாந் தழும்பவேத் திரத்தின்
வள்ளலங் கமலத் தணிக்கர மமைத்த
வரதனைக் கற்றைவெண் கதிர்கால்
வெள்ளியங் கயிலைக் காவல்பூண் டருளும்
வீரனை வார்கழல் பணிவாம். (௬)

* இடம் - தெய்வயானை, கழுநீர்; வலம் - வள்ளியம்மை; நளினம்.

நவவீரர் :

ஈர வான்மதி மிலேச்சிய பொலஞ்சடை யிறைவனு ரருள்கூரக்
கார வாவிய குழலுமை நூபுரக் கதிர்மணி யிடைத் தோற்றும்
நார வாவியி னறுமலர்க் காவிநேர் நயனமா தர்களீன்ற
வீர வாகுவை முதலிய வீரர்தம் விரைமலர்ப் பதம்போற்றி. (எ)

சமயகுரவர் :

முன்னுளுந் துளைக்கரத்தோன் முருகவேள்
பிடித்தெழுந்து மொய்ம்பிற் றூவப்
பின்னுளுங் கதிர்ச்சடிலப் பிஞ்ஞகனு
ரடித்தொண்டின் பெருக்க வீறு
பொன்னுளும் பெண்ணுளு மறிவுறுத்திவ்
வுலகினிடர் பொன்றி யாண்ட
அந்நால்வர் பதகமல மகந்தழீஇப்
புகழ்ந்திறைஞ்சி யரந்தை தீர்வாம். (அ)

சண்டேசுரர் :

புண்ணியம் பாதக மாகப் போற்றிய
அண்ணலந் தக்கனு ரகத்து நாணிய
புண்ணியம் பாதக மாகப் போற்றிய
அண்ணலந் தண்டித னடிகள் போற்றுவாம். (கூ)

திருத்தொண்டர் :

பாய வாருயிர் முழுவதும் பசுபதி யடிமை
யாய வெவ்வகைப் பொருள்களு மவனுடைப் பொருள்கள்
மேய விவ்வண மலதுவே றின்றென வுணர்ந்த
தூய மெய்த்தவத் தடியவர் துணையடி தொழுவாம். (கo)

ஆசாரிய பரம்பரை :

அருள்வளர் நந்தி மேதகை விளக்கி
யருள்சிவ ஞானபோ தத்தைத்
தெருள்வளர் தமிழ்ச்செய் தளித்தமெய் கண்ட
தேவனற் சந்ததி விளங்க

வருமொரு துறைசைத் திருநகர் நமச்சி
வாயதே சிகனொடு மிந்தக்
குருபரன் வழிவந் தருணனி கொழிக்குங்
குரவர்கள் பலரையுந் துதிப்பாம். (௧௧)

---

## அவையடக்கம்

கருவிக ளனைத்து மென்னுட் கலந்துநின் றியக்கா நிற்கும்
ஒருவனை யன்றி *யானே யுஞற்றுத லின்மை யாலே
மருவுமென் பாடற் குற்றம் பொறுமென மதிக்க நாணித்
திருவமர் கல்வி சான்றோர் திறத்தொன் றுஞ் செப்பி லேனால்.()

பசுகர ணங்க ளெல்லாம் பதிகர ணங்க ளாக
வசிபெறு மடியார்க் காயின் மன்னிய வொருமை தன்னால்
இசையுமற் றவரி னான்றோர்க் கென்னுரை யோம்பு கென்னக்
கசிவறு மனத்தி னேனுங் கட்டுரைப் பதுமாண் பன்றே. (௨)

முதுக்குறை வுடையோர் நிற்ப
முழங்குதன் காதை யென்னால்
விதுக்குறை முடியோன் மைந்தன்
விரிந்தசெந் தமிழ்ச்சொல் லாகப்
புதுக்குபு கேட்கு மார்வம்
பாகடை புன்சி றார்கை
மதுக்குலாந் தொடையன் மார்பர்
வைத்துவாய்க் கவர்தல் போலாம். (௩)

ஆகத் திருவிருத்தம் — ௧௬.

---

* யான்வே றுஞற்றுதல் — பாடபேதம்.

## திருநாட்டுப் படலம்

---

வட்டவாய்க் கமலத் தண்ணான் மணிமுடி துளங்க வோச்சிக்
குட்டிய குமரப் புத்தேள் குலாவிய தணிகைக் குன்றம்
அட்டொளி மணியின் மோலி யணிந்தெனத் தன்பாற் கொண்ட
முட்டறு பாலி நாடு முச்சகத் துயர்ந்த தொன்றே. (௧)

துலங்கலில் போக மூட்டித் தொக்கநா ளிற்ற காலை
அலங்கலி லறத்தி னாற்றா லருங்கதி யுயிரை யெய்த்துப்
புலங்கெழு தன்பாற் போகம் புலர்ந்துழிக் கிழக்க தாக்கும்
நலங்கெழு துறக்க விண்ணை நக்கது தொண்டை நாடு. (௨)

கோண்முறை பிறழ்ந்து மாரிக் குளிர்பெயல் வறக்கு மேனும்
தாண்முறை தப்பா வண்ணந் ததைமண லகழுந் தோறும்
ஊண்முறைப் புனல்வந் தோடு மொலிநதிக் குலத்தா லேனை
விண்முறை நாட்டை யெல்லாம் வீழ்த்தது தொண்டை நாடு.

வருபுனல் வாய்ந்த வோங்கல் வல்லர ணிருநீ ரென்னும்
பொருவில்பல் லுறுப்பிற் றாகிப் பொங்கிய செல்வ மேமம்
வெருள்பிணி யின்மை யின்பம் விளைவுநன் கணிந்து தாழ்வில்
திருவினர் தக்கோர் சாலச் செறிந்தது தொண்டை நாடு. (௪)

மலிபெரும் பொருளாற் பெட்கும் வண்மையு நாடா தியாதும்
மெலிவுக வுதவும் வாய்ப்பு மெலிகலார் மெலிந்த காலும்
நலிதரா வளனு மெல்லா நலிவுநீத் தாற்ற வீண்டும்
ஒலிகெழு விளையு ளோடு முடையது தொண்டை நாடு. (௫)

பல்குழு வேந்த லைக்கும் படர்கொலைக் குறும்பு தீய
பல்குழுட் பகையு மற்றும் பகையுறு பசிதீ ராநோய்
பல்குறி தானு மின்றிப் பொறையொருங் குறுகாற் றாங்கி
நல்கிறை வேந்தர்க் குய்க்கு நலத்தது தொண்டை நாடு. (௬)

கறைகெழு களத்தெம் மண்ணல் கரைந்தபல் லாக மத்தின்
முறைநெறி யொழுக்கி னோடு முடிவில்பல் லறமு மின்பம்
நிறையும்விம் மிதமு மென்னு நீக்கமி லணிக ளெல்லாம்
இறைவியா லணியப் பட்ட திலங்குதுண் டீர நாடு. (எ)

மான்றவல் வினைகால் சிக்கும் வளங்கெழு தொண்டை நாடு
சான்றவ ருடைத்தென் றோதுந் தகுமொழிக் கதிரான் மற்றை
என்றசீர் நாட்டின் சீர்த்தி யென்னுமீ னொளிமை யாப்ப
ஆன்றசெம் பருதி யாய தனையதண் டகநன் னாடு. (அ

கொடைப்புகழ்க் கவயம் போர்த்துக் கூறறப் படைக ளேந்தி
விடைப்பரு வேழம் பொற்றேர் விரைசெலற் பரியாள் வாய்மை
படைப்பருஞ் சீல நோன்பு பத்திமை யாகப் பாய்த்திக்
கடைப்படு பாவத் தெவ்வைக் கடந்ததத் தொல்லை நாடு. (கூ)

முரிதிரை சுருட்டிப் பல்வீ மொய்த்தபஃ றீர்த்த மாடி
விரிபுகழ்த் தலங்கள் சால மேவியா னந்தக் கூத்தர்க்
குரியபல் வடிவந் தன்னு ளுறுத்தலால் வீடு வெஃகிக்
கரிசறுத் தவர்கள் போன்று கவின்றதப் பொருவி னாடு. (கo)

கருங்குழல் கானிற் றோற்றிக் கதிர்முலை மலையிற் றோற்றி
இருங்கைபூம் பணையிற் றோற்றி யெரிமணிக் கலாப வல்குல்
பெருங்கடற் றோற்றி வேத வொழுக்கெனுங் கணவற் பின்னி
ஒருங்குநாற் பயனு மக்க ளுயிர்த்தளிப் பஃதந் நாடு. (கக)

விண்ணவ ரவுணர் சித்தர் விஞ்சையர் கருடர் நாகர்
மண்ணவ ரெவருந் தோய்ந்து வரம்பெறு மேன்மை சான்ற
புண்ணிய நதிகள் பல்ல பொங்கொளி மணிநீர்ப் பாலி
அண்ணல்வார் நதியி னோடு மணிந்ததப் பொருள்கூர் நாடு. (கஉ)

கடவுள் வெண்கரி விசும்பொரீஇப்
புரந்தரன் காவலந் திசைநோக்கிப்
படர்வ தொத்துவெண் ணிறமுகிற்
குழாமணி படுகடற் பரப்பண்மித்

தொடலை வெண்டிரைப் பெரும்புனன்
　　முகந்தது தொல்லைபோ லொருசாபம்
அடர வல்விரைந் தெழுந்தென
　　வுடல்கறுத் தந்தரத் தெழுந்தன்றே. (கங)

தேத்த டைத்திரள் கிழிந்தசும்
　　பருவரைச் செழுங்கிரி தணைமன்றுட்
கூத்தி யற்றருட் பரம்பரன்
　　மதலையைக் குறித்துநோன் புழந்தேதம்
நீத்தி டக்கரி யடுத்தென
　　நந்தித னெடுமலை முதலாகத்
தூத்த டப்பொலங் குவட்டுயர்
　　சிலம்பெலாந் தொடர்ந்துசென் றிறுத்தன்றே. (கச)

செம்ம லார்க்கிபஞ் சாத்தமேக்
　　குயர்த்தவா சிகையெனச் சிலைவாங்கி
விம்மு வாண்மணித் தீபவா
　　ராதனை விளைத்தெனத் தடித்தின்று
சும்மை யேத்தெடுத் தெனமுழக்
　　கெழீஇவிழி சொரிந்தெனப் பொழிந்தெங்கும்
மம்ம ரேதநீத் தொளிர்ந்தென
　　வெண்ணிற வயக்கமாண் டதுமாதோ. (கரு)

உருகு வெஞ்சின வெம்மைதா
　　னுடற்றுழி யுடைகுளி ரொளித்தாங்குப்
பெருகு தண்குளிர்க் குடைந்தித
　　பொழுதுபோர் பெட்டல்யா வருங்கண்ணுக்
குருகு முன்கையார் குங்கும
　　முலைகளிற் கொம்மெனக் கரந்தன்றால்
திருகு தம்பகை சார்தனங்
　　கிடைக்குமேற் சிவணுறு தவர்யாரே. (கசு)

உண்ட பாற்சுவை நினைந்தொரு
முனிதவ முழந்துபாற் கடல்பெற்ற
பண்டை நீர்மைதேர்ந் தமரரான்
பயத்தின்முன் படிந்தநந் தியங்குன்று
மண்டு மாதவம் புரிந்தது
வரத்தழீஇ வழிதர மேற்பெய்து
கொண்ட தாமென வாவயின்
விழுந்தநீர் குலாய்வழிந் ததையன்றே. (௧௭)

காந்தளம் போது வேய்ந்து
களிமயில் கடாவிப் பல்பூ
வேய்ந்தமென் குழற்கொம் பன்னார்
வெறியயர் களத்துச் சார்ந்து
வாய்ந்தவிங் குலிகச் சேற்றின்
வயங்குதன் னுருவந் தோற்றிப்
போந்துலாய்ச் சிலம்பின் செவ்வேள்
போன்றது பாலி நீத்தம். (௧௮)

ஆழ்ந்தநீர்ச் சுனைபுக் காடி யவிர்பளிக் கறையின் வைகி
வீழ்ந்தவ ராகந் தோய்ந்து வேங்கைதண் குறிஞ்சி குற்றுத்
தாழ்ந்தபைங் குரல வேனற் றவிர்ந்துபுள் விலங்கு மோப்பி
வாழ்ந்திடுங் கொடிச்சி மார்த மொழுக்கமு மரீஇய தாங்கண். ()

கோழரை யகிலுஞ் சந்துங் குங்கும வனமுஞ் சாடி
வாழிய குறிச்சி புக்கு வளந்தினை வாரி வித்தி
வீழுமென் கிழங்கு கெண்டி விரைத்ததே னழித்து மாந்தி
ஊழுறு சிலைக்கை வேட ரொழுக்கமும் விராய தாங்கண். (௨௦)

சிலையலங் கணிச்சி வெண்ணெய் தெவ்விவா னிமிர்ந்து வாரி
நிலைபுகுந் துழக்கி யொல்கு நிலனெடுத் திருவி யண்டர்
உலைதர வெறிக்கொண் டெற்றி யுறுகலி முடிவு தோற்றித்
தலைவரு மாயோ னென்னத் தவழ்ந்தது புறவத் தம்மா. (௨௧)

முளிதயிர் நறுநெய் பெய்யு மூரியங் கலன்கள் பாடி
யுளியெடுத் தியங்கி யாங்காங் குற்றவை மாற்றிப் பொன்னும்
தெளிமணித் திரளு மற்றுஞ் செறித்துராய்க் குளவி செந்தேன்
துளிகுழற் பொதுவ மாதர் தொழின்மையும் பயின்ற தாங்கண்.

திணிகவைக் கோடும் வேயுந் திரிபுரி நாருந் தாங்கி
மணிநிரை யோம்பி நேரும் வல்விடை தழுவித் தோய்ந்த
அணிநிறை மகளிர் கூந்த லலங்கலங் கொன்றை சூட்டிப்
பிணிதபு மாயர் செய்கை பேணியும் பெயர்வ தாங்கண். (உ௩)

பூத்தசெந் தாமரைக்கண் மெய்யெலாம் பொலியத் தோற்றித்
தூத்தகை வயிரம் பற்றித் துலங்குவா ரணமேற் கொண்டு
காத்தலை மருவி நீண்ட கற்சிறை பலவுஞ் சிந்தி
ஏத்துவிண் ணரச னென்ன விறுத்தது பழனப் பாங்கர். (உ௪)

மருதமர் கிள்ளை யஞ்ச வயின்வயி னியம்பிச் சென்று
முருகமர் வயலிற் பூத்த முண்டகங் குமுதங் கட்டுக்
குருமணிக் காஞ்சிச் சூழற் கொழுநனை மலரப் புல்லித்
திருவியல் கடைசி மார்தஞ் செய்கையுந் தழீஇய தாங்கண். ()

தளைசெறி வயலிற் சென்று தக்கன செய்து பின்னர்
விளைவினைக் கொய்து மோட்டு வியன்களத் தேற வுய்த்து
முளைதகை கருப்பங் காடு முழுவது மெறிந்தங் காட்டித்
திளைமகிழ் களமர் தங்கள் செயற்கையும் படைத்த தாங்கண். ()

மேற்றிசைத் தொடர்பி னோடும் விரிகடற் பயிற்சி காட்டித்
தோற்றெழி லுகச் சூழற் றுன்னுமத் தொடர்புங் காட்டி
ஏற்றெதிர் மகர முந்தி யெந்நில வளனும் போற்றி
ஆற்றல்சால் வருண னென்ன வணைந்தது கானற் பாங்கர். (உஎ)

முண்டக நீல ஞாழன் முருகெழ முடியிற் சூடி
மண்டிய விலைகைக் கொண்டு வளைமுதல் வேட்டோர்க் குய்த்து
மிண்டிமீன் கவர்புள் ளோப்பி வெய்துமிக் கிரக்கங் காட்டித்
தொண்டைவாய்ப் பரத்தி மார்தந் தொழின்மையும் பெற்ற தாங்கண்.

கடுங்களி யுப்பு மெத்திக் கழிபல வுழக்கி நீந்தி
நெடுங்கடல் குளித்துக் கீழ்நீர் நித்திலந் துவர்மே லாக்கிப்
படுங்கலன் பலவுந் தள்ளிப் பரத்தியர் தோயப் புல்லிக்
கொடுங்கொலைப் பரவ மாக்கள் கொள்கையுங் கெழீஇய தாங்கண்

கலையொடு வாளம் பற்றிக் கன்னியாய்க் குரவம் போது
தலைமலைந் தெயிற்றி மாராய்த் தனுவொடா றலைத்து மாந்தர்க்
குலைவுசெ யெயின ராயு முருப்பவிர் முரம்பு தோறும்
அலைதிரைப் பாலி நீத்த மமிழ்தென வொழுகிற் றம்மா. (௩0)

முழங்கு சேய்நதி நந்தினி முகலியே யாதிப்
பழங்கண் டீர்நதி பலவுமிப் பாலியி னோடுந்
தழங்கு நீர்கொடு தலையளி புரியுநா னிலத்து
வழங்கு மைந்திணை வளஞ்சிறி துரைத்திடப் படுமால். (௩க)

குறிஞ்சி :

மருந்துண் விண்ணர மடந்தையர்க் கரியதன் மார்பம்
திருந்து தங்குலத் தவட்கருள் சிறப்பினுன் மகிழ்ந்து
விருந்து நித்தலுஞ் செய்வபோல் வெற்பர்வே லிறைக்குப்
பொருந்து பூசனை விழாத்தின மெடுப்பது பொருப்பு. (௩உ)

வணங்கு மாருயிர்க் குகைதொறும் வதிதலாற் குகனென்
றிணங்கு வான்பெயர்க் கியையுமா றிருப்பது போலாம்
நிணங்கொள் வேற்படை நின்மல னிரைமணிக் குகையின்
கணங்கொண் டோங்கிய மலைக்கெலாங் கடவுளாய்க் கலத்தல். ()

நொடித்த றீதென நுனித்தறிந் திருந்தினை விளைப்பார்
துடித்த லைப்படர் சந்தனக் குங்குமத் தொகுதி
வடித்த நவ்வியா லெறிந்தெரி மடுக்குமொண் புகையுந்
தடித்து மேகமுந் தவழ்வன வேற்றுமை காட்டா. (௩ச)

சுள்ளி வேலிய குறிச்சியர் சுரைபடு மிரும்பின்
வள்ளி கெண்டிய குழிகளின் மாலைவெள் ளருவி
அள்ளி யுய்த்தவெள் வயிரமு மாரமு நிதியின்
பள்ளி போன்மெனப் பசும்பொனோ டிமைப்பன பலவும். (௩ரு)

கொடிச்சி மார்விழிக் கூர்ங்கணை குளிப்பகா னவர்தோள்
வடித்த வரங்கவர் வார்கணை குளிப்பமால் வேழம்
தடித்த வேழத்தின் கோடுகள் குளிப்பபூந் தருக்கள்
கடித்த பூந்தருக் கோடுகள் குளிப்பவான் கங்கை. (௩சு)

விழிக்கு டைந்தமான் செவிகண்மெல் லியனல்லார் தடிந்தவ்
வுழிக்க ணூற்றியாங் குயர்பணை கண்பொதி பாளை
கழிக்கு மற்றவை மறையவெண் கதிர்மணி யுகுக்குங்
கொழிக்கு நித்தில மறையமேற் கொட்டும்வண் டோரை. (௩௭)

மழைத்த கார்முகி லகடுகிண் டெழுந்துவா ளோங்குந்
தழைத்த வேய்நுதிக் களிமயி லகவுவ சமர்க்கட்
குழைத்த மாமரங் கிழ்ந்தவன் கோயின்முன் மணியின்
இழைத்த கேதனத் திளமயி லகவலோ டியையும். (௩௮)

இளகு காழகிற் சந்தனப் பொதும்பரெவ் விடனும்
வளகு மேய்ந்துசே வகங்கொளூ மான்மத மொழுக்குங்
குளகு தேரிய வருடைமான் குப்புறு மடுக்கத்
தளகி ளேடுபாட் டிரட்டுமா லளைதொறுங் குரால்கள். (௩௯)

வணங்கு நுண்ணிடை மாதரார் வனமுலைக் கோட்டோ
டணங்கு போர்செய வளர்ந்தன போலடற் கரிக்கோ
டிணங்கு வேலிசூழ் குறிச்சியெங் கணுமினி தெழுந்த
கணங்கொள் வள்ளைகேட் டுறங்குவ கனிப்பொழிற் கிள்ளை. (௪0)

உடுக்க வொள்ளிணர்த் தழைபல கொய்துமூழ் தினைகள்
மடுக்கும் புள்ளெறி கவண்கலான் வார்பணை பொதிர்த்தும்
இடுக்க ணேபுரி மாதரை யிற்செறிப் பாமென்
றடுக்கல் வேங்கைக ளெரியகைத் தெனவல ரூழ்க்கும். (௪௧)

உருமி னார்த்துடன் றெதிரெறு ழுழுவையோ டும்பல்
பொருத முற்றெழில் கனவலிற் பொருக்கென வெழுந்தங்
கருகு நின்றவொள் வீயிணர் வேங்கையை யலைக்கும்
மருவு வெஞ்சின மூண்டுழி வகுத்தறி யார்போல். (௪௨)

வாய்வ தாகிய பொருளினை வல்விரைந் தன்னே
ஆய்வ தாய்கில ராக்குவான் புகுந்தழிப் பார்போற்
காய்வ தாகிய திறத்தினூற் கதழ்ந்துதா யிடத்து
வீழ்வ தாக்கியுண் ணுதுபோ துவவிள வேங்கை. (௪௩)

குருவி யோப்புதங் கவண்கலாற் குலேந்திரு லினத்தோ
டுருவ வாசினி யுக்கன வசும்பின நிலத்து
மருமலர்ப் பதம் வழுக்கிவீழ்ந் திணவர்மா னனேயார்
ஒருபொ ருட்கிடர் செயினவை மறுகணத் துறுகொல். (சச)

ஆழ்ந்த நீரல காதிக ளளித்திடப் படுவ
வாய்ந்த மாமணி யாதிய வயின்றெுறு மிறைவ
தாழ்ந்த வாயினு மரியவே யுயர்ந்தவாய்த் தகையும்
வீழ்ந்த வாயினு மெளியவேற் றுழ்ந்தவாய் விடுமே. (சரு)

கொழுவி டைக்கறை விராவிய பலிக்குறை நிரப்பி
வழுவில் பல்பிரப் பிரீஇவெறி யாட்டயர் மன்றத்
தொழுகு பல்லிய வோதையு முரவுவெள் ளருவி
இழுமெ னேதையு மெழுகட லவியினு மவியா. (சசு)

தேனுஞ் செந்தினை யிடிகளுந் தீஞ்சுவைக் கனியும்
ஊனுந் துய்ப்பன வுடுப்பன மரவுரி தழைகள்
வானுந் தோய்சுனை யாடுவ மணிவரை யிருப்ப
ஏனஞ் சூழ்ந்தகுன் றவர்க்கொரு நல்குர வின்றே. (சஎ)

அன்பி னைந்திணைக் களவலாற் களவொன்று மறியார்
இன்ப மாண்பிரி வினைவலா லினைவொன்று மெய்தார் [லார்
துன்ப மோட்டுவாய்ப் பொய்யலாற் பொய்யொன்றுஞ் சொல்
முன்பு மாதவப் பயத்தினு லவண்முயக் கமர்வார். (சஅ)

உயங்கு வாரல தின்புறு ரென்பதுண் மையினுன்
முயங்கு வாரைமுன் றுயர்செய்தன் முறைதெரித் தாங்கு
வயங்கு லாவிய மாரவேள் பகழியாய் மலர்ந்த
தயங்கு தேமல ரசோகங்க டழீஇயது குறிஞ்சி. (சகூ)

பாலை :

பகைத்துடிப் படுப்பவர் பகைக்கட் பாய்கலை
உகைக்குமச் செய்கையா லுவப்பச் செய்வபோல்
மிகைத்திறக் குமரிக்கு விழாவெ டுத்தனர்
துகைத்திறப் பதிதொகு முரப்புச் சூழலே. (ருo)

வரையுறை கடவுளா மகனே நீங்குதற்
கருமைபி னடுத்தமை யறையுஞ் சண்டிகை
கிரிபினுங் கிரிபுறங் கெழீஇய கானினும்
பெரிதுமாம் பாலையம் பிராட்டி யாயதே. (ருக)

தூதுணம் பறவைக டேதுன் டோவறக்
காதலந் துணையொடு கழுமிப் புல்லுவ
ஏதுணா வுண்ணினு மெவர்க்கும் வேள்கணை
தீர்திற மரிதெனத் தெளிப்ப போன்றன. (ருஉ)

எயிற்றிய ரிளமுலை யிணைய வெண்ணுபு
வெயிற்றலை மாதவம் விளைத்தல் வீழ்வன
பயிற்றிய தெனநிறம் பரந்த மெல்லிதழ்
குயிற்றிய தெனமுகைத் தலர்ந்த கோங்கமே. (ருங)

குரவலர்ப் பாவைபெற் றெடுப்ப கோழரை
மரவம்வெள் ளணியினல் வயக்க மாணுவ
விரவலர் தூற்றுவ வேரிப் பாடலம்
பரவிசை பகர்வன பறவைக் கோகிலம். (ருச)

விரிமுகி லிடையிடை விராய மீனமும்
சுரிகுழன் முச்சியிற் றாக்கு நித்திலச்
சொரிகதிர் மணிகளுந் துணையு மென்பவே
பொரிகெழு பொகுட்டரை யிருப்பை பூத்தவே. (ருரு)

நிகழ்தரு நால்வகை நிலனு மெல்லையாத்
திகழ்தரு பாலையந் திணைக்கங் கேற்புற
இகழ்தருஞ் சுரத்தவ ரெய்து போகமும்
புகழ்தரு நானிலத் தவர்தம் போகமே. (ருசா)

உடங்குசெல் பவர்க்கிடை யூறென் றின்றியே
அடங்கரும் பெருமகிழ் வாக்கி மாதரை
இடங்களி லீரீஇயவர் செலவ மூங்குமா
தொடங்கலி னுதவியிற் சுரமொப் பில்லையே. (ருஎ)

பிரிந்தவர் பசலையம் பெரிய போர்வையுட்
டிருந்துவ ரென்னத்தன் செய்கை தோற்றியாங்
கரந்தைசெய் மதன்கணை யாகப் பூத்தமா
மரந்தழீஇ யதுநலம் வளாய பாலையே. (ருஅ)

முல்லை :

ஆக்கங்கரு தித்துணை நீங்கவன் னேர்கி ளந்த
வாக்கின்படி மங்கைய ராருயிர் வாழ்ந்தி ருக்கை
காக்குந்தொழி லென்றுபு ரக்குமக் கண்ணற் கன்பு
பூக்குஞ்செய லாற்பொலி வுள்ளது பூத்த கானம். (ருகூ)

ஆளிக்கொடி யேந்திய தங்கைய கற்சி யாற்றுன்
மூளூற்றவார் வத்தணி மைக்கண்முற் றிற்று நேராம்
காளக்குரு மேனிமு ராரிகல் சூழ்மு ரம்பு
கோளூற்றகா னக்கொரு தெய்வத மாயகொள்கை. (சூ0)

தூங்குங்கனி மல்கிய கொன்றைது ணர்த்த லர்ந்து
பாங்கெங்கணு நிற்பது ருத்திரப் பல்க ணங்கள்
வீங்கும்புகழ் மால்விடை பற்றிவெள் ளிச்சி லம்பின்
ஓங்கும்பெரு மான்முன முய்ப்பவந் துற்ற தொப்பாம். (சூக)

விலகாவிறன் மாலறிந் தோர்விளை யாட லாற்றுற்
பலமாயவு ருக்கொடு நின்றுளிர் பான்மை போலாம்
அலரானிறை கொன்றைய லங்கிய சூழ லெல்லாம்
புலராமது மாமலர் பூவைகள் பூத்த காட்சி. (சூஉ)

இருந்தைக்குவை யொத்தன பூவைக ளீண்டு கோடம்
திருந்துந்தழ லொத்தது கொன்றைகள் செம்பொ னுெத்த
பெருந்தாட்குவை யொத்தன பூத்தபி டாம ரங்கள்
பொருந்தேர்முகி லொத்தது பொற்றெழில் வல்ல கொல்லன். ()

விரிகான்மலர் வாசநு கர்ச்சிவி ழைந்து தத்தம்
உரிநாசியொன் றுலமை யாதுலப் பற்ற நாசி
பரியாவிமை யோரவ ணிற்குமப் பண்பு தோற்றும்
வரிபாடளி வீழம ணிக்குமிழ் பூத்த மாண்பு. (சூச)

மானகம லர்த்திரு மாதவ னாகி மாயோன்
ஆனவொளி நாமுற வள்ளியை யீன்ற வாற்றான்
நாநாளுமி வற்றண வேமென நண்ணி யாங்குத்
தாநாளுமி குந்துழல் கின்றன தாவு மான்கள். (கூரு)

தணியாவிமை யோர்க்குண வூட்டுநர் சால வாங்கண்
அணிநாமணி யார்ப்பெழு நான்முறை யாய்ந்த தேபோல்
மணியார்ப்பெழ வெங்கணு மேய்வது மண்ண கத்தோர்
பணிதேவரெ லாருமு றுப்பிற்ப யின்ற நல்லா. (கூசு)

உழலைத்தொழு வானிரை சாலவு வக்கும் வண்ணங்
குழலத்தெழு மின்னிசை யெவ்வுயி ருங்கு ளிர்ப்ப
எழலுற்றது நல்லவ ரின்புறத் தக்க தியார்க்கும்
கழலற்றவின் பப்பய னுய்க்களிப் பிப்ப தன்றே. (கூஎ)

அல்லும்பக லுங்கரு தன்பர ளித்த வேற்று
வெல்லும்பர போகம்வி ளைத்தருள் வேந்து நேரப்
புல்லும்புன லுந்தமை யூட்டுநர் பொற்ப விண்ணோர்க்
கொல்லும்பய மாதியு ணப்பய னுய்க்குங் கற்றா. (கூஅ)

தாற்றுக்கதிர் கால்வர கம்பயிர் சாமை சொன்னல்
ஆற்றக்கிள ருந்துவ ரைப்பயி ராதி முற்றும்
தோற்றிக்கிளை யோடினி துண்டின மூன்றுந் துன்றப்
போற்றிக்குடி மல்கிய பொற்பின பாடி யெல்லாம். (கூகூ)

குளிர்மென்மொழி நேருவ தென்றுகொ ழுஞ்சு வைப்பால்
ஒளிர்செந்தழ லுய்த்துறு நாமமற் றென்ற தாக்கி
வளமங்கையர் மத்தினு டைத்தலு மாழ்கி யோவென்
றளறுஞ்செயல் போற்குமி ழார்ப்பெழுங் காலை யெங்கும். (எ௦)

வார்கண்டமு லைத்துணை வாண்முக மங்கை நல்லார்
கார்கண்டுக விழ்த்தவி ழிப்புனல் கால்செய் தன்பர்
தேர்கண்டுமி ழோகைவி ழிப்புனல் சேர வாறாய்
ஊர்கண்டநெ டும்பணை சென்றினி தோம்பு மன்றே. (எக)

தடக்குங்குமத் தையனல் லார்தமி யாய காலைக்
கிடக்குங்கிடை யல்லதில் லாமை கிளக்கு மாபோற்
கடக்குங்கழை வார்சிலை யான்கணை யாக வேவும்
அடக்கும்பசுந் தேன்கமழ் முல்லை யணிந்த முல்லை. (எஉ)

மருதம் :

விலகிவில் லுமிழு மோலி வேந்தருக் குறுப்பாந் தாங்கள்
உலகமூன் றளிக்கும் வேந்தை யும்பனுக் கோட னன்றென்
றிலகுபே ருழவ ரெல்லா மிந்திர தெய்வம் போற்ற
அலகில்சீர் வளத்தி னோங்கு மலர்தலைப் பழனச் சூழல். (எங)

தெவ்விய வவுணர்க் காய்ந்து திருவர சளித்துக் கேண்மை
வவ்விய விளவன் மாயன் மருங்கக லாமை போலாம்
நவ்விய புறவஞ் சூழ்ந்த நறும்புனற் சூழற் கின்பம்
கவ்விய கற்ப வேந்தன் கடவுளாய் வதியும் வண்ணம். (எச)

அறுப்புனற் கால்க ளோடை யகனதி மணிக்காழ் பூண்டு
சுறுப்பயி லிலஞ்சி பொய்கை தொகுபணை யிலைப்பூண் டாங்கி
நறுப்பொழிற் பொதும்பர் நந்தா வனவுடை நலக்கச் சூழ்ந்து
மறுப்பகை கடக்கு நொச்சி வளைசெறித் தன்றச் சூழல். (எரு)

பூஞ்சினை வஞ்சி பாங்கர்ப் புனைந்ததற் கேற்பப் பைத்தூர்
ஆஞ்சிறை யடமேற் செல்லு மவையதன் றொழின்முற் றுமை
காஞ்சிவேய்ந் ததற்கங் கேற்பக் கடிமரு தினத்திற் சிந்துந்
தீஞ்சுவை நறைநீ ரோடை செறுநதி கால்க ளெங்கும். (எசு)

காலிரு மருங்கு நீண்ட கரைக்கலித் தெழுந்த வேழம்
வாலிய பூத்து நிற்கும் வண்ணஞ்செங் களத்துப் போர்வேட்
டாலிய மன்னர் சேனை யணிவகுத் துடற்ற வேந்தும்
வேலிருங் கூட்ட மென்ன விளங்குவ விடங்க டோறும். (எஎ)

அளிநரம் புளர நாரை யமிழ்திசைப் பீலி யூதத்
தெளிதிரை முரச மார்ப்பச் சேவடி கம்புள் சூட
நளிசிறைக் குரண்டந் தாழ்ந்து நலத்தக வொடுங்கி நிற்ப
மிளிர்மணி மலர்மே லன்னம் வீற்றிருப் பனநீ ரோடை. (எஅ)

இந்திரற் காக்கம் வேண்டி யீட்டிய வேள்வித் தீயின்
வந்தெழு மவுணர் தாக்க மறுகுமேழ் முனிவ ரேய்ப்ப
முந்துசெங் கமலத் தேனுண் மூசளி வெண்பூச் * செற்றுந்
தந்தலை மிதிப்ப வன்னந் தணப்பன விலஞ்சி தோறும். (எகூ)

ஓம்புதன் குறியி னோடு முறைந்தெனக் கமலம் பூத்த
தீம்புனற் றடத்துண் மேதி சென்றுமேய்ந் துழக்க விண்ணில்
தாம்பெரு வாளை வெய்யோற் றுக்குவ கமலத் தேவி
கூம்புறப் பானு ணீங்குங் குற்றங்கண் டொறுத்தன் மான. (அ0)

பண்டொரு கோள்வாய்ப் பெய்து பாற்றிய காரிப் புத்தேள்
மிண்டிய கோள்க ளுள்கள் வேறுள மீன முற்றும்
உண்டுபின் னுமிழ்வ போல வுரைத்தவன் னவற்றை யெல்லாங்
கொண்டுள மடக்கிக் கால்வ குருமலர்ப் பொதும்ப ரீட்டம். ()

புரிமுறுக் குடைந்து தேறல்வார்ந் திழியும்
புதுமலர்க் கற்பகம் வளைந்த
விரிபுகழ்த் துறக்க வேந்துதெய் வதமாய்
மேதக வதிந்தகா ரணத்தால்
உரிமைகொண் டுகைக்கு மூர்தியாந் தாமு
முடங்கவட் பயில்வது போலாம்
வரியளி முரலும் பொழிறொறு நிவந்த
மதிறொறு மழைக்குலம் பயிறல். (அஉ)

மணிநிறக் கமுகு மிடறிறக் கலித்த
வாய்விரி யாதமென் பாளை
துணிபுனற் கயத்துத் தோற்றிய நிழலைச்
சூர்த்தவன் மீனென வெருவி
அணிமலர் மிசையா தகலெரு மையின்பி
னடரிரு டுரந்துசென் மதிபோல்
திணிமுலை யொழுக்குந் தீம்பய னுகர்ந்து
செல்லுவ சிறையனத் தொழுதி. (அங)

* செத்தும் - பாடபேதம்

தெளிபுன லுகுத்துத் தங்களைப் புரக்குஞ்
செய்ந்நன்றி மதித்துவர் பருகும்
அளிமுகிற் குலத்துக் கருஞ்சுவை யிளநீ
ரளிக்கிய விழைந்தன போலும்
வளிவழக் கழுங்க மிடைந்துபல் குலைகண்
மடலிறக் கான்றுபூம் பாளைக்
குளிர்மணங் கஞற்றி நிழன்றுவா னோங்கிக்
குயின்குழாந் தைவருந் தாழை. (அச)

சிறையளிக் குலங்கண் முரன்றலர் தோறுஞ்
செல்லுவ திவவியா ழெழுப்பி
நறைமலர் தொறும்வே றிறைகொளுந் தேவர்
நயப்புற வின்னிசை மிழற்றி
நிறைவரங் கிடைத்துப் போதுமெய் யடியார்
நிகர்தரு நந்தன வனங்கள்
பொறையுயிர் தாது குவிவன வவற்றைப்
பொழிமதுப் பெயர்ப்பன பணைக்கே. (அரு)

மங்கையர் தடந்தோள் வடிவமு மதர
வனப்பும்வா லெயிற்றுநீர்ச் சுவையும்
தங்கிய நலத்தாற் றளைதொறு முழவர்
தலையளி புரிவன கரும்பர்
அங்கவை குழைய வணக்குநா ணுக
வயலெலா மடர்வன சுரும்பர்
பங்கமெங் கணும்வே ளெய்கணை யாகப்
பரம்புவ தாமரை யரும்பர். (அசா)

இரவெலாங் கணவன் கலவியிற் றிளைத்த
விருநில மடந்தையக் கலப்பின்
விரவுசெந் நிறத்த விழிகளுந் தந்த
விழுக்குறி யிதழ்க்கனி வாயும்
பரர்விழி படுத்தற் குள்ளக நாணிப்
பாணியான் மூடிய தேய்ப்ப
வரமலர்க் கழுநீர் குமுதமுன் பகலின்
மலர்முகங் குவிவன வயல்கள். (அஎ)

மேகமண் டலத்தைத் தைவரு வாழை
விரவுவ தொருபுற மாகப்
பூகமென் றயிர்ப்ப நிவந்தெழு கரும்பு
பொதுளுவ தொருபுற மாக
நாகவல் லிகளு மஞ்சளிஞ் சிகளும்
நலப்பன வொருபுற மாகக்
காய்கதிர்ச் செந்நெ லிடமெலாம் விளைக்கும்
களமர்கள் கம்பலை மிகுமால். (அஅ)

பள்ளிகொண் டுறங்கும் புள்ளினம் தீய
பண்பினர் போலெழுந் திரியக்
கள்ளயி னசையின் வண்டினந் தக்கோர்
கடுப்பவீழ் மலரொடுந் துவள
வள்ளலப் படைகள் பூட்டுபு களமர்
மலர்முத றுமிதரக் கடவும்
வெள்ளமென் ணிலவென் றுரைதரு பகட்டேர்
விளாவுவ வியனில நெளிய. (அகூ)

உழுநர்க ளொருபா லுழுதசே றமுந்த
வொண்புனல் பாய்த்துந ரொருபால்
அழுகுசே றறிந்து மறுவலும் விளாவி
யைதுறக் குழப்பிநே ராக்கி
விழுமிய முளைக டெய்வதம் போற்றி
மேதக வித்துந ரொருபால்
செழுமுளை சேற்றிற் பதிந்தபின் றெளிநீர்
கீழ்மடைக் கவிழ்க்குந ரொருபால். (கூ0)

திறந்தகீழ் மடைகள் சிக்கெனச் சிறைத்துச்
செறித்தமேன் மடைகளைச் சீத்து
விறந்தநீர் பரவ முளைப்புனல் பாய்த்தி
விழுமிய விடரொரீஇப் புரப்ப
நிறந்தழை மதிபோல் வெள்ளொளி விரிக்கு
நென்முளை முழுவது மதியின்
உறைந்தபைங் கிரண மெனப்பசந் தெழுந்தாங்
குயர்வன பண்ணைக டோறும். (கூக)

நாறு பறித்துக் குணின்மோதி நறுநீ ரலைத்து முடிசெய்த
வேறு நிலத்தி னுழத்தியர்கள் விரவிப் பதிப்ப வளர்தோற்றம்
கூறு படுத்தி வதியுடலங் குற்றங் களைந்து கூற்றொழிப்பப்
பேறு கதுவ வேற்றுடலம் பெய்து செழிக்கு முயிர்போலும்.

வித்து நிலத்தின் வெறுத்தபயிர் விறப்பி னீங்க விடைவாங்கிப்
பைத்த நிலத்தி னகன்றபயி ரகல்வி னீங்கப் பதித்தோம்பும்
மைத்த வுடலி னுழவர்வினை மாற்றி யூட்டி யினிதளிக்குஞ்
சுத்த னிகர்த்தார் பணியெல்லாந் தோற்றத்திலங்கு முயிர்
[போன்ற. (கங)

வீண்பட லொழிகென மிதித்த பூந்தழை
ஏண்படு தன்னுரு விறந்து பைம்பயிர்
மாண்பட வளர்ப்பன மாய்ந்துந் தக்கவர்
பூண்பரா லுதவியென் பொருள்விளக்குமே. (கச)

கோசலம் விராய்க்குளம் பழுந்திச் சேறதாய்
மாசென வழித்தெறிந் துலர்ந்த வாப்பியும்
பூசலோ டுழவர்கள் போதர் வார்பழி
ஆசிலார்க் கடுப்பினு மாய்ந்து ளோர்விடார். (கரு)

பரம்புபல் லுயிர்தொறும் பாகத் தெல்லையிற்
புரம்பொடித் தவனருள் பொருந்துந் தன்மைபோல்
வரம்பினை தெல்லையின் மண்டு காற்புனல்
நிரம்பிநின் றதுநெடும் பணைக டோறுமே. (கசா)

மருவுபல் லுயிருமேல் வளர்க்கும் பைம்பயிர்
குருகின முன்புபோற் குறுகு ருவகை
சுருள்விரித் தமன்றுயிர்த் தொகைக ளோம்புவ
அருளின ரென்றுமவ் வருளிற் றீர்வரோ. (கஎ)

எடுத்ததோ ருடலுயி ரிகவு முற்றினும்
அடுத்தவா ணவத்தின்மீட் டாதல் போன்மெனக்
கெடுத்தமா மலர்முதல் கிழங்கு நிற்றலின்
விடுத்தெழுந் தெங்கணு மிடைதன் மேவுவ. (கஅ)

அளமரு பிறப்புக வமலர்க் குப்த்திடும்
வளமலர் களையென வழங்கப் பட்டன
* விளறருந் தகையரு மிடைந்தொ ருத்தர்பால்
தளர்வுசெய் வாரெனிற் றூழ்க்கற் பாலரே. (கூகூ)

அரிய லார்ந்த வனந்தரு ளத்திஞன்
மருதம் பாடும் வயற்றலை யாடவர்
பருவங் காட்டலும் பாய்களை கட்பச்செல்
கரிய வாட்டடங் கண்ணிய ரெங்கணும். (க00)

பணைம லர்க்களை பற்றிப்ப றித்தலும்
பிணைய னம்பெடை யோடிரி வுற்றன
விணைம லர்க்குல மென்னக்க வற்றுவார்
துணையு நம்மையு மென்றுது ணிந்தென. (க0க)

செங்கை தாடித லைக்குய மானனம்
பொங்கு தாமரைப் போதெனற் கேற்புறப்
பங்க மோடு பயின்றன கட்டுலாம்
அங்க ணுற்றுக்கா லாட்டியர்க் கென்பவே. (க0உ)

பகைமை தோன்றப் பறித்தடு காலையும்
முகைநெ ரிந்தமு டிப்பன மோப்பன
தகைக ளுண்பன சாத்துய ரேய்க்கினும்
அகைந லத்தனுங் காரமைந் தாரரோ. (க0ங)

மதுநு கர்ந்தம யக்கினர் பாங்குளார்
வதன மாதி களையென வெளவுவார்
கதிய தம்படை காய்பகை போற்செயும்
முதுமை யத்திர மூழ்குநர் போன்றுளார். (க0ச)

களையக் கைகளைப் பற்றுதொ றுந்தொழில்
உளையப் பூவென் றுளிமுகம் பாய்வன
விளைமட் டேட்டலர் வீதனி றுத்துமத்
தெளிவைத் தேறிய போற்சிறை வண்டினம். (க0ரு)

* வெளிறரும் - பாடபேதம்.

வயலிற் பாய்வன மாதர்வி ழிக்கயல்
வயலி ருங்கயல் வாண்முகம் பாய்வன
அலரிற் பாய்வன வாரள கத்தளி
அலரின் வண்டள கத்தலர் பாய்வன. (கOசு)

எள்ளுங் காற்கிரிந் தாங்களை ஞெண்டுபோம்
பள்ள நீரிற் பகட்டுவ ரால்புகும்
அள்ளல் கூர்ம மழுந்துமட ர்த்தெறி
கள்ள வம்புயங் கங்கிற்க விழுமே. (கOஎ)

கமலஞ் செங்கழு நீரனிச் சங்கமழ்
குமுதம் வள்ளை கொடிவிடு சைவலம்
அமிழ்த மென்மொழி யாற்றுக்கா லாட்டியர்
தமது மெய்யினல் லாற்றளை யில்லையே. (கOஅ)

உறுப்பி னுக்கின மாயொளிர் யாவையும்
கறுத்த டர்த்த கடைசியர் புன்முதல்
இறுத்தெ றிந்தன ரீண்டினஞ் சாடுவோர்
வெறுத்தற் கஞ்சுவ ரேமற்றை வேற்றினம். (கOகூ)

மதுறு கர்ச்சியின் வாண்முகஞ் சேர்தன
கதுவு நீரிற் கரங்கள்வி ளர்த்தன
செதுவ தட்டரு டம்பயிர்க் கீத்தலாற்
புதுமை யீரொளி பூத்தன போன்றன. (ககO)

அன்னத் தோடக நாணவொ துங்குபு
கின்ன ரத்தொகை யஞ்சக்கி ளர்ந்துபோய்
நன்னர்த் தம்வயி னண்ணுவ ராபவே
முன்னிப் பண்ணை முழுக்களை கட்டுளார். (ககக)

சூறை யாட்டயர் வார்தொலை வெய்தலும்
பாறி னோர்படர்ந் தாங்குப்ப டுகளை
கோறல் செய்தவர் நீங்கலுங் கொம்மெனச்
சேற ருவயற் செற்றின புள்ளெலாம். (ககஉ)

கைகள் சீப்புக் களைதொழி னீவுதல்
நெய்க டிப்புன லாநில வுந்தலை
செய்க ளாகத் திருநில மங்கைதன்
மைக ருங்குழ லாவள ரும்பயிர். (ககங)

ஒளிகண் மாய்ப்ப வொலிதெங்கு பூகதம்
துளிமை மாய்ப்பன வாழைதொ குங்கழை
வளியின் மண்டில மாய்ப்பன வென்றுதாம்
களிறு மாய்ப்பக் கதழ்ந்தெழும் பூம்பயிர். (ககச)

எழுந்துவளர் பசும்பயிரின் றேற்ற நோக்கி
யெமைப்பொதிந்து துவக்கியுடன் முழுதுஞ் சால
அழுந்திநனி கண்டேதி யாக்கு மீதென்
றஞ்சியிடை மடக்கும்வகை யகத்து நாடிச்
செழுஞ்சுவைத்தெள் ளமிழ்தகிர ணங்க டம்மாற்
செறிகருப்பக் கணமுறுத்து வளரா நிற்கும்
விழுங்கிருட் பிழம்புமுரஞ் சொளிகான் றெங்கும்
வெறிகளுற்றுங் குமுதமகட் புணருஞ் செல்வன். (ககரு)

களபநெடு வாய்க்கிளைக்கு மிளங்கோ டென்னக்
கவவுமடல் கிழித்தெழுவெண் கதிர்க ளெல்லாம்
வளர்திறங்கண் ணகன்புடவி முழுது மான
வல்லவுண னெண்ணிறலம் வதியப் பெற்றங்
களவையிடற் கரியபிரான் வரத்தி னுற்று
லங்கநிறை யுரோமமெல்லா மமரர் கோமான்
உளநடுங்க வயிரநுதி யீட்டி யாக்கி
யும்பர்பொதிர்த் தடநெடுகு மூக்க மானும். (ககசா)

உடன்முழுதும் பலயோனி தழுவி யெண்ணி
லொண்டொடியா ரோருருக்கொண் டிருந்தா லன்ன
அடர்பசும்பொ னுலகிறைவன் செய்தி கேளா
வறியாது போர்முயன்று மந்தோ வென்று
தடவுமனத் தெழுஞ்சமழ்ப்பா லொளிவே றுயத்
தனிப்படைக டலையிறங்குந் தன்மை போலும்
மடல்கிழித்து விசும்பெழுந்த கதிர்க ளெல்லா
மரகதத்தி னொளிதழைத்து வணங்குந் தோற்றம். (ககஎ)

மன்னுசிவஞ் சதாசிவனென் றுடலம் வெண்மை
வாய்ந்தீச னெனநீல வுருவம் பூண்டு
பின்னரர னெனச்சிவந்த வடிவந் தாங்கும்
பெற்றிமைபோல் வித்துமுளை வெண்மை யாகி
நன்னர்மர கதவொளியின் பயிரா யோங்கி
நயந்ததற்பின் செம்பொனிற வயக்க மாண்ட
கொன்னும்விளை வாய்ப்பழுத்து நாளுந் தாழ்ந்த
குழவிபயந் தவர்மணிப்பூண் கொங்கை யென்ன. (௧௧அ)

பரவுசிவ ஞானமுணர் ரடியார் செங்கைப்
படுத்தபொருள் பெரும்பயனைப் பயக்கு மாபோல்
விரவுமுழ வர்களளித்த சிலகொண் டாற்ற
வியன்பணைகள் பெரும்பயனு விளைத்த சாலி
மரகதமெல் லுருத்தணந்து கவுர மேனி
வயங்கியறம் பற்பலவும் வளர்க்கு மாற்றல்
இரவுவளங் கதிர்ச்சடிலக் குழகன் பாங்க
ரிருந்தருளு முமைமாதும் புரையு மன்றே. (௧௧௯)

உடல்கருவி புவனமுறு போக மெல்லா
முடங்கியைந்துஞ் சிவன்றேற்ற மொன்றே காணும்
மடனகன்ற சீரடியார் நுகர்ச்சி யாது
மருவாமை யொழிந்துநிற்கும் வாய்மை யொப்ப
இடனகன்ற தளைகடொறும் விளைந்த சாலி
யிரும்புனல்வேண் டாமையொழி பருவ நோக்கித்
தடநெடுந்தோ ளுழவரெல்லா மண்மி யாத்த
தண்புனலைக் கவிழ்த்துணக்குந் தொழிற்க ணின்றார். ()

ஆக்கும் பொழுதாக் கியளித் துலகம்
போக்கும் பதநேர் தலும்போக் குமருள்
தேக்கும் பரநேர் விளைசெந் நெலெலாம்
தாக்கும் வகைகண் ணினர்சார் குவரால். (௧உ௧)

தகவா யினுந்தா மளிசெய் தவென
முகநே ரெதிர்வுக் குளமுன் னலர்மற்
றுகவீழ் விளைவிம் பருறந் தெவரும்
இகவா ளினிறுத் தனர்பின் னிடுவார். (௧உஉ)

விளைவைத் தடிவார் வளைமீன் கமடம்
உளையக் கொலைசெய் தொருபா லிடுவார்
திளைநல் வினையார்க் கொருசெய் தொழிலில்
கிளைபல் பொருள்வாய்த் திடுகேண் மையவே. (கஉங)

வயன்மீட் டுமெழூந் தமலர்ப் புதல்கள்
குயவாய் விளைவோ டுகுறைந் தனவால்
பயில்பங் கமளா யலர்பட் டவர்பால்
துயரே பலகாற் றுறுவிப் பர்களே. (கஉச)

நிலையா யெழுகா லிருந்தார் நிகரும்
சிலைபோ லிருந்தே துயில்வார் சிவனும்
தலைதாழ் தருகாற் றடிவுற் றிடனும்
அலையாப் படைகொண் டவரொத் ததரோ. (கஉரு)

குறைத்தபூங் கதிர்ச்சாலி கொடுபோந்து களனெங்கும்
செறித்திதனைப் பலவாற்றாற் செலுத்தறத்தி னுயிர்துறக்கம்
இறப்பதுவேண் டாவிதனு னெய்துவா மெனவுளத்தின்
அறுத்தவர்போ லுழவரெல்லா மைதுநெடும் போரிடுவார். ()

விண்ணறுத்து மேக்கிவர்ந்தார் வியன்றுறக்கத் தவர்மகளிர்
அண்ணன்முலை முயக்கன்றி யறியாமை யெதிர்நோக்கிப்
பண்ணரிய தவந்தானப் பயப்பாட்டி னெடும்விளங்கும்
மண்ணகலா ரறிஞரென வல்லைபவ னூறுதிழிவார். (கஉஎ)

இவற்றின்வழி யீங்கெவரு மிவர்வரெனப் பலகோளும்
தவச்சிதர்ப்ப வைகறுெறுந் ததைந்துரிஞிச் செலநோக்கிக்
கவற்சியிமை யார்க்குறுத்தல் கடனன்றூ லெனக்கதிர்ப்போர்
அவற்றையெலாந் தணித்துழவ ரருந்தொடக்குக் கடாவிடுவார்.

தென்புலத்தார்க் கெதிர்முறைசெய் செயல்போலத் தென்றி
தன்பகட்டுக் கினமான தாங்கள்செய றக்கதென [சைக்கோன்
முன்புவய விடணுக முன்னிவிளா வியவீண்டும்
இன்புறுக்குங் கதிர்த்துகைப்பி னிடனேர்பு திரிந்தனவால். ()

செயற்றலைநின் றுழப்பவர்க டேக்கெறிவ ரெனுமொழிக்கண்
அயிர்ப்பதுமுண் டேதொடக்கி யடித்துகைப்பக் குலாலன்வினை
இயக்குதிகி ரியிற்பெயர்கா லிருங்கதிர்கௌ வுபுகுதட்டி
வயிற்றடக்கி யுடல்வீக்கி மதப்பனவன் பகட்டினங்கள். (கரு௦)

சுற்றமெலாம் வேருக்கித் தொடர்ந்தவரை யோகிருத்தும்
நற்றவர்போல் வைப்பதடி நவைதுவரத் தணப்பித்துக்
கொற்றவனு தியர்க்களித்துக் குலாவியபண் டியிற்கொடுபோய்
முற்றநெடுங் கூடுநிலன் முதுகுளைய வுறுத்துவரால். (கருக)

வித்துணக்க லொருபாலாம் வெறுத்தவரி சனமிஞ்சித்
தெர்த்தெடுப்ப தொருபாலாஞ் சுவைக்கரும்பு தடிந்தாலை
வைத்தடுவ தொருபாலாம் வார்கமுகா தியிற்குலைத்த [றும்.
கொத்திறுப்ப தொருபாலாங் குளிர்பணைத்தண் ணடைகடொ

மங்கலத்தின் பெருமகிழ்வும் வருபுனலாட் டயர்வியப்பும்
கொங்குயிர்த்த மலர்ச்சோலைக் குலாய்நுகருந் தனிநயப்பும்
திங்கடொறுந் தேவகுலச் சிறப்பெடுக்கு மிகுகளிப்பும்
பொங்குவன வூர்கடொறும் பொலிதருமாந் தருக்கெல்லாம். ()

பரத்தைமையாற் கணவருடன் பாவையர்கள் புலந்தொழிக்கும்
வரத்தகலா மலதேனைக் கலாம்வருவ தறியாதங்
கிரக்கனுறு வார்க்களித்து மிடருழப்பார்க் கிடர்துமித்தும்
புரக்கவிரங் குவதன்றிப் புகாதுயங்கி யிரங்குவதே. (கருச)

தணந்துபரத் தையர்மாட்டுச் சார்காலு மூடலினும்
உணர்ந்துணர்த்தும் பாணியினு முலவாமை யெழுநினைவு
புணர்ந்ததன தியறெரித்தாற் போலமதன் கணையாகி
மணங்கமழ்பங் கயமலர்கண் மரீஇத்திகழுந் திணைமருதம். ()

நெய்தல் :

விருப்பின் மீன்கவர் வினைஞர் கோட்சுறு
மருப்பி னுடைனும் வருதன் னூண்புணர்ந்
தொருப்பட் டீர்ம்புன லும்பற் போற்றித்தம்
கருத்து வாய்ப்பது கருங்க டற்புரம். (கருசு)

கிழக்கு மேற்கெனக் கெழுமச் செப்பலால்
கிழக்கு மாதிரக் கிழவன் பண்ணைசூழ்
முழக்கு நீர்க்கடன் முதல்வ ஞனது
வழக்கு மேற்றிசை வருணற் கென்பவே. (கரு௭)

புரையில் புன்னைகள் பூசை நீர்க்கடல்
அரையற் காற்றுவா னமைத்தல் போன்மெனத்
திரையொ துக்கிய தெய்வச் சங்கினுள்
விரைம துப்புனல் வீயு குப்பன. (கருஅ)

பொய்ம்மை யண்ணல்பாற் புகன்ற தீங்கெலாம்
மைம்ம ணிக்கடல் வைக லும்படிந்
தம்ம நீக்குமா றடுத்த போன்றன
விம்மு தேமலர் விறந்த முண்டகம். (கருகூ)

தடித்தெ ழுந்தொறுந் தாழை பூப்பன
அடுத்த தண்கட லண்மி நீர்முகில்
எடுத்த செல்வமற் றிஃதெ னுவுளம்
மடுத்த காதலின் மகிழ்ச்சி கொண்டென. (க௪0)

தாழை பூவொடு ததைந்த முன்னெலாம்
ஞாழல் வித்திர ணன்று குப்பன
வாழி வாளொடு வளைந்த கள்வர்முன்
வீழ ணித்தொகை வீசு வாரென. (க௪க)

கலவி ஞர்பழி கரக்கு மேதைபோற்
குலவு நாகமுங் கொங்கு ஞாழலும்
நிலவு கைதையு நெய்த லுங்கடற்
புலவ றக்கடி போர்ப்ப வெங்கணும். (க௪உ)

இழிவு ளாருள மேற்ப வர்க்கெலாம்
அழிவி லாவர மருளு வாருளர்
கழிபு லாற்கருங் கடல கன்றுறை
முழுகு வோரைவான் முன்னு விக்குமே. (க௪௩)

தெள்ளி யோர்ப்பொருஞ் செயற்கு விஞ்சுற
உள்ளு வான்பொரு ளுதவு பூங்கடல்
தொள்ளை யோர்ப்பொருந் தொடுதற் கேற்புற
அள்ளு நீரெழு மார்வக் கேணிகள். (கசச)

கருவு யிர்ப்பன கங்கு டிப்பன
மருவி னத்தினை வாய்ம டுப்பன
உருகு நோக்கினு ளுவப்ப மீன்குலம்
உருவ மாதிக ளுறழ்வ காட்டுமே. (கசரு)

இப்பி வாலிடம் புரிவ லம்புரி
தப்ப ருஞ்சலஞ் சலங்கள் பன்முறை
பப்பின் முற்றிய பாஞ்ச சன்னியம்
எப்ப ரிசனத் திறைவ னெக்குமே. (கசசு)

விலங்கித் தாந்திரை விரைந்து வேறுபல்
புலங்க ளிற்பொருள் போக்கி யேற்றுலாம்
கலங்கள் காழ்வினை கழிப்பி னார்ந்துசெல்
அலங்க லாக்கையி னுவி போன்றன. (கசஎ)

துப்பு நித்திலத் தொகைகள் சங்கினம்
உப்பு மீனமு முயர்த்த வாடவர்
மைப்பெ ருங்கணார் விலையின் மாற்றுவ
ஒப்பின் றேப்பன வுருவு போலவே. (கசஅ)

சேரி யோர்புலி தேடி யேற்குமக்
காரி யீதுணக் கடனன் றாலென
ஆர வண்முதோ றகல வோப்புவார்
ஈர மீனுணக் கேந்து கொங்கையார். (கசக)

நீங்கு காதலர் நீண்ட தேர்வழி
பாங்கின் மாதரார் பார்த்தங் காற்றுதல்
தேங்கு நீர்க்கட றெறிந்து கட்புகை
தூங்கி நீருகத் தூர்க்க முன்னுமே. (கரு0)

துணைவ னீங்கினர் தொழுதிப் புள்ளொடும்
அணையும் வண்டொடு மலையு மீனொடும்
புணரு மின்னலிற் புலம்பன் மேயினர்
உணர்வித் தன்னவற் றுரைகொள் வாரென. (௧௫௧)

சாத லன்னதோர் தளர்வு செய்தம
நீதி காட்டிய நிகரில் பூங்கழைக்
கோதை வார்சிலைக் குமரன் கூர்ங்கணை
யாத னீலமங் கணிந்த நெய்தலே. (௧௫௨)

மன்னு நானில வரைப்பி னைந்திணை
சொன்ன வாறினிச் சொற்ற நானிலம்
முன்னி யொன்றினோ டொன்று முற்றிய
அன்ன நீர்மையு மறைய நின்றதே. (௧௫௩)

திணைமயக்கம் :

வரைத்தி னைக்குர னுகர்கிளி கொல்லையின்
வளரிறுங் கினுக்கேக
நிரைத்த கொல்லையிற் சொன்னலூண் வாரண
நெடும்புனத் தினைக்கேகிப்
புரைத்த தாயினும் பெற்றது புல்லிதாப்
பெருதநிற் புகலாமென்
றுரைத்த நன்மொழி புதுக்குறும் விம்மித
மோங்குவ தொருபாங்கர். (௧௫௪)

மல்லன் மந்திரந் தளைத்தென முழைதொறு
மணிப்பணி யசைவற்று
முல்லைத் தீங்குழ லுகர்தர மானமா
முதிர்புதன் மயிர்யாப்பச்
செல்லு றுதவ ணிற்றல்போற் றினையுணாச்
செல்லுறு பதநோக்கிப்
பல்லி ணர்க்கொடி மாதவி நறுநிழற்
பயில்வது முள்தாங்கண். (௧௫௫)

பூரி யோர்குழாஞ் சீரியர் சீரியோர்
    பொதியிற்பூ ரியர்சேரில்
சேரு மவ்வவ ராகவே மதித்திடப்
    படுவராற் செறிபண்ணை
வாரு நாகவல் லிகளூராய்க் கறிபென-
    மலைக்கறி யுடன்மேவும்
கூரும் வெள்ளிலை யுடனது வெனக்கறி
    கூடுவ தொருபாங்கர். (கருசு)

வேழ மென்றுதன் பெயர்கொளத் தகாதென
    வெகுண்டகன் பணையண்மி
வேழம் யாவையும் வரைத்தலை வேழங்கள்
    வீத்துணப் பகடென்ன
வாழி தன்பெயர் கொண்டதென் னெனச்சினை இ
    மதமலை வறங்கூர
வாழை யர்திகற் புகுந்திருங் கடாவடும்
    வனப்புமா யிடைமல்கும். (கருஎ)

பரந்த பன்னதி மடுப்பினு மமைவுறுப்
    பாழகட் டினைக்கார்கோள்
இரங்க மாலைவெள் ளருவியாற் குழிப்பமேக்
    கெழுவரை வரைதன்னைத்
தரங்க நீள்கரத் திரள்களாற் சிதர்படத்
    தடவுரத் தெதிர்ந்தோச்சிச்
சுரந்த வோகையிற் பெருங்கட றெழுந்திடுந்
    தொடர்புள தொருபாங்கர். (கருஅ)

காந்து நாகத்தின் மணிகளும் வயிரமுங்
    கனையரு வியினோங்கல்
ஏந்தி•நீள்கடற் களிப்பவீர்ம் புணரியு
    மிலங்குவித் தருமத்தோ
டார்ந்த நித்திலந் திரைகளி னடுத்தலுக்
    களித்திரு பெருவேந்தர்
சேர்ந்த போதுசெய் வரிசைகள் காட்டுமத்
    திருவுமா யிடைமன்னும். (கருகூ)

குரும்பை மென்முலை தோன்றுமுன் பாளையங்
குரூஉத்துகின் மிசைபோர்த்திட்
டரும்பி முன்வரு காலது நீவுவ
தழகெனப் புறவத்து
விரும்பு முல்லைகள் சிரிப்பநீர்ப் பழனத்து
விறந்தநெட் டிலைத்தெங்கு
பெரும்ப ழங்களாற் றளவினைச் சிதைத்திடும்
பிணக்குள தொருபாங்கர். (௧௬௦)

கேழ்த்த பொன்மலர்க் கடுக்கைசூழ் மாதவிக்
கிளர்கொழுந் திருண்மேகம்
தாழ்த்த சாகைய வயன்மரு தினங்களைத்
தாவவந் நிலவேழும்
சூழ்த்த நீள்கொடி வயலைமென் கொழுந்துக
டுறுவனத் தெழுபூவை
ஊழ்த்த பூஞ்சினை தாய்ப்பரத் தையர்கருத்
துறழ்வளங் கஞமாங்கண். (௧௬௧)

புலவு வீசுதற் கஞ்சிநா சியைக்கருஞ்
சாந்தினாற் புதைத்தன்ன
சுலவு காரளி யிமிர்குமிழ் காட்டிடத்
துறுவன மவண்மாதர்
கலக வாள்விழி மானடற் கஞ்சுபு
கண்கண்மூ டியதென்ன
அலரு நீலங்கள் பகற்கழி குவிதரு
மழகுகாட் டுவதோர்பால். (௧௬௨)

மாய னாகிய மீனந்தன் வரைப்பிடை
வதிதரப் புகுந்தாங்கு
மேய வாழியி னெழுந்தமீன் புறவத்து
விரைக்குறுஞ் சுனைவீழ
ஏய பூஞ்சுனை மீனமன் னதனிட
மெதிர்கொளக் குதித்தோடிப்
பாய வேலைநீர்ப் புகுந்துலாய்த்
திரிதரு பரிசுமவ் வுழித்தாகும். (௧௬௩)

கலவர் மீன்படுத் தெழுப்புசாப் பறையொலி
கறங்கறீ தெனத்தன்னுள்
அலவர் சாலிகொய் தண்ணுமை ததும்பொலி
யடக்கிமே லெழநோக்கிக்
குலவு நீணதிப் பழனமென் றுறைப்புனல்
கூர்ப்புறக் கடலேறி
நிலவு தன்னிடத் தடக்கிடு மயக்கமு
நீடுவ தொருஞாங்கர். (கசச)

வாங்கு செந்நெலின் கதிர்கவர்ந் தினக்குரீஇ
மகரநீர்க் கடற்பாங்கர்
ஓங்கு புன்னையிற் கொறிப்பவங் குணக்குமீ
னெய்யெனக் கவர்ந்தோடித்
தேங்கு நீர்ப்பணைக் காஞ்சியிற் கொடியினஞ்
சேர்ந்துதம் பதிநீங்கிப்
பாங்கு வேற்றிடம் புகுங்கொடி யோரெனப்
பயில்வது முளதாங்கண். (கசரு)

குரும்பி தேரிய முதையலூர்ப் பட்பையுங்
குன்றினெண் குகள்செல்ல
இரும்பு லாரிய புனம்வயற் கொல்லையா
னின்றகன் றுகள்செல்ல
அரும்பு மூசிய குறுஞ்சுனை கற்சுனை
யாவிவண் டுகள்செல்ல
வரம்பி லாரிமை யாரியன் முறைதெரி
வயினெனக் கலப்போர்சார். (கசசா)

வேழம் வாய்திறந் தெழுமணி புறநகர்
வேலையு முரம்பாக்க
ஆழி வீசிய மணிகுளஞ் சுனையவ
லடவவை வயன்மாதர்
கோழி யோச்சிய குழைபடக் கிழிந்தகுன்
றகத்திருல் புன்னுக
வாழி தேத்தடை யருவிகள் பெயர்த்தலை
வாயிடும் வளனோர்சார். (கசஎ)

கான வாரணங் கழனியுங் கானலுங்
கலாவுறக் கடிநல்லூர்த்
தான வாரணம் பாக்கமும் பாடியுந்
ததைதரத் திரைமுந்நீர்க்
கூன வாரணங் கொழுபுனற் கால்களுங்
குரைப்பருக் கானியாற்றுப்
பேன வாரமுந் தவழ்ந்திட மிகுவளம்
பிணைந்ததா லொருமாடு. (கசு௮)

வள்ளி மௌவனீள் வயலைதுப் பிலதைகண்
மலர்விரி கணிகொன்றை
கள்ள வஞ்சிநா கத்தினுட் டந்திலக்
கடிமர மொரீஇமூன்றும்
நள்ள மீப்படர்ந் தொருவழிக் கோத்திர
நண்ணினர் தமைநீவி
ஒள்ளி யோர்ப்புணர் மாதர்போன் றுறுவள
மொருமருங் குளதாமால். (கசுகூ)

இனைய வாறுபல் வளங்களும் விராவிய
விடங்களு ளுவராதி
புனையு மாழிதன் னிழிவறிந் தகற்சியிற்
போற்றிநின் றிடக்கானும்
வனைகலாப்புகழ்ப் பழனமு மருங்குற
வள்ளிநா யகற்குங்கி
வினையெ லாந்தபும் விலங்கல்வீற் றிருப்பது
தணிகையந் தலமாதோ. (கஎ0)

திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—க௮சு.

# திருநகரப் படலம்

---

திருவி ளங்கிய வனப்பினி லறிவினிற்
றிறத்தினி லருடன்னில்
ஒருவர் தங்களை யுயர்த்தமுன் முருகனை
யுவமையாக் குவரன்னன்
பொருவில் வள்ளியொ டாடிட மாகிய
புகழ்த்தணி கையும்யாங்கும்
ஒருந கர்க்கணி யுயர்த்தமுன் னுவமையா
வுரைப்பதா லேவராலும். (க)

ஓங்கு பன்மறை யாதியின் முதலெழுத்
துறுபொரு ளுணர்கல்லாத்
தீங்கு தேர்ந்துவன் சிறையிடப் பட்டவன்
சிருட்டியி லுளதாயின்
பூங்கள் வார்குழல் வள்ளியொ டாடுதல்
புகன்றிடா னதனுன்முற்
றுங்கி வையகம் படைப்புழி யறுமுகன்
றுன்படைத் தஃதொன்றே. (உ)

குண்டு கண்ணபேழ் வாயின வீங்கிய
குடவயிற் றினபூதம்
மிண்டு தேவர்க டலைக்கல னராத்தொடை
வியன்புயக் கணநாதர்
மண்டு வெள்ளியங் குன்றுமொவ் வாதெனின்
மழவிளங் கதிர்கோடி
கொண்ட மேனியி னமரர்சூ ழித்திருக்
குன்றமொப் பதுமுண்டே. (ங)

சங்க மேந்திய தலைவனும் பிரமனுஞ்
சதமகத் திறையோனும்
பொங்கு தந்நக ரொழிவள முழுவதும்
புகுந்துபோற் றுபுவாங்கி
அங்கண் வைகினர் வாழனுற் றூரெனி
லறுமுக னரசாளும்
நங்கள் காவியங் கிரிவள மொன்றோடு
நாட்டவும் படுமேயோ. (௪)

புல்லி தாகிய பொன்னக ராதிமேற்
பொருந்துவ தடாதென்ன
வல்லை நூறிய வெழுவதோர்ந் தித்தலம்
வகுத்துழி வரைகீண்டோன்
செல்லு ரூவகைப் பலவரை யாப்புறச்
சிவணுவித் தாற்றுவென்
றல்ல னுக்குபன் மணிச்சிலம் பிண்டப்படைத்
ததன் றலை யமர்ந்திட்டான். (௫)

பரவு காஞ்சியிற் பற்பல விம்மிதம்
பணித்தவ னொழியாமை
அரவ மாலைய னமைந்தது முலகெலா
மழிப்பமேக் கெழும்பௌவம்
விரவு ருதயல் விலக்கலுங் குருமொழி
விளம்பிய விடனுமிக்
குரவ னீள்வரை யெல்லையி னிருந்தவக்
கொள்கையைக் குறித்தன்றே. (௬)

ஓவ வம்பல மிரசித வம்பல
மொளிர்பொனம் பலங்கண்டோர்
பாவ நுங்கொளி யரதன வம்பலம்
பதமெடுத் திறையாடல்
மேவ வஞ்செவிக் குருமொழி வைத்தவன்
வியன்றணி கையை நோக்கின்
சாவ வவ்வுழித் தென்றிசைக்
கடவுளைச் சாடுதற் கருத்தன்றே. (௭)

வார ணப்பிரான் மணிநகர் துறக்கமே
மணிப்பொருட் டலர்வாழ்க்கை
ஆர ணப்பிரா னணிநகர் சத்திய
வுலகமே யராப்பள்ளி
நார ணப்பிரா னகர்கள்வை குந்தமே
நன்றெழுந் தார்த்தாடுங்
கார ணப்பிரா னகர்சிவ லோகமே
கரைந்தவத் தலைமாதோ. (அ)

புடைந கர்த்தலை யசுத்ததத் துவமெனப்
பொலிந்தது வளஞ்சான்ற
இடைந கர்த்தலை யிலங்குசுத் தாசுத்த
மெனப்பொலிந் தஃதுள்ளால்
மிடைந கர்த்தலை சுத்ததத் துவமென
விளங்கிய தவைமூன்றும்
உடைய தத்துவ மவைகடந் தொளிர்வதொத்
தோங்கிய துயர்குன்றம். (௯)

ஆய பல்படை யாதிக ளாக்கலிற்
புடைநக ரயன்போலும்
மாய மென்மொழி மயக்கியா டவர்துனி
மாதரை யுயிர்காத்து
மேய போகங்கள் விளைத்தலி னிடைநகர்
விண்டுவொத் திடுமுற்றோர்க்
கோய வின்னல்க ளறன்கடை துடைத்தலி
னுண்ணக ரரனேரும். (௧௦)

அடுத்து ளோரிளைப் பலர்கயப் பொழில்களா
லனுக்கலா லரன்போலும்
மடுத்த மாணெழிற் புடைநகர் மாதரார்
மறைத்துநல் கிடுமின்பம்
தொடுத்த காதலி னிடைநக ரீசனைத்
துணையும்வேட் டனதுப்பக்
கொடுத்து மேவலி னுண்ணகர் சதாசிவக்
கொற்றவன் றனைநேரும். (௧௧)

முழுது ணர்ந்தநித் தியர்தமக் காயினு
முழுவதுஞ் சொலப்புக்கால்
பொழுதின் றுய்விடு மாதலின் மூவகைப்
புரவள மெழுகூற்றில்
பழுதில் பல்பவ மெண்பத்து நான்குநா
றுயிரம் பட்டாங்குக்
குழுமி நின்றிடு மவற்றுளுஞ் சிலவினிக்
கொண்டிவ ணுரைப்பாமால். (௧௨)

அலங்குகதிர்ச் செழுஞ்சாலி கோழுரையை
மறைத்தலினு லலர்பூஞ் சோலைக்
கிலங்குமணி மேகலையா மிணர்த்தபொழில்
பாம்புரியோ டெழுந்த நொச்சி
நலங்கிளரு மரைமறைத்து நிற்றலினு
லதற்குடையா நாம விஞ்சி
விலங்கலுயர் தடவரையை மறைத்தலினு
லதற்குடையாய் விளங்கு மன்றே. (௧௩)

துன்றுகதிர்ப் பசுஞ்சாலி படிக்குயர
வதற்குயர்ந்து சோலை தோன்ற
மன்றல்கமழ் பொழிற்குயர்ந்து மதிறேன்றும்
பெருங்காட்சி வள்ளி பாகன்
வென்றகழ ெறுழப்புகுமெய் யடியவர்கண்
மனமிவர்ந்து விலங்கல் சேர
ஒன்றுமணி பலகுயின்ற சோபான
மடுத்துயர்ந்த வோக்கங் காட்டும். (௧௪)

வளச்சாலி மலர்ப்பொழின்முன் றலைவணக்கு
மலர்ச்சோலை மதின்முன் காய்த்த
தளிர்ச்சாகைத் தலைவணக்குந் தடமதினீள்
கிரிமுன்மிசை தரித்து வானம்
அளப்பான கொடித்தலைகள் வணக்குமருஞ்
சாதிமுன்னோர்க் கடுத்த பின்னோர்
திளைப்பான மகிழ்சிறக்க முறைநின்று
தலைவணக்குஞ் செய்கை மான. (௧௫)

கொடியனவே குளிர்பொதும்புங் கொடியனவே
யிஞ்சியுங்கோ புரமுஞ் சாலக்
கொடியனவே யிவைமுறையாற் கொழுங்கண்மடுத்
தலர்தூற்றுங் குறுகார் சேரின்
அடிபெயரா தவ்வுழியே தலைதுமிக்கும்
பொறிபடைக்கு மலரி யாதி
மிடிதுளக்குந் தேவர்தமை யாறலைத்துக்
கலக்கநனி விளைத்துத் தட்கும். (௧௬)

கடியனவே யகன்வயலுங் கடியனவே
தண்டலையுங் கயமுஞ் சாலக்
கடியனவே யிவைமுறையா லுழுதுழக்கிப்
புண்படுக்கக் கலங்கு மாதர்
அடியெடுத்திட் டுதைத்துவைது கட்டிமணி
வாய்க் கவ்வி யயிர்க்க ணேக்கிப்
பொடிமதுப்பல் வளம்பறிக்கப் படுங்குடைந்து
மாசுறுத்தப் புலம்பு மன்றே. (௧௭)

பூத்திருந்தும் புனற்றடங்கள் யாவரையுந்
தோய்ந்துபுகழ்ப் பொருளு மாக்கும்
காத்திருந்தும் கடிமலர்கள் கமழ்நறுந்தேன்
சோர்வுடைத் தாய்க் களிப்பு மாக்கும்
ஏத்திருந்தும் வயவர்சிலை யெதிர்ந்தவர்தம்
முயிர்வாங்கி யிசையு மீட்டும்
பாத்திருந்தும் புலவர்குழா மொருகலைமான்
றனைமணந்து பழியுந் தீரும். (௧௮)

ஆழ்ந்துகிடந்துங் கரப்பதக முன்றேனை யறிஞரினி
தமைத்தவருஞ் செய்யுடானுந்
தாழ்ந்துகிடந்தும் புகழத்தக்க மைந்தர்தடங் கரமன்ற
வரறஞ்சா னெஞ்சந் தாமும்
போழ்ந்துகிடந்தும் புனைவவளை யன்றேனைப்
பொருகளிற்றுக் கோடுகளும் பொழிலி னுள்ளால்
வீழ்ந்துகிடந்தும் முயர்வமல ரன்றேனை
வியனகருள் வெறுத்தபொருள் பலவு மன்றே. (௧௯)

நகர மூன்றினும் விராய்த்தொடை படுப்பன நாடித்
தொகையி னுற்சில வுரைத்தன மினித்தொகு நகருள்
வகையி னுற்சில வேறுவே றுரைப்பது மதித்துப்
புகரி லாப்புடை நகர்வள முந்துறப் புகல்வாம். (உo)

புறநகர் :

கூவி ரத்தடந் தேர்கடாய்க் குமரர்கள் பயினும்
தாவி லெல்லைய சக்கரங் குழித்தவா றொழுங்கு
மேவி யிந்நகர்க் குமரரை விண்டவர் நகரி
ஏவ நன்றுழப் படுவதென் றியம்பலொத் துளவே. (உக)

பரும நின்றுகு மணிபரல் சொரிவதாப் பகட்டின்
அருவி மும்மதம் விலாழிநீ ராவடி மிதித்தல்
உருவ வன்மர மிடிப்பதா நிலம்வலி யுறுப்பார்
விரவி நின்றவச் சூழலொத் துளசெண்டு வெளிகள். (உஉ)

வற்க மிட்டவாம் பரிபயில் வன்னில மவற்றின்
அற்கும் வன்குர மகழ்ந்தொளி ரரைமுழுச் சுவடு
விற்க லைக்குழ மதிமுழு மதியென விளங்கப்
பொற்க லைக்கடி தடங்குறி பொறித்தன போலும். (உ௩)

கட்டும் வாரினர் கழலினர் காளையர் கதித்து
முட்டும் வேல்சிலை நாந்தக முழுதுங்கல் லூரிக்
கொட்டில் வாய்ப்பயில் வாரது குறித்தனர் நோக்க
வட்ட வான்பயில் விஞ்சையர் மனத்துளும் பயில்வார். (உச)

புரவி போம்வழி பொற்குலாஞ் சங்கிலிப் படலை
கரிகள் போம்வழி கதிர்ப்பணி யடுக்கிவீழ் காழ்கள்
இரத மூர்வழி யிணர்மலர்த் தொடைத்திரண் மாந்தர்
பரவு நீள்வழி பங்கயத் தாமமா நகர்க்கே. (உ௫)

தண்ட மேந்துகைக் குஞ்சரம் வெளிறபுத் தேகும்
தண்ட மூற்றெழ வாக்கிய மும்மதத் தாரை
வண்டு துன்றலிற் புடைநகர் மாதரார் வயிற்றுக்
கொண்டெ ழுந்துநீண் மணிமயி ரொழுக்கெனக் குலவும். (உ௬)

தோய்ந்து நீர்பரி திக்கிறைத் தலதுதூ நீரும்
வாய்ந்த மாதவ ருண்டிடா வளமைபோன் மணிக்கைப்
பாய்ந்த நீருடன் முழுவது மெறிந்தும்பர்ப் பனித்துக்
காய்ந்த வேழங்கள் பின்புவாய் மடுப்பன கமழ்நீர். (உஎ)

தடத்து நீர்த்திரைத் திரளுமத் தடத்துநீர் மடுப்பான்
இடத்து நீங்கிய வாம்பரித் திரளுநேர்ந் திரும்போர்
நடத்த மேற்செலு மாறுபோ லெழுந்துதாய் நடந்தங்
கடுத்த போதவை யடியர்போற் றலைபணிப் பனவால். ()

ஒற்றை யஞ்சகட் டிரதமு மொன்றலா தில்லாக்
கற்றை யங்கதிர்ப் பரிதித னுலகினைக் காய்வான்
உற்ற தொத்தன வுருள்பல பூண்டபஃ றேர்கள்
முற்ற வுள்ளுறீஇ முகில்கிழித் தெழுந்ததேர் நிலைகள். ()

கண்ணி றந்திவை போலடுங் கடன்வலாச் சமழ்ப்பால்
வெண்ணி றம்படை களிறுமொன் றல்லது மேவாப்
புண்ணி றம்படப் பொருமர சலகடப் பொலிந்தாங்
கெண்ணி றந்தவுட் டளைத்தெழுந் தனவிபக் கூடம். (௩௦)

சுந்த ரந்தமக் கீட்டிய துரகதப் பிறவி
வந்த நாளிது வாலென மகிழ்ந்துமீப் பரித்தாங்
கந்த ரம்வரு மசுவதி நாடவழ் முடிய
மந்தி ரம்பல வகந்தழீஇ வான்றொடு மாடம். (௩௧)

கடக முள்வயிற் காட்டிய கூடங்கண் மிசையும்
கடகங் காட்டிய வென்பது கண்டகந் தழீஇய
உடலும் வில்லின வும்பரும் வில்லின வென்ன
அடலின் விண்ணிவந் தெழுந்தன வத்திர சாலை. (௩௨)

கிடுகு கூவிரங் கிம்புரி புரசைமத் திகைவார்
வடிவில் கூர்ங்கணை வாள்சிலை யாதியா நான்கு
படையி னூர்ப்பன வுறுப்பெலாம் பண்பின ரியற்றல்
அடைவின் முற்றிய சேரியு மனந்தமா லவணே. (௩௩)

விஞ்சை வல்லவர் படையெலாம் விறந்துமே வாதார்
நெஞ்சு துட்கெனும் புடைநகர் வளநிகழ்த் தினமேல்
அஞ்சி லோதிய ராடவ ரொடுமத னமர்த்தல்
எஞ்சு றுதபா சறையெனு மிடைநகர் மொழிவாம். (ருச)

இடைநகர் :

புளினமுங் குயிற்றுபொற் குன்றும் பொய்கையும்
அளிமல ரோடையு மலங்குய் யானமும்
களிபெறு மாடமுங் கலந்த நீர்மையால்
ஒளிவிசும் புலகினு மொண்மை மிக்கதே. (ருரு)

அவலெறி யுலக்கைபோ யதிரத் தாக்கலும்
இவர்குலைத் தெங்கிள நீர்கள் சிந்துவ
தவலருந் தாகநோய் தவிர வோச்சுவார்க்
குவகையி னளித்திடு முதவி போன்றன. (ருசு)

வன்மையி னிடித்திடும் வாசப் பொற்சுணம்
வின்மலி நுண்டுக ளெழுந்து மேவலின்
பன்மலர் பொற்கெனும் பரிசு தேன்விரைஇப்
பொன்மலர் மணத்தொடும் பூத்த போன்றவே. (ருஎ)

கந்து கம்புடைப் பார்முலை கச்சுக
அந்தில் வீறுவ தம்மிணை யாகிய
பந்தொ றுப்பன பார்ப்பவ வாய்வெளி
வந்து தோற்றிய வண்ணநி கர்ப்பன. (ருஅ)

வார்ந்த காதொடு மானுவ தென்றிழை
யார்ந்து ளாரலைக் கப்படு மூசலிச்
சார்ந்த மாதரைத் தாங்கிய நெஞ்சமும்
ஊர்ந்த லைக்கப் படுமென்ப தொத்ததே. (ருகூ)

ஆட லம்மனை யவ்வளைத் தோளியர்
பாட லம்பசுந் தேன்பெருக் குந்தொறும்
கோட மன்ற குழைத்தலைப் பொங்கரும்
பீட மன்றபைந் தேறல்பெ ருக்குமே. (சா௦)

பொன்ன னூர்புகுந் தாடவி ரிந்துபோம்
அன்ன மீட்டு மணைந்தன வேற்றுமை
மன்ன லாற்றம வாழ்க்கைம லர்க்கயம்
இன்ன வென்றறி யாவிடர் மூழ்குமே. (சக)

எக்கர் மீதுமி ழைத்தபொற் குன்றினும்
நக்க தேனலர் நங்கையர் சூடுவான்
தொக்கி ருப்பன தொல்வரைக் கோட்டகம்
புக்கு மஞ்ஞைதி ரண்டன போன்றன. (சஉ)

தொண்டை வாய்மணித் தூநகை மாதரார்
வண்ட லாட்டயர் சூழல்கள் வந்தெதிர்
கண்ட காளையர் கண்ணொடு முள்ளகம்
விண்டி டாவகை மெய்ப்பய னல்குமே. (சங)

வடிவின் வென்றவ ளங்கொடி யீட்டமும்
மிடறு வென்றவி ரிதலைப் பூகமும்
மடந லார்திறை வாங்குவர் பாகடை
தடவு மாடமி ருந்தவை தாழவே. (சச)

ஊடி முன்னுமின் னாருடை மேகலை
விட மைந்தர்கள் வெய்தென வீர்த்தலும்
ஆட கப்பொடி யான்விளக் கட்டுந்தம்
தோடு வில்லிடத் தூண்மறைந் துட்குவார். (சரு)

வீசு சுண்ணமு மென்மலர்ச் சுண்ணமும்
வாச மென்மலர் வார்மது வும்விரைஇத்
தேசு மிக்க திருநகர் கூட்டுமெய்ப்
பூசி நின்றபொற் பிற்றெனத் தோன்றுமே. (சசு)

சோலை வாயினுந் தோய்புனற் றேத்துமின்
மாலை மார்பினர் மாட்டுநன் காட்டயர்
வேலை மாதரின் வீழணி பம்புறல்
கோல மாநகர் கொண்டது போன்றதே. (சஎ)

தோட்டுக் காதினர் சூழ்கலை யின்சுவை
கேட்டுக் கற்றசு வாகதங் கேண்மையிற்
கூட்டுக் கண்ணிருந் தோதக்கு றித்தவை
கோட்டுக் கிள்ளைகள் கொண்டுந டாத்துமே. (சஅ)

பூவை பைங்கிளி பூங்குயில் வண்டினம்
தாவு மந்தியும் யூகமுந் தத்தம
தாவி யந்துணை யோடும ளவளாய்
மேவி யும்பர்க்கும் வேட்கைபெ ருக்குமே. (சகூ)

ஏர்மி குத்தவி டைநக ரீதினி
நீர்மி குத்தநி ழற்கிடங் கும்பொறிப்
போர்மி குத்தபொன் னிஞ்சியுஞ் சூழ்ந்துநற்
சீர்மி குத்தவ கநகர் செப்புவாம். (ருo)

அகநகர் :

வேலவன்முன் விழுங்குகெனப் பணித்திடலும்
வீரமகேந் திரத்தை யுண்டு
சாலவத னிடத்தமர்ந்த தகுவர்குல
மேயழித்துத் தந்திட் டீங்கு
நீலநெடுங் கடறனது நவையுமவ
னருட்டிறத்தா னீங்கிப் பண்டு
போலதனைச் சூழ்கிடந்தாற் போன்றதுபொன்
மதிலுடுத்த கிடங்கு மாதோ. (ருக)

சூர்கவர்ந்த வளம்வேண்டிச் சுரரடுத்த
ஞான்றுதன்பாற் சூழ வைகும்
ஏர்கனிந்த திசைக்கிறைவ ருடன்மான
சோத்திரம்வந் திருந்தா லன்ன
போர்கடந்த மதிற்புறத்துப் பூங்கிடங்கம்
மலைவதிபுட் கரஞ்சூழ் சுத்த
நீர்கலந்த கடலுமுடங் கணைந்ததனைச்
சூழ்கிடந்த நிலையுங் காட்டும். (ருஉ)

கோடுநெருங் கியதமது குலம்பணித்த
றனக்கன்றிக் குறிய தொண்டன்
பாடுமரு வியவிறைவற் பணிந்துவரம்
பெறநேமிப் பறம்பு மப்பால்
பீடுபிறங் கியகடலு மதிலகழிப்
பெயர்பூண்டு பெயர்ந்த வோவென்
றூடுகொடி மதிலுகப்பு மகழியகற்
சியுமெவரு மயிர்ப்ப மல்கும். (௫௩)

பாதலமுன் னுலகமெலாம் படிந்தாடிப்
பருகியுளப் பரிவு தீர
ஆதிகம டந்துளைந்து களிதூங்க
வழற்கால வரனுர் தங்கும்
சோதியழ றழலாமை யப்புவனத்
தினிதமர்வோர் தோய்ந்து மெய்யில்
சீதமுற வவ்வளவுஞ் சென்றூழ்ந்து
கிடந்ததிந்தத் தெளிநீர்ச் சூழல். (௫௪)

அந்தரத்தில் விண்ணவர்கட் கணிநகரம்
பற்பலவு மமைத்த வேதன்
இந்தநக ரனைத்துமொரு மதலையின்றே
லற்காவென் றெண்ணி வல்லே
மைந்துபெறு மொருமலையந் நகரனைத்துஞ்
செறிந்தோங்க வகுத்தல் போலும்
கொந்தொளிவிட் டெறிக்குமணி குயின்றுவெளி
யடைத்துகந்த கோணை நொச்சி. (௫௫)

கிழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமக
ழெனவுடுத்த கிடங்கும் விண்ணோர்
வழக்கமர்ந்த வேழுலகுந் தமக்குமதி
லெனவளைத்த மதிலும் வேத
முழக்கமர்ந்த தணிகைவரை முருகனிடர்
துமித்ததுமேன் மொய்யா தோம்ப
வழக்கமர்ந்த தனதருளை விடுப்பவது
போய்வளைந்த வுருவம் போலும். (௫௬)

களவொழுக்கி னைந்திணையு நானிலமு
மொருங்கடுத்த கலப்பி னூற்ற
உளமதித்த வேற்கடவு ளோங்கல்புற
வம்பணையீண் டுறுத னோக்கி
அளவையிடற் கரிதாக வேறமைத்த
கடல்போலு மகழி வேனில்
தளர்வகல வாட்டயர்வார் சமைத்துறுத்த
பலமதலை தாங்கு மன்றே. (ருஎ)

முத்தனைய நகைமடவார் வீசியசுண்
ணமுமுலையிற் கழிந்த சாந்தும்
மைத்தகுழன் மலர்த்தாது மஞ்சளுமாட்
டயர்காலை மலிந்த யாவும்
தத்துதிரைப் பேரகழி யெறிந்தொதுக்கும்
வண்டலொளி தழைக்கு மாற்றால்
சுத்தநறுங் கடல்சூழ்ந்த தமனியப்பார்
பொருமடுத்த சூழ லெல்லாம். (ருஅ)

வீங்குபுனற் சரவணத்து வேற்கடவு
ளவிரிபொற் றவிச தாகத்
தாங்குமல ரினமென்று தாமரையும்
வரைகிழித்த தடந்தோண் மாலைப்
பூங்குவளை மலரினமென் றிருகுவளைப்
பலமலரும் பூத்த தென்ப
ஓங்குமவ னருட்குரியார் தமக்கடுத்தா
ரையும்போற்று முறுவர் மான. (ருகூ)

இன்னுமறை பலகாலிங் கிகப்புறினுங்
கடலமுத மெடுக்க வேண்டி
மன்னமரர் துயவுறினு மிடர்நமக்கெய்
தாவெனமான் மகிழ்ச்சி கூரத்
துன்னுமக ரங்களுமோட் டாமையுமன்
னவன்கரத்துத் தூய வாழி
மின்னகுகூ ரிழந்தேனென் றல்லாக்கு
மிடங்கர்களும் விறக்கு மன்னோ. (சுo)

நெடுங்கைவழிப் புழையகத்து நிறைகடலோ
டைமைமடுத்து நிலத்து மீளக்
கடுங்கொலைய களிற்றுமுகக் கடவுள்பல்கால்
விடுத்தெமது கரஞ்சேர் சங்கம்
அடுங்கணங்கொண் டகன்றிடினுங் கவலையிலே
மெனத்திருமா லயர்வு நீங்கப்
படுங்கதிர்வெண் மணிகொழிக்கும் பலவளைசூழ்
தலைப்பணிலம் பல்ல சூழும். (சுக)

மந்தரநட் டரவநெடுங் கயிறிபைத்துக்
கடைந்துலவா மருந்து காண
அந்தரரு மினிவருவர் போலுமென
முகிலினங்க ளாழி நோக்கா
திந்தமணி நெடுங்கிடங்கி னறும்புனல்வாய்
மடுத்தெழுந்தவ் விளப்பு நீங்கச்
சந்தமணி மதிற்றலையிற் கிடந்துவெளி
பரந்தெங்குந் தளிக்கு மன்றே. (சுஉ)

ஒழுகுதிரைக் கிடங்கிடைநீண் மதில்கடல்க
ளொருங்குவிரா யுறுநீர் நாப்பண்
விழுதுநிகர் சடைப்பெருமான் றழற்பிழம்பா
யெழுந்தவுரு விழையக் கங்கை
பழுதறுமால் பதந்துருவிப் புனல்கரப்பப்
பங்கயத்தோன் பறவை யாகி
எழுமளவி லோசனிக்கு முறைகாட்டி
யிடைமதிற்கட் டுளும்பு மன்றே. (சுங)

கோளுறுவின் னரவமணி கொழிக்குமகன்
கிடங்குடுத்துக் குரூஉக்கல் வேய்ந்து
வாளுறுதின் மதிலிடைத்த னுடலுரிஞத்
தவழ்ந்தேகும் வனப்பு முந்நீர்த்
தாளுறுபண் ணவர்நிறுவுந் தடஞ்சிலம்பு
சூழ்ந்தவராத் தாம்பு நேரும்
நீளுறுவெண் கதிர்க்கற்றை நிலாத்தொடுதன்
மதலையென நிற்ற னேரும். (சுச)

வெளிவிரவு வளிதன்பால் விரவநெடும்
புவிவிரவு விரிநீர் தன்னை
ஒளிவிரவி நின்றதுபோல் விரவுசெம்பொன்
மதிலும்ப ருயர்த்த ஞாயில்
தெளிவிரவு தழற்கொழுந்து சிவணுமவற்
றெழுந்தூமத் திரட்சி யென்ன
வளிவிரவு கொடிதுவன்று மிம்முறையால்
வானகர் மதிலும் போலும். (சுரு)

குழுமுபொறி மடங்கல்களி றடுபுலிவா
னரம்பாந்தள் குலாய நீரால்
எழுவரையிற் குவட்டினங்க ளெனநிரந்த
ஞாயிலினெந் திரங்கள் சில்ல
எழுவடிவா ளயிலாழி யெய்கணையின்
னனவுமிழ விலங்கு நொச்சி
வழுவில்படைக் குலமனைத்தும் வகுக்குமறு
முகன்கரத்து வளைய மானும். (சுசு)

வடாதுசார்க் கயிலைக் குன்றம் வளைத்தபொன் னிஞ்சி மானும்
கெடாதசீர் மதிற்பா ளூட்டுங் கேதனத் திரள்கள் சூழ்ந்து
விடாதுமே னிவப்ப விண்ணின் வேந்திருக் கின்ற காட்சி
அடாதசீர் காழி வஞ்ச வடவியி னிருத்தல் காட்டும். (சுஎ)

வில்லுமிழ் மணிப்பொற் கோடும் வெண்சுதை யெயிலும் பூப்பப்
புல்லிய வகழித் தெண்ணீர் புடைவளை பரிவே டக்கும்
எல்லுமிழ் மதிக்கு நாப்ப ணிலங்குவான் கரையின் பாங்கர்
ஒல்லும்வார் சோலை மற்றை யுடுக்குல நிரந்த வானம். (சுஅ)

இடர்தபு மதிஞற் பாலு மெழுந்தகோ புரங்கண் மேருத்
தடவரை நான்கு மெல்லை தணந்துகந் திருந்த வாங்குக்
கொடிவரைந் தேத்து நீண்ட குளிர்மரங் கிடங்கு முற்றும்
தொடியுறக் கிடந்த சாம்பூ நதமெனுந் தொல்லை யாறு. (சுகூ)

நவமணி குயிற்றி யிட்ட நான்குகோ புரமும் விண்ணிற்
சிவபுரத் தெல்லை காறுஞ் சிவணுவோர் வணங்க நிற்கும்
நிவ்மணிக் கிடங்கிற் ரூேற்று நீழலுங் கிழக்கி னெல்லைத்
தவவள ருலகோர் யாருந் தாழ்ந்தெழப் பொலிந்து நிற்கும். ()

கற்றைபங் கதிர்கான் றெல்லி கடும்பக லாகச் செய்யும்
பொற்றபன் மணிகால் யாத்த பொற்பிணு லுலகமெல்லாம் [பின்
தெற்றெனத் தம்பாற் காணத் திகழ்தலாற் செருச்செய் ஞாட்
வெற்றிவே லிறைவன் கொண்ட விச்சுவ ரூபம் போலும். (எக)

மேனிலை மாடத் திட்ட விளக்குமிழ் தூமஞ் சென்று
வானிமி ரண்டப் பித்தி வைகலு மாசு செய்ய
வானிவர் கொடியின் வெண்டு சையென நீவி நீவி
நீணிறம் படைத்த வென்ப நெடியவ னுருவ மான. (எஉ)

அண்டமா ரளவைக் கேற்ப வடங்கின வன்றி வீறின்
மண்டுநீர்க் கிடங்க ரண்ட மலிபுனற் பரப்போ டொன்றும்
மிண்டுபோர்ப் பொறியி னிஞ்சி விளங்குகோ புரங்க ளன்ன
கொண்டவார் கொடிக ளெண்ணி லண்டமுங் குறுக நீளும். ()

பாயின வகழி மாண்பும் பந்தொடு பாவை தூங்கும்
வாயில்வண் புரிசை மாண்பும் வகுத்தன மற்று முந்தை
ஆயின பொருளு மைந்த ரளித்துவந் தேவ லாற்ற
மேயின பரத்தை மாதர் வியத்தகு சேரி சொல்வாம். (எச)

இங்கணல னெய்துநர்க ளெவ்வுலகின் மாட்டும்
பொங்குகலை யிற்றணிவு பூண்டுவெரி நீயார்
தங்கிவைகள் போலெனவொர் சான்றுதெரிப் பார்போல்
அங்கணவிர் சித்திரம ளப்பிலபொ றித்தார். (எரு)

பற்குறிந கக்குறிகள் பாணிகொடு தட்டல்
நற்கமிழ்து துய்த்தல்களி நன்றெழ வணைத்தல்
அற்குகர ணங்களறி யாருமெளி தாகக்
கற்கும்வகை நின்றனக திர்த்தமணி யோவம். (எசு)

இவர்மனமொ ருக்குமிள மங்கையரில் வைகக்
கவர்மனம்வி டுத்திளையர் காழிலுயி ரோடும்
அவிர்பொருள்க வர்ந்துவிடு மாற்றலுடை நல்லார்க்
கிவர்மனமொ ருக்கலுறி னெங்ஙனுல குய்யும். (எஎ)

அகப்பொருட மக்கருளு வார்க்கஃது நல்கி
உகப்புறுப ரத்தையர்க ளுண்மையுணர் கல்லார்
இகப்பறுசு கச்சமரி னெய்த்திறைபி றக்கும்
புகர்ப்பொருளை யின்பவிலை யென்றுபுகல் கிற்பார். (எஅ)

இத்தகைய மாதரினி ணங்குசுக வாரி
தத்தையனை யார்தருத லின்மைதனை நாடி
மெத்துளம கிழ்ச்சியின்வி டுத்தருள்சி றப்பும்
ஒத்ததவர் பாலிளைய ருய்த்தநிதி யீட்டம். (எகூ)

உடம்புபிணி யாலிறவு ஞற்றறமி கந்து
மடம்படவு ளம்பொருள்கண் மற்றுமுகு மாற்றால்
விடம்புரையும் வேசையர்வி ழைச்செனவு ணர்ந்தும்
உடம்படுவ ரென்னிலவ ருய்க்குநல னெற்றே. (அ0)

நன்பொருளி னுக்கியைய நன்றுவிளை யாடி
இன்புதவும் வேசையரி றைஞ்சுமடி யாருக்
கன்பினள வைக்கியைய வாரருள்சு ரக்கும்
மின்புரைந திச்சடில வித்தகனி கர்த்தார். (அக)

பாடலிசை யாழ்பலப யிற்றுமிசை யோடும்
ஆடலர வம்புடைய கன்றுபுற னேகும்
பீடினர்த மக்குமொரு பீழைசெயு மென்றால்
கூடினவர் முன்புகுழை யாருமுள ரேயோ. (அஉ)

ஈங்கிவர்க ளோடுபுண ரின்பநுகர் பாக்குத்
தாங்குபரு வம்பெரிது சார்பொழுது காறும்
ஆங்கவர்க ளோடுநல ஞர்ந்துபயில் கின்றார்
வீங்குபுகழ் மாயன்முதல் விண்ணவர்க ளெல்லாம். (அங)

கங்கைபிறை வன்முடிக லப்பவிடம் வெற்பு
மங்கையுட னனதும லர்ப்பொனரி மார்பம்
தங்கியதும் வாணிதவி சாக்கியதும் வேதன்
பொங்குமறை நாவரைவில் பூவையர்பொ ருட்டே. (அச)

வெள்ளணிய ணிந்துபலர் மெய்முழுத ரத்த
ஒள்ளணிய ணிந்துபல ருத்தலேயி றப்பார்
வெள்ளமெனு மாக்கழும்வி ளங்குகலை மாண்பும்
உள்ளிமலர் மாதர்பல ராயுறுவ தொப்ப. (அரு)

சிறப்பினவ கப்பொருள்செ றித்துவிலே யாக்கும்
மறப்படைக டந்தவிழி மாதரிட னீதால்
புறப்பொருள்செ றித்துவிலே போக்கியிட ரின்றி
அறப்புகழ்வி ளைக்குநர்க ளாவணமு ரைப்பாம். (அசு)

கற்ப கங்களுங் கன்னி வாழையும்
பொற்ப நட்டெழீஇப் போகு சட்டமேல்
பற்பன் மாலைகள் பயிற்று மாவணம்
அற்பு மன்றல்செ யகங்கள் போன்றவே. (அஎ)

மடுக்குங் காலையிற் குறைய வாங்கியும்
விடுக்குங் காலையின் மிதப்ப நல்கியும்
அடுக்குஞ் செல்வம்விண் ணரசு மேசற
எடுக்கும் பண்பினர் யாரு மென்பவே. (அஅ)

கலங்க ளுக்கியுங் கால்க ளுக்கியும்
அலங்கன் மார்பின ரமைத்த பல்பொருள்
விலங்கன் மாடமுன் றனதன் வீழ்நிதி
இலங்கி யிவ்வழி யிருந்த தொத்ததே. (அகூ)

துலாம ணிந்தவர் சூளி கைத்தலைத்
துலாமி வர்ந்தெழுஞ் சோம திக்கினன்
நிலாவி ரும்பொரு ணிறைந்த தாமென
நிலாவு மத்தலை யிவர்ந்து நீங்குமே. (கூ0)

பொன்னும் வெள்ளியும் பூணு மாடையும்
மின்னு பன்மணி விராய கோவையும்
என்ன வேண்டினு மில்லை யென்னுமச்
சொன்னி கழ்த்திடாச் சோர்வங் குள்ளதே. (௬௧)

இலைய வேற்படை யிறைவற் காணிய
மலையெ லாமடுத் தனைய மாடமுன்
குலவு பல்பொருட் குப்பை யம்மலை
நிலவு பல்வரை நிரைக ளொத்தவே. (௬௨)

முன்கு வித்தகண் மூடு முன்புபோய்
பின்கு வித்தவும் பெயரு மத்தலை
நன்கு செய்தமுன் னல்வி னைப்பயன்
தன்கண் வந்துபோந் தனுவொ டொத்ததே. (௬௩)

செம்பொற் சுண்ணமுஞ் செச்சைச் சாந்தமும்
வம்பு நானமும் வாச மாலையும்
நம்பி வீழ்ளி நல்கு மாதரார்
பம்பு யிர்ப்பினுற் பாற வைகுவார். (௬௪)

கனிவ ருக்கமுங் கமழ்சிற் றுண்டியும்
இனிய விற்குந ரிடஞ்சென் முன்னரே
நனிம ணம்புன லுவிற் றேற்றுமுள்
பனிம லர்க்கணை படர்கண் டோற்றுமே. (௬௫)

தாழ்ந்தி டாவளத் தருக்கி னுலென்கோ
ஆர்ந்த பல்சன வடர்ச்சி யாலென்கோ
சோர்ந்து கைத்தலஞ் சுடர்பொற் காசுகள்
வீழ்ந்த நேடிலார் வீதி வாயினே. (௬௬)

பொருண்மை சுட்டிய புகலு மோசைகள்
பொருண்மை சுட்டிடாப் பொங்கு மோதைபோல்
மருவு மாட்சியான் மாண்ட கேள்வியார்
கருது மூங்கையிற் கையிற் பேசுவார். (௬௭)

ஐந்து மாமுக ஞறு மாமுகன்
நந்தி யாதியோர் நாம வீரராய்
வந்த வாவட மாதி ரத்தவன்
அந்தில் வந்தம ரளகை போன்றதே. (௯அ)

சொற்சு ருக்கியுஞ் சுட்டிக் கூறியும்
விற்கு மாவணம் விளம்பி ஞமினிப்
பொற்ப யாவரும் புகன்று வாழ்தரும்
பற்பல் வீதியும் பகர லுற்றனம். (௯௯)

கோளகர் வகுப்புங் குண்டகர் வகுப்புங்
குலாவுறும் விராத்தியர் வகுப்பும்
தாளுறு மந்த ராளர்தம் வகுப்புந்
தகும்பிரதி லோமர்கள் வகுப்பும்
ஆளுறு மனுலோ மர்கள்பெரு வகுப்பு
மவ்வவ வினங்கள்வே றமைந்து
நாளுமின் புகப்பத் தத்தம தியல்பி
னண்ணிவாழ் வீதிக ளனந்தம். (க00)

ஆதியீ றமைந்த பொருள்சிறந் தனவென்
றருமறை யினிதெடுத் தியம்பும்
நீதியான் முகத்திற் சிறந்துபூங் கமல
நிகர்த்தவிர் வேதனர் பதத்தில்
கோதிலா தெழுந்து வரைதுலாக் கோலுங்
குளிர்ந்தசெங் கோலும்வேய்ங் கோலும்
தீதிலா மூவர் செலுத்தவேர்ச் சிறுகோல்
செலுத்துநர் வீதிகள் பலவால். (க0க)

குய்யமா யுயிர்க டோற்றுதற் குரிய
குறிதமக் கேபிறப் பிடமாய்
ஐயமுன் வேத னிடத்தவ தரித்திட்
டதற்கியை தரமறை பிறர்பால்
வையக மூன்று மொருங்குறு மேனும்
வழங்கிடா தருநிதி யாக்கி
உய்யநூல் வகுத்த வொழுக்கினிற் பிறழா
தழப்பவர் வீதிகள் பலவால். (க0உ)

பகைமுழு திரிக்கு டத்திரஞ் சுமந்த
பங்கயத் தொங்கலூழ் புயத்துத்
தகையழ கெறிப்ப நான்மறைக் கிழவன்
றந்திட வந்தகா ரணத்தால்
புகையழற் பொறிக டும்முவான் படைகள்
புயத்தினி தேந்திமே வார்தம்
மிகைதணித் துலகிற் குடைநிழல் பரப்பும்
வேந்தர்வாழ் வீதிகள் பலவால். (கoந

இருமையு மளிக்கு மொழுக்கெலாந் தெரிக்கு
மிருமறை யெழுந்தவாண் முகத்துப்
பொருவரு வேதக் குரிசின்முன் னுயிர்ப்பப்
போக்கறப் பொலிந்தகா ரணத்தால்
ஒருமையி னோதை லாதியா வுரைத்த
வுயர்தொழி லாறினுஞ் சிறந்து
பெருமையின் மறையோ ரெனும்பெயர் தமக்கே
பெற்றவர் வீதிகள் பலவால். (கoச)

அருள்வளங் கொழிக்கு மைந்தொழி லாக
வடங்கிய சிறப்பொடு பூசை
மருவுமெவ் வகையு மாகம வழியான்
மயரறத் தெளிந்தவர் வரையாச்
சுருதிகண் மிருதி புராணமெக் கலையுந்
துகளறத் தெரிந்தவ ரிறைவன்
தருதிரு மேனி தீண்டிடு மாதி
சைவர்வாழ் வீதிகள் பலவால். (கoரு)

கரிசறு கவிக்குக் கவிகம கனுக்குக்
கமகன்வா திக்கொரு வாதி
துரிசறு வாக்கி தனக்கொரு வாக்கி
யாயவர் தொன்றுதொட் டமைந்து
வரிசையின் வந்த கேள்வியர் பொருது
வருமிகல் கடந்தவெஃ குடையார்
பரிசினாற் பயிற்சி யின்பெனக் கலைதேர்
பட்டிமண் டபம்பல வயங்கும். (கoசு)

அறிதரா தியற்றும் புண்ணிய நிரம்பி
யறிந்துபல் புண்ணியம் புரிவோர்
மறிதரா தகத்துச் சரியைமுன் னான்கும்
வழுத்தப விபக்குந ருண்மை
நெறியினா லந்த நான்கினுங் கருத்தை
நிறுத்துந ராயசீ ரடியார்
பிறிதரா தமர்ந்து தத்தம தியல்பு
பேணிவா ழிருக்கைக ளனந்தம். (கoஎ)

மும்மலச் செருக்கை முதலொடு முருக்கி
முழுத்தபே ரறிவெனக் கிளைத்த
விம்முயிர் கெடுத்து வீங்கிய வருளை
வியங்கொளுந் திருக்கினை மிளிர்த்துச்
செம்மைமெய் யருளைக் கடந்தொளிர் சிவத்திற்
றினகர விழியெனக் கலக்கும்
இம்முறை யுண்மை ஞானமீ ரைந்து
மியங்குநர் மடங்களெண் ணிலவால். (கoஅ)

அலகில்பல் லுயிரு முயிர்த்ததம் மாமி
யருளிரு நாழிநெல் லேகொண்
டிலகறம் வளர்த்தா ளெனுமிழுக் ககல
விருநிதி வேண்டின வெல்லாம்
குலவரைக் கிழவன் கொடுத்திட வாங்கிக்
கோதைய ரிருவரும் வளர்ப்ப
நிலவிநிற் பனபோற் பலவறச் சாலை
நித்தலும் வயின்றொறுந் தழையும். (கoகூ)

பெருநிதி முகப்பத் தானமாக் கொடுக்கும்
பெற்றியர் வாக்குநீர்த் தாரை
இருகர தலத்தும் பிழைத்துவீழ் மணியு
மிரணியக் குப்பையும் வரன்றிப்
பொருதிரை சுருட்டி யொழுகுத லானும்
போகுமா ளிகைநிரை கரைபோல்
மருவுத லானுங் குலநதி நதம்போல்
வயங்குவ பற்பல்வீ திகளும். (ககo)

மணிமலர்ப் பட்டின் விசித்திரம் பிறங்க
மல்லல்வீ திகடொறு மமைத்த
தணிவில்பூம் பந்த ராற்றினைக் கடப்பச்
சமைத்தவான் சிலைவழி போலும்
அணிதரு மகர தோரண மணித்தோ
ரணங்களாங் காங்குநீண் டவிர்தல்
துணிவுறு தகையோ ரியங்குதற் கமைத்த
தொடர்படு கொடிவழி போலும். (ககக)

நெருங்குதோ ரணத்திற் றாக்கிநித் திலங்க
ணிலாவொடு குளிர்தவக் கான்று
வருங்கதி ரிரவி விளர்ப்பவெப் பனுக்கி
மல்குவான் மீனெனத் தோன்றி
இருங்கலை மதியோ டுடுவினுக் கொளிமிக்
கிணக்கியந் தாரகைக் குலத்தோ
டொருங்கலிற் பொழுது தெரிப்பவே திங்கட்
குறுத்தினன் கறைகுறை விறையோன். (ககஉ)

சந்திர காந்தச் சிலைகளிற் குயின்ற
தமனிய மாடமா ளிகைகள்
இந்துவா னுலவ வுமிழ்ந்தநீ ரருவி
யிழிதர வெழுபெருங் கொடிகள்
அந்தில்வார்ந் தசையும் பாடெலாங் கதிர்க்கு
மவிருடுக் குலந்தவழ் காட்சி
சிந்துவேய் மணிகள் வரைவயிற் கிடந்து
திவளொளி காலுவ போன்ற. (கககூ)

வையக வரைப்பி னுயிரெலாங் கருமம்
வளர்ப்பதற் கேதுவாய் விழங்கும்
வெய்யவ னுதி கோளொடு நாளை
விந்தநேர் தகைப்பது தகாதென்
றையபொன் மணியிற் குயிற்றுநீண் மாடத்
தவையெலாஞ் செல்லிய வழிகள்
தெய்யநன் கமைத்த வுண்மைதேர் கல்லார்
செறிந்தகா லதரென மொழிவார். (ககச)

பொன்ன ளாவிய மேனிலை மாடத்துப் புனைந்த
நன்னர் மாலைதாழ் சுருங்கையி னுகத்து நாகம்
முன்னு காலைபி னெருங்குடன் மூடுரி கழற்றி
மன்னு மோகைபிற் றுளும்புறு மதிதொறு மன்னே. (ககரு)

செம்பொன் வார்கொடி சேணுற நிவந்துகற் பகத்தின்
வம்பு லாவிய பொன்னகர் மதிற்புறம் புடைப்ப
இம்பர் மேம்படு மிந்நகர் நிகர்க்கலாற் றுநீ
உம்பர் வாழ்தலொண் ணுதென வொறுப்பபோன் றனவால்.

வளியின் யாத்தபொன் னகர்கொடி வைகலுந் துளக்க
நெளியு நீர்மையா னிலத்திடை விழுமென வஞ்சி
ஒளிறு வாள்விழி யிரவினும் விழித்துளா ரொத்தார்
அளிவி ழாமலர்ப் பொலந்தொடை யந்தரத் திமையார். (ககஎ)

கன்னி கும்பங்க டாங்கிய வென்றூளி கதிர்க்குங்
கன்னி கும்பங்க டாழ்ந்துபோங் கனகவா னரங்கில்
துன்னி மாதரா ராடலிற் சுடர்மணி யுக்க
மின்னு மீன்விசும் பிகழ்ந்திறை கொண்டமை வீழும். (ககஅ)

திகழு மின்னனார் மாடத்து மடுத்தனர் திறப்ப
அகின றும்புகை சுருங்கையி னிவந்தெழு மாக்கம்
முகிலுண் கூந்தலார் முகத்தினை மதியென முன்னிப்
புகுக ரும்பணி யன்மைதேர்ந் தெழுவது புரையும். (ககக)

சீத ளத்தொடு வெம்மைய திதலைவெம் முலைக்குச்
சீத ளத்தொடு வெம்மைசெய் தக்கதென் பார்போற்
சீத ளப்பனி நீர்விராய்ச் சந்தனஞ் செறித்துச்
சீத ளப்புன லறவிரை புகைப்பராற் றிளைப்போர். (கஉ0)

சித்தி ரம்பல பயின்றுபைங் கிளிமொழி திகழ்ந்து
மெத்தி ருஞ்சுவை யுணுநிரந் தரித்தெங்கும் விரைத்துத்
தத்து தென்றல்வந் துலாவுபு தையலார் பயில
வைத்த மாடமு மவரென வைம்பொறி வாங்கும். (கஉக)

மானி னத்தொடு மூயலின மருவும்வண் வடவை
மேனி புல்லுறு மிடபம்வீழ் பிடிபரி யேறு
தானி வர்ந்தெழும் வார்கொடி மகரமேற் றூங்கி
வேனின் மன்னவ னிடமென விளங்குவைப் பெங்கும். (கஉஉ)

கற்புக் காட்டிய கைவளர் பசுங்கொடிக் கமழ்ந்த
கற்புக் கூந்தலர் காவியஞ் செவியினர் கலப்போர்
பொற்பக் காமநூல் வாதினில் வென்றுபோர் மதன்பால்
எற்பக் கேவலே யிவையெனப் பறித்துளார் நிகர்த்தார். ()

எண்ணி லண்டத்துப் பிரமரு மொருஙக ரிதுபோற்
பண்ண வன்னமாய்க் கரந்துபார்ப் பப்புகுந் தாங்குச்
செண்ண வஞ்சிலம் பரற்றிய தீங்குரல் கவர்வான்
வண்ண வன்னங்கள் புகப்படுங் கலவிசெய் மாடம். (கஉச)

கலவி யாற்றிய காலேயும் புலவிக்கா லத்தும்
குலவு தந்நடை குறைந்தமைக் கொக்குமா றொதுங்கும்
நிலவு வெண்கரி வணக்கிய நிகரில்யாழ் தழுவி
மலரு மின்னிசை யெழுப்புவர் மேனில மகளிர். (கஉரு)

தடவு மேனில மெழுக்கிடுந் தண்புன லாப்பி
கடவு ளாப்பியுங் கங்கையுங் கவினுறுத் துவபூ
மடல்வி ராவிய கற்பகத் திழையவண் வதிவார்
படரெ லாந்தப வுண்பது பனிவிசும் பமிழ்தம். (கஉசு)

முழவு வென்றதோ ளாடவர் மேனில முகத்துக்
கழகம் விண்ணவர் கலவினர் கலேபல தெரிவார்
மழலே மென்மொழி மாதரார் பண்ணேயின் மருவி
விழவு மல்கியாட் டயர்வரால் விளங்கர மாளிர். (கஉஎ)

பொறித்த சீரெழுத் தொழுக்கெனப் பொற்றமா டங்கள்
செறித்த வார்நிரை வீதியிற் சிலவள மொழிந்தாம்
வெறுத்த வீதிதற் சூழ்தர வெற்றிவே லிறைவன்
குறித்த கோயில்கொண் டோங்கிய குன்றினி மொழிவாம். ()

நீல வுடைதண் கிடங்காக
நீவி யிறுக்கு மரைப்பட்டம்
கோல மதிலா மாடநிரை
குளிர்பூந் தொடையா விடைக்குவடு
வால முலையா நெடுந்தூவி
மணிப்பொன் மோலி முடிசூடிச்
சீல நகர மகளிருந்து
செங்கோல் செலுத்துஞ் செவ்வித்தே. (கஉசு)

சிகர மவிர்பொற் குடங்கொடிஞ்சி
செம்பொற் கோயில் பலமதிலும்
புகரில் கிடுகு மாடநிரை
பூட்டி விடுத்த மணிவடமாம்
நிகரில் வரைத்தே ரிவர்மால்பு
நிரைசோ பானந் துணிநீரில்
தகுகற் சுனைக ளணியாடி
தவழ்வெள் ளருவி யணிவடமே. (கந௦)

பிறவி தொறும்வேட் டருந்தவங்கள்
பெரிது மிழைத்த சூர்முதலை
நிறுவு கொடிமேன் மஞ்ஞையென
நிறுத்த குமரன் றனதுவரை
உறைவ தரிய தவமாக்கி
யுயர்த்த வுகந்தார்ப் பெடுப்பனபோற்
சிறைய மயிற்புள் ளினங்கோடி
திரள்வேய்த் தலைநின் றகவுமால். (கநக)

செம்பொன் மேருக் கடையாகிச்
சிறந்த கந்த மாதனமும்
அம்பொன் மேருக் குடாதுதிசை
யவிர்பொற் கந்த மாதனமும்
உம்ப ரிறைதன் னிடந்தணவா
வூக்க மறிந்து படர்ந்தனைய
பைம்பொன் வரைக ளிரண்டுமிரு
பானு மதிலா யுடைத்தரோ. (கநஉ)

கனைவெள் ளருவி கலித்திழியுங்
கனக வரைமுற் றும்வளையா
அனைய நதிபோற் றணிப்பாதி
யவதி வளைந்து கடலகடும்
இனைய வகழ்ந்து புகுநீத்த
மிரைக்கு நந்தி நந்தினியும்
நனைய வொருபால் வரைமதில்சூழ்
நாம வகழி யெனவுடைத்தால். (௧௩௩)

வரங்கள் வேட்டுப் படர்விண்ணோர்
மண்ணோர் நாகர் யாவர்க்கும்
இரங்கி யினிது கைதூவா
தீத்தல் கருதி யெண்ணிறந்த
கரங்கள் படைத்தங் கிருந்ததுபோற்
காமர் வளங்க ளனைத்தினுக்கும்
அரங்க மெனவோங் கியகுன்ற
மழல்செய் காந்தண் மலர்ந்ததே. (௧௩௪)

காலந் தொறுநன் றியம்பனுறுங்
கணங்கொ ளியப்பே ரொலிச்செறிவான்
மூலந் தொடங்கிப் பேரண்ட
முகடு காறு நெக்குடைய
ஞாலந் தொடுத்துப் பலமதலை
நாட்டிக் கொடுத்தா லெனவோங்கும்
கோலந் தழைத்துப் பலதிசையுங்
குன்றத் தெழுந்த கோபுரமே. (௧௩௫)

பிரம வுலகத் தயனுயர்த்த
பிணைமென் சிறையோ திமக்கொடியும்
வரவை குந்தத் தரியுயர்த்த
வகிர்நா வரவப் பகைக்கொடியும்
இரவும் பகலு மடிவருட
வெழுந்து வானத் திலங்குகந்த
புரநன் குயர்த்த கொடியுமப்
பொலியுந் திருமுற் றனிக்கொடியே. (௧௩௬)

மன்றல் புரியு மண்டபமும்
வயங்கு மூர்த்தி மண்டபமும்
பொன்றுஞ் சிரத மண்டபமும்
பொற்ற விமான மண்டபமும்
துன்றும் யாக மண்டபமுந்
தொக்க விழாமண் டபமெல்லாம்
குன்ற மிசைபன் மணிக்குவடு
குலாய்விண் ணிவந்த காட்சியவே. (௧௩௭)

போற்ற வடுத்தோர் கொணர்ந் திறுக்கும்
பொன்னங் கிழிக்குன் றுகளொருபால்
தோற்றும் வெள்ளி வரையொருபாற்
றாசு மூடை யடுக்கொருபால்
வீற்று மணியின் றிரளொருபால்
விழுப்பல் பொருளின் பரப்பொருபால்
ஏற்று வளைவாய்ப் புள்ளொருபா
லெண்ணி வரைத லரிதாமால். (௧௩௮)

நகர்சூழ் வட்ட நீர்க்கோடு
நகுபன் மணிமா ளிகைபல்வீ
தகுமா நகர மணிப்பொய்கை
தனிற்சூழ் மதில்க ளிதழ்வரிசை
திகழ்சீ ருச்சி பொற்குட்டாய
தெய்வ வரைத்தா மரைக்கிழவன்
புகழ்சூழ் பொய்கை மலரிருந்த
பொற்பும் விளங்க் வீற்றிருக்கும். (௧௩௯)

முன்னு மிருமா யையுங்கடந்து
வயங்கு மின்னவர்க் கம்மாயைத்
துன்னு மணிபொன் னமிழ்தாதி
தொடுத்திட் டுவமை வழங்கியாங்
கென்னு நிகரர்ப் பொருள்களே
யிதன்மாட் டுவம மெடுத்தவெனக்
கொன்னு மதியிற் கூர்த்தவர்கள்
குறிப்ப ரிதற்கோர் நிகரின்றே. (௧௪௦)

வெள்வே லிறைவ னறைக்கமல
விரைசூழ் பதந்தை வருமுள்ளத்
தள்ளூ றின்பப் பெருவெள்ள
மடங்கா தெழுந்து வீறுதல்போல்
தள்ளா வளத்து நகரியல்பு
சாற்றப் புகுத லொடுமன்றே
விள்ளா தெழுந்த பேரார்வ
மிகையைத் தணித்தாங் கதைபுகல்வாம். (கசக)

திருநகரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௩உ௭.

---

## நைமிசப் படலம்

---

பூவி ருந்த நான்முகன் பொருக்கெனக்க டாவிய
தாவி ருந்த பைம்புனேமி சார்ந்தசைந்த நைமிசம்
தேவி ருந்த செந்தழற்றி கழ்ந்துவிண்ணு ளார்க்கெலாம்
மாவி ருந்து வைகலும் வழங்கிருக்கை யாயதே. (க)

படுப்ப வுய்த்த வான்குலம் பறப்பைகூர்ம மாதியும்
விடுப்ப வுய்த்த கோணமும் விறந்தநோக்கி நம்மையும்
அடர்ப்ப வென்றெ ளிப்பபோ லழன்றுடற்று தீம்புகை
இடர்ப்ப டும்வி லங்குபுள்ளு மூர்வசேணி றக்குமே. (உ)

கன்னி யந்து மாயினன் கமழ்ந்தபங்க யத்தினன்
மன்ன னாதி தேவர்கண் மகிழ்ந்[illegible]று மாண்பினால்
நன்னர் நைமி சஞ்சிறந்த நாகம்வைகு நாடெலாம்
கொன்னு மண்வ ரைப்பிடைக் குழீஇக்கலந்த தொத்ததே.

நீறு துன்று மேனியார் நிகழ்த்துகின்ற வேள்வியை
ஊறு ஞற்ற முன்னுவார்கட் கூறுஞற்ற மர்ப்படை
வேறு வைப்ப வேண்டிலார் விழைந்துஞற்று செய்வினை
வீறு கின்ற வாற்றலம்ம மீண்டகந்த கர்க்குமே. (ச)

புகைய வட்ப டுந்தொறும் புயல்விசும்பெ மூந்தழல்
நகைப டுந்தொ றுந்தடித்து நாறுநெய்யு குந்தொறும்
அகைபு னற்ற ளிக்குமும்ப ரார்நிரப்ப றுந்தொறும்
பகைநி ரப்பு வையகம் பறைக்குநீர தென்பவே. (ரு)

எட்டை முற்றும் வன்பிறப்பி ரிக்கவன்ன வாய்தநேர்
நாட்ட முற்ற வள்ளலாரை நாட்டமுற்ற லால்வினை
மீட்டு மீட்டு மீட்டியீட்டி வெஃகுமின்ப வாழ்க்கைவிண்
மாட்டும் வைத்தி ழைத்திலார் மரீஇயமாத வத்தரே. (சு)

தோலு டுக்கை வற்கலைத் துலங்குநீற்று வார்சடை
மூல மாதி யூணினன்றி முன்னலாவு ளத்தினர்
சாலு மைந்த ருக்களுந் தயங்குமற்றை யாவும்வந்
தேலு மாறு கொள்கவென் றிரக்கவல்ல நீர்மையார். (எ)

நஞ்ச மூத்து நீலகண்ட நாதர்பாத தாமரை
நெஞ்ச மூத்தி யஞ்செழுத்து நீண்டநாவ மூத்துபு
பஞ்ச மூத்து மேகலைப் பரந்தவல்குல் பாகர்சொல்
விஞ்ச மூத்து காதினர் விளம்புமத்த லத்துளார். (அ)

இன்ன வாய மேன்மைசான் றியாணர்வண்மை நாடொறும்
மன்னு கின்ற நைமிச வனத்துவேறு மாதவர்
நன்னர் யூப மாமக நடாத்தலைக்கு றித்தரோ
துன்னும் வேலை யேழும்வந்து தொக்கதென்ன முற்றினர்.

பிருகு வுக்கிர சீலன்போ தாயணன் பிசிங்கிவி பாண்டகன்
துருவ னாரதன் சுப்பி ரன்புதன் சுமதியத்திரி சங்கமன்
அரித கன்புவு லன்சு முந்தர னுபத்தம்பன கத்தியன்
கருண னங்கிர சன்ப ருப்பதன் காத்தியாயணன் கண்ணுவன்.

பவுமன் பாசத ரன்ப ராசரன் பங்குபப்புரு பக்குவன்
கவுசி கன்கபி லன்க லாதரன் காணன்காலன்கை வல்லியன்
கவுத மன்சர பங்கன் முற்கலன் காலவன் பண்டி தோத்தமன்
சவுன கன்சதா னந்தன் வாரன்சா தாதபன்சம தக்கினி. (கக)

சாம தக்கினி சற்ச ரன்சயன் சனிபரந்தபன் சத்தியன்
தூம பன்சுகன் சத்தி மாண்டவி யன்சுதீக்கண னிரதிதன்
வாம தேவன்ப ரத்து வாசன்வ சுசாபாலன்காண் டிப்பியன்
காமர் விண்டுவி ருத்தன் குண்டலன் காசிபன்புகழ் தேவலன்.

அசித ஞதியர்க ளொன்றி ரண்டுபல
வடியி ஞர்தலையி ஞர்பலர்
கசிவி ேேனாடுதவம் வேறு வேறுபுரி
காட்சி யாளரிவர் தம்முறைப்
பசையி ேேனாடுபணி செய்து பீழைதபு
பண்பு மிக்கவர்க ளன்னவர்
வசையி லேவல்புரி வோரு மண்மினர்
மகிழ்ந்து வைகலுறு மேல்வையில். (கங)

இரவி செங்கதிர னைத்தும் வாங்கியினி
தேய்த்து விட்டனைய வேணியும்
பரவு வெண்மதிபொ டித்தெடுத் தனைய
பாவ முற்றுமறு பூதியும்
விரவு முள்ளிருடி ரண்டு ருக்கொடு
வெளிக்க தித்தனைய கண்டியும்
வரமி குத்தபதி னெண்பு ராணமும்
வயங்கு சூதனு மடுத்தனன். (கச)

கற்ப கங்கடவு ளானி தித்துணை
கதிர்த்த மாமணி யடுத்தலும்
ஒற்க மிக்கவன்ம கிழ்ந்தெ திர்ந்தென
வுயர்ந்த நைமிச வனத்திடை
அற்கு மாதவர்கள் யாவ ருந்தலை
யடுத்த சூதமுனி வரவுகண்
டுற்ப வப்பய னடுத்து ளாமென
வுவந்து வல்லையெதிர் கொண்டனர். (கரு)

ஆத னத்திடையி ருத்தி நூன்முறை
 யருச்ச னைத்தொழினி ரப்புபு
வேத மாகமம் விளங்க வோதிய
 விதிக்கி லக்கியமெ னப்படும்
ஏத நீவுபதி னெண்பு ராணமு
 மெனைத்தும் மோர்ந்துபொரு டெள்ளிய
சூத மாதவ வெனப்பு கழ்ந்துவகை
 துள்ள மெல்லவுரை யாடுவார். (கசா)

வாய்ந்த மூவறுபு ராண முன்பிவண்
 வகுத்து ரைத்தனைய வற்றினுள்
ஏய்ந்து மேதக விளங்கு காந்தம
 திணங்கு சங்கிதையொ ராறனுள்
ஆய்ந்து சங்கரர் பெயர்ப்பு ணர்த்தவ
 தனுட்சி றந்திடுபின் கூற்றினிற்
காய்ந்து டற்றுகதிர் வேற்ப டைக்குரிசில்
 காம ருந்தணிகை மான்மியம். (கஎ)

கன்ன லுங்கனியு மேத குஞ்சுவைய
 கண்டு மாரமுது மேசறப்
பன்னி யெம்பரிவ றுத்தி முற்றுபரி
 பாக மின்மையி னயர்த்துளேம்
இன்னு மன்னதனை யாங்க ளுய்ந்திட
 வெடுத்தி யம்பிதுவி யங்கொளல்
அன்மை தக்கவர்த காத வர்க்கருளி
 னறிவ ளித்தருள னீதியே. (கஅ)

என்று மாதவ ரிரந்து வேண்டலு
 மிலங்கு சூதமுனி மொழியுமால்
நன்று மாதவ நவிற்றி யாணவ
 நலித்து மேதகைமை பூண்டுளீர்
இன்ற யர்த்தனமெ னக்கி ளந்தமை
 யெமக்கு மேதகைசி றத்தலொன்
றன்றி வையக மளித்த லொன்றுள
 மமைத்தி டாவிழைவொன் றுகுமே. (ககூ)

இகன்மி குத்தகொடி முட்கு டம்பையி
னிருந்த கோகில மழப்பறழ்
தகுசி றைத்துணை முளைத்த லுஞ்சிறை
தணந்து சேணெழியு மாறுபோற்
றெகுமு டற்சிறை துரந்து வீடணுகு
சூழ்ச்சி பன்முறையும் வேட்டலின்
உகுபி றப்பினும தேபி றப்புமை
யுயிர்த்து ளார்மதவு யிர்த்துளார். (௨௦)

வினைத்தி ருக்கினை மிளிர்த்த செவ்விமிடை
வுற்றலால் வினைகண் முற்றுதல்
அனைத்து நீத்தருள்கொ ழிக்குநற்குரவ
னண்மி வாழ்தணிகை மான்மியம்
நினைத்த லுஞ்சிறிது முற்று றுவென
நிகழ்த்தி மேலது விளம்புவான்
முனைத்த வேற்கரனை முன்னி யன்னது
மொழிந்து வந்தவழி தேற்றுமால். (௨௧)

நைமிசப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௩௪அ.

## புராணவரலாற்றுப் படலம்

உலகம் யாங்கணு மிழிபிரு குணமிக வுதுதேர்ந்
தலகில் சீர்முதற் குணமடர்த் தோங்குவா னிறையை
இலகு பேருரு வாய்த்தரித் திருப்பதொத் துசாதால்
விலகி வாளுமிழ் வெள்ளியம் பொருப்பெனுங் கயிலை. (௧)

எண்ணி றந்தபல் வரைகளு மெறுழ்வளி மிளிர்ப்ப
மண்ணும் விண்ணமு மறிகட லடர்க்குமவ் வேலை
அண்ண லாணையி னிவந்தண்ட முகட்டெல்லை காறும்
நண்ணி நிற்பது நகுகதிர் பரப்புமச் சயிலம். (௨)

புரம்பொ டிப்பவா னவர்பிரான் பொலங்கிரி வாங்கிக்
கரம்பி டித்தஞான் றுலகெலாங் கவிழ்தராக் காட்சி
வரம்ப டைத்தபொன் வரையுமற் றேனைய வரையும்
உரம்ப டைத்ததா னூன்றியே நிற்றலிற் போலும். (௩)

பொன்வ ரைக்குல மணிவரைக் குலம்புவி யிருப்பத்
தன்வ ரைப்பக லாதிறை தவிர்வரம் படைத்த
மின்வ ரைச்சுடர் வீக்கந்தன் பொன்மறு வீழ்த்தோர்
நன்வ ரைப்பலா திறைநய வாமையை நவிற்றும். (௪)

வயக்க மாண்டவெள் ளருவிகள் வயின்வயின் வீழ்தல்
துயக்க மாணவன் றரக்கனைச் சுடர்விர னுதியால்
இயக்க மாற்றலு மிருந்தவச் சிலம்பெழு பாக்குத்
தயக்க மாண்டதன் கரங்களை யூன்றுத றகையும். (௫)

பிரம னேமுதன் மாயனே முதலெனப் பிணங்கும்
விரகி லார்க்கெலாம் விடமிடற் றிறைவனே முதலென்
றுரனை யெய்ப்பவர் போன்றுளா ருவணமேக் குயர்த்தோர்
பரவு வேதர்க ளாவயிற் பற்பலர் பயில்வார். (௬)

அண்டம் யாவையு மரைக்கணத் தளவையி னவித்துப்
பண்டு போலவை யுயிரொடும் படைத்தினி தளிக்க
மண்டு மாற்றல்பெற் றுள்ளபூ தங்கண்மா மலநோய்
விண்ட சாரதத் தலைவரும் விளம்பிலெண் ணிலரால். (௭)

நலக்கு மாகம மறையெலா நவின்றுமெய் யுணர்ந்து
மலக்கு றும்பினைத் துமித்தின்ப வாரியிற் படியும்
அலக்க ணற்றவர் தமக்குமெய்ப் பணியலா தின்மை
துலக்கி நந்தியெம் பிரானமர் காவலுந் துதையும். (௮)

மதியொ ராயிரம் வகிர்ந்திரு பாங்கினும்
வயக்கிவைத் தெனத்தோற்றும்
நுதியி ராயிர மணிச்செழு மருப்பினு
நொறிலுளை யெழுமான்றேர்க்

கதிரி ராயிரங் கோத்தன கிம்புரிக்
களிறுவாக் கியதானம்
நதியு ராய்த்தவழ்ந் தசும்புதோ யிசும்பிவர்
நடையரி முடமாமால். (கூ)

வழுக்கி யஞ்சிறைத் தும்பிக ளவசமாய்
மலர்த்தலை விழவிமற்
றொழுக்கி ரும்பொழின் மதுப்புனற் றூரைக
ளுடன்விராய்த் தவழ்ந்தேகிச்
செழுக்கு தம்பைநான் றெருத்தலைத் தரவரு
திருப்பதி தனைக்காமம்
முழுக்க வென்றவன் புணர்ந்தெழு கண்டகை
முதுநதி வளங்காட்டும். (க0)

வளியு ளர்த்தலுஞ் சந்தனங் கிளைகளை
மணமலி யிணர்ப்பூந்தேந்
தளியு கக்கருப் பூரமம் மரத்தொகை
தரவிராய் நனிதேய்த்த
தெளிகொ டேய்வையுண் முழுகிய குவடுக
டேவிவெம் முலைமான
வெளிறு துன்றுதந் திறமருந் தவத்தினல்
விளித்தொளிர் வனபோன்ற. (கக)

கற்றை வெங்கதி ருடற்றிய விருட்டுணி
கதிரவன் மனையாமென்
றுற்று டற்றுவ தென்க்களி வண்டின
முழக்குபு மதுமாந்தும்
பொற்ற வம்புய மலர்ந்தனத் தொழுதியிற்
பொலிந்துகற் சுனையாவும்
அற்றமெய்யினர்க் கற்றவன் றிருவரு
ளாமெனக் குளிர்தூங்கும். (கஉ)

கொடைமை நல்குவ கற்பகப் பொழிற்கவட்
குளிர்மரப் பொதும்பெல்லாம்
மிடைவி லங்கினந் தேனுவுக் கினமணி
மிளிர்சிந்தா மணிக்கந்தேன்

மடையு டைத்தெழு மலர்க்குலந் தவழ்வளை
மலர்வளை நிதிக்கென்ப
உடைதி ரைப்புனற் றீர்த்தங்க டிருத்தங்கட்
குதவுவ மலந்தீர்த்தல். (கங)

வளங்க ளெண்ணில துவன்றிய வத்தகு
மாதர்வெண் கயிலாயத்
திளங்க திர்ச்செழும் பரிதிகள் பற்பல
வெறுழ்கொளத் திரண்டாங்கு
விளங்கொ ளிச்சுடர்த் தூணங்க ளாயிரம்
விறந்துபன் மணிமாலை
துளங்கு மின்னென நான்றசைந் திருங்கவின்
றுளும்புமண் டபநாப்பண். (கச)

ஒளிபி ழம்பிய வாரமும் போர்வையு
முத்தரீ யமுமான
களிபி ழம்புதம் மினமெனத் தாங்களுங்
கதிபெறக் குறிக்கொண்டாங்
களிபி ழம்பிய பாததா மரைநிழ
லகத்தொடு புறம்போர்ப்பத்
தெளிபி ழம்பிரு நாகமு மடங்கலுஞ்
செறிந்துதாங் கணைமேலால். (கரு)

இருந்த வம்பல வுழந்துதன் மாசிணை
யிகந்துபே ரொளிகூர்ந்
திருந்து வெண்மதி விசும்பெழ வார்சடைச்
சிவணிய வொருநாகம்
அருந்தின் மற்றிது பெருஞ்சுவைத் தாமென
வாவிவெள வுபுமீண்டு
பொருந்தி ஞலென வயங்குகாம் புயர்குடைப்
பொழிகதிர் நிழல்பம்ப. (கசு)

நாமி கப்புறி னமைப்பரித் துழலுமா
னைந்துயிர் தணைமன்ற
தாமி கப்புறு தன்மைநா யகன்றிருச்
சந்நிதிக் குரித்தான

ஆடி தைக்குறித் தெனமகிழ்ந் தெழுந்தெழுந்
தாட்டயர் வனபோலக்
காமர் முற்றிழைக் கன்னிய ரிரட்டிய
கவரிக ணனித்துள்ள. (கஎ)

கற்றை வார்சடை செஞ்செவி மணியுரங்
கரங்கடி தடம்பூந்தாள்
முற்ற ராவணி முழுவதுந் தழைத்தொளி
முதிர்ந்தெழில் வளம்பொங்கும்
பெற்றி சூழ்ந்தது முயன்றுளார் போன்மெனப்
பிடிநடை மடமாதர்
பற்றி வீசுசாந் தாற்றிகள் வளியெழீஇப்
பாங்கெலாங் குளிர்தூர்ப்ப. (கஅ)

குழலும் வீணையுந் தோற்பொலி முழவமுங்
குரைகட லமிழ்தன்ன
மழலை கூர்மொழிப் பாடலு மயங்கவந்
தாடலை மதித்தாங்கண்
அழலம் போருகக் கரமுகிழ்த் தஞ்சலி
யளித்தவ ரவ்வாறே
விழவு கூர்திரு வனப்பட வுள்ளகம்
விளிந்தனர் தலைநிற்ப. (கக)

மாய ஞதிவிண் ணவரெலாந் திருவுரு
வனப்பினை யெதிர்நோக்கிச்
சாயன் மாதரார் பெண்ணவா யவ்வுருச்
சத்தியிற் றழீஇக்கோடல்
மேய காலையின் மோகமிக் கெழுதலும்
வினைமறந் தடிபோற்றும்
தூய வானர மகளிர்போற் கையறு
தொழின்மையி னனிநீட. (உ௦)

கொம்மை மென்முலைக் கொடியிடைக் கிடமருள்
குழகன தடிநாடும்
செம்மை நெஞ்சினர்க் குறுவழி யண்மைய
செவ்விய வெளிதுய்ப்பத்

தம்மை யல்லதில் லாமையைச் சாற்றுத
றகைப்வா கமமெல்லாம்
விம்மி ருங்கதி ருருவுகொண் டண்மையின்
விராயமர்ந் தினிதேத்த (உக)

போத விழ்ந்துதே னுறைக்குமென் மலர்த்தொடை
பொங்கிய விரைச்சாந்தம்
மாதர் வில்லுகு மிழைகளுஞ் சிந்திமெய்
வளர்தப வுளமெல்லாம்
கோத னுங்கிமெய் யருள்வள மிகவிஞ்ஞோர்
குழுக்களைத் தவவோச்சித்
தீத னுங்கிய நந்தியங் குருபரன்
றிருமுன்பு பணிசெய்ய. (உஉ)

பரந்து நின்றொளிர் பராபரை யாதியாப்
பன்னுமைம் பெயர்பூண்டு
நிரந்த வைந்தொழி றன்னொடும் பிரிவின்றி
நிகழ்த்துசத் தியையன்றி
உரந்த ழைத்திடா வுண்மைபி னுடன்றொழு
துயிரெலாங் களிதூங்க
வரந்த ழைத்தவ னுமையொடும் பேரருள்
வழங்கிவீற் றிருந்தானல். (உங)

வண்டு ழாய்த்தொடை மார்பனும் பிரமனும்
வானவர் முதற்கோவும்
மிண்டு மொன்பதிற் றிருவரும் பதினொரு
மூவரும் வேறாய
தொண்டர் யாவருந் தொழுதுதங் குறைவினைத்
துறுத்தமே வரப்பெற்றுக்
கொண்ட வோகையி னவரவ ருறைபதி
குறுகின ரதுகாலை. (உச)

பக்கு வம்பல புண்ணிய மலபரி
பாகஞ்சத் திநிபாதம்
தொக்க வல்வினை யொப்பநே ரடுத்தலிற்
றொல்லுரி கழல்பாக்கு

மிக்கு நாடும்வா ளரவெனப் பிறவியை
வெருவிய வுளத்தோடும்
தக்க மாதவ ரெழுவரு மறுவனுந்
தாழ்ந்தெழுந் தெதிர்நின்றார். (உ௫)

குடந்தம் பட்டெதிர் நிற்றலும் பசுங்கதிர்க்
குரூஉமதி மிளிர்வேணி
மடந்தை பாகன்மற் றுயிர்க்குயி ராகிய
வள்ளலன் னவர்நெஞ்சம்
கிடந்த வேட்கையைத் திருவுளத் தடைத்தருள்
கெழுமுநந் தியின்பாங்கர்த்
தொடர்ந்த வன்பினு லுணர்சனற் குமரனுந்
தொன்முனி முகநோக்கி. (உ௬)

செயிர்பி றங்கிய பகைமையு முறவெனச்
செறிந்தநம் மையும்பாரா
உயிர்பி றந்தவ ராதலின் முனிவரர்க்
குண்மையை முறையானே
மயர்த புத்தினி துரைமதி யெனவருள்
வழங்கியா வயினின்றும்
வெயிற ழும்பிய வுவளக வரைப்பினை
மென்கொடி யொடும்போந்தான். (உ௭)

அண்ணலா ரருளிச் செய்த வருடலைக் கொண்டு போற்றிப்
புண்ணிய சனற்கு மாரன் புளகமோ டாங்கு வைக
எண்ணிய வெண்ண முற்ற வெம்பிரான் கருணை வெள்ளம்
நண்ணிய முனிவர் தாழ்ந்து நயந்தனர் கிளக்க லுற்றார். (உ௮)

முனிவரெனைத்துந் தேறு மொய்யரு ணிதியம் பெற்றுக்
கனிமொழி பாகன் பாதக் கலப்பெனுஞ் சேக்கை சேக்கும்
புனிதமெய்ச் சனற்கு மார புங்கவ நின்னைச் சேர்ந்தனம்
இனியடி யேங்கட் கெய்தா விரும்பொருள் யாங்க ணுண்டே.

சுற்றமென் வல்லி பின்னித் தொக்கசத் தாதி வெண்டேர்
செற்றியிந் தியமா மல்கிச் செனனமே மரண மென்ன
முற்றிய வழிக ணீண்டு முனிவினைத் தழல்கள் சூழ்ந்து
பற்றிய வாழ்க்கைக் காடு பாற்றுமெஃ கின்று பெற்றும். (௩0)

சுத்தமெய்ஞ் ஞான வின்பத் துறைபடி முத்திக் கேது
சத்தியந் தருமந் தானந் தவமக மக்கட் பேறென்
றித்திற மென்றுந் தத்த மியல்புளி யொழுக லென்றும்
வைத்தசொன் மறையிற் றோன்று மலைவுமின் றொழுகி னானேம்.

என்றுளத் தெழுந்த வார்வ மெழுகட லென்னப் பொங்க
நின்றுவிண் ணப்புஞ் செய்யு நீத்தமா தவத்தி னார்க்கு
நன்றருட் பார்வை நல்கி நவைதபு தீக்கை யாற்றி
ஒன்றுமுப் பொருளு மும்மை யுணர்வினாற் றெளித்திட் டானே.

இங்கிது நந்தி யெங்கோ னிருந்தவப் பேறு வாய்ந்த
மங்கண னாதி யான மாதவத் தோர்க்குப் பண்டு
சிங்கிய மலத்தி னுள்ளந் தெளிதரத் தெருட்டிற் றாகும்
நுங்களுக் குரைத்தா மென்று நுவன்றனன் மோன முற்றான்.

கேட்டனன் றமைதி பெற்றுக் கிளர்ந்துடன் சிந்தித் தங்கண்
வாட்டமின் றெழுவர் தாமு மயர்தபத் தெளிந்த பின்றைக்
காட்டரு நிட்டை கூடல் கலவும்வா தனையி னெய்தார்
மீட்டவுள் ளத்த ராகி மெலிந்துதங் குருவைச் சார்ந்து. (௩௪)

ஐயனே போற்றி யாண்ட வமலனே போற்றி மூவா
மெய்யனே போற்றி நின்னை மேவியு மேவார் போல
வையக மாட்டெம் முள்ளம் வழிக்கொள லாயிற் றெந்தாய்
உய்யநின் கருணை யின்னு முறுத்தெனக் குமரன் கூறும். (௩௫)

பொறுமையைம் பொறிய டக்கல் புரைதபு தவமா சார
முறைவழி யொழுகல் சீல முற்றிய வாய்மை யூக்கம்
அறிவரு ளருச்ச னாதி யடைந்தன்பு கடைப்பி டித்தல்
நெறியிவர் புத்தி கூர்த்த னடுநிலை நிலைத்தி ரேனும். (௩௬)

வாதனை மலநோய் தாக்க வாய்மையி னிலைத்த லின்றி
வேதனை யுலகி னுள்ளம் விரவமெய் விதிர்ப்புக் கொண்டீர்
சாதகப் பாலிர் நீயி ராதலிற் சாத கத்தாற்
சாதலும் பிறப்பு மில்லாச் சாத்தியப் பாலி ராகின். (௩௭)

சாதக வழியும் பல்ல வவற்றினுட் டளர்வின் ருவ
ஏதமி றலந்தோ றெய்தி யிறைஞ்சுத லொன்றின் வைகல்
தீதறு தலமும் புத்தி செறிப்பவீ டுறுப்ப வேண்டின்
ஓதிய விரண்டு முய்ப்ப வுலப்பில வுலகின் மாதோ. (௩அ)

அவற்றினுட் புத்தி முத்தி யருங்குறைத் தின்றி யார்க்கும்
தவற்றினைத் துமித்து நல்குந் தலங்களுஞ் சில்ல வாகும்
அவற்றுளு முக்கண் மூர்த்தி யமர்தலஞ் சில்ல சில்ல
துவற்றுதேங் கடப்பந் தாரான் சூழலப் பெயருங் கேண்மின்.

மாலைவெள் ளருவி தாழ்வரைக் கயிலை
மதமலை யுரற்றுமந் தரமே
சாலநோ யனுக்குஞ் சம்புலா சியமே
தண்பனிக் குவடுசூ ழிமயம்
ஏலமார் சோலைத் தருமநற் கான
மெழில்குலா வியகுணத் தானம்
கோலம்வீற் றிருந்த வளமிகு நீல
கண்டமே குலாசல வரைப்பு. (௪௦)

வெறிகமழ் பொழில்சூழ் வில்வகங் கணமே
வினைக்குறும் பகழ்தரு வராகம்
எறிதிரைக் கங்கை வட்டமேத் துநர்த
மிடர்தபுத் தருள்சிலை வட்டம்
மறுவில்கந் தருவ வனந்தொழித் தளிசேர்
மலர்ச்சுனை வெறுத்தகே தாரம்
உறைமதுப் படப்பைக் காமிகா ரணிய
முதீசியுத் தாலக வைப்பு. (௪௧)

கடவுளர் முதலோர் வணங்குசீ கோட்டங்
காதரந் தபுங்குரு குல்லியம்
சுடர்மணி யிமைங்குங் கங்கைசூழ் காசி
தொல்வினை யறுங்கபி லேசம்
மடவிய ராட லருதமா காளம்
வான்படர் புகழ்விரு பாக்கம்
தொடலைவன் மாயை விடைகொள்வன் மீகம்
துலங்கிய தேசநீ வனமே. (௪௨)

திங்கள்சேர் மாடக் கிர்த்திவா சேசம்
கங்கையா தாரசித் தியமே
துங்கமா தவர்தாழ் மந்தன காளம்
துகளின்மா யாபுர மிபங்கள்
சிங்கநின் றலம்ப வெருவுசீ சயிலம்
தெகிழ்ந்தபூந் தண்டகா ரணியம்
பொங்குநீர் வைகை யாலவாய் பொருந்தம்
பொருகரை யமர்புடை மருதூர். (௪௩)

காவிரி வளத்த வுசிரமே தென்பாற்
கவின்றவுத் தாலக நகரம்
பூவிரி பொதும்பர் மலயவெற் படுத்தோர்
போக்கரு விக்கிர மேசம்
நாவலர் துவன்றுஞ் சாலிவா டீசம்
நற்கதி யருள்சம்பு வனமே
வீவிரி காந்தட் டிரிசிர வோங்கன்
மேதக வளர்சுசப் பேசம். (௪௪)

பாட்டளி முரலும் பொய்கைசூழ் பஞ்ச
நதம்பய னருள்புட்ப விபினம்
கோட்டரி யுகளும் வாஞ்சியங் கோணை
மதில்புடை குலவுசீ புரமெய்
வீட்டினர் வதியும் பசுபதித் தலமே
வரும்பஞ்ச லோகமாத் தானம்
வாட்டமுற் றிரிக்கு மிடைமரு தென்றாழ்
வழக்கறு மாடமா யூரம். (௪௫)

சீர்த்தசித் திரவே திகமடி யார்க்குத்
தேனிக்கு மாலிங்கே சுரமே
சூர்த்தவன் பிணிக டிமிசித்தா ரணியந்
துயர்விடு சுநாகத வைப்பு
பார்த்தலத் தொளிகள் பரப்புகண் டீசம்
பரவுசீர்ச் சிதம்பர நகரம்
ஓர்த்தவ ரலக்க ணறுத்திடுந் தால
வனமத்தி யாபகே சுரமே. (௪௬)

உடற்பய னளிக்கு மிருடிவிந் தியமே
யும்பரார் தொழும்வராஞ் சலமே
தடப்பல நதிசூழ் காஞ்சிமா நகரந்
தண்டலை யுடைவடா ரணியம்
மடப்படு மலந்தீர்த் தருடிருப் பாசூர்
வயங்கிய வியாக்கிரே சுரமே
கடப்பருஞ் சீர்த்தி விரிஞ்சைமா நகரங்
கரிசிரித் திடுந்திரு வல்லம். (சஎ)

எட்டணை நாற்றி யிரட்டிய விவைமற்
றெறிதிரைப் பெரும்புனற் கங்கை
வட்டவார் சடிலத் திளம்பிறை கதிர்க்கும்
வள்ளலா ரமர்தல மாகும்
அட்டொளி விரிய வழற்பொறி தும்மு
மரித்தலை வேல்வல னுயர்த்த
கட்டழ கெறிக்கு மறுமுகக் கடவுள்
கதியநற் றலங்களுந் தெரிப்பாம். (சஅ)

பிறங்கிய பவானி சங்கமஞ் சமணப்
பிராணநா சனம்புயன் மேகம்
உறங்கெயி லுடுத்த பவானிசங் கரம்விண்
ணுவகையிற் பணிசர வணமே
அறங்கிளர் குமார புரமணங் கஞற்றி
யலர்விரி கதம்பகா ரணியம்
மறங்கடி வன்னித் தானநீ ரோடை
மலிந்துவாங் கியசத்தி புரமே. (சகூ)

வரம்பல வுதவுஞ் சண்முக புரஞ்சீர்
மல்கிய கன்னபூ டணமேர்
பரந்தெழு கீர்த்தி பூடணம் வாகு
லேயமா புரம்பவுத் திரமே
விரவுமா ரூட மேடக மோசை
விரியுநப் பிரமத மோசம்
புரவுபூண் டருளுங் கந்தமா தனமே
போகுயர் முடிக்கிர வுஞ்சம். (ரு0)

தவமலி வேத சயிலமின் புறுத்துஞ்
சத்திய வாசகம் புறவி
அவமறு குமர கோட்டமே மூலகு
மாதரித் துறுங்கவு மாரம்
துவர்வளம் படைத்த தாமிர கூடத்
துவசமே வில்வகா னனமே
திவளொளி மயூர மதம்விடுந் தானத்
தேவகும் பக்குகைத் தானம். (௫க)

எழில்வளர் விசாக பவனமெய்ஞ் ஞான
மீத்தருள் வித்தியா வனநல்
விழவுகொண் மார னந்தகா ரணமெய்
விளைத்திடுஞ் சுவேதமா வனமோர்
தழைசுகு மார சிகாசலம் வளங்க
டகுஞ்சுரா பயப்பிர தந்தேன்
வழிமுழை குவட்டு வள்ளிவெற் போங்கு
மாவிர புரமெனுந் தலமே. (௫உ)

வளமிகு சோமாக் கந்தமும் மலந்தீர்
வாகுலே யாசிர மந்தொல்
பளகறு கெந்த சயிலநீன் முகின்மீப்
படிதருஞ் சித்திர கூடம்
தளிரிணர்ச் சோலைச் சம்பகே சுரங்கோ
மூக்கியந் தறுகண்மா வேழம்
களகள முழங்குங் காளத்தி விலங்கல்
கருணைசெய் பிரணவ புரமே. (௫௩)

உரனிகழ் ஞான சனங்கதிக் கேணி
• யுளூற்றுறும் புத்திர காமம்
அரிறபு மிந்தி ராயயப் பிரத
மவிர்சிவோ பாசிய நகரம்
பிரமகிக் கிரகம் பீடுசேர் பிரம
வனுக்கிர கம்பிழை தபுத்தோர்
இரவுநன் பகலும் வழிபடும் வாத
புரமில கியவராஞ் சலமே. (௫௪)

பொலிந்தசீர் வரத சயமபி டேக
    புரமலர்க் குறுஞ்சுனை படப்பை
மலிந்தகல் யாண கானம்வீழ் வரங்கள்
    வழங்கிடுஞ் சுப்பிர மணியம்
ஒலிந்தபூம் பொதும்பர் வித்தியா தரமே
    யுளங்கவர் மணிகண்டே சுரமே
சலந்தவிர் சமயத் தானபஞ் சகமென்
    றுரைத்திடுந் தலங்களோ ரைந்தே. (ருரு)

தரைபுகழ் சயந்த புரமரு ளவர்க்குந்
    தருங்குமா ராசல மணிகள்
வரைகிடந் திமைக்கும் வேங்கட முத்தி
    வழங்குசீ பூரண கிரியென்
றுரைதரு நாலெண் ணிருதல முருகற்
    குறுதல நுமக்கொத்த தலமும்
புரையிலித் தலத்து ளுயர்ந்தநான் கீற்றிற்
    புகன்றநாற் றலமவை யவற்றுள். (ருசா)

மதந்தவி ரடியார் வாதனை மலமும்
    வாட்டுசீ பூரண கிரியாம்
விதந்தநாற் றிருபத் தெட்டினு மேலாய்
    விளங்குமால் வினைக்குறும் பொதுக்கிப்
பதந்தர வல்ல சத்திய விரத
    பாற்கர கேத்திர மாகி
இதந்தரு மிறைவற் கருண்மொழி கொடுத்த
    திதுவலா தின்மையின் மாதோ. (ருஎ)

என்றுமோ ரியல்பி னின்றிடுஞ் சீபூ
    ரணத்தினை யாயிடை வதிவோர்
மன்றநன் றுறலா லப்பெயர்த் தாகும்
    வானவர் திருவெலா நிரம்பி
நின்றிட லானு மப்பெய ரதற்கு
    நிகழ்த்துவர் கணிகமாத் திரையின்
வென்றிகொள் வரங்கள் வழங்கலிற் கணிக
    வெற்பென மிகுமொழி யுடைத்தால். (ருஅ)

மூலமா யுலக முழுவதும் படைத்த
முதல்வனே முருகனைத் தனக்கு
மூலமாக் கொண்டு வணங்கலின் மூலாத்
திரிவைக லொருமலர் மூன்று
கோலமார் காவி யுயிர்த்தலி னல்ல
காத்திரி குமைத்திடுங் கற்ப
காலமு மழியா திருத்தலிற் கற்ப
சித்தமர் தணிதலிற் றணிகை. (ருகூ)

பிரணவப் பொருளை யுணர்த்தலிற் பிரண
வார்த்தமா நகரமிந் திரற்கும்
வரமளித் திடலா லிந்திர நகரி
மகதியாழ் முனிக்குறு பிரியம்
விரவிய சிறப்பா னாரதப் பிரியம்
வீட்டினை யகோரனென் றுரைக்கும்
அரிறபு தவத்தோற் குய்த்தளித் திடலா
லகோரகை வல்லியப் பிரதம். (சூO)

இறுதியிற் கிளந்த விந்தநாற் பெயரு
மீண்டிய முதலுக நான்கும்
முறைமையி னெவ்வொன் றுரிமையி னெடுத்து
மொழிந்திடப் படுமெந்த வுகத்தும்
மறுமுத றமிக்கும் வளங்கெழு சீபூ
ரணப்பெயர் வழங்கிடப் படுமால்
அறிமினோ குறிக ளத்திருக் குன்றத்
தினுக்கடை யாளமுங் கேண்மின். (சூக)

தெண்டிரைக் கங்கைக் காசிமா நகர்க்குத்
தெனுதியோ சனையிரு நூற்றின்
வண்டமிழ்க் காஞ்சி வடாதிரண் டனிற்கீழ்
வளைகடன் மேற்றிசை யைந்தில்
தொண்டர்சூழ் விரிஞ்சை வடகிழக் கெல்லை
மூன்றினிற் றலங்குகா ளத்தி
அண்டர்சூழ் வரைக்கு நிருதிமூன் றரையி
னரசுவீற் றிருப்பதக் குன்றம். (சூஉ)

குழவிவெண் மதிய மிலைச்சிய வேணிக்
குருபரன் பிரணவப் பொருளை
விழைதகக் தவத்திற் பெற்றுவீ ராட்ட
காசஞ்செய் வீராட்ட காசம்
அழலவிர்ந் தனைய நெட்டிலைக் கதிர்வே
லொயினி தமர்ந்தருள் குமரன்
சுழல்பவங் குமைக்குந் தன்பெயர் விளங்கத்
தொழுஞ்சிவக் குறியுமாங் குளவால். (௬௩)

குன்றவர் மடந்தை குவிமுலை மார்பிற்
கோட்டுமண் கொளப்புணர் வேலோன்
அன்றுமெய் யன்பிற் போற்றிய வாபச்
சகாயனென் றடற்களிற் றிறையும்
மன்றலங் கமலத் தயன்படைப் பிளையோன்
வழங்குமா றருந்தவ முஞற்றி
ஒன்றிய வுளத்தான் வழிபடு மெண்டோ
ளுத்தமன் குறியுமற் றுளவால். (௬௪)

குருமொழி வேட்டு நந்திமா தவங்கள்
குயிற்றிய குகையுமற் றவர்க்கு
மருமலர் கடப்பந் தாரினு னழைத்த
மணித்திரை நந்திநந் திநியும்
பொருவில்செந் தமிழ்க்கு முதற்குரு வாகப்
பொலிவரம் வரையுரங் கிழித்த
முருகனுய்த் தளிப்ப வகத்தியன் போற்று
மொய்யொளி யிலிங்கமு முளவால். (௬௫)

இந்திரன் பிரமன் மாதவன் சேட
னிவர்வலிச் சூரன்கைக் கவர்ந்த
அந்தமி றங்கள் வளம்பெற வேண்டி
யருச்சித்த வருட்குறி பலவும்
சுந்தர மனையை யிழந்தமா லரன்பாற்
றுகளறு பெருந்தவ மாற்றி
மைந்துபெற் றெண்ண முற்றிமீண் டருளை
வழங்கவாழ் சேக்கையு முளவால், (௬௬)

மாடகம் பொலிந்த திவவியாழ் முனிவன்
வந்தனை புரியருட் குறியும்
பீடகம் பொலிந்த வம்முனி மொழியப்
பெருகிய வோகையி னிளையோன்
தோடகம் பொலிந்த விணர்மலர்க் கூந்தற்
சுந்தர வல்லியை மணந்து
பாடகம் பொலிந்த வடிப்பிடி யோடும்
பயிலுமப் பருப்பத முடைத்தால். (சுஎ)

கடம்பணி குமர னன்முகன் றிருமால்
கதிர்மணிச் சேடனு ரதன்றூர்த்
தடம்புயக் குலிசத் திந்திரன் செழுந்தீந்
தமிழ்முனி பெயரினல் விளங்கும்
இடம்படு தீர்த்தஞ் சிவகங்கை யெட்டு
மியம்பிய நந்திநந் தினியும்
மடந்தபு நும்மால் விளங்குமேழ் சுனையு
மணிவரை யண்மையி னுடைத்தால். (சுஅ)

நறுமணங் கமழுந் தாமரை நிகர்த்த
நகைமுக மாறுமெல் லுமிழும்
மறுவறு மணிகள் வயின்வயி னிமைத்து
மல்கிருட் செறிவுகால் சீக்கும்
அறுமணிக் குவடா யறுமுகத் திறையே
யாயதா லடைந்தவ ருயிர்மேற்
கொறுகொறுத் துழலும் வல்வினைப் பகையைக்
கொலைபுரிந் தருளுமக் குன்றம். (சுகு)

சேயிடை யிருந்து கேட்பினுந் தொழினுஞ்
செப்பினுஞ் சித்தம்வைத் திடினும்
ஆயிடை வதித லாதிகள் செயினு
மலகில்பல் பவத்தினு மீட்டும்
மாயிரு வினையுஞ் சவட்டிமீ ளாத
வரம்பிலின் புறுத்துவ தென்றால்
காயிலை வேலோன் றணிகையின் பெருமை
கட்டுரைக் கடங்குவ தன்றே. (எ0)

இன்னணஞ் சிறந்த வுற்பல வரையை
யெய்தியாங் கினிதுவீற் றிருக்கும்
மின்னவிர் நுதிவேல் வீரனைப் பணிந்து
மேதக வதிந்தவ னருளால்
துன்னிய மலவா தனைவிடை கொள்ளத்
துலங்கிய சாக்கிரா தீத
மன்னியின் புருவா யாணவ நிலைபோன்
மருவுதி ரெனப்பணித் திட்டான். (எக)

அருளிய குரவன் றிருவடிப் போதி
லருந்திறற் பெருந்தவ முனிவர்
இருவிழி பொழிநீர் மண்ணுதல் புரிய
வெழுந்தனர் பலமுறை வீழ்ந்து
திருவுடை யாளங் கூறிய முக்த்தாற்
றெரித்தனை மான்மியம் விரித்துக்
குருபர வருளென் றிரந்தவன் முழுதுங்
குறைவறத் தெருட்டிடத் தெளிந்து. (எஉ)

மறுவலும் வணங்கிப் புறவிடை கொண்டு
மடங்கனைக் கெனமனங் குரவன்
நறுமலர்ப் பதத்து நாமவே லிறைவ
னளிர்வரைக் குன்றினும் படர
எறிகதிர் வெள்ளி வரைதனந் தாங்க
ணெய்திநா யகனடி பணிந்து
நிறையுள மகிழ்ச்சி தலைசிறந் தனராய்
நெடுவரைத் தெனுதழிச் சார்ந்து. (எங)

தொழித்தளி முரலு நந்தன வனமுந்
துறுமலர்ப் பொதும்பரு மணிகள்
கொழித்தலை சுருட்டுஞ் சுனைகளும் படுத்த
கொள்கையின் விளங்கறை பலவும்
செழித்தவிண் ணமர ருள்ளமுங் கவர்க்குந்
திருக்குலாய் மும்மலச் செருக்கும்
அழித்தெழு மருட்கோ ராகர மான
வற்புதச் சூழல்கண் டமர்ந்து. (எச)

வைகலும் விதியா னட்கடன் கழிப்பி
 மருவுமான் மார்த்தபூ சனையை
நைகர மில்லா வன்பொடு நவிற்றி
 நறைகமழ் கடம்பணி தாரான்
செய்கழற் சரண பங்கயம் போற்றித்
 தேசிக னருளிய குறியால்
பொய்கழ லுள்ள நிட்டையைக் கூடும்
 பொருவறு சூழ்ச்சிகைக் கொண்டு. (எரு)

ஆதியீ றில்லா வைந்தெழுத் தைந்து
 நிலையினு மாம்வகை யுணர்ந்து
தீதுசே ரிரண்டு நிலையினு நீங்கித்
 திகழ்நிலை யிரண்டினும் பயின்று
பேதமே யபேதம் பேதமோ டபேத
 மெனப்படும் பெருநிலை யாய
ஞாதிரு ஞான ஞேயமுந் திகழா
 நன்மையிற் றென்மைய ரானார். (எசு)

அத்தகு வரைப்பி னெழுசனை யாடி
 யருந்தவ மாதிக ளியற்றின்
சித்தமா சிரிய விழிஞரு மொல்லை
 சிவத்தினைச் சிவனுவர் கண்டீர்
இத்தகு முனிவ ரெழுவர்க்கு நந்தி
 யெம்பிராற் குரியமா ணக்கன்
மெய்த்தவக் குமரன் விளக்கிய ததனை
 வினைச்சம மிலார்க்குரைக் கொணுதால். (எஎ)

என்றுமா தவத்துச் சூதமா முனிவ
 னியம்பலு மரும்பெரும் பொருளை
இன்றுநாங் கேட்ப முன்புநாம் புரிந்த
 விருந்தவ மிருந்தவா வென்னென்
றென்றுமா னந்தக் கண்கணீர் பாய
 வுருகிய வுளத்தொடு மெழுந்து
நின்றுவான் முனிவ ராங்கணே ரைய
 நீத்திடக் கடாவின ரன்றே. (எஅ)

முனிவ ரெழுவர் கேட்டுளந் தூய்மை
முற்றின ரெனமொழிந் தனையம்
முனிவரர் யாவ ரத்தகு காதை
மொழிந்தருள் காலமெக் காலம்
சனிவருந் தீஞ்சொற் கட்டுரை யென்னக்
கடாவுத வியமுனி வரர்க்குப்
புனிதவெண் ணீற்றுச் சூதமா முனிவன்
போக்கரு விடையெதிர் கொடுக்கும்,      (எசு)

கறங்கு மணிவெண் டிரைமுகந்த
கமஞ்சூற் கொண்ட லெனவரவின்
உறங்குங் கடவுண் மலர்க்கமல
வுந்தி யெழுந்த நரைத்தலையோன்
பிறங்கிப் பகலிற் பதினால்வர்
பீழை பெருக்கு மிடிகடியா
அறங்கள் கிளரத் தனிச்செங்கோ
லளிக்கு மனுக்க ளுளரவருள்.      (அ0)

முந்து மரசன் சுவாயம்பு
பிரிய வரதன் முதனால்வர்
மைந்தர் தேவர் யாமாதி
மகவா னரியே யுரிசிமுனி
சந்த முலையா கிருதிதனைத்
தழுவி யுயிர்த்த சுயக்கினன்மால்
புந்தி நுனித்த புலத்தியனை
முதலோர் பொருவி லெழுமுனிவர்.      (அக)

தோற்று மிரண்டா மனுவேந்தன்
சுவாரோச் சிடனே யவன்மைந்தர்
ஆற்ற லாயுமத் தாதியர்க
ளமரர் திவிடி தனைமுதலோர்
வீற்று மகவா னுரோச்சனன்மால்
வேத சரசு திவிடிதைபெற்
றேற்ற விபுபு முனிவரர்க
ளூர்ச்சத் தம்பன் முதலெழுவர்.      (அஉ)

மூன்று முறைவேந் துத்தமனே
 மூரிப் பவனன் முதலானோர்
ஆன்ற மைந்தர் சத்தியன்முன்
 னானோர் சுரர்சத் தியசித்து
வான்ற னிறைமால் சூனுருதை
 மறைதேர் தரும னெனுமுனிவற்
கின்று வளர்சத் தியசேன
 னெழுவர் பிரம தாதிகளே. (அ௩)

பெருமை பிறங்குஞ் சனற்குமரன்
 பிரச மலர்த்தாண் முடிசூடி
அருமை மறையந் தத்தெளிவா
 யமைந்த சைவ சித்தாந்த
ஒருமை யன்பிற் கேட்டுணர்ந்த
 வுயர்ந்த முனிவ ரிவர்கண்டீர்
இருமை வழங்கு மிதுகாறு
 மியைந்தோர் தமையு மினிக்கேண்மின். (அ௪)

நடலை யுலகத் துயர்துரக்கு
 நாலா மனுத்தா பதன்மைந்தர்
விடபன் முதலோர் சத்தியகன்
 முதலா னோர்விண் ணவர்மகவான்
அடல்வல் வினைதீர் திரிசிகன்மா
 லரினி யரிமே தசுபயந்த
படர்முற் றிரிக்கு மரிமுனிவர்
 பழிப்பில் சோதி முதலானோர். (அ௫)

விரித்த வீண்டை விண்ணவர்கள்
 விதுர்த னுயிர்த்தோ ரொழுக்கனைத்தும்
தெரித்த வேத நான்முழுதுந்
 தெவ்வா தோப்பி மடமூழ்கி
வரித்த கழற்கா லவுணர்நனி
 வருத்த வாழ்நாள் வல்லையவண்
இரித்து ளார்வை துருதேய
 ரென்னும் பெயரு மிவர்க்காகும். (அ௬)

ஐந்தா மனுவேந் தரைவதக
ஞன்ற மைந்த ரருச்சுனனே
முந்தை யுடையோர் பூதரதன்
முதலோ ரமரர் சதக்கிருது
மைந்து மிகுந்த விபுபுமால்
வளைத்தோட் சுருபி சுப்பிரன்பால்
அந்தில் வரும்வை குண்டனிர
ணியரோ மனையா தியர்முனிவர். (அஎ)

தகைசீ ராறு மனுச்சக்கு
தந்தோன் சாக்கு தப்பெயரோன்
புதல்வர் புருடன் முதலானோர்
புலவ ராப்பி யர்கண்முதலோர்
மதவிந் திரன்மந் திரதுருமன்
வபிரோ சனற்சம் பூதிபுணர்ந்
துதவு மசிதன் மான்முனிவ
ரவியன் முதலா முறுவர்களே. (அஅ)

ஈண்டை விளம்பு முனிவரரு
மிருள்கால் சீத்து நிலவெறிக்கும்
மாண்ட திருநீற் றுருக்கவயம்
வயங்கு மணிமே னியிற்றிளைப்பப்
பூண்ட சிவமுள் ளகந்திளைப்பப்
பொலிந்த குமரன் றனையடைந்து
மூண்ட விழைவி னடித்தொண்டு
முறையிற் புரிந்த நெறியோரே. (அகூ)

துரிசி லேழா மனுவைவச்
சுதனற் சாதத் தேவர்களே
பரனே சர்வ வித்தமனே
பபின்மா னுடரே உசேருவ்வே
தருமனிக்கு வாசுவே
சையன் றிருட்ட நர்பன்னே
மருவும் விடபத் துவசனென
மைந்தர் பதின்ம ரவன்றனக்கே. (கூ0)

வெய்யோன் விசுவ தேவர்வசு
விடப மருத்து வசுவனியான்
னையா வமரர் புரந்தரனு
னுக நகரஞ் செகிற்பரித்தோன்
எய்யா விறன்மால் காசிபனுக்
கெழுந்து பரந்த களபமுலை
மையார் தடங்க ணதிதிமணி
வயிறு வாய்த்த வாமனனே. (கூக)

வினையில் காசி பன்வசிட்டன்
விசுவா மித்தி ரன்சமதக்
கினியத் திரியே கவுதமனே
கேழில் பரத்து வாசனென
முனிவ ரெழுவ ரிதுகாறு
முறைசெய் மனுவே ழனுண்மூன்றும்
மனுவந் தரத்து முனிவரென
வகுத்தா மறிமோ வெனக்கிளந்து. (கூஉ)

கூற்ற நடுங்கு மருஞ்சாபக்
கோணை யாற்ற லிருந்தவத்தீர்
தோற்ற மரணங் கெடவின்பத்
துறையு ளழுத்து மருளிரண்டில்
தேற்று மமல மொழிமயமாய்த்
திகழு மருளிம் மான்மியமே
போற்றி யினிது கேண்மினெனப்
பொருவில் சூதன் சொலப்புக்கான். (கூங)

புராணவரலாற்றுப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — சசக.

## வீராட்டகாசப் படலம்

பூமணமு முடனுயிரும் பொன்விழியு
மெனும் புணர்ப்பா ருயிர்கள் பண்டு
தோமடையப் பார்த்திருந்து மெண்குணத்திற்
றிரியாது துகடீர் பாகம்
தாமடைய வெவ்வுயிர்க்கு மொருங்குறுத்தா
திருந்துமொரு சலமு மில்லா
வீமலிபொற் கடுக்கையந்தார் வீராட்ட
காசன்விரை மலர்த்தாள் போற்றி. (க)

கன்மிசை மஞ்ஞையி ருந்துக லாபம்வி ரித்தாட
வின்மணி சிந்தரு வித்திர டாழ்ந்துவி ழுந்தோற்றம்
முன்னிய சேடனம் மஞ்ஞையை யஞ்சிமு ரன்றல்லை
தன்னுல செய்துறு தன்மைத குங்கயி லாயத்தில். (உ)

மங்கல வெள்ளைவ ழித்தும லர்த்துகண் மேலட்டிக்
கொங்குயிர் தாமம ணிந்துகொ ழும்புகை மிக்கார்த்தி
வெங்களி நல்குவி தானம டுத்துவி ளக்கேந்திப்
பொங்கிவ ளங்கள்பொ லிந்தொளிர் மண்டப வுட்சூழல். (ங)

தோற்றிய வாறிரு மூன்றுறு தத்துவ சோபானம்
பாற்றுதை யப்பயில் வித்தப சும்பொன ணைச்சேக்கைக்
கோற்றொடி மங்கையி டத்திலி டைக்கும ரப்புத்தேள்
வீற்றிருப் பப்பரன் வீற்றிருந் தானொரு நாண்மேனாள். (ச)

அத்தகு செவ்விய றிந்துவி ஊச்சம மாய்க்கன்மம்
ஒத்தத வத்தினன் முத்திமை வேட்டவு ளத்தானுப்
பித்தினன் சந்திர காசனெ னப்பெயர் பூண்டுள்ளோன்
மெய்த்தக ணங்களுண் மிக்கவ ணுங்கண்வி ரைந்துற்றான். (ரு)

எட்டினு மைந்தினு மெய்தவ ணங்கியெ ழுந்தூறி
உட்டிளை யார்வமு ருக்கவெ யிற்கணு றும்வெண்ணெய்
பட்டதை யென்னநெ கிழ்ந்துவி ழிப்பனி நீர்வார
மொட்டுறு கஞ்சமெ னக்கைசி ரத்துமு கிழ்த்தோதும். (சா)

வெளியூ டுவிரா யவளிச் சலமவ்
வெளிசற் றும்விரா வுதலின் றதுபோல்
விளியா துவிரா யவுயிர்த் தொகுதி
விரவும் வினையின் பயனே துமுறு
ஒளியே யுலகெங் குநிறைந் துணர்வுக்
குணர்வா கியவின் பநெடுங் கடலே
தெளிமா தவருள் ளகம்விள் ளரிய
தேக்கா ரமுதே சரணஞ் சரணம். (எ)

அருவென் றுருவென் றருவோ டுருவென்
றறையும் பலபே தமுமா யவைமற்
றொருவும் பொருளா யபரா பரனே
யுடனின் றுயிரைத் தொழிலிற் புகுவித்
திருளும் வினைமாய் வினெழுந் தொறுமங்
கெய்யா மையருத் துமருட் செறிவே
தெருளும் புலனில் லவரெய் தரிய
தேக்கா ரமுதே சரணஞ் சரணம். (அ)

காட்டா கியநின் னருளுண் மையினைக்
கருதா துபுசிப் புவினைத் திறமே
வேட்டா ழுமுயிர்க் கவையாய் மிடையா
மேன்மே லுமுயர்த் தருள்வித் தகனே
வாட்டா ணவம்வாட் டியுடற் பொறைவிண்
மணிமுன் னர்விளக் கெனமாய்ப் பவனே
சேட்டார் ரணமுந் தெரியா தயருந்
தேக்கா ரமுதே சரணஞ் சரணம். (கூ)

மட்டார் குழன்மங் கையிடம் பிரியா
வரதா மதனு ச்கரா சரணம்
ஒட்டா தபுலிக் கலையோ டுதிசை
யுடையாய் பல்வும் முடையாய் சரணம்
தொட்டா தவர்வாட் கணுகுத் தெயிறு
தொலைவித் தபவித் திரனே சரணம்
கட்டார் தருகொன் றைமணங் கமழுங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம். (கO)

அந்திப் பிறைசூ டியசெஞ் சடிலத்
தழகா குழகா சரணஞ் சரணம்
சந்தப் புரமூன் றுமொருங் கவியச்
சமரா டமரா சரணஞ் சரணம்
பந்தப் படுமென் னையெடுத் தருளும்
பவனே சிவனே சரணஞ் சரணம்
கந்தப் பொழில்சூழ்ந் துவளங் கதுவுங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம். (கக)

சொல்லார் பொருளே சரணஞ் சரணஞ்
சுடருட் சுடரே சரணஞ் சரணம்
ஒல்லா ரிருளே சரணஞ் சரண
முற்றோ ரொளியே சரணஞ் சரணம்
வெல்லா வயவா சரணஞ் சரணம்
விடையா விடையா சரணஞ் சரணம்
கல்லா லமர்வாய் சரணஞ் சரணங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம். (கஉ)

என்று தோத்திரமி யம்பிய விருந்த வன்முகம்
நன்று நோக்கிவிழை வென்னது நவிற்று கெனலும்
கொன்றை மாலிகை மிலைத்தசடி லக்கு ழகனார்
வென்ற பாதமலர் மீட்டுமுடி கோட்டி மொழிவான். ()

வேத மாதிபல வும்பொருள் விளக்கி யிருளின்
ஏத மோதியெனை யின்னருளி னாண்ட ருளினை
ஆத லாலடைவ தின்றுகுறை யாதி மறைமுன்
ஓது கின்றமொழி யின்பொருளு ணமை யலதே. (கச)

மும்ம தக்கலுழி வண்டுதிறை கொள்ள முடுகுங்
கைம்ம லைக்கடவுள் போலமகன் மைக்க ணிறுவிச்
செம்ம னல்கினையெ னக்கிதுதெ ளித்த ருளுதற்
கம்ம வையமிலை யென்றனரு ளால ணவினேன். (கரு)

திருவு ளக்கருணை செய்திதுதெ ளித்த ருளென
இருண்ம லப்பகையி டிக்குமற வாழி யருளும்
பொருவி லாகமம றைத்திரள்பு ராண முழுதாய்
மருவு மக்கரமொ ரைந்தனெடு மானு மிதுவே. (கசு)

ஐந்தெ ழுத்துமொரு சார்மொழிக ளைந்தெ னவுமாம்
மைந்து பெற்றவெமை யேமுழுது ணர்த்தி வழுவா
தைந்தெ ழுத்துமொழி யொன்றெனவ ழங்கி வருமால்
மைந்த தேர்தியென வான்பொருடொ குத்த ருளினன்.

எண்ணில் பல்பவ மிருந்தவமு ழந்த பயனால்
நண்ணெ ணுதநவை யில்பொருளு ணர்ந்து பெரிதும்
உண்ண யந்துகண நாதனுவ கைக்க டலினன்
அண்ணல் கூறினவ கஞ்செவிபி னார்த லொடுமே. (கஅ)

ஞான சத்தியுரு வாதலி னலத்த குமரன்
ஆன ளித்தபொரு ளன்றியத னுட்பொ ருளெலாம்
தான றிந்தறிக லானெனன விருந்த னனரோ
போன தப்பொழுது பின்னரொரு போது முருகன். ()

தந்தை தாய்புடைய கன்றுகயி லைத்த டவரை
அந்தில் வைகலுறு மந்திரமி ருந்த ருளுநாள்
எந்த வானவரு மிந்திரனு மாலு முமைசேர்
உந்தன் வார்கழலி றைஞ்சவவ ணெய்த லுறுவார். (உ0)

வைத்த வேலிளவ ருட்டுணைவ ணங்கி யருளான்
மெய்த்த வன்பின்விகிர் தன்சரண மெய்தி னர்களால்
பைத்த வெண்டிரைநெ டுங்கடல்ப ரந்த வுலகின்
கொத்து யிர்த்தவனு மாங்கவரு டன்கு றுகுவான். (உக)

கற்றல் கேட்டலொடு காழறுபெ ருந்த கைமையும்
முற்றி னருமட ரூழினைமு னிந்த மைவரே
அற்றை ஞான்றிளவ லென்றுளம கந்தை யெழலும்
உற்று வந்தணைபு ரிந்திலனெ துங்கி னனரோ. (உஉ)

கோட்டி ளங்கதிர்ம திப்புனல்கு ளிக்கு முடியோன்
வேட்ட நல்வரம ளிப்பவவண் மீண்ட பொழுதும்
ஒட்டை நெஞ்சினனி றைஞ்சிலனெ ழிந்தி டலுமவ்
வேட்டை யூழினனி கந்தமையு ளத்தின் மதியா. (உங)

அண்ட கோடிகள னைத்துமவை யாக்கி நிறுவும்
அண்ட ரோடெளித முற்றுமெரி வாய்க்க ணுதவிப்
பண்டு போலவையு மாக்கியளி பாய்த்தும் விழிகள்
மண்டு கோபவெரி யானனிவை யங்கி மறல. (உச)

தந்தை முந்திளவ றன்னுழிய லாது பிறர்பால்
மைந்தி ஞற்றணிவி லாதவிறல் வாகு வைவிளித்
திந்த நான்முகனி ரும்புவன மாக்கு மெறுழின்
சிந்தை வைத்திடுசெ ருக்கொடுத ருக்கி வருவான். (உரு)

எம்மை யேதுமுணர் கின்றிலனி யம்பு மறையும்
மும்மை வையகமு முன்றொழுதல் கண்டு மறிவு
செம்மை பெற்றிலனு டற்றவரு தீவினையினைக்
கொம்மை கொட்டினன்வி ரைந்தெதிர் கொணர்ந்து விடுதி.

என்றி டிக்குலமு லம்பியதெ னக்க டவுளும்
நன்று நன்றெனவ ணங்கினன டத்த லதுகண்
டன்று டங்குபடர் தேவர்முனி வோர னைவரும்
மன்ற நீத்துயிரை வெற்றுடல ராகி மருளா. (உஎ)

மைந்தன் றந்தையையி கந்துமுன மாய்ந்த னமெலாம்
தந்தை மைந்தனையி கந்துவரு தண்ட மொருவி
உய்ந்து போவதுள தாங்கொலென வாயி னுரையார்
சிந்தை யானுரை நோக்கினர்சி தர்ந்து பெயர்வார். (உஅ)

அங்கி காலுயட லாழியிது போது மிகவின்
தங்கு மேயெனவ யர்ந்துதனி மாயன் மறையச்
செங்கை வச்சிரவ லாரிதிகழ் கோகி லவுரு
இங்கும் வந்திறகி றுங்கொலென மாழ்கி யிரிய. (உகூ)

நெரித்த வாண்முகநெ ரித்திறுமி றக்க வருமே
தெரித்தி லேமெனம றிந்துமதி திக்கி னடைய
வரித்து வைத்தனவெ யிற்றுநிரை வாட்க ளுகுமேல்
தரித்தி லேமெனவ ருக்கர்தளர் வோடு சுழல. (௩0)

அடர்ப்ப வண்மிடின ருந்துதியெ டுத்து நவின்மின்
சுடர்ப்ப தங்களில்வி ழுந்துநுணை சேர்ந்து நிமிர்மின்
விடுக்கு மென்றுவிரி நாவொடுக ரத்தி ரளினை
மடுத்த காதலினி யக்கியெரி வல்வி ரைவுற. (நக)

மற்றை வானவர்கண் மாதவர்கள் யாரு மறிவின்
முற்று நின்னடிமை யென்றுமுறை தாழ்ந்து யிரையாம்
பெற்று மீடுமென வோடவொளி பில்கு மவுலிக்
கொற்ற வீரனயன் முன்கைபிடி கொண்ட னவினன். ()

வேத நான்முகன் மேவி நிற்றலும்
கோதை வேல்வலங் கொண்ட கொற்றவன்
போதின் மேயினேய் புவன மாக்குவோய்
யாதின் மிக்குளா யியம்பு கென்றனன். (நந)

முனிவ னின்னண முதல்வன் கூறலும்
தனிதி னின்றவச் சதுமு கத்தவன்
பனியு ளத்தினன் பகர்த லொன்றிலான்
புனிதன் மேலிது புகறன் மேயினன். (நச)

வாழ்வு மிக்குளா யென்னில் வைகலும்
வீழ்ம னக்குறை மெத்த வுள்ளுடு
போழ்ம திச்சடைப் புனித னெந்தைமுன்
தாழ்தல் செய்திடச் சார்கு வாயலை. (நரு)

வலன்மி குத்தியே னென்னல் வந்தவன்
குலவு மெம்பியாற் கோட்பட் டீங்குறீஇ
அலம ராவுள மலமந் துத்தரம்
சிலவு நல்கிடாச் செய்கை பெற்றிலாய். (நசா)

இன்ன தன்மையா லீடி லெண்குணம்
மன்னி யெங்கணு மலர்ம ணம்மெனத்
துன்னி யாருயிர்த் தொகுதிக் கைந்தொழில்
முன்னி யாற்றுமம் முதல்வ னீயலை. (நஎ)

உலகு யிர்ப்பதி னுயர்ந்து ளேனெனில்
அலகி லண்டமு மாக்கு நின்னையும்
குலவு மாலையுங் கோணை வன்கணத்
தலைவர் தம்மையுந் தந்த தில்லையே. (௩அ)

தஞ்ச மின்றியுஞ் சமைக்க வல்லையேல்
எஞ்சு நின்றலை யிழைத்துக் கோடிமுன்
துஞ்சி னய்கொலோ தோற்ற நின்னதேல்
விஞ்ச வின்னினிக் காண்டும் வீறலை. (௩௯)

சகல ரும்பலர் சத்து வக்குணம்
தொகுவர் நீயதிற் ருேற்ற முற்றிலை
இகுமி ராசதத் திழித மோகுணம்
புகுநர் நிற்புறங் கண்டு ளாருளார். (௪0)

எவற்றி னுமிங் கென்னை யாணவத்
தவற்றி னைத்தெறுந் தத்து வத்தினைக்
கவற்ற லின்றியே கண்டு வல்வினை
துவற்றன் மேலெனத் துணிந்து ளாயெனில். (௪௧)

தத்து வத்தினைத் தவவி ளக்குவ
உத்த மத்துயர் மறைய வற்றின்முன்
வைத்த சொற்பொருள் வழங்கு மாற்றநீ
செத்து நிற்றியேற் றெறுதற் பாலையே. (௪௨)

இன்ன வாறெலா முயிர்த்திறக் கேட்டினை யெடுத்துப்
பன்னு மேல்வையும் பணிந்திரங் திலன்பரி வுழப்போர்
என்னும் வாலறி வெத்திறத் தாட்டினு மெய்தார்
கொன்னும் வாயுளான் மூகைமைக் கொள்கையே மிக்கான். ()

செதுப்ப மூந்தலை மாலையந் திரட்கண நோக்கி
வெதுப்ப வெந்துய ருள்ளகம் வெச்செனப் புடைத்து
நொதுப்பில் வன்சிறை புகுத்துமி ஞெறிறப வென்ருன்
மதுப்பொ லந்தொடைக் கடம்பணி மார்பினன் ருெழித்து. ()

குருதி கொப்பளித் தருவியாய்க் குவவுத்தோட் குதிப்பப்
பொருவில் பன்மணி மோலியிற் பொடிபட்டுப் பொழியத்
திருவு மற்றவன் றேசுநற் சிருட்டியுஞ் சிந்த
உருவ வன்கணம் விரன்மடித் தோச்சின சிரத்தில். (சரு)

எருக்கி வன்கரம் பிறையெனப் பிடர்கொடுத் தெற்றி
மருக்கி ளர்ந்ததார் மணிவடம் வழித்தலைச் சிந்தத்
தருக்க ழிந்துநீர்த் தாரையில் விழிச்சுடர் சாம்பப்
பொருக்கெ னக்கொடு போந்தருஞ் சிறைப்புகு வித்த. (சசு)

உளைய வேற்றவ ரொறுத்துழி யஞ்சலென் றேரும்புங்
களைக ணாகிய தந்தைதாய் கடிமழ வென்ன
விளைவ தோர்கிலா விரிஞ்சன்வே றொருதுணை யின்றி
அளைய ருஞ்சிறைப் பெருந்துயர்த் துணையொடு மாழ்ந்தான். ()

பாம்பின் வாய்ப்பல நாட்படு பரிதியு மறிவங்
கோம்பு முள்ளமோ டுலைப்பினுட் கருப்படு மழவும்
கூம்பு ருதுபன் னுள்விரி கங்குலின் விழியும்
தேம்ப ருஞ்சிறைத் திசைமுகத் தவனிக ராணன். (சஅ)

கணவ னார்சிறைப் படுவது கருதினள் கொல்லோ
தணவு றுதவ னுவகந் தவிர்ந்தவொப் பனையாள்
இணர்கு லாந்தருத் தாமரை யிசையிவை மற்றும்
அணவி வாழ்தரு மகமென முன்னரே யமைத்தாள். (சகூ)

விரகு மேவரி னரகமுந் துறக்கமே வெதிர்க்கும்
நரக மேவிர கில்லுழி நயத்தகு மிடமும்
அரவ மாலையன் கயிலையு மலரவன் றனக்குப்
புரவி லாத்துயர்க் கவதியில் புவனமா கியதே. (௫0)

தேவ ராயினு ரின்பமே நரகினிற் றிளைக்கும்
பாவ ராயினர் துன்பமே படரிரு பயனும்
பூவ ராயின ரேறுகர் வாரெனப் புகல்வார்
காவ னன்முக னிடும்பைநோய் கண்டிலார் போலும். (௫க)

மூவ ரென்றுட னெண்ணிடு முதன்மையு முனிவர்
தேவர் யாவரும் பணிபுரிந் துயர்தரு திருவும்
நாவி யங்குழன் மாதரார் கலவியி னயப்பும்
ஆவ விற்றவா றெனவிலா வித்துள மயர்வான். (௫௨)

கறுவு கொண்டிடி னுலகெலாங் கவிழ்த்தருள் கொள்ளின்
நிறுவு மாற்றன்மா தவர்நெடுந் தேவர்யா வரையும்
பெறுதல் வல்லயான் பிழைபிற் பிணையுமா செய்தோன்
சிறுவ னேயென நினைதொறுந் தெருமரா நின்றான். (௫௩)

தன்னின் மேம்படு மாற்றலர்ப் பிழைப்பது தகாதால்
அன்னர் தம்மின்மேம் பட்டவ ரருண்மிகுந் துழியும்
கன்னி பாகனர் பேரருட் கடலினிற் றிளைத்து
முன்னி னேற்கிங்க ணிதுவந்து முடிதலி னென்பான். (௫௪)

போது தவ்வெனக் கேண்மையர் தவ்வெனப் புல்லும்
மாதர் தவ்வென மைந்தர்க டவ்வென வானில்
கோதில் சத்திய வுலகந்தவ் வெனவென்றன் கொள்கை
யாதுந் தவ்வென விறுத்தவூழ் நன்றென வினைவான். (௫௫)

பெருமை தக்கபிற் சிறுமைவந் தடுப்பினப் பிறப்பை
வருபி றப்பினு ளொன்றென வைக்கவும் படுமே
ஒருசி ரம்பிரா னுண்கல னுக்குநாட் செல்லல்
முருக னுய்த்ததற் கிடும்பிரை யெனமுன்னிக் கரைவான். (௫௬)

நெடிய மாயனுந் தலையொன்று நிலத்திடை வீழ்த்து
முடிவு பெற்றனன் பன்முறை யிளிவர முயன்றான்
கொடிய பால்வினை போல்வதூஉ மெவர்தமைக் குறுகா
தொடிதல் பெற்றதென் றாழுடை வலியையு நினைப்பான். (௫௭)

கற்றல் கேள்விநன் றுடையவர் தமக்குமூழ் கலக்க
முற்று மேல்வையி லதன்பய னறிவுமுற் றுமல்
செற்று முத்துமீ சன்றிருமிற் றிறத்தையுஞ் சிந்தித்
தற்ற முற்றவ னுற்றவே துவுஞ்சிறி தறிந்தான். (௫௮)

உலக மாக்கிடு முதற்றெழிற் குரியவ னிமைப்பின்
அலகில் காலங்க ளருந்துயர் படும்பிழைப் பிழைத்தால்
புலனி லாதெமைப் போல்பவர் பொழுதெலாம் பிழையே
பலவு மாற்றுவார் பருவருந் துயரென்று பரிவார். (ருகூ)

தீய பாவங்க ளளற்றன்றித் தீர்வுகா ணுதால்
ஆய பல்வகை யளறென்ப வருந்துய ரப்பால்
மேய நான்முகன் வழிபடா வறன்கடை விளிக்கும்
தூய தண்டமுங் கருணையே யன்றுகொ றுறவீர். (சூ0)

ஆர ணன்றுயர்க் கவதியின் றதுகிற்க விப்பால்
பூர ணன்புகர் துமித்தருள் வழங்கிடும் புனித
கார ணன்புவ னங்களை யளிப்பது கருதிச்
சீர ணங்கிய வேங்கடச் சிலம்பினைச் சார்ந்தான். (சூக)

குளிர்மரம் பொங்தாகக் கோட்டுமண் கொளும்வேழம்
தெளிபளிக் கறைநாப்பட் டிகழ்தன துருநோக்கிக்
களிறென வெதிர்பாய்ந்து கதிர்மருப் பிடைபிறலும்
ஒளிர்மணி யிளமதியி னெழுகமிழ் தெனவுகுமால். (சூஉ)

குரங்கிய மலர்ச்சாகைக் கோடம லதிங்கத்திண்
மரங்கொலு மதவேழ மதர்த்தெழு மயக்கத்தால்
உரங்கிள ரரசென்னு துடன்மடங் கலின்மார்பம்
அரங்கொலுங் கூர்ங்கோட்டி னழுத்துபு நிமிர்ந்தோச்சும். (சூங)

தோற்றுதி வள்ளுகிரு மவைதுறு மியதாளும்
கூற்றெனக் கொளல்வாய்த்துக் கொம்மென வெழுவேங்கை
ஏற்றுவன் னுதிக்கோட்டி னிமில்விடை குலைப்பகினைப்
பாற்றுத லில்லையெனப் படர்தெரிப் பனபோலும். (சூச)

குடநிகர் செருத்தற்றிண் கோட்டிள வனமேதி
இடவிய வறைநின்று கன்றினை யினிதூட்டிப்
படர்தர வுகுதீம்பால் பசையறத் துவர்ந்ததனைக்
கடறமர் வாழ்க்கையினர் கணிச்சியின் வெளவுவரால். (சூரு)

மானின முடல்சிந்த வால்வெடித் தெழுசிங்கம்
ஊனிவர் கும்பத்தி னூறுசெய் நெய்த்தோரும்
கானிவர் மதமூன்றுங் கதிர்மணி வரன்றொழுகித்
தேனிவர் வரையெல்லாஞ் சித்திரித் தனபோன்ற. (சுசு)

பாரித்த வெறுமெழருத்துப் பானிற வுளைவயமா
வாரித்த வயிற்குவவு மத்தகத் துகுமணியும்
சீரித்த மணிமருப்புஞ் செற்றுபு சுவையமிழ்தம்
பூரித்த மதிகோடி புணர்ந்தென வொளிவீசும். (சுஎ)

ஆணடி நிழலோம்பி யமர்துயின் மகண்மாவை
ஏணமர் வரைச்சிறுவ ரெயிற்றிய ரெனவண்மிக்
காணுநர் காணுன்கிற் கன்னிய ரெனவியவாப்
பூணுறு பாசத்தாற் பூட்டினர் போதருவார். (சுஅ)

புழுகொடு கத்தூரி புள்ளுவர் பலர்கொண்மார்
ஒழுகிய வரையெங்கு முலம்பிய கரிநாடும்
முழுவலிச் சீயத்தின் முழக்கினுக் குளமஞ்சி
விழுமவை யெளிதாக வெஃகினர் பெயர்த்தெழுவார். (சுகூ)

ஏலமொ டிலவங்க மிளகுபச் சிலைமஞ்சள்
வாலிய கப்பூர மணத்தகுங் குமஞ்சாந்தம்
ஆலிய வகில்வாழை யாசினி முதலாகச்
சாலவின் னவர்விழையுந் தகையன வகையனவே. (எ0)

கீற்றுவெண் மதிக்கோடு கெழுமலிற் றொடைகீறித்
தேற்றுளி யுகுவதனைத் தீம்புனற் சுனைக்கெண்டை
ஏற்றுண வாயணரி யிருப்பன மறைமொழிவாய்
தோற்றினர் புனலமுந்துந் தூத்தவர் நிலைகாட்டும். (எக)

சிலையென நனிவாங்கிச் செற்றிய நென்மிசையாக்
கொலைபுரி மதவேழங் கொம்மென விடுவேழம்
அலைபுரி தூண்டிலென வையென நிமிர்ந்தோங்கி
நிலைபுரி வாளியெனச் செந்நிலை நின்றிடுமே. (எஉ)

அடிவரைத் தடமார்ப மருவிக ளகழ்ந்தாங்குச்
சுடர்விடு வயிரங்கள் சுழித்தெழுந் திருபாலும்
வடிபெருங் குலையென்ன வார்த்திசை யெழுப்பிப்போய்
இடவிய பணைமருதத் திளம்பயிர் வளர்ப்பனவே. (எ௩)

மல்லிகை கொடிமுல்லை மாதவி சூதாளம்
பல்லிணர் மந்தாரம் பாதிரி புன்னாகம்
மெல்லிதழ் மலர்ப்பிண்டி வேங்கைசண் பகவாசத்
தல்லுறழ் குழலாரி னருவரை நிகராமால். (எ௪)

நிறைநிகர் கோங்கங்காய் நெட்டணி லிலவங்காய்ப்
பறைதரு பஞ்சோடும் பன்மயி லுகுபீலி
உறைமது மலர்மயங்கி யொண்டுகள் விரவிமணை
அறையென வறைபலவு மமரருள் ளழுமுடற்றும். (எ௫)

குவட்டுமத் தகத்தோட்டி குளிர்பிறை கொளவாங்கண்
உவட்டெடுத் தொழுகருவி யொழுகுகை யறைபுளகம்
கவட்டணி கொடிநிரைநீள் கதலிநெட் டிலைசெவிபோர்
சவட்டர சிபமென்னத் தகுவதத் திருமலையே. (எ௬)

இத்தகு வளஞ்சால் வெற்பை யெய்திய குமரப் புத்தேள்
எத்தகு தொழிற்குந் தானே யிறையெனுந் தன்மை தேறிப்
பித்துறு முலக முய்யப் பெருகிய கருணை யோடும்
உத்தமச் சூழ னுடி யொளிர்மணிக் கோயில் கொண்டான். ()

கதிர்மணிக் குலங்கால் யாத்துக் கண்கவர் வனப்பு வாய்ந்த
பிதிரொளித் தவிசி னுச்சிப் பெருந்தவ முனிவர் தேவர்
அதிர்கழல் வேந்தன் மாயோ னடற்கணம் வீரர் போற்ற
முதிரொளி யெறிப்ப வைகி முதற்றொழி றொடங்கி னனே. ()

ஆக்கிய படைப்புக் கேற்ப வளித்திட வல்லா னென்று
பூக்கமழ் துளவத் தாரான் புரத்தலுந் தந்தை செல்வம்
பாக்கிய மனைய மைந்தர் பாலதாய் முடியு மாற்றால்
தாக்குருத் திரனர் செய்யுந் தனித்தொழி லோடுஞ் செய்தான்.

இந்திரற் கரசு மன்றே யிற்றதா லிவ்வா றெங்கோன்
முந்திய படைப்புக் காப்பு முருக்கலோ டுஞற்றி நீதி
தந்துயிர் மறைப்பி னீக்கித் தனியருளூறுத்தா நிற்ப
வந்துவந் தொழிந்த தேவர் வருடங்கள் பலவு மாதோ. (அ0)

எண்குணந் தனக்கே யன்றி யில்லாதா யெங்கு நின்ற
ஒண்குணப் பொருளே யான வுத்தமக் குமரப் புத்தேள்
நண்குணத் தவர்தங் கோளு நயக்குமே யென்ன லாங்கும்
வண்குணத் தவனே பேற்றின் வயக்குமா லவர்க்கொன் றின்றே.

முற்றிய செல்வ நல்கு முதல்வர்பாற் றருக்கி னன்றே
சுற்றமு மினமுந் தானுந் துறப்பதற் கைய மில்லை
கற்றையஞ் சடிலத் தேவாங் கந்தனை யிகந்த வேதன்
மற்றவ ரோடுஞ் செய்கை மறுத்தினை திருந்த வாற்றால். ()

பற்றிக றனக்கொன் றின்றிப் பணிபுரி யடியார்க் கான
பற்றிக றழுவி நீக்கும் பராபரக் கடவுட் செவ்வேள்
முற்றுமத் தொழிலிற் பட்ட மூதுயிர் பெற்ற பேற்றை
இற்றெனக் கிளக்க லாமே யெஃகறி வுடையோர்க் கேனும். ()

கண்டவர் பிறவி மாய்க்குங் கமண்டல மக்க மாலை
கொண்டிரு கரத்துச் சார்வோர் கொடும்பய மொதுக்கி நல்க
ஒண்டொடிக் கமலச் செங்கை யோரிரண் டமைத்தவ் வாற்றின்
விண்டலர் கடப்பந் தாரான் வீற்றிருந் தருளு நாளில். (அச)

பொறிவரிச் சுரும்பு மூசாப் பொலந்தொடை யமரர் விண்ணின்
நெறியுளி செங்கோ லோச்சு நெடுந்தகை யுலக முண்ட
வெறிகமழ் துளபத் தொங்கல் விண்டுமா தவர்கள் யாரும்
செறிகதி ரிமைப்ப வீசுந் தெள்ளொளிக் கயிலை சார்ந்தார். (அரு)

வாயிலி னந்தி பாதம் வணங்கினர் விடைகொண் டேகிப்
பாயின பரும வல்குற் பைந்தொடி யோடு வைகும்
ஆயிர நாமத் தண்ண லடிமல ரன்பிற் றாழ்ந்து
மேயின துதிகள் செய்து விரிகரங் குவித்து நின்றார். (அசு)

கவலைநெஞ் சலைப்ப நின்ற கடவுளர் தம்மைச் செந்தேன்
துவலைசெய் கொன்றை மாலைச் சுந்தர னருளி னோக்கி
நவிலுதிர் வரவை யென்ன நவிற்றவஞ் சதும்பா மென்றார்
சவலையீ ரெம்மு னஞ்சல் சாற்றுதி ரென்னச் சொல்வார். (அஎ)

இடும்பையங் கடலுட் டாழ்ந்த வெங்களை யெடுக்கத் தோன்றும்
கடம்பனை யிளைய னாகக் கருதிமென் கமலத் தோன்றல்
மடம்படு பேதை நீரால் வணங்கில னீங்குப் போந்து
குடம்பையு ளலண்டு போலக் கோட்படும் வினையன் மீண்டான்.

ஆன்வழிக் கொள்ளும் வேத னவன்றனைப் பற்றி வல்லே
ஈன்வரு கென்ன வீர னெதிருய்ப்ப மறையி னாதி
ஊன்வளர் பிரண வத்தி னுறுபொருள் வினவி மொத்தித்
தேன்வழி மழலைத் தீஞ்சொற் செம்மல்வன் சிறையி லிட்டு. ()

ஆங்கவன் படைப்பி னோடு மடிகளெம் பாங்கர் வைத்த
ஓங்கிய பணியுந் தானே யுஞற்றிவேங் கடத்தில் வைகும்
ஈங்கிதன் பொருட்டு நின்னை யெய்தினே மென்று போற்றப்
பூங்குழ லுமையை நோக்கிப் பூரண னவர்க்குச் சாற்றும். (கூO)

செம்மைய ஞான சத்தித் திருவுருக் கொண்ட செம்மல்
எம்மின்வே றல்லன் யாமு மவனின்வே றல்லேங் கண்டீர்
அம்மழ வடிவி னன்பா லன்புசெய் தவர்பி ழைத்தோர்
நம்மடித் தொண்டு செய்தோர் நவைபடப் பிழைத்தோ ராவர்.

மிக்கவப் பிழையுட் பட்ட வேதனுக் குறுத்த தண்டம்
தக்கதே யெவ்வா றன்னோன் றனைச்சிறை விடுவித் திட்டல்
தொக்குவந் தடுத்திர் நீயிர் சொல்லுமி னென்னச் செந்தேன்
நக்கலர் கொன்றை யான்மு னடுங்கிய வுளத்திற் சொல்வார். ()

பண்டிகந் திருளிற் பட்ட படர்பெரும் பிழையை நீயே
கண்டொரு செய்லு மில்லாக் காலத்துக் கருணை வைத்துக்
கொண்டிடும் பருவ நோக்கிக் கோணைமெய் யருளிற் றந்த
அண்டனிப் பிழையுள் வையா தளிப்பதின் றரிது போலும். ()

அவ்வயிற் சேறு மாயி னடர்க்குமென் றஞ்சு கின்றேம்
இவ்வயிற் சார்வு மஞ்சி யிருந்தன மின்று காறும்
ஒவ்வரும் பொருளே நீப்பி னுயங்குவே மன்ற வன்றி
எவ்வயிற் சேறு மெந்தா யிரங்குகென் றிரந்து தாழ்ந்தார். ()

தாழ்ந்தவர் வறிய ராகாத் தன்மையன் கருணை கூர்ந்து
போழ்ந்தறுந் துயரந் தீர்மி னெனவருள் புரிந்து பொற்றூர்
ஊழ்ந்துக வமரர்த் தாக்கி யொளிர்ந்தவேத் திரத்திண் கையின்
வாழ்ந்திடுங் காவ லாணை வருகென வழைத்துக் கூறும். (கூரு)

பொலங்குவட் டருவி தத்திப் பொன்மணி வரன்றி வீழ்ந்து
நிலங்கிழித் தொழுகி யோடி நிமிரும்வேங் கடத்தை யண்மி
அலங்கலங் கடப்பந் தாரா னடிமல ரன்பிற் றாழ்ந்து
நலங்கிளர் குடந்த முற்று நயத்தகு துதிக ளார்த்தி. (கூசு)

உருவம்வே றன்றி யைந்து முகனறு முகனென் றோதும்
திருவுரு விரண்டன் மாட்டுஞ் சிவமெனும் யாமே மன்ற
பொருவிலா ருயிராய் நிற்பேம் பொலிந்தவிவ் வுருவி னின்றும்
தருவர மவண தாங்குத் தருவர மிவண தாமே. (கூஎ)

மாதவன் முதலோர் வேண்ட மலரவன் சிறையைச் சீக்கும்
ஏதமில் வரமீண் டாயிற் றிவ்வர மவண தன்றே
போதனைச் சிறையை நீக்கிப் புகுதக வீண்டென் றெம்மால்
ஆதரு மின்றீஞ் சொல்லா வறைமதி மேன்மை யோடும். (கூஅ)

பைத்தபூஞ் சேக்கை மேலான் படர்பெருஞ் சிறையைச் சீத்து
வித்தக னிங்கு மேவு மவனொடு மேக வென்றான்
அத்தனவ் வருண்மேற் றாங்கி யருணந்தி தேவன் வல்லே
தொத்தலர் குளிர்பூஞ் சோலை சூழ்ந்தவேங் கடத்தைச் சார்ந்
[தான்.

எட்டுறுப் பானு மைந்த ஞனுமங் கெதிரே வீழ்ந்து
மட்டலர்க் கமல மேய்க்கு மலரடி பழிச்சும் வாயான்
மொட்டுறு கமலம் வெல்ல முகிழ்துணைக் கரத்தாற் சேர்ந்து
நெட்டுட றனுவிற் கோட்டி நின்றிறை யருளீ தென்றான். (க00)

அமலனு ரருளிற் றெல்லா மங்ஙனங் கிளத்த லோடும்
கமலநான் முகத்தி னனைக் காவலிற் பெயர்ப்ப வேவிக்
குமரவேள் கயிலை யண்மிக் கோயிலைக் குறுகா நின்றான்
விமலனார்க் குணர்த்தி னனல் விரைந்துமுன் சென்று நந்தி. ()

அங்ஙன மணுக நண்ணி யடிபிணை வணங்க லோடும்
இங்ஙனம் வருத லென்னு வெடுத்தனைத் துச்சி மோந்திட்
டுங்ஙன மிருவிப் பின்ன ருவனுடைப் பெருமை தன்னை
எங்ஙன முலகந் தெள்ளு மங்ஙனந் தெளிப்ப வெண்ணி. (கOஉ)

முரிதிரை சுருட்டுந் தெண்ணீர் முழங்கிவின் ணிழியக் கண்டு
புரிசடைக் கரந்த பெம்மான் புன்னகை முகத்தி னோடும்
எரியகைந் திலங்கும் வைவே லிருளனை யடுக்கஞ் சூழ்ந்த
வரைபக விடுக்கும் வென்றி மைந்தனை நோக்கிக் கூறும். (கOங)

அறிவினிற் பெரிய நீரா ரறிந்தரும் பிழைகள் செய்யார்
அறிவினிற் சிறிய நீரா ரறிந்தரி யாமை யானும்
செறிபிழை யிழைப்ப வவ்வத் திறத்தின துண்மை நாடிச்
சிறுமையி னீங்கி னோர்கள் செயிர்த்துள வயிரங் கொள்ளார்.

பேதைமைப் பாலி னுதல் பெருங்கிழ மையினு னுதல்
மேதக நட்டோர் மாட்டும் விரவிடும் பிழைக ளெல்லாம்
காதுதற் பால வல்ல காதிடிற் கண்ணி னேடி
நோதக வோச்சி மெல்ல நோன்றவே யெறிகு வாரால். (கOரு)

பூவணைக் கிழவன் சான்ற புலனகத் தின்மை யாலே
ஓவிய வணக்கத் தோடு மொய்யென நம்பா லுற்றான்
மேவிய பிழையு மொன்றே விளித்தனை யுணர்த்திப் பின்னும்
தாவிய வணக்க மன்றே தன்னமே பெரிதாக் கொண்டு. (கOசு)

துண்டமும் வாயுங் காதுந் துணைக்கணுஞ் சோரி தூங்க
அண்டமும் பொடிக்கு மாற்ற லருங்கணம் புடைப்ப வேவிக்
கண்டக நிரைத்தா லன்ன கடும்பர னிரந்த கோட்டம்
முண்டகத் தவனைப் பன்னுண் முழுத்துய ருழப்ப வைத்தி. ()

பெருந்தவ முழந்து நம்பாற் பெற்றிடுந் தொழிலு நீயே
திருந்துறச் செய்தி நன்மை தீமைகண் டருளிக் காத
இருந்தனம் யாமே யன்றி யிடர்துமித் தின்ப மேய்ப்ப
வருந்திய தேவர்க் கென்றே வந்தனை நினக்கி தாமே. (௧0௮)

என்றுளக் குப்பயம்வைத் தெம்பிரா னருளலும்
நன்றெனக் குமரனு நகைமுகத் துரைசெய்வான்
அற்றினர்க் காலமா யண்மினர்க் கமுதமாம்
வென்றியங் கழலினுய் விரகிலா னென்றனை. (௧0௯)

விரகிலான் பிரணவ மெய்ப்பொரு ளோர்கிலான்
பிரணவப் பொருளிலான் பிறழ்தரா துலகெலாம்
வரனுடைச் சிருட்டியின் வயக்குவா னலனரை
அரவினு யெங்ஙன மளித்தனை யென்றனன். (௧௧0)

மைந்தநீ யதன்பொருள் வல்லையே லுரையென
முந்துமெய் பொருள்களு முறையன்றி யருள்செயா
எந்தையப் பொருள்பொழு திடமறிந் தியல்புளித்
தந்திடத் தக்கதன் றேயெனச் சாற்றினன். (௧௧௧)

வாய்மையே கூறினை மாசிமா மகமிதோ
மேயதா னீயுளம் விழைதகப் பயிலிடம்
ஆயசீர்க் கணிகவெற் பமைந்துளந் தகப்பொருட்
கேயுமா றேற்குது மேகுது மவ்வயின். (௧௧௨)

வந்தனை யோதென வானவ ரிந்திரன்
பைந்துழாய்த் தொடையினன் படர்கணந் தொடர்தர
இந்துவி னிமிழ்கதி ரிரசதப் புரிபொருஉம்
செந்துவர்ச் சடைமுடிச் செம்மலங் கண்மினன். (௧௧௩)

வளமலைச் சாரலின் வடகிழக் கெல்லையின்
இளமதிச் சடையவிழ்த் திம்பரிற் றூழ்த்துபு
களமிகுப் போரெனக் கருதருந் தியானமோ
டுளமலி தவமொரு கணிகமுற் றனரோ. (௧௧௪)

வழிபடுங் கடவுளோன் றின்மைபின் வடநிழல்
வழிபடு வோரெலாம் வடதிசை முகமுற
வழிபடுங் கடவுளாய் வதிந்தவ னங்ஙனம்
வழிபடக் கந்தனை மதித்தவ ணிருத்தலும். (ககரு)

என்றுமத் தாணியா வினிதுவீற் றிருக்குமக்
குன்றிடைப் பலரொடுங் கொம்மெனத் தோன்றுபு
மன்றலங் கொன்றையான் வதிந்தவச் சூழலில்
தென்றிசை யெல்லையைச் சேர்ந்தெதிர் வைகினன். (ககசு)

எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை யதனொடுந் தாழ்வபின்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலா மொழிதரக் கேட்டனன். ()

தனக்குத்தா னேமக னாகிய தத்துவன்
தனக்குத்தா னேயொரு தாவருங் குருவுமாய்த்
தனக்குத்தா னேயருட் டத்துவங் கேட்டலும்
தனக்குத்தா னிகரினன் றழங்கிநின் றாடினான். (ககஅ)

சாருமெவ் வுயிருந் தன்வய மாக்கித்
தளர்க்குமா ணவப்பகை யோடும்
சூரனை முதலாந் துளக்கரும் பகையுந்
துலங்குமிப் பிரணவப் பொருளாம்
வீரனி லின்றே விளிந்ததென் றுளத்து
விரைந்தெழும் வீரத்தின் குறிப்பின்
ஆரமர் முடியோ னார்த்தலி னாய
தவ்விடம் வீராட்ட காசம். (ககசு)

மரணமும் பிறப்புங் கடந்தபே ரின்பம்
வழங்குமப் பெரும்பெய ரிறைக்குப்
பிரணவப் பொருளைக் கொடுத்தகா ரணத்தாற்
பிரணவ வுருத்தநன் னகராம்
இரணவல் லவுணக் கிளையெலா முருக்க
விலங்கருட் டிருவுருத் தாங்கி
அரணமா யமரர்ப் புரப்பவ னென்று
மமர்ந்தரு டணிகைமா நகரம். (க௨0)

பணிகிள ராரப் பண்ணவன் முருகற்
படர்ந்தருந் தவத்தினை யாங்குக்
கணிகமே புரிந்து கருத்துமுற் றுறலாற்
கணிகவெற் பெனப்பெயர் விளங்கும்
துணிகதி ரிமைக்கு நவமணி யடுக்கஞ்
சூழ்ந்தவச் சிலம்புமற் றின்றும்
அணிகிளர் தவங்க ளாதியோர் கணிக
மாற்றினு மரும்பய னடைவார். (௧௨௧)

மூலமீ றிகந்து மூலமே யில்லா
மூலகா ரணப்பொரு டனக்கு
மூலமா யிருந்து நால்வகைப் பொருட்கு
மூலமா கியவரு மறையின்
மூலவான் மொழிக்குப் பொருட்செறி வெவர்க்கு
மூலமா னவன்விரித் தமையான்
மூலவே தண்ட மெனப்படுங் குறவர்
மூலந்தே ருருவரைப் பறம்பு. (௧௨௨)

ஒருகையி லக்க மணிவட மொன்றி
லொளிர்மணிக் கமண்டல மற்றை
இருகர மபய வரதமா யங்க
ணிருந்ததே சிகனையன் றுடங்கு
மருவினர் போற்றி நால்வகைப் பொருளு
மல்கலி னுமப் பெயர்த்தாம்
பொருவிலச் சயில மின்றுநாற் பொருளின்
புணர்ச்சிக்கு மூலமாய்ப் பொலியும். (௧௨௩)

உருவினெஞ் ஞான்று மிளமையிற் றளரா
வுத்தம னிறைமையெண் குணத்துப்
பொருளினஞ் ஞான்று முதுமையிற் றளராப்
பொலிவுகண் டிமையவர் திருமால்
தருநிழ லரசன் மாதவ ரெல்லாஞ்
சாமிநா தப்பெயர் கிளந்து
மருவிய மகிழ்ச்சி திளைத்தன ரப்பேர்
வழங்குமா லன்றுதொட் டென்றும். (௧௨௪)

ஆர்த்துநின் றுடும் வீராட்ட காசத்
தடிகள்பின் பாருயிர் புரப்பான்
சீர்த்தமெய் யுருவே சிவலிங்க வுருவாய்த்
திகழவீற் றிருந்தனன் மாதோ

வார்த்தசெஞ் சடைதாழ் திருவடை யாளம்
வயங்குமச் சிவலிங்க வடிவைப்
பார்த்தவர் பணிந்தோர் பழிச்சின ரெய்தும்
பயனெவர் பகர்தரற் பாலார். (கஉரு)

அத்தகு வரைப்பின் வீராட்ட காசத்
தடிகளா சான்வழி பாட்டிற்
கொத்தநற் றீர்த்த மகழ்ந்துவார் சடிலத்
தொண்புனல் பாய்த்தினர் நிறைத்து
வைத்தன ரதனுற் சிவகங்கை நாமம்
வழங்குமத் திருத்தநீர் படிந்தோர்
பொத்துநோய் தீரா தனவெலாந் தீர்ந்து
போகமும் வீடுமெய் துவரால். (கஉசு)

அன்றுடங் கணைந்தோர் படிந்துவேற் கரத்தா
சாளுெடு வீராட்ட காசத்
தொன்றுநா யகனைப் பணிந்தெவற் றுனு
மொழிப்பரு முடலுயிர்ப் பிணிகள்
மன்றநீத் தெண்ணும் வரங்கள்பெற் றுய்ந்தார்
மதித்துறி னளவினிற் படாரால்
பின்றையு மதிற்றோய்ந் திற்றைநாள் காறும்
பெரும்பிணி யிரித்தவர் மாதே. (கஉள)

உட்டுகண் முழுதும் பரிந்துமெய்ப் பொருளி
னெருக்கிய வறிவினீர் தழங்கி
நட்டமின் றியற்றும் வீராட்ட காச
நாதனுர் சிறப்பெடுத் துரைத்தாம்
சட்டமூ வலகும் போற்றவீற் றிருக்குஞ்
சாமிநா தனுமகிழ் சிறந்தாங்
கொட்டுரு வுடையோ னருட்குறி நிறுவி
யியற்றுபூ சனைத்திறங் கிளப்பாம். (கஉஅ)

வீராட்டகாசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ருசுக.

# குமாரேசப் படலம்

---

யாவருக்கு மெப்பொருட்கு மின்பமெய்த நின்றவர்
மூவருக்கு மின்புறுத்து மூவிருதி றத்தரும்
தாவிலின்ப மெய்தநின்ற தத்துவத்த னென்பவால்
ஓவிலின்ப வுருவமான வொளிர்குமார வீசனே. (௧)

காய மல்கமர ராண்மைதபு காரி யுதரம்
போயி ருந்துபுற னேகுபுக ரென்ன முகிறோய்
வேயி னின்றமணி விண்டுவெளி வந்து திவளும்
மீயு யர்ந்தகனி காசலவி சாக னொருநாள். (௨)

கான ரும்பியக டுக்கையுமெ ருக்கு மலையா
வான வர்க்கரிய நாடகந விற்று வரதன்
ஞான சத்தியினை நல்கியகு றித்த விழைவின்
ஆன பத்திமைய கத்தெழவ ருச்ச னைசெய்வான். (௩)

வயிர விட்டிக ணிரைத்தொழுக வைத்த துபொரப்
பயில்செ ழுங்கதிர் கொழுந்துகொடு பம்பி நிமிரும்
கபிலை வெற்பினமர் கங்கையைவ ரக்க ருதினன்
வியனெ டுங்கிரி யடிக்கணெதிர் மேய ததுவே. (௪)

வெள்ளி யங்கிரியின் மீதமர்தி ருத்த மணிகள்
தெள்ளொ ளிக்கதிர்பி விற்றுகணி கச்சி லையடி
நள்ளு கின்றதுந லத்தகயி லைக்கி றைதொழூஉம்
வள்ளல் வெற்பெனம தித்தடிவ ணக்க நிகரும். (௫)

பன்ம ணித்திரள்கொ ழித்துமலர் பம்பி யினவண்
டன்ன நேமியும கன்றிலும ணிந்தொ ளிர்தலான்
மன்ன டுக்கன்மகள் வண்கடிந டத்த ணிதரும்
பின்ன லங்குமணி மேகலைவி ழைந்த ததுவே. (௬)

ஆம்ப லூற்பலம டுக்கிதழ்ந றுங்க மலமும்
தாம்ப யின்றனத யங்கியிரு போது மலரா
யாம்பி றங்குவர மீகெனவெ ணைத்து லகமும்
ஓம்பி யாக்குமுரு கற்பணிய வுற்ற னபொரூஉம். (எ)

இருசு டர்க்கிரண மெய்தலறி யாதி ரசதப்
பெருவ ரைக்கணொரு பெற்றியினி ருந்த மலர்கள்
இருதி றத்தனவி ருப்பனகள் கன்னி மைகழீஇ
மருவு மன்பரைம ணந்துபிரி மங்கை யர்பொரூஉம். (அ)

ஓதி மம்புடையி ருப்பவொளிர் செங்க மலம்வீழ்
மாதர் வண்டுபொடி மல்கியப ராச ரன்வளர்
வேத மந்திர விழுத்தழல்வி ரைந்து குமவன்
தாதை யர்க்கொலைபு ரிந்ததகு வோர்கிளைபொரூஉம். (கூ)

மேல வாந்தலைய கீழ்த்தலைய கீழ்த்த லையன
மேல வாகுகிழ ரேற்றுவிரி நீர்வி னையினல்
மேல வாம்பொருள்கி ழக்கனகி ழக்கி டுபொருள்
மேல வாஞ்செய றெளிக்குமொரு சான்று விழையும். (கO)

காத ரந்தபவி ளங்குகணி காச லகிழல்
போத வுட்பொதிதி ருத்தமொளி பொங்கு வரையை
மாத வத்துறுதி யானவழி யான்ம னமிசை
ஆத ரத்தமர வைத்தமைவு பெற்ற துறழும். (கக)

ஓங்கு தூவிகைய மாடகிழல் செய்ய வுதன்மேல்
பாங்கர் நீள்பொழின்ம துப்புனல்ப னிப்ப தவைசேர்
தீங்கு தீர்த்திடுப திட்டைதெளி யாடி யினிடைத்
தாங்கி வார்புனல்பொ ழிந்துபுரி தன்மை கிகரும். (கஉ)

கின்றி ருந்துகிடை யுற்றுகிகழ் வேள்வி யினிடை
மன்ற பன்முறைவ ருந்துவது தீர முழுகி
ஒன்றி ருந்தவமு ஞற்றுபல வங்கி யுறழும்
துன்று தூவிகளி னேற்றுசுடர் தோற்று வனவே. (கங)

தானிருக்குந் திருவெல்லை தனக்குவட கீழ்ஞாங்கர்
ஆனிருக்கை கொளவாவச் சகாயனையன் பொடுமிருத்தி
வானிருக்கு மளப்பரிய வழிபாடு புரிந்தருவித்
தேனிருக்கு மலர்க்கடப்பந் தெரியலான் மகிழ்வித்தான். (உஅ)

பிணிகிழங்கி னெடும்பெயர்த்துப் பெயராத நிலையருளும்
கணிகைவரை யடிச்சாரற் கயிலாய கங்கைமுகந்
தணிகிளர்ப்ப னிறைநிரப்பி யல்லனவும் பலர்புரியத்
தணிவிறன திருக்கைவட சாரமைத்த வாலயத்துள். (உகூ)

கருவிகளு மறியாமை கதுவவரு கேவலமும்
ஒருவிபெழு பரஞானத் துளச்செயலைத் தபத்தோற்றும்
பெருகுபர மானந்தப் பெருநிலைமைப் பொருளேயாம்
முருகனருட் குறிப்பதிட்டை முறையியற்றிப் பூசிப்பான். (௩0)

குருமணியி னொளிப்பிழம்பு கொழுந்தோடிப் பல்கணியாய்
மருவுகத வெனத்தோற்று மணிவாயி லிருபுடையும்
பொருவில்பர மபரமெனப் புகன்ஞான மிரண்டனையும்
அருணிலையுந் திருவெழுத்தி னருச்சனைசெய் தமைத்திட்டான்.

பூதமுதற் கரணமெலாம் புறமாக வகம்புறமற்
றுதரவி னிடைமூழ்கி யமைத்தபொரு ளவையனைத்தும்
வேதமுடி கடந்தொளிரும் விழுப்பொருளி னிறைவாக்கித்
தீதனுக்கு மஞ்செழுத்துஞ் செயிர்விரவா முறைமாறி. (௩௨)

பாதமுக முடிக்குதவு பாத்தியமா திகளெல்லாம்
பேதமறு மருள்கடந்த பேரெழுத்தி னினிதமைத்தங்
காதனமு மூர்த்தியுமூ லமுமந்தத் திருவெழுத்தால்
ஏதமற வுயிரெல்லா மிணர்மலர்கொண் டருச்சித்தான். (௩௩)

அளியாகி யொளியாகி வெளியாகி யளவாகும்
களியாத பொருட்கலப்பிற் கதித்தசுகத் தப்புறமாய்
விளியாத சுகம்பெருக்கி விளங்குதிரு வுருக்குளிர்ப்பத்
தெளியாமுந் தயிலமுதற் செறிவனைத்து மாட்டினன். (௩௪)

விழைதகுமென் கலிங்கத்தான் மெய்யீரந் தபப்புலர்த்தித்
தழையொளிநாண் கோவணம்விற் றதைகதிர்ப்பூம் பட்டணிந்து
குழைகலவைச் சேறெங்குங் கொட்டிமணத் துகளட்டி
மழைதவழ்வ தெனவிரைகண் மடுத்தபுகை தவழ்வித்தான். ()

குண்டலமுங் கதிர்த்தோடுங் குருக்கிளர்பொன் மணிமுடியும்
கண்டசர மங்கதமுங் காழ்பணியு மலர்த்தொடையும்
ஒண்டொடியு மோதிரமு மொளிருதர பந்தனமும்
மண்டுகுர னூபுரமு மற்றுமெடுத் தலங்கரித்தான். (ரு௬)

பாறயிர்நெய் புளிகடுகு பயறுசருக் கரைதிலகம்
வேறுவிர வியவல்சி வெற்றன்னங் குய்க்கருணை
ஊறுசுவைச் சிற்றுண்டி யொண்வறையல் கனிபுனலும்
தேறுமனு மொழிந்தமுது செய்தருள மகிழ்சிறந்தான். (ரு௭)

பூசுபுனல் கரத்தேந்திப் பாத்தியமா
சமனமருக் கியம்பூ ரித்து
வாசமலி பாகடையின் சுருணீட்டி
மணித்தூபந் தீபம் வட்டித்
தாசறுபஃ றீபவா ராதனையும்
புரிந்தாடி யாதி யுய்த்து
நேசமலி புகழ்பரப்பி வலம்வந்து
நிலத்திறைஞ்சி நின்று ணங்கு. (ரு௮)

வாளாங்கு வைகுறினுந் தாமேவர்
தருள்புரியும் வாய்மை மைந்தன்
தாளாண்மைத் தலைநின்ற வழிபாட்டிற்
றரிப்பரே தனயன் காண
வேளாண்மை வித்தகனு ரவணணிந்த
வணிமுழுதும் விளங்க விண்ணோர்
நாளார்ந்த மலர்தூவக் கணநெருங்க
நயந்தெதிரே நண்ணி னரால். (ரு௯)

தூவி வெண்குருகு தோற்றுகுர னூபு ரமென
மேவ வாளைநெடு மீனம்வெடி போய்வி ழுவன
காவி நேர்விழிய கூத்தியர்க திக்த சதியில்
தாவி யந்தரம றிந்துவரு தன்மை புரையும். (கச)

பெருகிய வித்தகு வளத்திற் பெட்புறீஇக்
கருவினை தபுங்கயி லாய கங்கையை
வருகென வழைத்தவன் மறுவின் மாயையின்
பொருவில்பல் பொருள்களும் பூத்திட் டானரோ. (கரு)

இலக்கண முழுதமை யிலிங்கம் வேதிகை
அலக்கணந் தித்தவர் விழையு மாலயம்
மலக்கணம் விடைகொண்மண் டபங்கள் கோபுர
நலக்கண மணிகொடு நவம தாக்கினன். (கசு)

பித்திகை யெங்கணும் பெருகு மான்மதம்
மெத்திய சந்தன விழுது கொட்டுபு
பைத்தெழு விரைப்புகை பாய்த்தி யோசனை
பொத்திய மணங்குலாம் பொற்பி யற்றினன். (கஎ)

தூண்டொறும் வாருறை சேர்த்தித் தூங்குகாய்
மாண்டமென் கதலிவார் கரும்பு பூகதம்
ஆண்டுறுத் தும்பரி னவிர்பொற் பட்டினல்
காண்டகு விதானங்கள் கற்பித் திட்டனன். (கஅ)

ஆடகத் தகடுக ளடுத்த கீழ்நிலம்
பாடமை மணித்துகட் பசும்பொற் சுண்ணநீர்
நாடரு விரைகலந் தொழுக்கி நன்மணி
தோடவிழ் மலரறு கரிசி தூவினன். (கக)

பொன்னரி மாலையும் போதிற் றொங்கலும்
மின்னகு பன்மணி விராய கோவையும்
துன்னிய கனிகளுந் துலங்கு மாடியும்
என்னவு மணிபெற வெங்குந் தூக்கினன். (உ0)

தோரண மெங்கணுந் தொடரிப் பல்கொடி
காரண விசும்பெலாங் கஞற்றிப் பாலிகை
பூரண கும்பங்கள் பொலிந்த வேதிகை
ஏரண வியவிளக் கினமு மீட்டினான். (உக)

வட்டகை வலம்புரி வளைபொற் பாசனம்
கொட்டொலிப் படலிகை கொடிய கஞ்சுடர்
இட்டசைப் பனவெழி லாடி யாதியா
முட்டற யாவையு முறையு யிர்த்தனன். (உஉ)

எண்ணெயா மலகமா மஞ்சள் பாறயிர்
தண்ணெய்தேன் வேழத்தின் சாறங் கைந்தென
நண்ணமிர் திரதங்க ளுளி கேரநீர்
அண்ணலங் கனியரு விரையு மார்த்தினன். (உ௩)

தேசவிர் கலைகளுந் தெய்வ மாலையும்
பூசமை சாந்தமும் புகையுஞ் சுண்ணமும்
காசவிர் கலன்களுங் கனிந்த பல்சுவை
நேசமல் கமிர்தமு நிரைத்திட் டானரோ. (உச)

சூருயிர் குடிப்பவன் சுத்த மாயையின்
ஆரவிவ் வகையெலா மமைத்த பின்மணி
வீரரு மிலக்கரும் விழுமம் வீழ்த்துயர்
பாரிடத் தலைவரும் பரிப்ப வேவினான். (உரு)

கிள்ளவிழ்பன் மலர்களுளுங் கயிலாய கங்கையெனும்
தெள்ளுதிரை மணிகொழிக்குந் திருத்தநீர் புகுந்தாடி
ஒள்ளியவே ருடையுடுத்திட் டொளிர்பூதி முழுதணிந்து
வள்ளல்விழிக் கதித்தமணி வடம்பலவுந் தாங்கினான். (உசா)

பல்லியம்பல் கணமியம்பப் பண்ணவர்பல் லாண்டிசைப்ப
மெல்லியல்விண் ணரமகளிர் மின்னினுடங் கினர்நடிப்பச்
சொல்லமிழ்த மிடற்றிசையுஞ் சுடர்மணியாழ் நரப்பிசையும்
கல்லிளகப் பரந்திசைப்பக் கதிர்மணிக்கோ யிலையுடுத்தான். ()

மறுவனும்வீழ்ந் தெழுந்துநின்ற திருமகனை
முகநோக்கி வரமே தென்றார்
முறுவனில வெழக்கனிவாய் முகிழ்விரித்து
முடித்தலைவின் னவர்மே லென்றும்
கொறுகொறுக்கு மவுணருயிர் குடித்திடுநஞ்
ஞானசத்தி கொடுப்ப தென்றான்
அறுகுமலி சடைமுடியா ரதனொடுபல்
வரமளித்தவ் விலிங்கத் தானார். (சய)

இருளனுக்கி யொளிபெருக்கு மவ்விலிங்கம்
குமாரலிங்க மெனும்பேர் பூணும்
மருளிரிக்கு ஞானசத்தி தரித்தலினாற்
கணிகவரை வாழ்க்கை பூண்ட
தருமிகர்த்த குரிசிலுக்கு ஞானசத்தி
தரனென்னச் சாற்று நாமம்
பொருண்மிகுத்த பலபெயரின் மிக்கபெய
ராயங்குப் பொலிந்த தன்றே. (சக)

வெள்ளிவரை யிருத்தலினாற் கயிலாய
கங்கையென விளங்குந் தீர்த்தம்
தெள்ளுபுகழ்க் கணிகவரைக் குமரனைழைத்
தாடிமகிழ் திளைத்து முக்கண்
வள்ளனுக்கு மாட்டுதலாற் குமாரதீர்த்
தப்பெயரின் வயங்கு மப்பேர்
உள்ளினவ ரெழுபவத்திற் காதரமு
மெழுந்திரிய வுருக்கு மாலோ. (சஉ)

கும்பமதி வருமகத்திற் குமரவே
ளினிதாடிக் குழகற் காட்டும்
வம்பவிழ்பூங் கயிலாய கங்கையிடை
யம்மதியின் மகத்திற் சென்று
கம்பமறப் படிந்தாடிக் குமாரலிங்கந்
தொழுவோர்கள் கரிசி னீங்கி
உம்பருக்கு மறிவரிய சிவலோகத்
தென்ஞான்று முறுவர் மாதோ. (சங)

எத்தினத்தா யினுமொருகான் முழுகின்ரேப்
பிணியுமெழு காத மோப்பிப்
புத்தியறி வாயுள்சுசி புகழ்சூழ்ச்சி
வீரம்வலி பொருண்மேம் பாடு
மித்திரர்புத் திரர்மனைவி முதலான
வெறுக்கையெலா மேவி யீற்றில்
கொத்திணெடுங் கந்தலோ கத்தையவ
னுருக்கொண்டு குறுகி வாழ்வார் (சச)

செங்கமல மலரேய்க்கு மொருதிருக்கை
குறங்கமைத்துச் செம்பொன் மேருத்
துங்கவரிச் சிலைக்கடவு ளருண்ஞான
சத்தியொரு தொடிக்கை யேந்திப்
பொங்குமருட் கருணைவிழிக் கடையொழுக
மலர்ந்தமுகப் பொலிவி னேடும்
அங்கணமர் ஞானசத்தி தரனையகத்
துறநினைப்போ ரவனே யாவர். (சரு)

ஐம்பொறியின் வழியொழுகா தவற்றைவியங்
கொண்டறிவின் மயமே யாக்கிக்
கொம்பனையா ளிடத்தரனை வழிபாட்டி
னினிதேத்துங் கொள்கை மிக்கீர்
பம்புகதிர் மதிமோலிப் பரமர்மகிழ்
குமாரலிங்கப் பரிசு சொற்றும்
வம்பவிழ்பூ வணைக்கிழவன் மாதவஞ்செய்
தருள்பெற்ற மரபுஞ் சொல்வாம். (சசு)

குமாரேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — சகரு.

# பிரமன் சிருட்டிபெறு படலம்

ஒன்றாகிப் பலவாகி யுருவாகி யருவாகி
அன்றாகி யாருயிர்கட் காருயிராய் நிறைந்தானும்
பின்றாழுஞ் சடையானும் பிறங்குநுதல் விழியானும்
வென்றாலும் விடையானும் விருத்தபுரி வித்தகனே. (க)

மூரலுஞ் சிறைவண் டினமொய்த் துளரும்
அரவிந் தமமர்ந் தவனா றுமுகன்
விரவுஞ் சிறைவிட் டபின்விண் ணுயர்தன்
பரவும் பதிசென் றுபதிந் தனனால். (உ)

காரா கிருகங் கழிவுற் றபினும்
ஆரா வமுதா யவருட் பரமன்
சீரா ரருளாற் செய்சிருட் டிசெய
வாரா மையினே கைமனத் திலனே. (௩)

அந்தோ விதுநாஞ் செயலாம் வழிமற்
றெந்தோ வெனவெண் ணியசூழ்ச் சியினன்
முந்தா ரணமுந் தெரியா முதல்வன்
தந்தா னவனே தரவல் லவனே. (ச)

தலைவன் சரணஞ் சரணம் புகினம்
உலமந் தபவத் துயரோ டுமிவண்
அலமந் தவருந் துயருந் தவிர
நிலவுந் தொழிலென் றுநினைந் தனனே. (ரு)

உத்தா லகவா ரணியப் பெயருற்
றித்தா ரணிபோற் றவிருந் தபதி
வித்தா ணவமாய்க் கும்விழுத் தவரோ
டத்தா னமகன் றடைவுற் றனனே. (சா)

கரந்து வைகினுங் கற்றவர் தம்புகழ்
நிரந்து தோற்றப் படுவது நேர்மணுள்
பரந்த வேர்ப்பல வின்பழம் யாவர்க்கும்
சுரந்த வாசத்திற் றோற்றுமோர் பாலெலாம். (எ)

உறும்ப லாயிர வண்டமு டம்பெலாம்
பெறும்ப ராபரன் பெற்றிகி கர்ப்புற
நறும்ப லாயிர நன்கனி தூங்கிய
குறும்ப லாவின் குழாமொரு பாலெலாம். (அ)

ஆண வப்பிணி நீங்கவ ரும்பயன்
மாண நல்கரன் மானமந் திக்குலம்
காணு மென்கறி மைக்கறித் தாழ்பறழ்க்
கூணி ருங்கனி யூட்டுமோர் பாலெலாம். (௯)

அருவி தொட்டவ றைக்குழி மாத்தன
கருவி முந்திரி கைப்பழ மீந்தினம்
உருவ வின்மது வோடுகக் கேடின்றிப்
பருவ மன்றிப்ப யப்பவோர் பாலெலாம். (க0)

கால மன்றியுங் குற்றுக்க டவுளர்
பால ளிப்பப் படர்தவத் தாலளி
மேல டாதன போல்விரைச் சண்பகச்
சோலை விண்ணந்து மூவுமோர் பாலெலாம். (கக)

சுனைம லர்க்கணந் துற்றுவ வென்றுதேன்
இனைய வாளைபி டித்திறை கொள்வபோற்
றுனைய வும்பர்த்தொ டுத்தவி ருல்கிழீஇ
நனையு*குக்குர லத்ததோர் பாலெலாம். (கஉ)

வண்டு போய்மலர்க் காந்தளின் மூசுதல்
கண்ட ழற்குட்க விழ்ந்தன வென்றுநீர்
கொண்டு நுண்டுளி தூஉய்ப்பெயர்த் தோகையுட்
கொண்டு மந்திகு னிக்குமோர் பாலெலாம். (கங)

இனிய செய்கையர் யாங்குள ரோவெனத்
துனியில் கேள்வியர் சூழ்ந்தனர் நேடல்போற்
புனித மென்கிழங் காதி புரைகிளீஇத்
தனிவில் வேடர்ச ரிப்பதொர் பாலெலாம். (கச)

தூர்சு மின்கல னும்விரை யுந்துதை
வேசி மாதரின் வேழக்க தலியில்
பூசல் வேழம் புணர்ந்துவி டுந்திறம்
ஆசு மில்பயம் பார்ந்தசொர் பாலெலாம். (கரு)

வீங்கு தோட்குடை வெய்வியங் கோளுறீஇ
ஆங்க ணிற்பத மரவ ணங்கனார்
தாங்கு தீம்புனஞ் சார்புட்கு லந்தப
ஓங்கு முத்தெழ வூழ்க்குமொர் பாலெலாம். (கசு)

மென்மை யாரிடம் வாய்த்துமி குத்துறின்
வன்மை யார்வலி மாய்ப்பது காட்டுமென்
றன்மை யாரரு வித்திரள் சான்றகல்
புன்மை யாகப்பொ ளிந்தொரு பாலெலாம். (கஎ)

கெழுமு பாவங்கிட் டாதுபெ யர்ப்பபோல்
விழும வெள்ளரு வித்திரள் வீழ்வன
இழுமெ னோதையு மந்தரத் தின்னியம்
குழுமு மோதையுங் கூர்க்குமொர் பாலெலாம். (கஅ)

அரம்பு செய்பிணி தீர்வெறி யாட்டயர்
வரம்பிற் றொண்டக வங்கிய வோதையும்
நரம்பி னேழிசை நாவியற் பாடலும்
சுரம்பொற் கென்னத்து தையுமொர் பாலெலாம். (கக)

அற்ப கத்திமை யாரண்மிச் சிந்திய
கற்ப கக்கடிப் போதுங் கலன்களும்
பொற்ப கப்பொழில் கைசெய்தெ னப்பொலி
வெற்ப கத்துவி ளங்குமொர் பாலெலாம். (உ0)

தென்றல் சந்தனஞ் செந்தமி ழென்றிவை
நன்ற ளிப்பந றும்பொதி யந்தழீஇ
நின்ற தாங்கொரு பாலென நீண்டவக்
குன்றெ லாமவை கூர்ந்தன மிக்கரோ. (உக)

இருபு டைக்கணி ருபெருந் தேவரும்
மருவ நாப்பண்ம தலையிற் றுங்கிய
ஒருபெ ரும்பெய ருத்தமன் போன்மெனப்
பொருவின் முத்தலை பூத்ததக் குன்றமே. (உஉ)

இச்சை ஞானந்தொ ழிலிவை மூன்றனோ
டச்ச னின்றனைத் தும்விளைத் தாலென
முச்சி ரத்தொடு நின்றுமு றைமுறை
பொச்ச மில்வளம் பூப்பதக் குன்றமே. (உங)

முத்தொ ழிற்குரி யாரொரு மூவரும்
எய்த்து ருமைபி னிதுறத் தாங்கியோர்
கத்த னுண்டெனக் காட்டுமா தாரமாய்
அத்தி ரிக்குவ டேந்தும டுக்கலே. (உச)

மூன்று மெய்ப்பொருண் மூன்றுமொற் றித்தலிற்
தோன்று மொன்றென வென்றுது ணிப்பபோன்
மூன்றெ னச்சிக ரம்முகிழ்த் தொன்றெனத்
தோன்ற நிற்குமூ லத்தினத் தொல்வரை. (உரு)

ஈண்டுப் போந்தவ ரிம்மைம றுமையும்
மீண்டு றுதமெய் வீடுமு றுபவென்
றீண்டுத் தானரு ளும்பயன் காட்டலும்
மாண்ட தான்மும்ம ணித்தலை யோங்கலே. (உசு)

மூவர் மும்மறை மூவகை யாருயிர்
மூவ கைச்சுடர் மூவுல குந்தொழும்
மூவ ருந்தலை வன்னுரு மூவகைத்
தாவ துந்தெரிக் கும்மவ்வி லங்கலே. (உஎ)

இலைமு கப்பசும் பூண்களி டைபிடைத்
தலைய மைத்தத ணிவரை மார்பகம்
நிலையு மாரநி கர்த்திடும் பல்சுனை
உலைய வீழ்ந்திழிந் தூருமரு வியே. (உஅ)

ஆங்கு நாதன ருண்ட மாடுதம்
ஓங்கு மப்பதி யொண்மைவ ளத்தினுக்
கியாங்கு மொப்பிலை யென்றும திதுளம்
தாங்கு மின்பத்த ருக்கெனத் தக்கதே. (உகூ)

அனாதி யாகிய வண்ணல மர்ந்தவத்
தெனாதுத் தாலகத் தேத்தினை யண்மினன்
மனாதி மம்மர்த்த ணர்தும கிழ்கொள
இனாத தீர்க்குமி ருந்தவ மாற்றினன். (ங0)

வருவைகலின் வாராதெழு வாமான்மணி யிரதத்
தொருசெங்கதி ரமரன்றண வுறினும்வர வொழியா
அருவிப்புனன் முக்காலமு மாடிப்பொடி பூசித்
திருமல்கிய வருள்கண்மணி சிரமாதியி னணியா. (ஙக)

குழகன்றிரு வுருவாங்குறும் பலவுங்குழ கன்மெய்
நிழல்செய்தமர் குற்றாலமு நிமலந்தரு மிறைவன்
அழகொன்றிய சபையுந்தொழு தன்பாலருச் சனையும்
தழையச்சிவ லிங்கத்தினி யற்றித்தவ முறுநாள். (ஙஉ)

வட்டச்சடை யத்தாணியின் மலர்மெல்லணை மேலால்
அட்டுத்தழ லரவங்குடை யாகக்குளிர் மதியம்
விட்டுக்கதிர் விரியப்பயில் வீறுய்த்தருள் விமலன்
மொட்டுக்குவி முலைமாதுடன் முன்னேயெதிர் நின்றான். (ஙங)

கண்டானுடல் கவலைக்கட றுழக்கடி தெழுந்தான்
தண்டாமரை நண்டாதுத யங்குந்தட மார்பம்
மண்டான்படி யத்தண்டென மலர்மெல்லடி வீழ்ந்தான்
கொண்டான்வல மெதிர்நின்றுகை குவியத்துதி புகல்வான். ()

எண்ணுதிகழ் தக்கன்மக மியற்றக்குழு முற்ற
விண்ணோருடல் சிதறுந்தனி வீரன்றனை யிகலி
மண்ணாழ்தர விழிகங்கைம டுத்துத்திறல் சிந்தும்
தண்ணார்மதி மிலைசெஞ்சடைத் தந்தாயடி போற்றி. (ருரு)

கழைவார்சிலை குழையக்கடி மலர்வாளிக ணிமிர
விழைபோர்புரி மதவேளுரு விளியத்தழல் வெந்தீ
உழைநேர்விழி யுமையாள்கர மொளிர்கண்ணிணை கதுவத்
தழைபேரிரு ளிரிகண்ணுமிழ் தலைவாவடி போற்றி. (ருசா)

இன்னற்கட னடுவட்டபடி யெளியேமுறை கேளா
மன்னிக்கிள ரின்பக்கடல் வதிவித்தருள் செவியை
மின்னிக்கிளர் வன்னித்தலை வெதிர்பட்டிற வுலகம்
முன்னிக்கிள ருழைவாய்க்கருண் முதல்வாவடி போற்றி. (ருஎ)

அழல்போலுயிர் முழுதுஞ்சுடு மஞராணவ மொருவக்
குழல்வாய்மொழி யுமைகாணமு கிழ்க்குங்குறு நகையால்
உழலாவுல கொருமூன்றினு முறையும்புர மூன்றும்
தழல்வாய்விழ மறநல்கிய தந்தாயடி போற்றி. (ருஅ)

மருளாதுனை யறியும்வகை மாலாதியெல் லேமும்
ஒருவாதுணர் மறையாகம முதவுந்திரு வாயால்
தெருளாதுல கேழும்பொடி செய்யும்வலி யாளி
வெருளார்தர வுயிருண்டருள் விமலாவடி போற்றி. (ருகூ)

இரந்தாருல கோரேழினு மிவரேயிறை யென்ன
வரந்தானனி யெளிவந்துவ ழங்குங்கர மலரின்
உரந்தாவிய வளியேன்சிர மொன்றெய்யென வாங்கிப்
புரந்தானுடல் சூலத்திடு புனிதாவடி போற்றி. (சா0)

முத்திப்பத மொருமூன்றொடு முழுதுங்கழு திரதம்
செத்துப்பணி யடியார்சிரஞ் சேர்த்தின்பருள் பாதத்
தெத்திக்கினும் விரையாக்கலி யிவர்வித்தம ரியமன்
மைத்துத்திணி யுடல்பொன்றிய வரதாவடி போற்றி. (சாக)

அருள்செய்வன புரிதண்டமு மருளேயெனு முண்மைத்
தெருளொன்றுமு ளத்தானருள் செயவந்தருண் முருகன்
வெருளொன்றிய புரிதண்டமு மருளாகிய மெய்ம்மைப்
பொருளொன்றிய வயனின்னன புகலுந்துதி கேளா. (சஉ)

எற்றுக்கிவ ணுற்றுத்தவ மினிதாற்றினை யென்னுக்
கற்றைச்சடை முடியான்கரு ணையினேடருள் செயலும்
வற்றிக்கவி னழிமேனியன் மழைகண்டெழு மயிலின்
முற்றக்கிள ருவகைக்கடன் முழுகுற்றெதிர் மொழிவான். (சங)

தவற்றிற்கதி நடைகண்டுத ருக்குக்கடன் முழுதும்
சுவற்றிக்கொடு நரகுந்துணை யாகாவிட ரேய்த்துக்
கவற்றிச்சிறை யிடுவித்தருள் கந்தப்பெரு மான்செய்
இவற்றுத்தொழில் யான்செய்கதி லென்றுனெதிர் நின்றான். ()

அற்றேனின தார்வங்கம ழலரோயிது கேண்மோ
செற்றார்படை செற்றித்தெறு ஞாட்பிற்றிர ணேக்கிப்
பற்றுதென மற்றைப்படை பணிசெய்திட நிற்கும்
முற்றாரழல் வேலானல தருளன்முடி யாதால். (சரு)

துறைமுற்றிய மறையாகம மங்கந்தொகு கலைகள்
இறைமுற்றிய விறையோனுல கெல்லாம்பணி குரவன்
நறைமுற்றிய விதழித்தொடை நாமுந்தொழு மாசான்
பொறைமுற்றிய வவன்வார்கழல் புகலேபுக லாமே. (சசு)

எய்யாந்தவ முடையார்க்கரு ளியுந்திற நோற்பின்
கையாந்தவ னுருவிக்களி யருள்வாங்கழல் போற்றி
மெய்யாந்தவ முழந்தாய்பிழை வித்தாய்நம தருளால்
மையாந்தநின் விழைவுய்த்தருள் வான்பாலுறல் பெற்றாய். ()

இனிபன்னவ னருளுக்கொரு வைப்பாயில குவையால்
துனிவின்றுயர் தவமாற்றிய சூழென்றனன் கேட்டான்
புனிதன்முக மெதிர்நோக்குபு புலவர்க்கமிழ் தன்னான்
நனிவந்தெளி தருளுந்தல நவிலாயென நவில்வான். (சஅ)

குருதித்தசை மிசையுங்குடர் மாலைத்தலை வேலான்
சுருதித்தலை மொழியின்பொரு ளெம்மைத்துளக் குறுத்த
கருதிக்கதி யெவரும்புகு கணிகாசல முளதவ்
வொருதிக்கினு நிகரில்லதி னுறைகென்றும மைந்தான். (சகூ)

சேட்டாரண மறியான்மறை சிவலிங்கம்வ ணங்கித்
தீட்டாமொழி யறிவான்றிகழ் மகிழ்வோடுமெ ழுந்தான்
தோட்டாரணி யஞ்சூழ்பதி தொழுதான்விடை கொண்டான்
கூட்டார்கிளி தமிழ்தேர்தரு கூடற்பதி சார்ந்தான். (ருo)

எட்டெட்டருள் விளையாடல்செ யிறைவன்கழன் மலரின்
மட்டட்டிய குழலாளொடு வணங்கிப்புற னேகி
மொட்டொட்டிள முலைபங்கினன் முருகார்மலர்க் குறையூர்
அட்டிட்டசி ராப்பள்ளியை யடைந்தான்றொழு தகன்றான். ()

எண்ணத்துய ரியமாதவ ரீண்டும்புலி யூர்போய்
விண்ணத்துய ரியகோபுர மேகம்பர னுருவின்
வண்ணத்துய ரியதோலின்வ யங்காலய மெய்திக்
கண்ணத்துய ரியலாதறு கதிர்மன்றுப ணிந்தான். (ருஉ)

ஆங்குப்புற விடைகொண்டன னன்னத்திரள் சேக்கும்
பூங்கட்கம லக்குப்பைகள் பொழிதேன்மணம் வீசத்
தேங்கும்புன லெழுவாளைக டெங்கம்பழஞ் சிந்தும்
வீங்கும்புகழ் திசைபோர்த்தவி யன்காஞ்சிய டுத்தான். (ருங)

உயங்கும்பவ மோரேழினு முறுவல்வினை நீவித்
தயங்கும்பர போகந்தரு தனிமாநிழ லென்றும்
வயங்குந்திரு வேகம்பனை வாழ்த்திப்பஃ றளியும்
நயங்கொண்டுப ணிந்தேத்தின னகரம்பிறக் கிட்டான். (ருச)

எண்ணோங்கிய சீபூரண நகரெல்லைய கத்து
விண்ணோங்கிய புகழின்னகர் விளங்குங்குண திசையில்
தண்ணோங்கிய மதிதோய்வரை தனக்கோசனை யரையில்
பண்ணோங்கிய வாணிக்கொரு பதிநாவின னுற்றான். (ருரு)

அண்டர் போற்று மடுக்கனேர்
கண்டு தாழ்ந்து கசிந்தனன்
பண்டை வேதம் பழிச்சினுன்
மண்டு கட்டுனல் வாக்கினுன்.     (ருசு)

ஆண்டி லிங்க மமைத்தனன்
மாண்ட பூசை வயக்கினுன்
பூண்ட வேடப் பொலிவொடு
மூண்ட ருந்தவ முற்றினுன்.     (ருஎ)

முதுமை மாதவர் மூசுதேன்
மதுவி ராந்தொடை வானவர்
பதும னேடு படர்ந்துசெல்
நுதுபு லத்தரு நோற்றனர்.     (ருஅ)

விருத்த ராகிய மெய்த்தவர்
விருத்தந் தீர்தர மேவுமவ்
விருத்த வானகர் மேயதால்
விருத்த மாபுர மெய்ப்பெயர்.     (ருகூ)

பொற்ற மாதவம் போற்றியே
ஒற்றை யாண்டொழி வெய்தலும்
பெற்று வெற்பிவர் பெற்றிமை
உற்ற னன்னுயர் மால்வரை.     (சுO)

ஐகரமி லன்போடு நண்ணும் வேதன்
செய்கழற்காற் குமரனைத் திருவுந் தீர்த்தம்
பொய்கடியும் விதியாற்றிற் புகுந்து தோய்ந்து
மெய்கதுவும் வினைமுழுதும் விழைந்து செய்தான்.     (சுக)

மட்டுவிரி பொழிற்குன்றம் வலம்வந் தேறிச்
சட்டவிடர் தபுமாவச் சகாயற் போற்றி
எட்டுருவாங் குமாரலிங்கத் திறைவன் பாதம்
அட்டுமது மலர்தூவி யஞ்சித் தானுல்.     (சுஉ)

வானாதி பூதங்கள் வயக்கி மாற்றும்
ஆனாத பேரறிவா மடல்வே லண்ணல்
கானாரு மலர்ப்பாதங் கசிந்து தாழ்ந்தங்
கூனாதி யொருக்கியுணர் வயத்த னானான். (சஙட)

அன்றுபோய் வழிநாளங் கடுத்த கீழ்சார்
ஒன்றுநீர்ச் சுனைநோக்கி யுதனிற் றோய்ந்து
மன்றல்சூழ் சுனைத்தலையின் வைகி நாளும்
நன்றுமா தவமாற்று நடைமே தக்கான். (சஙச)

மறைகதித்த வாறெழுத்தின் வண்மை நாடி
முறைகணித்து முருகனருள் வடிவ முற்றப்
பொறைகதித்த வுளத்தமைத்துப் பொறிக ளோப்பி
நிறைகதித்த மாதவத்தி னிகழுங் காலை. (சஙரு)

தன்னருளைப் பிழைப்பதே தண்டாச் செல்லல்
என்னுமது முன்றெரித்த விறைவன் மீட்டும்
தன்னருளைப் பெறுவதே தக்க வின்பம்
என்னுமது தெரிப்பவாங் கெதிரே தோன்றும். (சஙசா)

நலம்புரிந் தன்மி னோர்க ணண்ணிய வெம்மைப் போலக்
குலம்புரி தேவ தேவர் குருமணி முடிக டாழ
வலம்புரி முத்தம் போல வயங்குவ ரென்னு மாபோற்
சிலம்புகிண் கிணிகண் மற்றுஞ் சேவடித் துணையி னார்ப்ப. ()

வலத்தினர் கொள்ப வென்னு மரபினைத் தெரித்திட் டாங்கு
வலத்தனித் தாள்சேர்ந் தாண்மை மாற்றலர் கழனு மாற்றால்
நலத்தகு கழலென் றோது நகைமணிக் கழல்கண் டோரைக்
கலத்தலென் றுணர்த்து மாபோற் கலகல கலவென் றார்ப்ப. ()

வெங்கதிர் மணிகால் யாத்த மேகலை மூன்று தாங்கும்
அங்கியு மிவனே யென்ன வறிவுறுப் பனபோ னின்ற
செங்கதிர்ப் பட்டுஞ் சேர்த்த திருவரை நாணு மும்பர்ப்
பொங்கொளிப் பட்டின் சுற்றும் புகர்மல மூன்றுஞ் சீப்ப. ()

மூவரு மங்கத் தோர்பான் முகிழ்க்குமா செய்யு மாண்மை
மூவரை காட்டு மார்ப மொய்வரை யருவி யன்ன
மாவிரை பொங்கும் பூந்தார் மணிவடம் பொற்று ரெல்லாம்
நாவலர்க் கடங்காப் பொற்பி னருகதிர் பிணைந் துள்ள. (எ0)

பூமுத லைந்தற் கீத்தல் புணர்த்தமை தெரிக்கு மாபோல்
தாமரை மலர்ந்து கற்பந் தளிர்த்துத்தே னுவின்கா தாகிக்
காமுற வலம்பு ரிந்து கதிர்மணி முகிழ்த்த செங்கை
நாமற வஞ்ச லென்னு வமைத்தரு ணயப்புத் தோன்ற. (எக)

ஆறிரு கோடி வெய்யோ ரனைவரு மொருங்கு கூடி
வீறினும் பரிதி முன்னர் வெண்கதி ரெனமை யாக்கும்
பேறிருங் கிரணக் கற்றைப் பெருவிலைச் சிறுக லாழி
மாறிரி யடியா ருள்ள முழுவதும் வளைத்துக் கொள்ள. (எ௨)

பிரமர்நா ரணர்பல் லோரைப் பெற்றெடுத் தவர்க்கு நல்க
வரமலி பாச மாழி வகுத்துவைத் திருப்ப தேய்க்கும்
உரமலி முன்கைச் சூழ்ந்த வொளிர்ந்தபொற் றொடரி னோடு
கிரணவொண் கடக மெங்குங் கேழொளி மயமாத் தேக்க. ()

வரையரோ தோளன் றென்னும் வயிரவங் கதங்கண் முன்கைப்
புரைதபு கடக மிக்குப் பொலிபிர தாபங் காட்ட
நிரையிரா சதத்தின் மேலாய் நிகழுஞ்சாத் துவிகத் தாகும்
உரைதகு கீர்த்தி யும்ப ருற்றொளிர் முறைமை காட்ட. (எச)

கடகமங் கதங்க ளோரே கதிர்மதி மண்டி லத்தின்
சுடர்தர வும்ப ரங்கித் தொகுகதிர் மண்டி லஞ்செய்
படர்கதிர்க் குண்ட லங்கள் பரிதிபன் னிரண்டும் வேறு
தடவரை பெற்றொ ருங்கு சார்ந்தெழு காட்சி தோற்ற. (எரு)

மண்டிலம் பிறழா தோங்க வயங்கித ழாயி ரஞ்சூழ்
முண்டக மேனின் றன்ன முகமதித் திலக மாதோ
கொண்டருந் தவர்கள் யோகிற் குறிக்கொடன் னுருவங் காட்டக்
கண்டரு கருணை வெள்ளங் கதித்தொழு கமிழ்திற் பாய. (எசு)

இருவரா யிருந்து தான்வே றெனவவர் தமக்கு மேலாம்
ஒருவனே யென்ன வென்றா ழொளிர்மதி யாகி வேறுய்
இருசுடர் விழிக்கு மீப்பா லிலகெரி விழிகொ லென்னப்
பொருநிய திலக மேலாற் பொழிகதிர்ப் பட்ட மின்ன. (எஎ)

குவிதரு மாறு தாரக் குருமலர் மலர்த்து மாறு
சவிமுகப் பரிதி நாப்பட் டவிர்சிவ னுருவஞ் செங்கேழ்
அவிர்மணித் திலக மீக்க ணலங்கிய விதானம் பட்டம்
இவர்கதி ரிலம்ப கந்தோ ரணமென வெழின்மிக் கீட்ட. (எஅ)

உதரபந் தனவோ ராழி யொளியுரப் பலகைப் பல்கைப்
பிதிருறுப் பெறுழ்த்தோட் சேக்கைப் பிணைமுகப் பரிதி பொற்
கதிர்மணிக் கிடுகு கூம்பு கவினிய மேற்போக் கென்ன [றேர்க்
முதிர்மணி தெரிந்து செய்த முயங்கொளி மோலி வாய்ப்ப. ()

அணிபரித் தொழுகி வார்ந்த வவிர்மணிச் செவிகள் சுற்றில்
பிணிமணி வடங்க டேக்கிப் பிறக்கிய தெனக்க வித்த
மணிமுடித் தேர்மேற் போக்கின் வார்கொடிக் குழாங்க ளாங்குத்
தணிவற வெழுந்து துள்ளுந் தண்கதிர்க் கொழுந்து காட்ட. ()

கருங்கடல் வரைப்பிற் செய்ய கதிரவ னெழுந்த தென்ன
ஒருங்கரத் தொகைக ணூறு மொண்சிறைக் கலாவ மஞ்ஞை
நெருங்குபல் வன்னப் புள்ளி நிகழ்வெரிந் தலையிற் றோற்றி
மருங்குபல் கணமுஞ் சூழ மலரவ னெதிரே சென்றான். (அக)

விண்ணவர் சொரிபூ மாரி மெய்யெலா மினிமை யாக்கத்
தண்ணுமை பதலை தக்கை தகணிச்சங் குடமு ழாக்கள்
பண்ணிசை வீணை மற்றும் படர்செவிக் கினிமை யாக்க
உண்ணிறை தியான வேத னொளிர்விழி விடுத்துக் கண்டான்.

கதுமென வெழுந்து தன்னுட் கருதிய வுருவிற் றோற்றும்
விதுவணி பெருமான் மைந்தன் விரைமலர்ப் போது தாழ்ந்து
குதுகலம் பொங்கக் கண்கள் கோட்டமெய் யிழுகு வெள்ளம்
முதுநில நனைப்பச் சூழ்ந்து முன்னின்று துதிகள் விண்டான்.

வானாதி பூத முதலான யாவும்
வருவித் தளித்தி யவைமற்
றூனாத வாவி தொழிலிற் கிளர்ப்ப
வடைவிற் புணர்த்தி யவையாய்
ஊனாதி யூனி னுயிராதி யெண்ணி
னுயிருக்கு ணின்ற வுணர்வும்
தானாதி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அச)

துதையத்து வாவும் வடிவென்ன மொய்த்தி
துகடீரு மைந்து மனுவும்
வதிவுற்றி யக்கு முடலிற் பணித்தி
வளரைந்தொ ழிற்கு முதலாய்க்
கதுவுற்ற வொன்ப துருவுங்க லத்தி
கழலாத காய மறிவாத்
ததைகிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அரு)

கலைகற்றி லாமை யிளமைக்க ணிற்றி
கலைமுற்று ணர்த்து முதிய
நிலைமைக்க ணிற்றி நிகழ்வேத மங்க
முதலாக நீடு கலைகள்
மலைவற்று ணர்த்து பொருண்முற்று மாதி
யவையொன்று மன்றி வளர்மெய்த்
தலைநிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அசு)

இழிவுற்ற டுத்த மலகேவ லத்தி
னிணர்வாய்ந்த லர்ந்த தருவின்
அழலொத்தி யாவி யுருவாதி யோடு
மணைவுற்ற போது சிலையின்
நிழலக்க திர்க்கு மனலொத்தி யன்ன
நிகழாத வீட்டி னயமார்
தழலொத்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அஎ)

இருளத் துலப்பி னுயிர்மூழ்கி நிற்ப
வியல்விச்ச தேது மிலதாக்
கருணைத்தி றத்தி னலகற்ற வாவி
கருவிப்ப டுத்தி கருவி
மருவுற்ற வற்று ளுயிர்சில்ல வாங்கி
மயரற்ற சுத்த நிலையில்
தருகிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அஅ)

திளைமாயை மோக வினையிற்பி ணைந்த
செறியாவி யின்ப நிலையில்
வளையாவி டுப்ப வுருமூன்றெ டுத்தி
வழியூடு கைத்து நலனை
விளையாவ ளித்தி வினையொப்பு றுத்தி
வினைமாயை மூல மலநோய்த்
தளைவீழ்த்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அகூ)

உயங்கப்பி ணிக்கும் வினையுங்க ரந்து
ளுடனைய்மு டித்தி யதனை
வயங்கத்தெ ரித்தி மறுகத்த கர்த்தி
வளராமை நூலின் முறையின்
இயங்கப்பு குத்தி பெரிகும்பி யூடு
மினைவித்தி தோய்த லிலையாய்த்
தயங்குற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூ0)

வழிநின்று நன்று புரிகால தன்றன்
வழிபோது டற்று பயனும்
குழிநிற்ப வுய்த்தி கொடுமைத்தி றங்கள்
குயில்கால வற்றின் வழிபோற்
பழியற்று ணர்த்து பயனும்பு ணர்த்தி
பயனென்று ருத திறமும்
தழிநிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூக)

நாளூற்றெ ழுந்த மதிபோன்ம லங்க
ணலியத்து ரந்து வருதி
வாளூற்ற செய்ய சுடர்போல முற்று
மடியக்கி ளர்ந்து நிமிர்தி
ஆளத்த விர்ந்த திருமேனி தன்னை
யழலம்பி ழம்பி னறியத்
தாளுய்த்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கஉ)

பகைசெய்து நிற்கு முலகேது முள்ளம்
படராத வண்ண மொளியின்
மிகைசெய்தி ருத்தி யுடலூழெ னைத்தும்
விரவாமை யேற்று நகரா
வகைசெய்து நிற்கு மறிவுங்கெ டுத்து
மறியாமை யின்ப நிலையில்
தகைசெய்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கஙு)

கலங்காத நின்மெய் யருளிற்பு காத
கலதிக்கு ணத்தி ழுதையேன்
விலங்கோடி னைந்து மதியாத குற்றம்
விரவாமை யன்று கயிலை
நிலங்காதி விட்டி யருள்செய்யும் வைப்பு
நிமிர்பூர ணக்கி ரியெனும்
தலங்கோடி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கச)

வேத மத்தகம ளைந்துகி டந்த
விழுப்பெ ருந்துதியெ டுத்துந வின்று
பேதை மைக்குணமி குத்தக ருத்தாற்
பீடி லாதசிறு நாயடி யேன்செய்
ஏத மத்தனையு மின்றுபொ றுத்திங்
கின்ன ருட்கருணை நல்குதி யென்று
மாதர் பொற்கமல பீடிகை மேலான்
மறுவ லுங்கழல்ப ணிந்துநி மிர்ந்தான். (கரு)

மரக தக்கதிர்த மைத்தக லாப
மஞ்ஞை மீதுவரு மஞ்ஞையொ டொப்பான்
வரந விற்றுதிவ ழங்குது மென்று
மகிழ்சி றந்துதிரு வாய்மலர் விண்டான்
பரவு வேதன்மகிழ் கூர்ந்துப டைக்கும்
பண்பெ னக்கருள்க வென்னவ ளித்து
விரவு பண்புடைமை யின்னும்வ ரங்கள்
வேண்டு கென்னவயன் வேண்டுத லுற்றான். (கூசு)

வேட்ட நல்வரம ளித்துவி டுக்கும்
வீறி லார்கள்பலர் விண்ணவர் மாட்டும்
வேட்ட நல்வரம ணைத்தும்வ ழங்கார்
வேட்ட மாத்திரைவி ளைப்பவர் சில்லோர்
வேட்ட நல்வரம ளித்தநன் மேலும்
வேறு நல்வரம்வி ழைவிய ளிப்ப
வேட்ட வண்ணல்கரு ணைத்திற நோக்கி
விம்மி தப்புணரி விம்முமு ளத்தான். (கூஎ)

சிறந்த பத்தியடி யேனின தாளிற்
செல்வ நல்குரவி னும்புரி வாழ்வு
மறந்து நின்னடியர் மாட்டுமி கந்த
மதிப்பு றுமையும்வி ருத்தபு ரிக்கண்
உறந்து வாழுநர்வெ றுக்கைய ராகி
யுன்னு கின்றகதி யெய்தலு மங்கண்
அறந்த ழைத்தசிவ லிங்கமி றைஞ்சு
மன்ப ரென்னுலகை மெய்தலும் வேண்டும். (கூஅ)

இத்த லைப்படுதி ருத்தமெ னுமை
மெய்த வுந்தலைவ வின்றுவை காசி
ஒத்த பூரணைவி சாகம டுத்த
வெண்மை யாலிவைய டுத்துறு காலைப்
பைத்த விப்புனல்ப டிந்தவர் மும்மைப்
பாத கங்கள்பல வுந்தப நூறி
மெத்து செல்வமலி யென்னுல கெய்தி
வீற வுங்கருணை நல்குதல் வேண்டும். (கூகூ)

அளிய னிங்குநவி ரோத்திர மோது
மன்பு ளார்கவிதை நான்குந டாத்தும்
களிமி குங்கவிக ளாகிவ ளங்கள்
கஞ்லி யெப்பிணியு மூப்புடை கண்டாங்
கொளிசெய் நின்னுலக மெய்தலும் வேண்டு
மொருவ வென்னவர முற்றும ளித்து
நளிய ருட்புணரி யாங்கும றைந்து
நலத்த கோயிலினை நண்ணின னன்றே. (க00)

பவள வாய்ச்சிறக ரோதிம மூரும்
பண்ண வன்களித ழைத்தன னேகித்
துவளி டைக்கலைம ணட்டியொ டண்மித்
தொன்று போலுலக ளித்திட லுற்றான்
குவளை பூத்தொளிரு மத்தகு தீர்த்தங்
கோத ரும்பிரம தீர்த்தமெ னும்பேர்
திவளி ரும்புகழி னேடுவி ளங்கித்
தேவ ரும்படிய நின்றதை யன்றே. (க0க)

எப்பெ ருங்கலையு ணர்ச்சிய ரேனு
மெய்ப்பெ ருந்துயரு ழந்தவி டத்தும்
அப்பெ ருந்துயர மீட்டும்வி ளைக்கு
மத்த குந்தொழின்மு யங்குவ தன்றி
ஒப்ப ருந்தலைவன் மெய்யரு ளின்ப
வுததி மூழ்கும்வகை தன்னமு முன்னார்
பப்ப ருந்துயர்பல் காலுமு ழந்தும்
பங்க யன்றொழிலை மீட்டனன் மாதோ. (க0௨)

விண்ண வர்க்கவியி னின்பம்வி ளைத்து
மேதி னிக்குமுறை யாவும்வி ளைத்தும்
கண்ணு தற்பர னடித்துணை நாளுங்
காத லன்புவளர் பூசைவி ளைத்தும்
எண்ண மிக்கமுனி வீரய னேற்றங்
கெய்த ருந்தொழின்மை பெற்றமை சொற்றும்
அண்ண னந்திதவ மாற்றுபு செவ்வே
ளருள்கி டைத்தவுயர் காதைதெ ரிப்பாம். (க0௩)

பிரமன் சிருட்டிபெறு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — எகஅ.

## நந்தியுபதேசப் படலம்

மண்ணவருக் கிரும்புனலாய்த் தோன்ற நின்றே
மண்ணமிர்தும் விண்ணமிர்தும் வாழாமை யாக்கும்
விண்ணவருக் கிருந்தீர்த்த மாகித் தோன்றி
விண்ணமிர்துஞ் சிவவுலகும் விரவ வுய்க்கும்
பண்ணரிய மாதவத்தோர்க் கருளாய்த் தோன்றிப்
பரபோக வமிர்தமாய்ப் பலியா நிற்கும்
நண்ணரிய புகழ்க்கடம்ப னழைப்ப நந்தி
நந்தினியாந் தத்துவா மிருதந் தானே. (க)

மாங்குயின் மிழற்றுமொழி மங்கையுமை யாளோர்
பாங்குற மடங்கலணை மீதுபயில் வெள்ளி
யோங்கலி னொருத்தனுயி ரோம்பிய வெழுந்த
வீங்கருளி னேடினிதி ருந்தருளும் வேலே. (உ)

நெற்றிவிழி யாளர்நிமி ருந்தலைமை பூண்டோர்
துற்றதலை மாலைதவழ் தோளினர்க ளெல்லாம்
பிற்றகைய முற்றவிர்பெ ருந்தகைமை நந்தி
உற்றடிவ ணங்கினனு ளக்குறைதெ ரிப்பான். (ஙு)

ஓதுமறை யாகமமு யர்ந்தகலை முற்றும்
ஏதமக லக்கருணை நோக்கினெனை வைத்துத்
தீதறந வின்றுபொரு டெள்ளிதின ளித்தாய்
மேதகைய வாகம விழுப்பனுவன் மாட்டு. (ச)

முப்பொருளி லக்கணமு முப்பொருளி னென்றாச்
செப்புகின தின்னருள்செ றிந்தடியி னென்றும்
அப்பெரிய முத்தியெனு மாரமிர்த வாரி
எப்பொழுது மூழ்குவது மெய்தலில னெந்தாய். (ரு)

அன்னவை தெரித்ததின ழூத்திவிடல் வேண்டும்
தன்னிகரி லாதிமல சங்கரச யம்பு
கன்னியொரு பாககரு ணைப்புணரி யென்னுப்
பின்னரும்வ ணங்கிமுழு வற்கடல்பெ ருத்தான். (சா)

திருகுமிரு வல்வினைதி ருந்துபரி பாகம்
மருவுதனு றுத்திமெய்வ ழங்குமொரு வள்ளல்
கருணைநனி பொங்கியதெ னக்கதிர்கி ளர்ப்பக்
குருநகையி னந்திமகிழ் கொள்ளவருள் விள்ளும். (எ)

ஐந்தொழிலி யற்றரசி ருக்கைகபி லாயம்
ஐந்தொழில்க டந்தவரு ளாகுமஃ திங்கண்
அந்தின்மிக வுந்தெரிவு றுக்குமடை வில்லை
அந்தவரு ளுக்குரிய தாங்கணிக வெற்பு. (அ)

ஒருமறை நாடரிய வுண்மையெனு ஞானம்
ஆரவருள் பெற்றடிய ழூந்துமத றைச்சீ
பூரணகி ரிப்பெயர்பொ ருந்துமள வில்லா
ஏரணவு நம்முருவ மாயிலகு மன்றே. (கூ)

எங்கணைவ ருஞ்சிறிது மேரருந மக்கும்
அங்கணுயிர் யாவுமடி சேரும்வகை நாடித்
தங்குமிளை யோனருட ருங்குரவ ைனன்
புங்கவன வற்குநிகர் பூரியரும் விள்ளார். (க0)

வெய்யமல வேர்துவர வீட்டுநெறி யன்றிப்
பொய்யமல நின்றமதம் புக்கவரு நாளும்
ஐயனென வந்தடிப ணிந்தறமு ஞற்றி
உய்யும்வகை யுங்கருணை யுய்த்தவணி ருக்கும். (கக)

அன்னவனை யேசரண டைந்தவணி ருந்து
மன்னியபெ ருந்தவம்வ ழாதுபுரி கிற்பின்
துன்னுமறை நாடரிய தூத்தகைய வேணின்
நன்னருள மிக்குவகை நாறவெதிர் தோன்றி. (கஉ)

திரைத்துமணி சிந்திவரு தெய்வநதி யொன்று
விரைத்தவண டுத்துறவி ளித்ததின மூத்திப்
புரைத்தசிவ வாரியும்பு குத்திவிடு மம்ம
உரைத்தநதி மூலமுமு ரைப்பமறி மைந்த. (௧௩)

திருமகட் குரியதாய்ச் சிவனுந் தன்னியல்
இருநிலந் தெரிப்பவவ் வேழை கொங்கையின்
உருவவன் கனிபடும் வில்வ மோங்கிய
பொருவில்சீர் வில்வமா புரமொன் றுள்ளதே. (௧௪)

இருடபு நமக்கர சிருக்கை யாகிய
திருவள ரத்தகு தேளத்து நம்முடை
உருவமா யைங்குவட் டோங்க லுள்ளது
தருபெயர் வில்வமா சயில மென்பதே. (௧௫)

கஞ்சவெற் பென்னவுங் கரைவர் யோசனை
அஞ்சத னுயரமவ் வளவும் பூமியுள்
துஞ்சுறச் சிகரமே தோன்ற நின்றெழில்
விஞ்சும்யோ சனையொன்று விரிவி னெல்லையே. (௧௬)

தெய்வமே கமழுமச் சிலம்பி னுச்சியில்
சைவதத் துவமய தீர்த்தந் தானுள
துய்வகை யெம்மொடா மொருமை யெய்துவான்
கொய்வளம் புகழ்ச்சனற் குமர னண்ணுபு. (௧௭)

தேங்கிய பெரும்புனற் றீர்த்த மாடுறீஇப்
பாங்கிருந் தருந்தவம் பயிற்றி நம்மடி
ஓங்கிய பூசனை யொழிவில் பத்திமை
தாங்கியாற் றுபுமகிழ் தழைப்ப வைகுமால். (௧௮)

அத்தகு திருத்தமங் காறு கொண்டெழ
உத்தம னுன்பொருட் டழைக்கு மென்றுபின்
வித்தகன் விடைதர வணங்கி மெய்யருள்
பொத்திய வுளத்தினன் போதன் மேயினன். (௧௯)

வழிவரு நாளு முன்போல் வராகமா புரத்துத் தேவைத்
தொழுதுவீ ராட்ட காசத் தோன்றலைச் சாமி நாத
முழுவலி யிளவற் போற்றி முன்னிமென் மலரின் வண்டு
குழுமிய குமார தீர்த்தக் குருமணிக் கரையைச் சார்ந்தான்.

திரைதவழ் தீர்த்த மாடிச் செய்கட னினிது முற்றி
வரைபுறஞ் சூழ்ந்து வெய்யோன் மணிநெடுந் தேரிற் பூண்ட
விரைசெலற் கலினப் பாய்மா விறற்குரந் தவழப் பொங்கும்
புரைமணித் தூளிப் போர்வைப் பொருப்பினை யிவர்ந்து சென்
[றான்.

வண்டொடு ஞிமிறு மூசும் வார்மதக் கலுழி யேயன்
றெண்டிசை யுயிர்க்கு நல்க வெழுபெருங் கருணை நீரும்
கொண்டலென் றியம்பு மாவச் சகாயனைக் குறுகிப் போற்றி
அண்டர்சூழ் குமார லிங்கத் தமலனை வணங்கிப் புக்கான்.

புக்கன னெழுத்தோ ராறும் புகன்றிடு வாயன் சென்னித்
தொக்கெழு கையன் சிந்தை துற்றெழு முழுவ லன்பன்
நக்கலர் கமல பாத நாடுபு திளைக்குங் கண்ணன்
மிக்கவி பொறிய னாகி விழுப்பொரு ளெதிரே தாழ்ந்தான்.

புளகமெய் யரும்பிப் போர்ப்பப் பொங்குநீர் விழிகள் கால
இளகிய வுளத்தி னோடு மெழுந்தருந் துதிக ளார்த்தி
அளவிடற் கரிய வைவே லடிகளைப் பூசை யாற்றி
வளமலி யுணவு விட்டு வருந்துபி லிரவு நீத்தான். (கநச)

வைகறை யெழுந்து தூநீர் மனுமுறை யினிது தோய்ந்து
செய்கடன் முடித்த பின்னர்த் திருநந்தி குகையுங் கண்டு
நைகர மில்லா வன்பி னுதனைப் பணிந்து போற்றிய்
பெய்கழ னிருதி திக்கிற் பிறங்கவோர் தீர்த்தஞ் செய்தான்.

தோலடிப் பவளச் செவ்வாய்த் தொகுசிறை யன்னங் கம்புட்
பீலிபிற் பிளிறு நாரைப் பிரமரத் துழனி பொங்க
நீலமு மரையும் பூப்ப நிருமித்த தீர்த்தப் பாங்கர்ச்
சாலவைந் தடக்கி மேலாந் தவமலி யோக முற்றான். (கநரு)

ஒவ்வொரு திங்க ளாக வுறுசுவைக் கனிகண் மூலம்
எவ்வமில் சரகு தூஙீ ரெறிவளி முறையி னுண்டு
பவ்வமுண் டமைந்தான் பின்னர்ப் பாற்றிய வுணவ னாகித்
தெவ்விய தவநா ளுண்டு செல்லுற முயன்ற காலை. (கா௩எ)

வளைவகிர்ப் பேழ்வாய்ச் சூட்டு வன்றலைக் கருங்கட் டோகை
விளைசமர்ப் பூட்கை மஞ்ஞை வெரிந்தலை யிவர்ந்து செவ்வேள்
துளையிசை நரம்பின் பாட றுந்துமி யெழுந்து விம்மக்
கிளைஞருங் கணமுஞ் சூழக் கெழுதவச் சூழல் சார்ந்தான். ()

கண்டெழுந் தாடிப் பாடிக் கழலிணைப் போதின் வீழ்ந்து
மண்டணிற் புரண்டு சூழ்ந்து மறைபல வெடுத்துப் போற்றும்
தொண்டனை மகிழ்ந்து நோக்கித் தோகையை யடுப்ப வுந்தி
ஒண்டளிர்க் கரத்தா லன்ன னுடலந்தை வந்து கூறும். (கா௩௯)

எண்ணில்பல் கோடி யாக்கை யீட்டிய பாவ மெல்லாம்
நுண்ணிய திரண மாக நுங்குறுங் காட்டுத் தீயாம்
தண்ணிய சோலை சூழ்ந்த தணிகையித் தலத்தை நீசெய்
புண்ணிய மிகுதி யாற்றாற் போந்தனை புலவ ரேறே. (கசo)

மாதவ மிகுதி யில்லா மாண்பினர்க் கிண்டைச் சேர்வும்
தீதறு குமார தீர்த்தஞ் சிவகங்கை நதியிற் றோய்வும்
கோதில்வீ ராட்ட காசக் குமாரலிங் கத்தி னோடும்
போதக முகத்தி னவச் சகாயனைப் போற்றும் பேறும். (கசக)

இத்தலந் தன்னிற் றேற்ற மிருக்கையந் திக்கும் பேறும்
மெய்த்தவ நந்திச் சூழல் விழியெதிர் காணும் பேறும்
உத்தம முனிவ வெய்தா வோங்குமித் தலத்திற் போந்த
அத்தகு போதே நின்பான் மங்கல மனைத்துஞ் சார்ந்த. (கசஉ)

ஈட்டிய தவத்தாற் சால வெய்த்தனை யாக்கை முற்றும்
வேட்டதெ னுவறி யென்றான் மீட்டும்வந் தனைகள் செய்து
கோட்டிய மெய்பி னோடுங் குடங்கைவாய் புதைத்துக் கட்டித்
தீட்டிய புகழ்சால் வேதத் திருமுனி யிதனைச் சொற்றான். ()

கணிப்பறு பவங்க ளீட்டுங் காழ்மலச் செருக்கை நூறித்
தணப்பற வெண்ணெய் போலத் தவிர்ந்தநின் பாத நாயேன்
மணப்பமெய்ஞ் ஞான மின்னே வழங்குபு தமிழின் பாடைப்
புணர்ப்பினி தருளு கென்னாப் புகன்றுபின் னிதுவும் வேண்டும்.

வராகமா புரத்து நாயேன் வணங்கருட் குறியின் வைகும்
அராவணி சடையி னானை யமர்ந்துதைப் பூசந் தன்னில்
விராவிய வன்பி னோடும் விதிவழி பூசை செய்வோர்
தராதலம் வியப்பப் பாவந் தணந்தருங் கதியிற் சேர்க. (கசரு)

கன்னியி லடுத்த வோணங் காட்சிநீ கொடுத்த வந்நாள்
அன்னதா லிந்த நாள்வந் தடுத்துழி யீங்கென் பேரால்
மன்னுமித் தீர்த்தந் தன்னில் வந்துதோய்ந் துன்னைக் கண்டோர்
துன்னிய மலங்க ளெல்லாந் துமித்துநின் னருளிற் சேர்க. ()

ஆதிரை நாளிற் சோம வாரத்தி னாடி னோரும்
மேதினி மீது வேண்டு மேதகு செல்வந் துய்த்துக்
காதியெவ் வினையு நின்றன் காமரு முலகில் வாழ்ந்து
சோதியுட் சோதி யாநின் சுடர்க்கழற் பாதஞ் சேர்க. (கசஎ)

இன்னபல் வரமு நல்கென் றிரந்தனன் முனிவர் கோமான்
அன்னணம் வரங்க ணல்கி யறுமுகக் கடவு ளன்னான்
தன்னைநற் றமிழின் பாடை தனக்குமுன் குரவ னாக்கிப்
பொன்னிவர் கோயி லுள்ளாற் போதந்து ஞானங் கூறும். ()

மேதகு மறமா யறமற மாக
வினைப்பதாய்ப் பசுபதி பாசம்
கோதற வறிந்து சிவத்தினை யடையக்
குறுகிய நெறியதாய்ப் பயிலும்
ஆதர வுடன்வே தாகம வழியா
லமலனு ரடிவழி பாடு
தீதற வுஞற்றல் பரமமாந் தருமஞ்
சிவனுரை வேதமா கமங்கள். (கசகூ)

பிரணவ முதலாய்ச் சிவாயவென் பதுபின்
பிணைந்துறக் கிளக்குமா றெழுத்தும்
விரவுமந் நூலி னெவ்வகை மனுக்கு
மேலதா மவைதரு பொருள்கள்
பரனொடு பஞ்ச சத்திக ளிரண்டு
பயனுமாம் பயின்றவர்க் காதி
மருவிய பதத்தின் வித்தினு லென்ன
மறைமுத லனைத்துந்தோன் றினவால். (கரு0)

ஓமெனு மந்தப் பதந்தனை யுரைத்தோர்
வேதமா திகளெலா முரைத்தோர்
தோமறு மந்தப் பதப்பொரு ளுணர்ந்தோர்
தொக்கநூற் பொருளெலா முணர்ந்தோர்
ஏமுறு மந்தப் பதப்பொரு ளின்றே
லிரவியில் வழிவிழி யென்னக்
காமரு பொறிமற் றிருப்பினுஞ் சற்றுங்
கதிப்பரி தாகுமா தவனே. (கருக)

ஆர்த்தவோங் காரப் பொருளெனத் தோன்று
மாரியன் சைவதன் மங்கள்
பார்த்திபர்க் கருளல் பாங்கவர் தீயர்
பகுதிகொண் டளற்றினிற் படாமை
ஓர்த்துயிர் பலவு முறையினு லோம்பித்
தீநெறி யுருவகை யொதுக்கிச்
சேர்த்திரு பயனுந் தாங்களு மடைவர்
செருக்கினுந் தெருட்டலுங் கடனே. (கருஉ)

ஆணவ மாயை காமிய முயிர்க
ளமலனு மனுதிமெய்ப் பொருளே
மாணவ காவிப் பொருள்களை யிவற்றை
வயக்குறும் வாக்கியந் தம்மைப்
பேணுறு பருவ மடுத்தவர்க் கல்லாற்
பெறும்பயன் புகழ்முத லொன்று
காணிய கொடுப்போ ரவரொடு நரகங்
காணியாக் கைக்கொள்வர் விரைந்தே. (கருங)

கரிசறு தான முதலற முணர்த்திக்
காமரு போகமு மும்மைப்
பொருளுநன் குணர்த்திப் போக்கரு வீடும்
புகுத்துமிவ் விறைவன்வாக் கியநேர்
தருபய னுளதோர் நூலிலே முன்னைத்
தவத்தினுற் பயிலுநர் சிலரே
துரிசுறு புறநூல் பயிலுநர் பலரே
சூழ்ந்திடு மிருண்மலச் செருக்கால். (கருச)

வார்சடைக் கடவுள் வாக்கிய மினைத்தால்
வழிபடற் குரிப்பொருள் கேட்டி
ஆர்திரைப் புணரி கடைந்தனுான் றெழுங்கோ
வைந்தினும் பயமுத லாறும்
சீர்தக வுதித்த வவற்றினுண் மயத்திற்
சிறிலே வில்வமுன் னய
தேர்திகழ் கமலே விழைந்திருத் தலினுற்
சீபல மெனப்பெயர் விளங்கும். (கருரு)

கமலவுற் பலமும் பின்பதி னெழுந்த
கமழ்ந்தகுங் குலியநீ ருயிர்த்த
தமிழ்துறழ் பாலிற் கதிரொடுஞ் செங்நெ
லாயது சந்தன மாதி
இமிழுமங் கலத்த பொருளெலாந் ததியி
னீண்டிய வீன்றதால் வெண்ணெய்
உமிழ்சுவை யமிழ்த முரோசனே யீன்ற
துளத்துறு சித்திபே தங்கள். (கருசா)

ஆதலா லானி னுறுமவ் வாறு
மருளிய பொருள்களுந் தழுவிச்
சோதிலிட் களமாய் நின்றிடி னுயிரின்
றுரிசறு தெனக்கரு ணையினுல்
மாதர்சேர் சகள வடிவுகொண் டிருந்த
வரதனே வழிபடப் பெற்றோர்
கோதுறு வினைகண் முழுவதுந் துமித்துக்
குறுகுவர் சிவபுரத் தவன்பால். (கருஎ)

ஈட்டும்பூ சனைசெ யன்பர்த மூவேழ்
சுற்றமு மேவல்செய் தவரும்
கேட்டவர் மகிழ்ந்தோர் வேட்டவர் முகமன்
கிளந்தவர் கண்டவ ரிவரும்
பாட்டளி மூசு மலர்முத லளித்த
பாதவ முதலிய வுயிரும்
சேட்டொளி திளைக்குஞ் சிவபுரம் வாழ்ந்து
பிறந்துழிச் செல்வரா யுயர்வார். (கருஅ)

இத்தகு பூசை யிறைவனை நாளு
மியற்றியோ கத்தினும் பணியும்
உத்தம குணத்தார்க் குணர்வெழு நீக்க
முண்மைகண் டொளிர்சிவ ஞானம்
கைத்தலக் கனிபோற் கொடுக்குமா ரியனுங்
கசிந்துநின் றேற்பவர் தாமும்
அத்தனோ டிரண்டற் றொற்றுமை யாகி
யானந்தத் தவசராய்த் திளைப்பார். (கருகூ)

உடங்குகேட் பவர்கட் கூறுகள் விளைப்பார்
வாதமே யுஞற்றுநர் பொச்சாப்
படங்கலு முடையா ரோதிவே தாதி
யகற்றினர் சாதியி னிழிந்தோர்
தொடங்கிய நூலிற் பயன்கொளார் மொழிகள்
சோர்வுறச் சொல்லுநர் களிப்பு
மடங்கிலார் தம்மின் மேதகு சாதி
வந்தவர்க் குறைத்திடா ரறிந்தோர். (கசுO)

மேதகு ஞானந் தங்குலத் தளிக்கு
மெய்த்தவ னில்லெனி லடுத்த
சாதியி னமைந்த குரவர்பாற் கேட்ட
றகும்பிற கேட்பது தகாதால்
மாதவ ஞான மருண்முறை கிளந்தா
மாசறு ஞானநூ றன்னைத்
தீதறு பூசை யுஞற்றுநர் கொடுக்குந்
திறமினிச் செப்புதுந் தெளிதி. (கசுக)

பரமனைப் பரஞா னத்தைக்
குரவனைப் பணிந்து பின்னர்
விரவுமெண் முழத்தி ஞன்கின்
விளங்குமண் டபமொன் ருக்கித்
தரளநாற் றூண்க ளூட்டித்
தகையொளிப் பட்டான் வேய்ந்து
கிரணவொண் மணிபூ வாடி
சேழ்கனி கவரி நாற்றி. (கசுஉ)

அம்புயஞ் சுதையா னுப்ப
ணணிந்தய லலங்கா ரித்து
வம்பலர் பரப்பி மேலால்
வானிறப் புதுப்பட் டேய்த்துக்
கும்பநாற் றிசையும் வைத்துக்
கமலம்வாய்க் கொள்ளப் பெய்து
பம்புமங் குரங்கால் வார்த்துப்
பன்மணித் தவிசாங் கிட்டு. (கசுங)

அரியணை மீது வெண்புத்
தகத்தினை யமைத்து மேலால்
வரியிவர் புத்த கத்தை
வைத்துரோ சனைகப் பூரப்
பரிமளக் கலவை கொட்டிப்
பன்மணித் தொடலை தூசு
விரிமணத் தொங்க லாதி
விசித்திரம் பிறங்கச் சாத்தி. (கசுச)

அருச்சனை யாதி முற்றி
யறுசுவை யுணவு மார்த்திக்
கருப்புரங் கமழுஞ் சந்து
காழகில் குந்து ருக்கம்
மருக்கொள்குக் குலுவோ ரைந்தின்
மண்டுதீம் புகைக ளேய்த்துக்
குருப்பொலி கபிலை நெய்யாற்
கொழுஞ்சுடர் பரப்பிப் போற்றி. (கசுரு)

சென்னிதா ளிருகன் னங்க
டிருமுகம் வாய்பு யங்கள்
என்னுமோ ரெட்டுஞ் சென்னி
யிருகர முழந்தா ளேந்து
நன்னிலந் தோயத் தாழ்ந்து
நயந்தபி னதற்குப் பாங்கர்
மன்னுபூங் கோயி லாக்கிக்
குரவனை வழிபா டாற்றி. (ககூசு)

இரந்துமா ணுக்க ளுசா
வீந்திடப் பெற்றுப் பின்னர்ப்
பரந்தநூல் காப்பு நீக்கிப்
ப்யின்றவைங் கவிதை யேட்டின்
வரிந்துடன் காப்புச் செய்து
வயங்குமா ரியன்முன் னோர்
சுரந்தவான் சுவைநா லுண்டி
துய்த்தபி னினத்தோ டுண்டு. (ககூஎ)

இரவினும் பலிக ளோம்பி
யிணைவிழைச் சொழிக வில்லோன்
வரவிரு முழத்திற் பின்னுண்
மண்டபம் விளைத்து முன்போல்
பரவுபூ சனைக ளாற்றிப்
பயில்வுற வரைக வந்நூல்
தெரிவுறப் பயிலுங் காலு
மிம்முறை பூசை செய்க. (ககூஅ)

முடிவுநாள் பசித்து முக்கண்
மூர்த்தியைப் புத்த கத்தைப்
படியிலாக் குரவன் றன்னைப்
பூசனை பயிற்றி யெல்லிக்
கடிகொண்மங் கலத்தால் வேத
வொலியினுற் றுபிலைக் காதி
விடிவுகண் டருச்ச னுதி
விளைத்திர தத்தி னேற்றி. (ககூகூ)

அறமனை தோறு மாக்கி
யவரவ ருடங்கு நண்ண
மறலினர் நிகளஞ் சீத்து
வண்பலி பலவு மோக்கித்
திறன்மிகு மிறையும் போதச்
செறிந்தியம் பலவு நல்க
நிறைவளர் நகர்சூழ் போந்து
நின்மலன் கோயி லுய்த்து (கஎ0)

மீட்டுநற் பூசை யாற்றி
வேந்தனை யுள்ளிட் டோர்க்குத்
தீட்டுபுத் தகத்திற் சில்ல
வாக்கியந் தெரித்துச் செம்பொன்
கோட்டமில் குரவற் கீத்துக்
கொழும்பொனுந் தூசு மற்றும்
வாட்டமின் மறையோ ராதி
வெளவுற வழங்கல் வேண்டும். (கஎக)

இன்னணம் பூசை யாற்றி
னிடரெலா முலகிற் றேம்பும்
மன்னுறு நன்மை யெல்லா
மதிகண்மும் மாரி நல்கும்
சொன்னவா றீந்து ளாருந்
தொகுமெழுத் தொரோவொன் றற்கங்
குன்னருஞ் சிவலோ கத்து
ளோராயிரங் கற்பம் வாழ்வார். (கஎஉ)

ஆடிவை காசித் திங்க
ளடுத்தபூ ரணையிற் பூசை
நாடினர் தாமு முன்னை
நற்பயன் பற்று வார்கள்
ஏடெழு தூசி பாச
மீந்தவ ரெழுதி வைப்போர்
பீடுறப் பயில்வோர் சொல்வோர்
பெரிதரும் பயன்க ளாய்வோர். (கஎங)

ஆய்ந்தவர்க் கன்ன மாதி
யளிப்பவர் முதலா னோரும்
ஏய்ந்தநற் சுற்றத் தோடுஞ்
சிவபுரத் தெல்லை சேர்வார்
வீந்திடி னேடு வேறு
வரைந்தது வோமஞ் செய்க
வாய்ந்தநூல் வழங்க லீதா
லயம்புரி மரபுங் கேண்மோ. (களச)

மதிதவழ்கோ புரமிரப் புரிசைபுறஞ்
சூழ்போக்கி மணிநீர்ப் பொய்கை
பொதியவிழ்பூம் பொழிலாக்கி வைவகையா
வரணமுறை பொற்பச் செய்து
விதிபயினூ றெரிகழக மடைப்பள்ளி
முதற்பலவும் விதிபி னாக்கிக்
கதியருளு மிறைவனம ரிடமாதி
வரைகளெனக் காண்க மாதோ. (களரு)

பழனமிரு நிதிநடன மடமாதர்
பணிக்கைமத யானை பாய்மா
உழலுருளின் மணிநெடுந்தே ரூர்தியணி
யிவைபலவு முவந்து நல்கி
விழவொடுபூ சனைபெரிதும் விளைக்கவிளைத்
தவர்மீட்டும் பிறப்பின் மேவார்
குழவிமதி மிலைத்தபிரான் சிவபுரம்வாழ்ந்
தவனடிக்கீழ்க் குறுகு வாரால். (களசு)

சிவநகர்செய் தபதியரே வலினிருந்தோர்
கூலிவினை செய்தோர் பூணி
சிவநகரிற் பிறந்தவர்க ளொழுக்கமுட
னுறைந்தவர்நாள் செல்ல மாய்ந்தோர்
சிவநகரி னிறப்பமெண வெண்ணினர்சென்
றிறைஞ்சினர்சிந் தித்தோர் செல்லச்
சிவநகர்செல் பவருடனே துணைச்செல்வோர்
களுஞ்சிவலோ கத்தைச் சேர்வார். (களஎ)

சிவபணிசொற் றனமினியைம் மகஞ்சோறுந்
தெளிமுனிவ கருமஞ் சீர்சால்
தவமுரைமந் திரம்வருபா வனைபரம
ஞானமெனத் தருமவ் வைந்தும்
அவமறுபூ சனையங்கி யோம்பன்முதல்
கருமநனி யாக்கை வாட
உவகையுடன் விரதமுனுற் றுதலாதி
தவங்களென வுரைப்பர் சான்றோர். (களஅ)

மானதமு மந்தமும்பா டிதமுமென
மந்திரந்தான் மூன்று மூன்றும்
மோனமுற மனத்தகத்தே வாயகத்தே
பிறர்கேட்க மொழித லாகும்
ஆனவிவை யொன்றற்கொன் றிழிந்தனநே
ரனுமிகைமுன் விரல்கண் மூன்றில்
மேனிறுத்தல் வடமுறையா முள்ளிடுதல்
போகிபுறம் விடுத்தல் யோகி. (களகூ)

வளியிடைபிங் கலைநடுநா டியினியங்க
மந்திரிக்கின் முறையே போகக்
களிசிவனும் வீடனுகு மிரண்டுமுறுங்
கைவிரலி னிறையே சங்கின்
ஒளிவடம்புத் திரதீவி படிகமணி
புண்டரிக மணியொண் கஞ்சம்
அளிமணிநற் குசைமுடிகண் மணியிவைநே
ரொன்றற்கொன் றதிக மாமால். (கஅ0)

பரமனருட் டிருவுருவை யுளத்திருத்தல்
பாவனையப் பரமன் மெய்ந்நூல்
உரிமையினே துதலோது வித்தல்பொருள்
கேட்டல்கேட் பித்த லுள்ளம்
விரவுறநன் கிருத்தலென வைந்தாகு
ஞானமகம் விரித்த வீண்டைக்
கருமமுத லொன்றற்கொன் றதிகமிவற்
றிருபயனுங் கலப்பர் தக்கோர். (கஅக)

கருமமுதன் மகமைந்துங் கரைந்தனமா
      லிவைமுறையாற் கழிப்பி மேலாம்
அருடலைப்பட் டவர்பெருமை யறைதுநெடுங்
      கடன்முகந்த வறவ கேண்மோ
ஒருமுதலைத் தழலிடையந் தணர்சரியை
      கிரியையின ருருவின் யோகர்
திருகறுதம் மகமலரிற் காண்பர்மெய்ஞ்ஞா
      னியரெங்குந் தெரியக் காண்பார். (கஅஉ)

இறைவனமர் புரிதனக்கு விற்கிடைமூன்
      றயுதநிலத் திரியும் பாவம்
உறைகளுற்றுங் கங்கைதனக் கதற்கிரட்டி
      யெல்லையிடை யோட்டந் துட்கும்
மிறைபுரியு மும்மலமும் வேரோடு
      மகிழ்ந்தெறிந்து மெய்ஞ்ஞா னத்தின்
முறைபுரியுஞ் சிவயோகி யிடந்தனக்குக்
      கோடியிடை முடிகி யோடும். (கஅங)

சரியைமுன் மூன்றும் புரிநர்சா லோக
      முதலிய மூன்றுமே சார்வர்
துரிசறு ஞான முழப்பவ ரிறைவன்
      றுன்னல முழுவதும் பெறுவர்
விரியொளி மணிகைப் பெற்றவர் பொளிகல்
      விற்றுண விழைவுறு ரதுபோற்
பிரிவரு ஞானம் பெற்றவர் கருமம்
      பிணைந்ததன் பயன்கொளக் கருதார். (கஅச)

வளியுளர் காலும் வெளியினைத் தணவா
      மாட்சியி னுடலிரு வினையால்
நெளிதரு காலுஞ் சாக்கிரா தீத
      நிலையினிற் பெயர்தரார்க் கவற்றுன்
விளைவன சற்று மிலையவை யிரண்டும்
      விமலனே யேற்றவர் தம்பால்
உளைவன விழைவ வுளுற்றுநர்க் கடைய
      வுறுத்துவ னுறு தவனே. (கஅரு)

உடங்குறை கமலப் பாசடை நீரோ
டொற்றியா மருந்துமந் திரத்தார்
விடங்கனன் றுடற்றப் படார்வினை யுடற்ற
விடைப்புற வுயங்குறா சிவத்தின்
அடங்கிய வன்ப ரறிவவிவ் விதிகொண்
டறிவினை யறிவிடை யடக்கார்
தொடங்குறின் வினைமெய்ந் நூல்பயின் றவருந்
தொன்றுபோ லதன்பயன் சூழ்வார். (௧௮௬)

காவலன் சிறையோர் மண்ணைகோட் பட்டோர்
கதியெலா மவர்வழி யன்றி
மேவரி ததுபோ லுடறனக் குள்ள
வினையெலாம் விமலனால் விரவச்
சாவதும் பிறப்புங் கடந்தபே ரின்பந்
தணப்புறா திருப்பதே யல்லால்
ஆவதா னமக்கென் றொன்றையும் புரியா
ரருள்வழிப் பட்டமா தவரும். (௧௮௭)

ஆதலா லவர்பா னிகழ்செய லனைத்து
மமலனா ரருட்செய லாகும்
காதலா லவர்க்கே பூசனை புரிக
கரிசறப் பூசனை புரிந்தோர்
மேதகு மிறைவ னுலகுபெற் றிருந்து
விரிசத நியுதகற் பங்கள்
போதலும் பின்றை மாயவன் முதலோர்
போகபூ மிகளெல்லாம் வாழ்ந்து. (௧௮௮)

தவம்புரி குலத்து மண்ணிடைத் தோன்றித்
தம்பிரான் பூசையா தரவால்
அவந்தெறப் புரிந்து ஞானமுற் றின்பத்
தழுந்துவ ரமலனார் பதத்தில்
நிவந்தவா தரவு கடைமுதன் மூன்று
நிகழ்கடை யாதர வுடையோர்
துவந்துவ மூன்று பிறப்படைந் தொழித்துச்
சோதியு ளிரண்டறக் கலப்பார். (௧௮௯)

இடையின தரவு பெற்றவர் சிவலோ
கத்திடை வாழ்ந்திரு பிறப்புப்
படிமிசை யெடுத்துத் தேசிக னருளாற்
பயின்றுஞா னத்தைவீ டுறுவார்
மடமறு முதன்மை யாதர வுடையார்
வள்ளலா ருலகுவாழ்ந் தொற்றை
உடனிலத் தெடுத்து முப்பொரு ளியல்பு
முணர்ந்தின்பத் துணர்விறந் திருப்பார். (ககூ0)

முனிவ ஞானயோ கத்தினர் பெருமையை
மொழிந்தன முலகத்தோர்
துனிவு தீர்தரப் புரிதரு தருமமுஞ்
சொல்லுது மறிதன்மம்
கனிவி னீதலே யெரியினை யோம்பலே
கடவுளா லயஞ்செய்தல்
புனிதன் பூசனை நான்குமா மிவற்றினுற்
புகுதரும் பலமெல்லாம். (ககூக)

ஈத லாவது பாத்திர மென்பவர்க்
கிடம்பொழு துறநூலின்
நீதி யாதர வடைந்துதா தாவெனு
நீர்மையர் பொருணல்கல்
ஓது பாவெனல் பாவமற் றதினெடுத்
துறுத்துத திரமென்ப
தாத லாற்கரி சறுத்துநற் கதியினுய்ப்
பவர்கள்பாத் திரமாவார். (ககூஉ)

கரும முற்றவர் கற்றறி மேதையர்
காழின்மந் திரஞ்சான்றோர்
பெருமை யோகினர் ஞானிய ரிவர்க்குளம்
பெட்டுத விடினேதும்
ஒருபி றப்புறு ருயிர மூழிபே
ரூழியும் பயனிற்கும்
பொருவி லாச்சிவ ஞானயோ கத்தரே
பொருவில்பாத் திரமாவார். (ககூங)

திரைசெய் நீர்விழுஞ் சிலையினைப் புணையன்றிச்
சிலகரை யேற்றுதால்
புரைசெய் பாவத்தி னழுந்தினார் தமைப்புரை
யொழிந்தவர் தாமன்றி
நிரைசெய் மேற்கதி செலுத்தவல் லாரலர்
நிகழ்கரி சினரற்றால்
உரைசெய் பாத்திர மபாத்திர மறிந்தளித்
தொழிக்கநற் பயன்வேட்டோர். (௧௯௪)

அந்த ணாளர்கள் கோடியோர்க் கருத்திய
வரும்பயன் வறிதென்ன
வந்து மல்குறும் பிச்சைஞா னியர்கரம்
வழங்குவார்க் கெனிலன்பால்
வெந்த பல்வகை யுணவுதூ சருங்கலன்
வேண்டிய கொடையெல்லாம்
எந்தை யோமொரு மித்தவன் னவர்க்கலா
லெண்ணுறு ரறிந்தோரே. (௧௯௫)

தென்பு லத்தவர்க் குரியநாண் ஞானியர்க்
கருத்துநர் சிவலோகத்
தின்ப ருந்துற மூவெழு சுற்றமு
மிருப்பருட் டினர்நம்பால்
அன்பின் வந்தனை புரிந்துதம் மனையிடை
யடுத்தஞா னியர்க்கூட்டின்
துன்ப மல்கள றுரீஇயவர் குலமெலாந்
துன்னுவர் சிவலோகம். (௧௯௬)

கொண்டு விற்றல்கூ லித்தொழி லுழுதல்பொய்
கூறுதல் வெகுளித்தீ
மண்ட லென்றவற் றலகிடன் மெழுகறீ
வளர்த்தனீ ரரிசிக்கண்
உண்டு பாவமீ தொழிவுறு மைம்முகத்
தொருவனை யெரிதன்னைக்
கண்ட ஞானியைக் குரவனை நித்தலும்
பூசனை காண்பார்க்கே. (௧௯௭

எடுத்த வையிரு தொழிலையு மியம்பிய
　　விறைவனு தியர்க்கென்றே
தொடப்பிற் பாவங்க ளிலைதமக் கென்றிடிற்
　　சூழுமவ் வொருபானுல்
அடுக்கும் பாவமும் விதித்தன விலக்கின
　　வகற்றியாற் றலின்வேறு
மடுக்கும் பாவமுந் தபவெணிற் செய்கமுன்
　　வகுத்தவர் தமைப்பூசை. (கசுஅ)

ஈச னுதியர்க் களித்தவூ ணவிழொன்றற்
　　கீரைஞ்ஞா றெனுமாண்டு
தேசு லாஞ்சிவ புரத்திருப் பார்செழுங்
　　கருணைநெய் ததிகூடில்
பேசும் வான்பயன் றசமடங் காம்பெருஞ்
　　சுவையசொன் றியின்பேதம்
வாச நோலையா திகட்குநூ றுயிர
　　வரிசையி னுயர்கிற்கும். (கசுகூ)

சிறந்த வேடத்தி னடுப்பினு மஃதின்றிச்
　　சேரினு மொழுக்கெல்லாம்
அறிந்து ளாரெனச் சாரினு முள்ளவ
　　ரெனவரு வாரேனும்
அறிந்த மெய்யடி யார்களைப் பரமென்றே
　　யயிர்ப்பறத் தெளிந்தன்பால்
பிறந்த வான்பயன் பெறவுளம் விழைந்துளார்
　　பெரிதும்பூ சனைசெய்வார். (உ௦௦)

அடியர் தங்களை யாசுரைத் தவரது
　　கேட்டவர் கேட்பித்தோர்
உடன்வி ராவினர் மூட்டின ருடன்பட
　　லுற்றவ ரிவரெல்லாம்
விடிவில் வெந்நர கழுந்துவ ராதலான்
　　விமலமெய்ப் பொருளென்றே
கடிகொள் பூசனை புரிவத லாற்கரி
　　சடியர்பா லுரையற்க. (உ௦க)

மனத்தி னல்வடி வாலவ மதிக்கினும்
 வாய்பிள வாக்கும்பி
இனத்தி னேடுவீழ்ந் தழுந்துவ ரவற்றினு
 மியல்பலா தனசெய்யல்
நுனித்த வாலறி வுடையவ பாத்திர
 நுவன்றும்பாத் திரமல்லான்
தனக்கி யாவதும் புரியலென் றுமவன்
 றன்மையுங் கிளப்பாமால். (உ0உ)

அமலனடிக் கன்பிலார் பிறப்பை யஞ்சா
 ரருந்தவரென் றுலகுதமை மதித்துப் பேண
விமலனடி யவர்கோலத் தொளித்தோ ரன்னோர்
 விதியினவர்க் களிப்பினுமவ் வீகை வித்தும்
சமமறுநெல் லுவர்நிலத்து மனுவிற் றாவுந்
 தக்கவரா குதிசாம்ப ரிடத்தும் வாட்கண்
கமலமனார் விழைவலிபின் மாட்டு மென்னுக்
 கழியுமது போல்வாளா கழியு மன்றே. (உ0௩)

பாத்திரமு மபாத்திரமு முயிரே யொன்று
 பயனுக்க வொன்றுக்காப் பண்பென் னோவென்
றாத்தனுரை யிடத்தேது மயிர்த்த னீரி
 னழுந்தாத மரத்தொடியைந் தயமேற் றொக்க
மூத்தகனங் கரைசேர்க்கு மரத்தொன் றுதேன்
 முழுகுமது தானுமிந்த முறைமை யன்றோ
காத்தருளு மிறைவனொடு கலந்தார் நன்மை
 காட்டுவதுங் கலவார்காட் டாத வாறும். (உ0௪)

குருடர்முட வர்கள்விருத்தர் நோயி னோர்நல்
 குரவுடையோர் பாலகரா தியரு மீவோர்க்
குருகலுறு மிரக்கமிகி னளிக்கத் தக்கா
 ரொற்றையங்காற் கொடிஞ்சிமணிப் பொலந்தே ருரு
பரிதிநடு வானெழுங்கால் வந்தோ ரெல்லாம் [ம்
 பாத்திரமென் றவர்தமக்கும் பரிந்து பூசை
புரிகவினி யருந்தவதா தாவென் பாரைப்
 புகன்றுபின்பா தரவுமற்றும் புகல்வா மன்றே.(உ0ரு)

வணக்கம்வரை யாதளித்த லுறவு கோப
மாற்றலிரக் கமுமுடையார் தாதா வென்பார்
இணக்கமுறு மிருப்பெழுகை விரைந்து போத
லெதிர்கொள்கை தவிசினிடை யிருத்தல் பூசை
பிணக்கமற வுஞற்றலின்சொ லாதி தம்மாற்
பெட்டுவைப்புச் செயல்பிரியி னுடங்கு சேறல்
கணித்தவிவை யேழானும் பயன்கள் கொள்வார்
கரிசிலர்க ணல்கூர்ந்த காலு மாதோ. (உ0சு)

பாத்திரத்தின் மிக்கபாத் திரமெய்ஞ் ஞானி
படர்ந்திரவா னவனிருக்கும் பாங்க ரண்மி
ஈத்திடுக வவனென்றும் வேண்டா னேனு
மீகுநர்க்குப் பயன்கருதி யேற்றுக் கொள்வான்
வாய்த்திடுமா தரவிரக்கத் தோடு மீவான்
வாங்கினரோ டரனுலக மருவி வாழ்வன்
வீத்திடுமா தரவிரக்கத் தீந்தோ ரெல்லாம்
வெந்நிரயத் தழுந்துவரேற் றவர்க ளோடும். (உ0எ)

தருகவெனு மிடியர்தமை யொருவி யன்றே
தக்கபெரி யவர்யாங்க ணுள்ளா ரென்று
தருவுநர்கள் சிறந்தவர்க ளல்ல ரில்லாத்
துப்பினரில் லாயினற மின்றே யன்றே
மருவியுளத் தெழுங்காதல் பத்தி யற்றான்
வழாதுகடைப் பிடித்திடுதல் சிரத்தை யிந்த
இருதிறத்தி னின்சொன்முதல் கொண்டு செய்பு
மினிமையா தரவுவிதி வழிபா டாதி. (உ0அ)

காசிகுருக் கேத்திரங்கா ளத்தி காஞ்சி
கனகசபை சேதுமுத லிறைவன் வைப்பும்
தேசுதிகழ் சீபரிபூ ரணவிவ் வோங்கல்
செந்தில்பரங் குன்றாதி யெமது வைப்பும்
வீசுதிரைக் கங்கைநதி முதலாந் தீர்த்த
வியன்கரையும் விரிகடலின் கரையுங் கண்டை
ஓசைபெழு மானினஞ்சே ரிடமு முண்மை
யுணர்ந்தவர்வா ழிடமுமிட மாகு மன்றே. (உ0சு)

இரவியைவெண் மதியையர வடுக்குங் கால
மீரயன முதற்பலவாங் கால மீதற்
குரியவெலா முரைத்தனமீண் டுரைத்தா முன்னே
யும்பனு லயமியற்ற லீண்டை யீத்தல்
எரிவளர்த்த லொடுபொதுவி னுரைத்துப் போந்த
வீசன்பூ சனைமுன்னுந் தொகுத்தா மேனும்
அரியயனுக் கரியபிரான் பூசை யாற்று
மத்தருமஞ் சிறப்பினுமற் றறைகிற் பாமால். (உகㅇ)

அடருயிர்கொ லாமைபொறை வாய்மை நாணே
யாதரவே யடக்கமே யீகை தீமை
உடறவம்பா வனையிறைவன் பூசை பத்து
மொண்டரும மிறைவன்பூ சனைக்கு மற்றைத்
தொடர்தருமொன் பதுமுறுப்பா முறுப்பு முற்றுஞ்
சூழ்ந்திறைவன் பூசனையை யுஞற்றி னோரும்
படருமவற் றுட்சிலகொண் டிறைவன் பூசை
பண்ணினருஞ் சிவலோகம் பற்றி வாழ்வார். (உகக)

அத்தகைய சிவபுரிவாழ் வாரின் பொன்றே
யல்லாது துன்பமறி யாரவ் வாழ்வும்
கைத்தமலன் பூசனைபெட் டவரே யெல்லாங்
கழன்றுமுழுப் பாழ்வெளியிற் கலந்து வாழ்வார்
பைத்தவினை பறிக்குமுறுப் பவற்று ளியாதும்
பற்றாது சிவபூசை பரித்து ளாரும்
மெய்த்தபயன் பெறுவரந்தப் பயனுந் தேற
விரித்துரைத்தும் வினைத்திருக்கை மிளிர்த்து ளாயே.

அழுக்கு ளத்தினு முடலினு மறுதொரு
நாளருச் சனைசெய்தோர்
வழுக்கு வன்றடி விழைந்துணுங் குய்யக
வுலகினை மரீஇவாழ்வார்
ஒழுக்கு வெஞ்சினக் கண்ணரா யிருதின
மும்பனுக் கலரிட்டோர்
விழுக்க ளுண்டுதேக் கெறிதரு மரக்கர்வாழ்
வியனுல கமர்கிற்பார். (உகந)

நயக்க மூன்றுநா ணம்பன்பூ சனைநனி
நடவிய வூன்றின்போர்
இயக்கர் வாழுல கத்தினை யெய்துவ
ரின்னிசை பாத்தன்மை
வியக்கு மெய்ப்பொரு ளறிகிலார் நான்குபா
விமலன்மு னுரைத்தாடின்
உயக்க மோப்புகாந் தருவத்தை யேய்ந்தின்ப
வுததியிற் படிவாரால். (உகச)

உலகு ளார்தமைப் புகழவேட் டைந்தின
மும்பன்பூ சனைசெய்தோர்
இலகு வானிறை யுலகுறு பல்வகை
யின்பமுந் திளைப்பாரால்
திலக வாணுத லார்விழை வாலறு
தினம்பரிந் தனர்செய்தோர்
நிலவு வான்மதி யுலகில்வேட் டாங்கின்ப
நித்தலு நுகர்வாரால். (உகரு)

வேறு வேறுள விழைவினு லெழுதினம்
விளங்குபூ சனைசெய்தோர்
ஈறு சேரும் வளம்பதிப் பிரமலோ
கத்திலின் பினிதார்வார்
கூறி வேதகா யத்திரி யெட்டுநா
ளருச்சனை குயின்றோரும்
ஊறு போகங்கண் முழுவது மப்பதி
யுண்டுளப் பரிவீர்ப்பார். (உகசு)

ஒருவ னேயொரு மூவரென் றென்பது
தினமருச் சனையுய்த்தோர்
பெருகு போகங்கள் வைகுந்த வெல்லையிற்
பெட்டபெட் டாங்கேய்வார்
பொருளி னுலொழுக் காலிழிந் தோர்களும்
பொருவிலன் புளதாமேல்
திருநி லாவியான் றவர்க்குமுன் னுரைத்தவச்
சிவநக ரடைவாரால். (உகஎ)

ஏன்ற வன்பினுற் பொருளினு லொழுக்கினு
 லீசனைப் பணிந்தோரும்
ஆன்ற வவ்வநற் பயன்றனக் கேன்றவா
 னுலகினைத் தலைப்பட்டுக்
கான்ற பேரெழி லரம்பையர்க் கலவியங்
 களிதிளைத் தொரீஇமண்ணில்
தோன்றி யெவ்வகை யுறுப்பொடும் பூசித்துத்
 துன்னுவர் சிவலோகம். (உ௧அ)

விளங்க வோதுமிவ் வுலகங்கண் மேலுமூன்
 றுலகங்கள் விராய்நிற்கும்
வளங்கு லாவுநம் மூலகொன்று நிலையுமவ்
 வைப்பின்மேன் மூலைக்கோட்டில்
துளங்கு நூலிடை யுமையவ ளுலகுறுந்
 துலங்குமப் பதிமேலால்
களங்கு லாவிய கண்டர்வா ழுலகுறுங்
 காழ்வினைக் குறும்பட்டோய். (உ௧௯)

எம்மை யன்பொடு பூசனை புரிந்தவ
 ரெம்முடை யுலகத்தார்
அம்மை மென்மலர்ப் பாதபூ சனைசெய்தோ
 ரவளுடை யுலகத்தார்
மம்ம ரின்றியெந் தையைவழி பட்டவர்
 வயங்கவ னுலகத்தார்
செம்ம னல்குமச் சிவபுர மடைந்தவர்
 திருமுருர் பதஞ்சேர்வார். (உஉ0)

அலகை யாதியாச் சிவபுர மிறுதியா
 வடைவின்முற் றுபுநிற்கும்
குலவு சித்திக ளெட்டுநற் குணங்களு
 மிம்முறை கொண்டேறும்
நிலம்வ னங்கனல் வளிவெளி மனமகங்
 காரமே விரிபுந்தி
நலிவி லொண்குண மூலமு முராரித
 னல்லக விளக்காகும். (உஉ௧)

புந்தி நீங்கிய வெட்டும்வண் கமலத்தோன்
புந்தியைத் தெருள்விக்கும்
இந்த வாறுகீ ழுள்ளவர்க் கொரோவொன் றங்
கிகப்புறு மிழிந்தோரும்
அந்தி வானிறத் தமலன்பூ சனையினு
லடைவினி லுயர்நதேறி
முந்து பார்முத லொன்பதும் விளக்குறு
முதன்மையுள் ளவராவார். (உஉஉ)

இலக்கம் வண்டறை யாகவிட் டெறிந்தக
விடைப்பிழை யாதற்றே
நலக்க நம்பிராற் குஞற்றிய வினைகளு
நன்மையிற் பிழையாதால்
குலக்க ணந்தொழு மமலனும் வினைதொறுங்
குருலகு வெனும்பேதத்
துலக்க ரும்பயன் றருமினிப் பாதகத்
துண்மையு முரைப்பாமால். (உஉங)

முன்ன ருஞற்றும் பாதகரே
முதிர்வா தனையான் மறுவலுந்தாம்
துன்னி விளைப்பா ரவையெல்லாந்
தூலஞ் சூக்க மதிசூக்கம்
என்ன மூன்றுந் தூலமீங்
கியம்பப் படுமா லதுமூன்றும்
உன்னு மனவாக் குக்காயத்
தொன்று நான்கு வகைப்படுமால். (உஉச)

பிறனில் விழைதல் பொருள்விழைதல்
பிறர்தம் பொருட்கே டெணுயிர்கட்
கிறுதி யெண்ணன் மனத்தனவா
மேங்கு மழுகை கோளுரைபொய்
அறைதல் புறங்கூ றுதல்வாக்கி
னுவ பிறனில் புணர்ச்சியுயிர்
தெறுதல் பழியூ ணுணல்பிறர்சீர்
தெவ்வ னுங்கும் வடிவினவே. (உஉரு)

அளந்த வவைதா மொன்றுபல
வாக விரியு மவையெல்லாம்
கிளந்த வதிபா தகமாதி
மூன்றுட் கெழும வடங்கியிடும்
தளேந்த வதிபா தகமாபா
தகமே யுபபா தகமென்ன
விளங்கு மவையொன் றற்கொன்று
வீறு தணிந்த நிலையினவே. (உஉசு)

புரையி லிறைக்கு மவன்மொழிக்கும்
பொருவு முயர்வு முன்னினரும்
உரைசெய் தவரு நிந்தையவ
ரோடுங் குரவர்க் குரைத்தோரும்
கரைசெ யிறைவன் வாக்கியபுத்
தகமக் கடவு டிரவியங்கள்
வரைசெய் குரவன் பொருளிவைவெள
வினரு மதிபா தகரென்பார். (உஉஎ)

கடவுள் பொருளேக் கவர்ந்தோரைக்
கனகங் கொடுத்து மடர்ப்பரிதேல்
விடுக வுறைந்த தேசத்தை
விடாது பயிலின் மற்றவரும்
அடரு மதிபா தகம்புரிந்தோ
ராவ ரதிபா தகக்கணித்தாய்த்
தொடரும் வினேயு முளததுவுந்
தொகுத்த வதிபா தகத்தடங்கும். (உஉஅ)

பொருவி லிறையா சாற்கன்பு
புரியார் பூசை புகழ்ந்துவவார்
இருவர் தமக்கும் வறங்கூர்கா
லேது முதவார் பொருளிழப்பின்
மருவும் பணியேன் றனவிளேயார்
வெளவு நியதி தனேவிடுப்பார்
பெரிய தவத்தோர் தமையிகழ்வார்
பிரானே யிகழ்ந்தே ரிவர்நிசர்ப்பார். (உஉகூ)

புனித முடலோ டுடம்பயிற்றுப்
பூசை புரியா தானூலை
இனிது பயில்வார் பயில்விப்பா
ரேற்பார் பொருளாய் வார்வரைவார்
துனிவின் விடுத்துப் புறநூலைச்
சூழ்வா ரதுசேர் புத்தகத்தை
நனிவிற் றிடுவா ரிவர்நம்பன்
வாக்கை யிகழ்ந்தார் நல்லினமே. (உ௲௦)

ஆரியற் பணியா தறம்பயி னூலை
யாதரிப் பார்பணி புரியார்
ஆரியன் பணிசெய் பவர்தமை யொழிப்பா
ரடுமிடர் மூப்புவந் துறுங்கால்
ஆரியற் றணப்பா ரவன்மனை புதல்வ
ராதியை யவமதித் துழல்வார்
ஆரியற் கிகலி யெதிருரை கொடுப்பா
ராரியற் பழித்தவர்க் கினமே. (உ௲க)

ஐந்தெனப் படுமா பாதக மவைதா
மருமறை யாய்ந்தவந் தணனைச்
சிந்துற வடர்த்த றேறல்வாய் மடுத்தல்
செம்பொனைக் கரந்தனர் வெளவல்
கொந்தெழிற் குரவன் மனைவியைக் கலத்தல்
கோடுமிவ் வினைஞரைக் கூடல்
இந்தவல் வினையின் மருங்கியல் வினையு
மிவற்றினு ளடங்குவ மாதோ. (உ௲உ)

வெகுளியா தியின்வே தியர்தமை வைதல்
சபையிடை மேதையர்ப் பழித்தல்
அகனுறத் தன்னை மதித்தலா ரியனோ
டிகறனீர் நுகர்ச்சியிற் படரான்
பகவிடை விலக்கல் பகர்ந்துபின் கொடாமை
பார்த்திபன் செவிபிறர் குறையைப்
புகறன்முக் கணனு தியர்நிலம் பறித்த
லாதிபூ சுரர்க்கொலைக் கினமே. (உ௲௩)

மறைபயின் றொழித்தல் வளரெரி விடுத்த
விருமுது குரவர்சொன் மறுத்தல்
அறவரே தோழ ரிவர்க்களு ருறுத்த
லறம்விலக் கியபொரு ணுகர்தல்
நெறிபதி தொழுவ நெடிபடு கானி
னெருப்பிடன் மிருகங்கள் வருத்தல்
பறைதரா விழிசொல் பறைந்ததாத் தெளியப்
பறைதல்கண் ணுகர்வினைக் கினமே. (உ௩௪)

வறியவ ருறையுள் வளநிதி கரிதேர்
வாம்பரி களமர்பன் மணியும்
செறியிலைத் தெங்கு கமுகுதாற் றரம்பை
தீங்கழை செந்நெலா திகளும்
வெறிகமழ் சந்தங் குங்கும மாதி
விரைகளு முடையணி யினமும்
முறிவில்பல் பண்டக் கலன்களுங் கவர்தன்
முந்துபொன் கவர்வினைக் கினமே. (உ௩௫)

கொடைக்குரி யவரைப் பெற்றுமீ யாது
குமரியை யில்வயிற் செறித்தல்
படைக்கணில் லவடன் றுரிசறிந் தோர்ந்து
பயிறனீத் தவர்மனை புதல்வன்
தொடைக்குரி மருகி யுடன்பிறந் தவளைத்
தூமொழிப் புதல்வியை முயங்கல்
கடைப்புலை மகளைக் கலத்தலுங் குரவன்
காதலாட் புணர்வினைக் கினமே. (உ௩௬)

மிறைதரு முபபா தகம்பல வவையும்
விளம்புது மெய்த்தவ வறிக
மறையவர்க் கமைத்த பொருள்பெரி யவர்த
மாண்பொருள் கவர்தலன் னவற்றைப்
பறைதரப் பிறராற் கெடுத்தனற் குலத்தாற்
பயிலறி வருளினுற் றருக்கல்
நிறைதவத் தினரை வெகுளுத லெள்ள
னீத்திடல் செய்ந்நன்றி கோறல். (உ௩௭)

இறப்பவுங் காமப் புணர்ப்புறல் வறிது
மீத்துறு தீட்டலே வேட்டல்
சிறப்பறு வஞ்சம் வயிரமுங் கோட
ரீமுனர் மணந்த வளிருப்ப
நறக்குழன் மகளீர் நன்னல முண்டு
நாணறல் கற்புடை யவளைப்
பெறத்தகு மெளிய ளென்றெண லவடோள்
பிணைதர வலித்தல்கட் புணர்ச்சி. (உ௩அ)

பழியறு கன்னிக் கிழிவெடுத் துரைத்தல்
பருவநல் லறிவுடை யவளைக்
கழியமெய் யுணர்ந்தாற் கன்றிமற் றொருவற்
களித்தல்கண் டிடுமண மெட்டின்
இழிவறு பிரம மாதியைக் தன்றி
யேனைய மன்றலிற் புணர்தல்
அழிதன்மா லையவென் றறத்துறந் தவரை
யாடக மாதிசென் றிரத்தல். (உ௩கூ)

தளர்விடை யூற்றிற் பதியினை நீங்கல்
சகியினைத் தனத்தனற் குணரைக்
கிளைஞரைத் தரும முடையரைப் பதியைக்
கேழில்வீ ரரைவசி யர்களை
அளிதரு பசுவைத் தனக்கெனத் தருவை
யாலயத் தருக்களைக் கோறல்
துளிமது மலரைத் தனக்கெனக் குற்ற
றுரிசினர் கைப்பொரு ளிரத்தல். (உ௪0)

கண்ணுதற் பரமன் றிருப்பணிக் குரியார்
கவையடி யான்முதல் கவர்தல்
அண்ணல்பூ சனையின் பயன்றனைத் தான்செ
யருந்தடா கத்தினைப் பொழிலை
நண்ணிய மனையைப் புதல்வரை விற்ற
னல்லன தீயன பயத்தல்
புண்ணிய பாவ மெனத்தெரி கல்லாப்
பொத்தினைப் பூசுரன் படுதல். (உ௪க)

தருவலென் றேற்ற பொருள்கொடா தொழித
றருகுவல் பாகமென் றொருவர்
இருநிலம் விளைத்து முழுவதுங் கோட
லில்லவ ளணிகல மழித்தல்
விரதியர் பொருளை நயந்தனர் கோடல்
வினைதபத் தரும்பொருள் வாங்கல்
பரவுறு வசிய மாதியிற் செம்பொன்
பற்றல்வில் லாதன விற்றல். (உசஉ)

புகழினைக் குறித்து நியதிகைக் கோடல்
பொருள்களான் மறைமுதல் கொள்ளல்
திகழ்நடம் விஞ்ஞை மாதிய மதித்துத்
திரிதனற் சமயநின் றவர்கள்
இகழ்பசு நூலை வழியெனப் பயிற
விரும்பொரு ளேற்றுநூல் பயிற்றல்
நிகழ்தரு மவலத் தருக்கமே யறைதல்
படிமத்தைப் பரித்துநீத் திடுதல். (உசஙு)

வானவ ரெரிமந் திரமது கொடுத்த
வரதரை யோம்புறு திகத்தல்
ஆனரு மறையோ ரறவரைப் பிழைத்த
லரசனுக் கிழிப்புரை கிளத்தல்
ஈனமில் பிதிரர் செய்கடன் றவிர்த
லிருவினை நரகொடு துறக்கம்
ஊனமி லிறையு மில்லையென் றுரைத்த
லுண்மது மகளிர்தோள் கலத்தல். (உசச)

பூரணை யிருது மதிபகல் பிதிரர்ப்
போற்றுநா ளாதியின் மகளிர்
வாரணி கொங்கை மணத்தனீர்க் கலத்தல்
வண்பசுப் புணர்தனட் புடைத்தல்
ஈரமில் கொடுஞ்சொற் கிளத்தனீர்க் கோட்டை
யிறுத்தல்கூ பத்தடந் தூர்த்தல்
வீரமுற் றமர்தன் சமயங்கால் கோறல்
விண்ணவர் விமானங்கள் சிதர்த்தல். (உசரு)

அமிழ்தமே யாகப் பகாதுண லன்றி
யனைத்துமா மருஞ்சுவை கொழிக்குந்
தமிழ்முனி யுபபா தகமத னினமுஞ்
சழக்கறக் கிளக்குதுந் தெரிக
இமிழ்மறை யாளர் தாபதர் சகிகன்
னியர்பசு விவர்வினைக் கூறும்
நிமிர்தர விழைத்த னெஞ்சழுக் காற்றி
னிறுவல்பா வையர்பழி நாட்டல். (உசசு)

எரிவளர் சாலை கோயிலா னிலைநீ
ரெறிகுளம் வீதிவெற் பீமம்
விரிமலர் நந்த வனந்தரு நீழன்
மேடவல் சிலைவினை நிலமெய்
தெரிதவர் வளாக முவர்நில முறையு
டிருநதி யறுகுபைந் தும்பை
நெரிநிலம் வழிவன் மீகமற் றிவற்றி
னிருவகை யியக்கமு நீத்தல். (உசஎ)

பிறர்நிதி வேந்தன் றனக்குறக் காட்டல்
பேனநீர் தனில்வினை யாடல்
உறவிகல் கடந்தோர்க் குறுகுல மாதி
யாய்தலொண் வழியிடை தடுத்தல்
மறலிய வழக்கிற் றெளித்தசொல் சொலாமை
மாற்றல னுயிர்கரந் திறுத்தல்
தெறல்வினைத் தூண்டி லாதிய செய்தல்
செயுமவை கோடல்பொய் கிளத்தல். (உசஅ)

ஆருயிர் மயங்க மருந்திட லதிதி
யாதியோர் பசிமுத லொருமை
வாரமற் றடியர் பாலிரங் காமை
மற்றுமத் தொழும்பரை யொறுத்தல்
பேருறு வருண நிலையிவை சிதைத்தல்
பெருநிலத் துயிர்தப நடத்தல்
சீரிய சுற்றம் வேந்தனை தியர்க்குஞ்
செயிர்வினை முடித்திடக் கருதல். (உசகூ)

ஆவினை யினத்தி னீக்கலான் பிணியை
யகற்றுதல் செயாமையா னேறு
நோவவன் பீச முடைத்தலவ் விரண்டி
ஞேன்சுமை யுறுத்தல்வே தியர்க்குத்
தாவினை யுஞற்றன் மதுமண மோத்த
றரணிகா வலனெனப் பிறந்தும்
தேவர்கட் கவியூண் கொடாமைமூத் தவர்நோய்
செறிநரா தியர்க்கிரங் காமை. (௨௫0)

ஊனுண வெண்ணல் கொலையதற் கிரக்க
முருமைமற் றிடைவிலக் காமை
ஏனைய விழிவுஞ் செய்யவஞ் சாமை
யிறுத்திடப் பிறவுயிர் வளர்த்தல்
ஆனவர்ச் சனையீ சன்பணி சிறிது
மாற்றிலே மெனவிரங் காமை
பேனநீர்க் கடலிற் கலங்கொடு சேறல்
பெட்டுவே சையர்நலந் திளைத்தல். (௨௫௧)

வினைபுரி யாளர்க் குள்ளதீ யாமை
வெய்யகோ னடத்தல்வெங் கோலின்
முனைவர்பா லேற்றல் கள்ளனை யறிந்து
நல்லனென் றேமொழிந் தகற்றல்
இனைதரக் கள்ள னென்றுநல் லவனை
யெண்ணல்கள் ளற்குடன் படுதல்
புனைதரு கள்ளத் தொழில்சொலல் பயிற்றல்
புரையறக் கள்ளனைச் சார்தல். (௨௫௨)

பாறயி ரிழுது தயிலநீர் கூலம்
பட்டுவார் கவரிதண் கவிகை
நாறுமூன் றசைசங் கிதைவிரி மதலை
நகைமணி யிரும்புசெம் பாதி
வீறிலி திரண மாயினும் பிறர்பால்
வெறுத்தன் கரவினுற் கோடல்
தேறுக வுபபா தகக்கின மென்று
தெள்ளிய வொள்ளறி வுடையோய். (௨௫௩)

ஆடவர் மகளே மானிடர் தேவ
ராகவிவ் வியற்றுறி னவ்வ
பாடழி பயனைப் பயந்தலா தொழியா
பார்த்திப ஞெறுத்திடப் பட்டோர்
பீடுறு குரவன் மெய்படி யவராற்
பிரித்திடப் பட்டவர்க் கெல்லாம்
நீடுறு பயனெய் தாவினி யறம்பா
வப்பய னிலைமுறை கிளப்பாம். (உருச)

அன்னநீர் செருத்தலா ஞடையாதி பல்லவும்
நன்னர்நெஞ் சுவப்புற நயந்தளித்து ளோர்களும்
மன்னுமீச ஞதியோரை வணக்கமுற்றி ஞேர்களும்
என்னருந் தெனுதிக்கி னெய்திமே லியங்குவார். (உருரு)

இரதமாதி யூர்ந்துபல் லியமியம்ப வியவர்கள்
விரசமந்த் மாருதம் விராயியங்க நெறியெலாம்
பரவுபல் வளத்தபோகம் பண்பினூர்ந்து செல்லுறும்
வரதர்தம்மை நடுவனு மகிழ்ந்தெதிர்ந்து தவிசுறீஇ. ()

காதலோடு பூசனை களுற்றிநீயி ரெம்பிரான்
வேதநீதி யாற்றினீர் விண்ணினின்ப மேய்ந்துமுன்
பாதகத்தி னெஞ்சிய பயனருந்த விவ்வயிற்
போதுகென்ன நன்றெனுப் போகபூமி யெய்துவார். ()

என்றவெல்லை முனிவர னிறைஞ்சிவே லிறைவனை
ஒன்றுதான்வி னவுவா னுதவினுரை யோதுழி
முன்றலைக்க ணன்னநீர் மொழிந்ததென்னை யென்றனும்
குன்றிறுக்கு மிளவலுங் குறுமுனிக்கி தருளுமே. (உருஅ)

பொருண்மிகு மூர்த்தி யாதி போக்கருங் கொடைகட் கெல்லாம்
பொருண்மிகா வன்னந் தெண்ணீர்ப் போக்கருங் கொடையே
பொருண்மிகு மூர்த்தி யாதி பூத்திடும் பயத்தி னூங்குப் [மேலாம்
பொருண்மிகா வன்னந் தெண்ணீர் பூத்திடும் பயன்மேம் பாட்டால்.

பிணிபல வவற்றுள் மேலாம் பிணிபசி யதன்பா லான
பிணிநறுந் தெண்ணீர் வேட்கை பிணியிவை யுயிர்கட் கெல்லாம்
தணிமருந் தன்னந் தெண்ணீர் சார்பசி யொழிவி னுண்டாம்
தணிவில்பல் வேட்கை நீக்கு மவையெலாந் தமக்குப் பின்னும்.

உடலினை வளர்த்த லானு முடலினாற் கிளந்த வேனை
மடனிகு மறங்க ளெல்லாம் வளர்த்திட லானு நீத்தோர்
கடவுள ராதி யோரு முணாவினைக் கருத லானும்
தொடர்தரு பல்லாற் றானுந் துப்பளித் திடுதன் மேலாம். ()

ஆதலா லன்னந் தெண்ணீ ரவற்றினை முன்னர்ச் சொற்றும்
பூதவன் பரிணா மத்தைப் போட்டுநற் பூத சாரத்
தோதரு துறக்கஞ் செல்வோ ருறுமுறை தொகுத்தா மிப்பால்
பாதகர் பூத தேகம் படர்ந்துறு முறையுஞ் சொல்வாம். (௧௬௨)

கருவிளங் குழவி பாலர் காளையர் விருத்த ராக
மருவுட னுகர்ச்சி யற்ற மாத்திரை யறிந்து தென்பால்
தருமன தேவ லாளர் சார்ந்தனர் கொண்டு போத
வெருவுற நெறியின் முற்றும் வேதனை யனந்த கோடி. (உ௬௩)

சுழல்விழி யங்கி காலச் சுடர்ந்தெரி குஞ்சி பொங்கத்
தழனிமிர் திறலின் முற்றுந் தறுகண்வன் றூதர் கையில்
மழலைமென் கிள்ளை பூசை வாயகப் பட்டாங் கல்லாந்
துழலைபாய் மனத்தர் பாசப் பிணிப்பொடு முறுவர் சில்லோர்.

கொடிற்றினைத் துளைத்துக் கோத்த கொடுந்தொடர்ப் பட்டுச்
மிடற்றினை யிறுக்கி யாத்த வீசுபா சத்திற் செல்வோர் [செல்வோர்
உடற்றுபு நாசி யண்ணா மோட்டம்வார் குய்யங் கோத்துப்
பிடித்தனர் பாச மீர்ப்பப் பெயர்குவர் சிற்சி லோரே. (உ௬௫)

கடகரி யொறுப்ப வேங்கை கதழ்ந்துதாய்த் துமிப்பச் சீயம்
அடல்சினங் கடவ யாளி யதிர்த்துவாய்ச் சுவைத்துக் கால
இடிபடை மழைதீ மாரி யெறும்புச்சிலை மாரி யாதி
உடறுணி படுப்ப மாழாந் துறுவதி கடப்பர் சில்லோர். ()

அயினுதிப் பரல்கா றின்ன வழற்கொழுந் தளாவிச் சூறை
வெயின்முகத் துருகும் யாக்கை மென்றுமென் றமிழ்ந்து சூழ
உயிரினை முழுதுந் தூத ரொறுத்திடுஞ் செல்லன் மாந்தப்
பயிலிட மின்றி நீண்ட பாழ்நெறி யிறப்பர் சில்லோர். (உ௬எ)

நெறிகளோ கொடிய வந்த நெறிபயில் பொருள்க ளெல்லாம்
தெறுவன வவற்றின் மேலுஞ் சிக்கயாப் புறுத்த காலர்
குறிபயி லங்க நான்குங் கொடியன வென்று லென்னே
உறுதுயர்க் கவதி யுண்டோ தென்றிசை யுறுநர்க் கம்மா. ()

பஃறுயர்ப் படுத்தி யுய்த்துப் படர்பெருங் கால தூதர்
அஃறவழ் மெய்யர் வெய்ய வடன்முனைப் படைய ராகி
விஃறவழ் கழற்கால் வீரர் மிடைந்தனர் சூழ வைகும்
கஃறலை வணக்குந் திண்டோட் காவலற் கிதனைச் சொல்வார்.

இறைவநின் வியங்கோ ளாற்றி னிழுதையர் தம்மை யெல்லாம்
முறையுளி யியவைத் தண்ட முற்றுவித் தீங்குத் தந்தாம்
மிறைவளர் தண்ட மின்னும் விளைப்பன வருண்மோ வென்ன
நிறைகுணத் தரும வேந்த னிகழ்த்திய மாற்றங் கேட்டு. ()

சித்திர குத்தற் கூவித் தீங்கெலாஞ் செப்பென் றேவிக்
கைத்தல நெல்லி போலக் கருத்தினு ளவர்க்குந் தோன்ற
மெத்திய பாவ மன்னோன் விரித்தபின் கலுழற் கண்டு
பைத்தவி யரவ மென்னப் பதைப்புறு வாரை நோக்கி. (உஎக)

பொய்யெனப் போகு மாதர் போகமும் பொருளு மற்றும்
மெய்யெனக் கருதி வேத விதிதபப் பலவுஞ் செய்தீர்
மையவிர் மிடற்றெம் மண்ணன் மறைவழி யேது மில்லீர்
நையவீண் டணைந்தீர் பன்னு ணரகினுக் கிரையு மானீர். (உஎஉ)

கோட்டிப மிவுளி பொற்றேர் கொழுநிதி மனைவி மைந்தர்
ஈட்டிய பொருள்க ளெங்கே யெங்ஙன மிகந்து போந்தீர்
ஓட்டைநெஞ் சுடையீ ரொன்று முடன்வரக் காணீர் வாளா
நாட்டுளார்க் கவற்றை யீட்டி நரகெலா மீட்டிக் கொண்டீர். ()

என்றுரு மேற்றிற் பொங்கி யிதழ்மடித் தெயிற்றிற் றின்று
வன்றிறற் சண்ட ணுதி வயப்படைத் தலைவர்ப் பாரா
நின்றவிக் கொடியோர்க் கெல்லா நிகழ்த்துக தண்ட மென்ன
நன்றெனப் பணிந்து போந்து நவையறிந் தொறுத்தல் செய்வார்.

வெவ்வினைப் பிலநா லேழு விளம்புமிவ் விருபத் தெட்டும்
ஒவ்வொரு கோடி யாக வுறுமுறு நாலே ழுள்ளும்
தெவ்வினை முதன்மை யெய்தி யைவ்வைந்து செறிந்து நிற்கும்
இவ்வெலாம் பலகா லண்மி யினைபவா லொழிவு காறும். ()

பிறையெ யிற்றினர் பிடித்தடி திரித்து வயிர
அறையி னெற்றமுடி மூளைக டெறிப்ப வயர்வார்
கறைம டுத்துமுச லம்பலர் கரங்க ளினெழீஇ
முறைசெ யக்கடிதி னென்புகண் முரிந்து குழைவார். ()

உண்ண லாகுமிது சொன்றியுறு நீரி துவெனு
நண்ண லோடும்வை மென்கிருமி நாறு திரமாய்
எண்ண மாறவிவை யேநுகர்தி ரென்று முடுகித்
துண்ணெ னக்கொடிய தூதுவர் தொழிப்ப வழிவார். ()

சிவிறி வாங்கினர் முறுக்கிவிடு செப்பின் விதலைத்
துவலை காலதரெ னத்துளைது றுப்ப மடிவார்
இவறு மாதரினி ணர்க்கனல் கொழுந்து ருவினைத்
தவவ ணைந்துடல நைந்துகவி னைந்து தளர்வார். (உ௭அ)

வாழி வாளரம்வ லிந்திருபு றத்து நடவிப்
போழும் வாருடல்பொ ருத்திநுதி வாய்ச்சு ரிகையால்
கோழி ளந்தசைகள் கொய்துபகு வாயி னுதவிக்
கேழி ரத்தமும டுப்பமதி கெட்டு விளிவார். (உ௭௯)

அண்ண லூடெழ முடக்கினை யழுத்தி யதுசேர்
திண்ணெ றுழ்த்தொடரி னூற்றினர்தெ றக்க வலுவார்
வண்ண வார்தழல்வ ளர்த்துமுடி கீழு றமறித்
தெண்ணி லாதகொடு மைத்தொழிலி யற்ற வழுவார். ()

உள்ள டித்துணை பெயர்ச்சியற வூசி நிமிர
முள்ளு டைக்கதையின் முன்னுகென மொத்த விழுவார்
வள்ள யிற்கணநி ரைத்தநில மீது மறுகத்
தள்ளி யோச்சியுடல் பொள்ளல்செய நோத றகுவார். ()

கூறு செய்துடல்கு டங்கரின டைத்தி ழுதுபெய்
தேறு வன்னியினி டத்தசைக ரைந்தி றுகுவார்
ஊறு செம்புனலொ ழுக்கெழ வரிந்து கழுகு
பாறு நாய்நரிமு கத்திடவி டும்மை படுவார். (உஅஉ)

உறுப்பி றுப்பவொரு பாலுருகு செம்பொ னொருபால்
வெறுப்ப வொன்பதுது ளைக்கணும்வி டுப்ப வொருபால்
கறுப்பொ டும்வயிறு கிழ்ந்துகுடர் காற்றி நுதிமுள்
நிறைப்ப வோவெனநெ டுந்துய ருழத்த லுறுவார். ()

வண்டு வாருடறு ளைப்பமத வேழ முலவை
கொண்ட லைத்தெறிய வேங்கைகுரல் கவ்வி நலிய
மிண்டி நாயடவி ழுங்கவர வங்கொ டிவளாய்க்
கண்டொ டக்கிருமி கெண்டிநெளி யக்க தறுவார். (உஅச)

கலைவ லார்மகளிர் பூண்முலை கலப்பொ ழிவுகா
றலைவி லாதுவள ரின்பமல தொன்றும் விரவா
தலைசெ யள்ளலகல் காறுமடர் துன்ப மலது
நிலைவ தின்றெனின தன்றிறநி கழ்த்த வெளிதே. (உஅரு)

எழுநான்கு கோடி யளறும்வி ழுங்க
வெறிவெண்ட ரங்க விரிநீர்
முழுவான்ப தங்க ளவையுஞ்ச வட்டு
முடிவுங்க வற்சி யுறுவார்
கழியாத நோன்மை யதிபா தகங்கள்
கருதாது ஞற்றி னர்களும்
வழியாய வற்றி னினமான பாவ
மதியாமை யாற்றி னருமே. (உஅசா)

இருவான்சு டர்க்கு முடிவெய்து காறு
மெழுநான்கு கோடி நரகும்
ஒருவாது ழப்பர் கொலையாதி யைந்து
முணர்வற்றி ழைத்த கொடியோர்
மருவாரி சத்த ஞெருமுன்ப கற்குள்
வருபாதி கால மவைசேர்
பரிபாத கங்கள் புரிவோர்தி ளைப்பர்
பதினன்கு கோடி யளறு. (உஅஎ)

அயனர்ப கற்க ளொருபாத வந்த
மளறேழு கோடி யுறுவர்
பயமேது மின்றி யுபபாத கங்கள்
பரிவுற்றி ழைத்த பதகர்
வயமாரி வற்றின் வருகால மள்ள
லொருபாதி யாக மருவச்
சயமாரி வற்றின் வழிபாத கங்க
ளுடையார்ச ழங்க லுறுவார். (உஅஅ)

எரிவாயு றுத்த வொளிரும்ப சும்பொ
னெனவள்ள லின்ன லுறலும்
உரைபாத கங்க ளொழிவுற்றி யாரு
முறுதூய்மை யெய்தி விரைவில்
கரையேறு வார்க ணிரயந்த காத
கரிசான வெஞ்சு வினையும்
தரைமீதி ழிந்த பிறவிக்கண் வந்து
நெடிதிற்ற ணத்த லுறுவார். (உஅகூ)

தருவாகி யென்பில் புழுவாய்ப்ப றப்பை
தானுய்வி லங்கி னுருவாய்
ஒருவாத செல்ல லுடரேற ருந்தி
யுறுவார்க ளாவி னுருவம்
வெருளான்பி றப்பு விழுமுற்ற வத்தின்
வியன்மா னிடத்தி லணைவார்
அரிதாமி தன்க ணணைவுற்று முத்தி
யறியாரி தென்கொ லறிவே. (உகூ0)

அரிதாம்பி றப்பு ளுயர்மானி டத்தி
னடைவுற்று வைக லதனின்
அரிதாகு நல்ல குலனிற்பி றத்த
லறவாள ராத லதனில்
அரிதாகும் வேத முதலாய்ந்து முக்க
ணமலற்க லத்த லதனின்
அரிதாமு யர்ந்த குலனுற்றும் வீணி
லழிவாரி தென்கொ லறிவே. (உகக)

நிலையாமை கண்டு நிலையாத காய
நிதியாதி கொண்டு சிலர்தாம்
உலையாத வூக்க முலகத்தி லீட்ட
வுதுகண்டி ருந்து முகிழ்மென்
முலைமாத ராதி பொருண்மீது வேத
முறையிற்பி றழ்ந்து படரும்
அலையான வார்வ மறவீசி யுய்தி
யறியாரி தென்கொ லறிவே. (உகஉ)

முத்தேவ ராதி புலவோரும் விண்ணின்
முழுதின்ப கற்றி யருளின்
பித்தேறி நின்ற முனைவன்ப தங்கள்
பெருகன்பி னோடு பணியும்
அத்தேய மான வுயர்பார தத்தி
னரிதின்றி வாழ்வ ணவியும்
செத்தாரின் வேறு மலராகி யுய்தி
தெளியாரி தென்கொ லறிவே. (உகங)

வருணங்க டோறு நிலைதோறு மாற்றல்
வகைமைக்கி யன்ற வினைகள்
தருகின்ற வேத முதனூலு நாளுந்
தவிர்கின்ற பாரு மியைய
மருவொன்று போது புனலெங்கு மன்ன
வளர்பூசை கொள்ள விறைவன்
உருவொன்றி நிற்ப நிரயத்து மீள
வுறுவாரி தென்கொ லறிவே. (உகச)

மறைநீதி கொண்டு புரிவோர்கள் விண்ணின்
மகிழ்போக முண்டு விமலம்
நிறைஞான வாரி படிவுற்ற பாவ
நிலமன்னி நிற்பர் மறைநூல்
முறைகோடி னார்க ணிரயத்து மீள
முழுகித்தி ளைப்ப ரடியார்
அறைபாத கங்கள் செயினும்வி ழார்க
ளிமையார்வ ணங்க வமர்வார். (உகூ௫)

அள்ளற் பரப்பி னினைவோரும் விண்ணி
னடர்போக வின்ப வுததி
வெள்ளத் தழுந்து மிமையாரு மண்ணின்
மிளிர்மானி டாதி யுருவம்
கொள்ளப் படுக்கு முயிரும்பி றத்தல்
குழைவுற் றிறத்தல் பலவும்
தெள்ளித்தெ ளிந்த கலைமாத வத்த
தெரியக்கி ளத்து மறிதி. (உகூ௬)

பாவகா ரணத்தாற் பூதத்தி னிமைக்கும்
பாணியி னரகருற் பவிப்பார்
மேவுபுண் ணியத்தாற் பூதசா ரத்தின்
விண்ணவ ரொருகணத் துதிப்பார்
ஓவுறும் பூதத் திண்பரி ணமைத்
தோதிரு வினையின்மண் ணுயிர்கள்
ஆவன பையுண் மானிடம் விலங்கா
மண்டத்தா மரவம்புள் ளாதி. (உகூ௭)

கிருமிகீ டாதி கசிவினிற் றோன்றுங்
கேழிணர்த் தருமுதற் பலவும்
உருவவித் திடத்து நிலம்புனல் வெயில்கா
லுறவெழும் வித்துயிர்த் தவற்றுள்
அரியன யவைமுன் செந்நெலீ றாக
வறைவன வெண்ணிரண் டவைதாம்
உரியதம் பலத்தி னசிக்குமப் பலந்தா
னுணவதாய் மனிதரை வளர்க்கும். (உகூ௮)

அகத்திடு முணவு நீர்விராய்ப் பருவ
மடைதலு முணவுமே லறல்கீழ்த்
தகப்பகுத் திடுமாற் பிராணன்பின் வளிதீச்
சாரங்கோ தெனவிரண் டாகப்
பகுத்தலுஞ் சார மிதயநின் றெல்லா
நாடியுஞ் சமானனாற் பயிலும்
இகத்தருந் துரால்பன் னிரண்டென வெளியாஞ்
சாரமு மெண்ணுமத் துணைத்தாம். (உ௯௯)

இயக்கமோ ரிரண்டாய் மிடற்றினில் வழுக்காய்
நாசியி னிளங்களிப் புனலாய்
வயக்கமாண் விழியிற் பீளையாய்ச் செவிநா
மணியெயி றுகிர்குதங் குய்யம்
முயக்குறு மழுக்காய் மயிர்த்துளை தோறு
முகிழ்க்கும்வே ராய்த்துரால் வழங்கும்
உயக்கிளர் சாரந் தனிற்றுவக் கதனி
லுதிரமற் றதினிணத் தடனூன். (௩00)

தசையிடை நரம்பு முரோமமு நரம்பி
னுடிநா டியிற்றயங் கத்தி
அசைவறு மென்பின் மூளையு நகமு
மூளையிற் சுக்கில மதனில்
பசையுறு கருவா மிம்முறை சாரம்
பன்னிரண் டுறுப்பதாய்ப் பயிலும்
விசைகொள்சுக் கிலஞ்செம் புனலின்மிக் குதரம்
விரவுறி னாண்மக வாகும். (௩0க)

செம்புனல் வெண்ணீர் தனின்மிகிற் பெண்ணாஞ்
செம்புனல் வெண்புன னிகர்ப்பின்
அம்புவி யிழிக்கு மலியுரு வாகு
மளிப்பவர் குணமகக் கெய்தும்
வம்பிலட் டகத்தோ டுயிர்பிதா நுகரும்
வண்சுவை பற்றியுண் ணுழைந்து
வெம்புவெண் புனற்பட் டன்னைதன் கருவிற்
சட்டக மாய்ப்புவி வீழும். (௩0௨)

உயிர்படு கருவோர் வைகலிற் குன்றி
யுறுமைந்திற் புற்புத மொக்கும்
பயிலின வூறு மேழிலீ ரேழிற்
பரந்துசெம் புனறிர ளுறும்
வயமுறு பீச மையைந்திற் சிறிது
வருஞ்சிரங் களஞ்சிறு புறமே
வியன்முது கென்பென் றுரைத்திடு நான்கும்
விளங்குறு முப்பது நாளில். (௩0௩)

தாளடி நிதம்பந் தடங்கர மருங்கு
சார்தரு மிருமதி வரையில்
கோளுறு வடிவிற் சந்திகண் மூன்றிற்
கொழுவிர லுன்கிலம் மதியில்
வாளுகிர் நாசி முகங்குய்யங் கன்னம்
வாலெயிற் றாறெழுங் காறின்
நீளுறு கன்னத் துளையெழு மதியி
னிகழ்குறி விளங்குறத் தோன்றும். (௩0௪)

திங்களோ ரெட்டிற் குதமுந்தி யேனைச்
செறிதரு மங்கமா திகளும்
தங்குறும் பிராணன் முதல்வளி யைந்துந்
தகையுமுந் தியின்வழி யன்னை
நுங்குண விரதம் வயிற்றுறு மின்ப
துன்பமு மனுதியா னுகரும்
அங்கண்முன் னிகழ்ச்சி கனவெனத் தோன்ற
வளாவிய மோகம்விட் டகலும். (௩0௫)

இறப்பொடு பிறப்பிற் பன்முறை யிதுகா
றிடருழந் தனமினிப் பிறந்தாங்
கறப்பெருங் கடவுள் பூசனைப் பேற்று
லவற்றினை யறுத்துமென் றெண்ணிச்
சிறப்புற விருக்கு முயிர்கருப் பையுஞ்
செறிவழுக் குதகமு மற்றும்
உறப்பெரி தழிந்து மோகக்கான் மிளிர்ப்ப
வுணர்விழந் தரிதின்மண் சாரும். (௩0௬)

சூக்கும வுடலைப் பற்றியே யெழுந்த
தூலதே கத்தினுண் முன்னர்
ஆக்கிய வறம்பா வங்களின் பயனை
யவ்வினை யெனப்பின்பு பயக்கும்
நீக்கரும் வினைகள் வளாவியா னென்னுஞ்
செருக்கினு னித்தலு மருந்திப்
போக்கொடு வரவிற் படுமுயி ரிறைவன்
பொருவில்பா தம்புகு காறும். (௩0எ)

மூன்றரைக் கோடி நாடியவ் வளவே
முற்றிய மயிரெயி றெண்ணுன்
கான்றகை யடியி னுகிரிரு பதுவீ
ரியமழாக் குடற்பித்த முழக்கு
மான்றுறு மிடற்றுக் கபமுரி யுடனு
ழுழிவண் ணிணத்தொடி யைந்நான்
கேன்றமே தைக்குத் தொடிகளோ ரைஞ்ஞூ
றீண்டுமூன் றொடியொரு நாறே. (௩0அ)

இளகுநெய்த் தோரு மிறுகுநெய்த் தோரு
மியம்புறிற் றொடியொரு மூன்றும்
வளமலி மூளை பன்னிரு தொடியா
மயிர்முத லனைத்தையுந் தொகுத்திட்
டளவிடி லாக்கை யாயிரந் தொடியா
மருவருப் புறுமியக் கங்கட்
களவிலை யிந்தப் புலையுடற் பொறையைப்
பொருளென மதிப்பரோ வறிந்தோர். (௩0௯)

தமனியக் கடமே யாயினும் பவ்வீத்
தங்குறின் விழைஞரும் பற்றார்
அமிழ்தமே யானுந் துய்ப்புறிற் பவ்வீ
யாக்குமிவ் வுடற்புக ரறிந்தும்
இமிழ்தரப் பற்று மடவருக் குரைத்து
மென்பயன் றீர்த்தமா டினும்
உமிழ்முடை யாக்கை சுசியுறு திறைவ
னுண்மைதேர்ந் துயிர்சுத்தி யுறுமே. (௩௧0)

முப்பொரு ளியல்பு முள்ளவா றுணர்ந்து
முழுத்தபே ரறிவினுள் விழித்தோர்
இப்புவி யவர்போல் வினைபல குயிற்றி
யிருப்பினும் வினைப்பய னெய்தார்
கைப்பட மனையைப் புதல்வியைத் தழூஉங்காற்
கருத்துவேற் றுமையுங்கை வருடச்
செப்பிள முலையார் மகன்பதிக் களிக்கும்
பயத்தின்வேற் றுமையுநேர் தெரிதி. (௩௧௧)

இருவகை யியக்கங் கழிப்புழி யுண்டா
மின்பமெவ் வளவையத் துணைத்தே
கருவிழிச் செவ்வாய் மகளிரைக் கலந்து
கழிப்புறு மின்பமு மதற்கே
அருவருப் பெவரு மெய்துறும் பவ்வீக்
கடர்ந்தெழும் வன்றிநாய் போலத்
தெருள்கிலா ரெல்லா மிவர்ந்திரு பயனுஞ்
சிதைத்தரும் பழிச்சுமை தரிப்பார். (௩௧௨)

உருத்திரன் மன்ற னுளி னுமையிடுஞ் சாபந் தாங்கி
மருத்ததா மரைப்பூ வாழ்க்கை வானவ னிடும்பை கூர்ந்தான்
திருத்தபு மார்பன் வேற்றுத் தேமொழி மனையை வெஃகிக்
கருத்தழி மம்மர் கூர்ந்து கலங்களுர் பெரிதுந் துய்த்தான். ()

இந்திரன் பிறனில் காமுற் றிழிகுறி முழுதும் பெற்றான்
சந்திரன் குரவ னில்லாட் டழுவிவெந் துயரத் தாழ்ந்தான்
அந்தரத் தவரு மண்மே லவருமிவ் வாறு பட்ட
வெந்துயர்க் களவின் றுக்கை நோய்க்கும்வே றவதி யின்றே.

வலாரிதோள் வாத நோயன் வண்மதி கயநோ யாளன்
சுலாவுறும் வெப்பு நோயிற் றொடக்குண்டான் றக்க னென்பான்
உலாவுறு காலி லாத முடவனே யுரங்கொண் மந்தன்
சலோதர நோய்க்கோட் பட்டான் றண்புனற் கரையன் மாதோ

துளவினன் றலைநோ யாளன் சுடரவன் பழுதார் மெய்யன்
வளமுடி யிழந்தான் போதன் வாணிதன் னுசி தோற்றாள்
அளமர மாரன் வெந்தா னடல்வலிக் காலன் பட்டான்
உளரவிக் களத்தில் யாருந் தக்கனோ டுறுப்புத் தீர்ந்தார். (௩௧௬)

காண்டகு விண்டு கண்டங் கண்டமுற் றவனி வீழ்ந்தான்
மாண்டமுப் புரமோ ரம்பின் மாய்ந்தன காளி சீற
நீண்டதா ருகன்மெய் விட்டா னிகரிலாச் சூர னென்போன்
தூண்டிய நமது வேலாற் றேல்வியி னுடல நீத்தான். (௩௧௭)

மலரவன் றன்னை மாயோன் வழங்கிடப் பட்டுத் தாழ்வன்
அலரவன் மாயன் றன்னை யளித்திட வவனிற் றாழ்வன்
புலவர்க டாக்கப் பட்டுப் போர்த்திற லவுணர் தாழ்வர்
கலதிவா ளவுணர் தாக்கக் கடவுளர் தாமுந் தாழ்வர். (௩௧௮)

ஒருவன்பால் வெற்றி கொண்டோ னொருவன்பாற் றோல்வி கொள்ளும்
ஒருவன்பாற் சீர்த்தி கொண்டோ னொருவன்பா லிளிவந் துட்கும்
ஒருவன்பா னட்புக் கொண்டோ னொருவன்பாற் பகைமை கொள்ளும்
ஒருவனே நட்பா வுள்ளோன் பகையுமா யுடற்று மன்றே. (௩௧௯)

வினையிலி விழியிற் றோற்றி விளங்கிய வெம்பின் வந்த
முனைகெழு வீர ரண்ட முழுவதும் பொடிக்கு மாற்றல்
வனைகழற் கணமுஞ் சூரன் வன்சமர்ப் பட்ட செல்லல்
தனைநிக ரில்லை யென்றாற் பிறர்துயர் சாற்று மாறென். (௩௨௦)

எற்றைக்கு முறவா யுள்ள திருண்மல மணுகாச் சோதி
எற்றைக்கும் பகையா யுள்ள திருண்மல மதன்றன் சார்பால்
எற்றைக்கும் வினைக ளீட்டி யிருப்பது காய மென்றால்
எற்றைக்கு மெச்சீர் வாய்ந்த காயமும் பகைமை யன்றோ. ()

ஆதலாற் றேவர் தேவர்க் கருள்புரி தேவ ரேனும்
ஓதுறு முடலுக் கேன்ற வூழ்வினை யுடலுற் றன்றிப்
போதரா தற்றே லேனைப் புலவரைப் புவியி னோரை
மாதுயர்ப் படுத்துச் சேறல் வல்வினைக் கரிய தன்றே. (௩௨௨)

கருவினின் மழவிற் கற்குங் காலையிற் பருவ மாறில்
பெருகிய பொழுதி னேயிற் பிரிவினிற் பகையி னீட்டும்
பொருள்வயின் வேட்ட தெய்தாப் புன்மையின் முதுமை தன்
மருவிய திழப்பிற் சாவின் வன்றுயர் மனித்தர்க்குண்டே. [னில்

விதித்தன் வாண்டு நூறு மேவரி தாண்டு சில்ல
கதித்திடு மிளமை தின்னுங் காமநோய் சில்ல தின்னும்
உதிக்கினல் லுணர்வு மேலே யுறுபிணி நாட வொட்டா
மதித்தன ரொழுக லாறும் வழுவிக்கு மூப்பு நண்ணில். (ந௨௪)

இத்திறத் தினர்கண் மாந்த ரேனைய வுயிர்க ளெல்லாம்
தத்தமக் கனந்த கோடிப் பகைவிராய்த் தாக்கப் பட்டும்
பொத்திய பசியிற் பட்டும் பொழுதிரு துடற்றப் பட்டும்
மெத்திய துயரத் தாழ்ந்து விளிவன பல்லாற் றானும். (ந௨௫)

இருவகைத் தாகு நோயொன் றிடைவிடு மருந்தே யோமம்
உரைமனு வன்ன மாதி யுதவலித் திறனு லொன்று
பிரிவுறு முடலைக் கொண்டே பெருகிய சுற்ற மெல்லாம்
கருவிழி முத்தங் கான்று கவலையுற் றரற்ற மாதோ. (ந௨௬)

மாதரை மைந்தர் தம்மை வளநிதித் திரளை விட்டுப்
போதுமே யென்றென் றேங்கிப் புழுங்கிநெஞ் சழிவ தல்லால்
சாதலை யுறுமஞ் ஞான்றுந் தருமமொன் றுற்று ரெந்தை
பாததா மரையை முன்னோர் வறியராய்ப் பதித ராவார். (ந௨௭)

தருக்குறுஞ் செல்வ மெய்திற் றருக்கினுற் பிழைக ளெல்லாம்
பெருக்குநல் கூரி னந்தோ பிறருழை யிரந்து சேறல்
மரித்தலிற் றுயர மீண்டும் வந்தவர்க் கிரக்க மற்றுக்
கரத்தன்மற் றதனி னூங்குக் கடுந்துய ரறிவி லார்க்கே. (ந௨௮)

மன்னிய செல்வ ராகி வாழினும் வளமிக் கீண்டித்
தன்னின்மேம் பட்டார்க் கண்டு தழைத்தவர் போறல் வேட்டுப்
பின்னரு மீட்டி யீட்டிப் பேதுற லன்றிப் பெற்ற
நன்னிதி கொண்டு நீதி நடத்துத லேவர் வல்லார். (ந௨௯)

மனைக்குரி மனையா டன்னை வாய்த்தநன் மைந்தர் தம்மைக்
கனைத்தலை சுருட்டும் வேலைக் கடனிகர் செல்வந் தன்னை
எனைத்தையு மிலம்பா டென்றே யிம்மெனத் துறந்து பெம்மான்
தனைச்சர ணடைந்து ளாரே தனைநிக ரில்லாச் செல்வர். (நந0)

எந்தையை விழைந்த பத்த ரிருதிறத் தோர்க ளாவர்
முந்துநூல் வழியான் மும்மைப் பொருளுணர்ந் திறைவன் பாங்கர்ச்
சிந்தையை யொருக்கி நின்ருே ரொருவர்மற் றெருவர் தேரா
தந்தில்வந் துதித்த வாறே யறிவுமிக் கன்பு செய்வோர். ()

பொருந்திய வேக தேச வுடலினைப் பொதியுந் தோறும்
வருந்தியங் கறிவு மேக தேசமாய் வசித்துக் காணும்
இருந்திட வேக தேச வுடலெழுந் தொன்றிக் காணில்
திருந்திய வறிவு மெங்குஞ் செறிந்தபூ ரணத்தி னுமே. (௩௩௨)

அறம்பா வங்கள் பெரிதாற்றி யலங்குந் துறக்க மளறெய்தித்
திறம்பா வின்பம் பெருந்துன்பந் திளைத்தோர்க் கங்கட் பயவாமைப்
புறம்பாய் நின்ற வினையெச்சம் புணரி வயல்கான் மலைவளங்கள்
பறம்பா நின்ற மண்ணுலகிற் பற்றுந் திறமும் பகர்வாமால். ()

துறக்க மாண்ட வறவோர்க டுய்ப்பங் கறனு மண்ணுலகில்
பிறக்க மாண்ட மறையோராய்ப் பிறந்து வளங்க ளினிதீண்டச்
சிறக்கு மொழுக்கந் தலைநின்று தேவர் பிரானை வழிபட்டாங்
குறக்கம் விழிப்பென் றிரண்டற்ற வோவா வின்பத் துறைபடிவார். ()

அள்ள லழுந்தும் பாதகத்தோ ரருந்த லவணற் றிடவொழிந்து
பள்ள விரிநீர்க் கடலுலகிற் பயிலுந் தருவா திகளாகி
மெள்ள வுயர்ந்து மானிடத்தின் மேவுங் காலுங் குணமுறுப்பு
நள்ளும் வெறுக்கை யிவையின்றி நவையே யுழப்பர் மாதவனே.

பரனைக் குருவை யவமதித்தோர் பவ்வீக் கிருமி யுருக்கொள்வர்
ஒருவற் கரிய முயலகனோ யுழப்ப ரவரை யிழித்துரைத்தோர்
குரவன் பணியை யன்பின்றிக் குயின்ருேர் மந்த ராய்த்தளர்வர்
குரவன் பணிசெய் குநர்க்கலைப்போர் கோம்பி யுருவாய்ப் பகைக்கழிவார்.

சினந்தகுர வற்சினந்தோன் சிரநோய
னந்தணனைச் செகுத்த பாவி
இனைந்தழியுங் கயநோய னரியலார்ந்
தவன்பழுதா ரெயிற்றன் குநகி

தனங்களவிற் கவர்ந்தவனா ரியன்மனையைத்
தழுவினோன் குட்ட நோயன்
மனங்களிப்பத் தெய்வதிர வியங்கவர்ந்தோ
னச்சரவ வடிவ னவன். (௩௩எ)

மாயனையெள் ளினன்கோம்பி யறமறந்தான்
பூத்தமட மாதொ டார்வம்
நேயமொடு முரைபகர்ந்தா னப்புலைய
னுருக்கொள்வர் நேர்ந்த செம்பொன்
தூயவர்க்குக் கொடானீகை பகர்ந்துதவான்
வலையனிவர் சூலின் மாய்வர்
மேயவிள மையின்மாய்வர் காளையிற்பல்
விழைவுடற்ற விளிந்து போவர். (௩௩அ)

பொழிறடிந்தோர் தடந்தூர்த்தோர் புலானுகர்ந்தோ
ருறுப்பழுகும் புரைநோ யாளர்
கழிசிறப்பி னவகையா கத்தொன்று
முனாற்றார்கற் புடையா ளுள்ளம்
அழியவரை வின்மகளிர்ப் புணர்வாருந்
தெய்வமெனு மன்பி லில்லைத்
தழியினருங் கேழலொரு குடிப்பிறந்தாட்
டழீஇயினர்புண் டலைநா யென்ப. (௩௩கூ)

தருமம்வரல் கருதாது பொருண்மதித்துப்
பிறரறச்சா லைகள்காப் போரும்
திரிதருமிம் மைப்பயனை மதித்திறையா
லயப்பூசை செய்வித் தோரும்
பருவருநா யொடும்புலைய வுடலெடுப்பர்
தமக்கன்றிப் பரர்க்கு நல்கும்
குருபரனை யிழித்தோரும் பங்குகுரு
டாவர்செவி டாவர் கேட்டோர். (௩௪0)

ஆரியனை யெளியனென வெண்ணினவ
னற்றவிழிக் கிருமி யாவன்
சேருநர வுருவினிற்புண் ணுறுகுறியு
முளனெண்மை செப்பி னோன்கை

திருமுறுப் பிலியாவன் சிவனேவற்
றேவர்களைப் பூசை செய்யான்
வாரமறு மலியாவ னைக்கறழான்
வறங்கூர்ந்து கண்ணே யாள்வன். (௩௪௧)

அருந்தவரைத் தானுண்ட பின்னூட்டி
னேனெஞ்சி னடர்வெங் நோயன்
விருந்தினரைப் புறந்தரான் கபோலத்தின்
வெய்துயிர்க்கு நோய னுண்டி
கரந்துநுகர்ந் தானுதரக் கனன்மந்த
னடுப்பிழைத்துக் கரந்தான் வாயின்
அரந்தைபடு புண்ணுடையன் கற்புடையா
டனைவெறுத்தா னரலைக் கண்டன். (௩௪௨)

நோயலைப்பத் துணையடைந்த பெரியோரைப்
புறந்தரா னைய்மைச் சுற்றம்
தாயுயிர்த்தான் குடிவருதொன் மையரிவரைத்
தாங்காதான் றசையூன் கோடற்
காயபெருஞ் சூழ்ச்சியினன் கள்வனவன்
றனக்கியைந்தா னனைவர் தாமும்
மேயவிழி நோயினரா யடித்துணையில்
விண்ணெனும்புண் ணுடைய ராவர். (௩௪௩)

தீம்புனற்பந் தரைச்சிதைத்தா னுதரநீர்க்
கோவையனுன் செகுத்தான் றேற்றம்
ஆம்பொழுதே விழியிலா னன்வருத்தி
னன்கோண னசி யாவன்
ஓம்பலுறு மூனுதி யூனுகர்ந்தா
னுறுகண்ட மாலி யாவன்
தேம்புகலாம் விளைத்திடுவா னழுகல்வா
யினன்புலையன் சினமீக் கொண்டான். (௩௪௪)

வெள்ளி பட்டிவை கள்ளினேன்
குட்டநோய் விரவினன் சாந்தாற்றி
கொள்ளு மேழைவா மனன்பெரு
மஞ்சிகன் கோளன்றா சினைவிற்போன்

எள்ளும் வேட்டுவ னீயஞ்சா
மரைமுதல் விலைசெய்தா னிருங்கானம்
நள்ளு மாசுணங் கூவிநல்
காதவன் பிறர்பணி நயப்போனும். (௩௪௫)

கற்புளார் செயலை யிழித்தவன் காக்கைக்
கண்ணன்வா னவர்சிவ யோகர்க்
கற்பிலார் கோடும் வாயின ரீவார்க்
கரும்பழு துரைப்பவர் புழுக்கள்
பற்படு நோயர் சமயமாய்த் தவர்பா
தகர்த்தெறுங் கொலைவிலக் கினர்கள்
பொற்பறக் கோடும் வழக்குரைத் தோரும்
பொருஞ்சல வாதரா யிழிவார். (௩௪௬)

எளியரை வதைத்தான் கால்கர மில்லா
னெனைத்துமுட் கரவிலா வடியார்
உளைதர வொறுத்தான் கால்கரந் தளர
வுடலுறு குட்டநோ யாளன்
அளியுறு மனையோ டலதுசூ தாதி
யயன்மட மாதர்வே சையரில்
களிதர முயன்றான் மெய்ம்மயி ரில்லான்
கழிமிடி யுற்றிரந் தழிவான். (௩௪௭)

கொண்டநோன் பிழந்தா னுறையுளை யிழப்பான்
குறுகினோர் மாலையம் பொழுது
விண்டிட விடநல் கான்மனை யவளை
விடுத்துள் மழுங்குவன் பெரியோர்க்
கண்டெழுந் தெதிரான் பொருளினை யிழப்ப
னிருமுது குரவர்பாற் கருத்துள்
மண்டுமன் பில்லான் வறியனு யொன்றும்
வந்துகை கூடிடா தலைவன். (௩௪௮)

வேதநுண் பொருளை யிழித்தவன் வேடன்
வேதநூ லிழந்தவன் புலையன்
வேதமெய் யினரை யிழித்தவன் மந்தன்
வேதியர் பொருள்கொண் டோன் விட்டில்

வேதநல் வழிவிட் டிச்சையா றெல்லாம்
விளைத்தவ னுருவினு மனத்தும்
வேதனை யென்றுந் தணப்புறான் முழுதும்
விதப்புறி னும்பர்நா ளுலக்கும். (௩௪௯)

பற்பல வதிபா தகமிழைத் தோர்பல்
வீப்புழுப் பற்பல்கா லாவர்
பற்பல மாபா தகம்புரிந் தோர்கள்
பற்பல்காற் பன்றிமெய் யெடுப்பார்
பற்பல மாபா தகக்கினங் குயின்றோர்
பற்பல்கா ளுயுட றரிப்பார்
பற்பல வுபபா தகம்விளைத் தோர்கள்
பற்பல்கா லிழிஞரா யுதிப்பார். (௩௫௦)

ஓங்குபா தகமூன் றவற்றின மூன்றென்
றுரைத்தமூ விருதிறத் தொன்று
தாங்குமுன் னுடலிற் புரிந்தவ னதுவே
சார்ந்தமற் றுடலினும் புரிவான்
தீங்கிது கழுவாய் நான்முறை யாற்றிற்
றீருந்தீ ராதுஞற் றுனேல்
வீங்கிய செல்ல னரகுழந் துரைத்த
வீறிலாப் பவமெடுத் துழல்வான். (௩௫௧)

புண்ணியம் பாவ மிதுவிது வென்றும்
புரிந்தவர்க் கிப்பய னென்றும்
வண்மையி னிதுகா றும்பகுத் துரைத்தாம்
வார்சடைக் கடவுள்பூ சனையால்
நண்ணிய ஞானத் திரண்டையு மறுத்து
நரகுமண் டுறக்கமூ விடத்தும்
அண்முறு தைந்து மலங்களுந் துமிய
வமர்சிவ யோகமற் றருள்வாம். (௩௫௨)

மேவரு ஞான மிரண்டவற் றென்று
விமலனார் பாததா மரையே
ஓவறு மன்பி னுணர்திரு வளிக்கு
மொப்பிலா வுயர்கலை ஞானம்

இளையோ னலனென் றுதெரிப் பனபோல்
முளையா முதல்வன் குரவன் பிரமற்
றளையார்த் தவன்சண் முகனென் றிசைகா
களமோ டுசின்னங் கள்கறங் கினவே. (சஉ)

விழையத் தகுவீ ரலிரென் றுவிண்ணோர்
உழைநற் புகழைத் திரள்செய் துணவாய்
முழைவைப் பழுயன் றவையோ விடல்போற்
றழையப் பலசங் கமுரன் றனவே. (சங)

காலா தியின்வன் பகைகாய்ந் துசமர்
ஏலா மைதமக் கருளீ சன்மகன்
கோலா தியினு டல்குறித் தமைதேர்ந்
தாலா நடமா டினபா ரிடமே. (சச)

இக்கா லையையேந் தெறுழ்முன் பெறலால்
தக்கா னெனமான் மொழியத் தழையாக்
கைக்கால் வடிகோல் கொடுகா மருதேர்
அக்கா லிறையை யெனவூர்ந் தனனே. (சரு)

கடலும் புவியுங் கதிர்வா னகமும்
படர்வா யிடவே றுபெளவங் கிளரா
வடவா முகத்தின் வழிக்கொண் டதென
மிடைபூ தரிணுப் பண்விரைந் ததுதேர். (சசா)

தங்குலத் தரசற் றபுமார் செலும்
இங்கி வர்க்கிடை யூறுசெய் வாமென
அங்கண் மாநில ருமவு ணன்புரி
பொங்கு மாயையிற் போர்த்தது தூளியே. (சஎ)

ஞான நாயக னல்லருட் பார்வையின்
ஆன மாயைய கன்றது போன்மென
வானு ளார்நனி தூவுதண் மாமலர்த்
தேனை மாரியிற் றீர்ந்தது தூளியே. (சஅ)

முத்தி னூர்தியும் பிச்சமு மொய்குடைக்
கொத்தும் வார்கொடி யுங்குளிர் பாரெலாம்
பொத்தி நின்றன பூண்கொடுங் கோலமழல்
மெத்தி நின்ற மெலிவுதி றம்பவே. (சகூ)

இன்ன வாறிய வைக்க ணியங்குபு
பன்ன ருஞ்கிர வுஞ்சப் பறம்பயல்
துன்ன லுஞ்சுரர் யாருந் துளங்கினர்
நன்னர் நாரத னுயகற் கோதினன். (ருo)

பட்டி மைக்கிரி யீதுபன் மாதவர்
அட்ட தீங்கொரு பாலணி மாநகர்
இட்டு வல்லவு ணற்கிளை யோனுளன்
விட்ட மால்படை மின்னிய மார்பினன். (ருக)

இன்ன தானவ னின்னுயி ருண்டலால்
அன்ன தானவ னுருயிர்க் கேகலே
அன்னை தந்தை யழற்கணெ னத்தகும்
மன்ன வென்றுயர் மாதவன் கூறலும். (ருஉ)

தார கத்துரு வாகிய தத்துவன்
பார கத்துயிர் வாட்டும் பதகனித்
தார கப்பெயர் தாங்கற காதெனப்
போர கத்துமு டிப்பது பூண்டனன். (ருந)

வீர வாகுவை நோக்கி யாயிர வெள்ள மாகிய பூதரும்
போர வாவுமி லக்க ரும்புக ழெண்ம ரும்புடை கொண்டுபோய்
ஆர வாடமர் செய்க வென்றருள் செய்து வான்யவ னன்றனைத்
தேரனோர்க்குத வப்ப ணித்தனன் செய்த ளித்தன னெல்லையில்

இறகெ ழுந்துப றக்கு மோங்கலெ னச்செஃ றேர்பல சூழ்தரப்
பொறைநி லக்கரி தாமெ றழ்ப்பொரு பூதர் தேர்ப்படை சூழமண்
நெறுநெ றென்றுநெ ளிக்க நீளிர தங்க டாய்விறல் வாகுவும்
முறைதி றம்பிய தறுக ணன்றவிர் மூரி மாநகர் முற்றினன்.

உருகி நெஞ்சழி யத்த மக்கிறை யோனை முன்பணி சீற்றமிக்
குருவ வன்கட லேழு மோங்கியொ ருங்க டப்புவி முற்றியாங்
குருளு மாழிய வங்க மாகவொ லித்து முற்றிய சேனையின்
உருமு முட்கவெ ழுந்த வார்ப்புல கேழு முட்டிநி மிர்ந்ததே.

இன்று வையக மூன்றும் வச்சிர மேந்தி னற்கரு ளாழியான்
நன்ற ளித்தன னென்று தேவர் நயப்ப முற்றிய சேனைகள்
ஒன்று தண்டையும் வேண்டு மேயென வொய்யெ னெப்பிறக் கிட்டுமேல்
துன்றி யும்புரி சைக்கண் வீரர்கள் சோடை யாற்படை தொட்டிலார்.

பந்தும் பாவையும் பசுவரிப் புட்டிலும்
பலவுஞ்சென் றெறிகிற்கும்
முந்தை மாதரை யியற்றுபு பின்றைமொய்ப்
பகழிவா யிலிற்றாக்கி
எந்தி ரம்பல வுஞ்செறித் தவுணர்தம்
பவனன்செ யெயில்வாய்ந்தும்
அந்தில் வீரர்கள் பூக்கொடண் ணுமைமநனி
யதிர்தொறு மயிர்க்கின்றார். (ருஅ)

குருகு சுட்டிய குன்றெனக் கைதவங்
குயிற்றரு மிளைகானம்
அருகு முற்றிய கிடங்குயர் மதிலழித்
தவுணரா விகண்முற்றும்
பருகி னல்லது குமரவே டிருமுன்னர்ப்
படர்கல மெனச்சீறி
ஒருக ணத்திலா ழகழிதூர்த் தெயிற்பொறி
யுதைத்துருட் டினர்சூழ்ந்தோர். (ருகூ)

அழுவப்புன லமரேற்றவ ரகழோட மதிலில்
குழுமிப்பெரி தமராடினர் பொறியோடுயிர் குலைய
எழுமுற்றிய கதவட்டன ரெயில்கைக்கொட கத்தில்
கழுமிப்பயில் கருவிக்கடி மதின்முற்றினர் கடிதின். (கூ௦)

உழிஞைப்படை யெதிர்நோக்கிய வொற்றோடி வணங்கி
அழிவுற்றொழி யமரர்க்குல கருளப்பரன் மதலை
வழிவந்தனன் கொடிவெம்படை வல்லைப்புரி சையைவென்
றொழிவின்றுய ரகன்மாமதி லொடுநேர்ந்ததை யெனலும். (சுக)

பொன்னும்பிற பொருளும்புக ழுலகுஞ்சர ணடைவோர்
மன்னுங்கொள நல்கிக்களி மல்கத்தவி சமரும்
மின்னுங்கதிர் முடியான்விரை செலலுற்றன னறியாக்
கொன்னும்படை புடைமுற்றின குரமான்வைய முற்றான். (சுஉ)

குடைநாட்கொளல் வாணாட்கொளல் குறியாவர சவுணன்
உடைநாளழி வறியாதவ னுரனொன்றிய வாழிப்
படைநாரணன் மகன்வெண்குடை பற்றக்குடை யேயாய்
அடையாவமர் வுற்றலன முடிமீக்குடை நிழல. (சுங)

கற்றைக்கதி ரங்கைத்துணை கலைவெண்மதி யாழி
பற்றிச்செல நீட்டிப்பத மின்றிச்சுருக் குவபோற்
கொற்றக்குடை நிழலிற்குரு மல்கு மிணைக்கவரி
எற்றத்துய ரியதானவன் புடைதாழ்ந்தெழுந் துளர. (சுச)

கண்வைத்தம ரரையோம்பிய கந்தன்றம தரசை
மண்வைப்பொடு மடவந்தமை கேளாமற மூளா
விண்வைத்துயர் பலவைப்பையும் வெய்தெற்றுவ துறழ
எண்வைத்துயர் பலவார்கொடி யெண்டிக்கினு மசைய. (சுரு)

சிறக்கும்வகை தமையோம்பிய செல்வத்துயர் குரிசில்
இறக்கும்பரி செய்த்துள்ளக மேங்கிக்கத றுவபோற்
பிறக்கம்படு வள்வார்ப்பணை பெரிதுங்குளி றத்திண்
இறக்கட்டிகி ரித்தானவ னிமிர்தீயினி றந்தான். (சுசு)

மன்னுமவு ணன்கண்ணிணை வட்டித்தழ லுமிழ்வ
தென்னைப்முடி யாதின்னினி யெனமண்மகள் விண்ணில்
பொன்னுகிய தன்மாற்றவ ளொடுபோய்மறைந் தொழுகத்
தன்னுருரு வேறுயெழுந் தனதாள்விழி தகையும். (சுஎ)

கச்சுச்செறி யிடையார்கழல் கலவுங்கழ லுடையார்
வெச்சென்றடு படையாவுமி ளிர்க்கும்புய வலியார்
அச்சுற்றுல கீரேழும டங்கப்பொரு மிகையார்
நொச்சிப்படை யினர்முற்றிய நொறில்வெய்யரி னேர்ந்தார். ()

கணிப்பில்பல நாளுங்கஞல் கண்டூதிமை முற்றும்
மணிப்பொற்புய மொருவுற்றொளி மல்கப்புகு மிந்நாள்
தணிப்பில்புகழ் பேரூழிக டறுகட்கரி வதனத்
தணிப்பொன்முடி யிறையோடுத ழைக்கென்றமர் செய்தார். ()

சிலையோடெதிர் சிலையுஞ்செறி வாளோடுவை வாளும்
இலைவாரயில் வேலோடிலை வேலுஞ்சுள குறழ்கா
தலைதோலொடு தோலும்பரி யோடன்னது மிரத
மலையோடுருண் மலையும்பொரு மறவெங்கனல் சிதறி. (எ0)

மனம டிந்தவர் மகவு யிர்த்திலர் மயிர்கு லைந்தவர் மாதர்பேர்
தனைய டுத்தவர் புறன ளித்தவர் தக்க வெம்படை கையெடார்
சினம டிந்தடி பின்பெ யர்த்தவர் செருவி னொந்தவ ரிவரைவிட்
டினம றிந்துகி ளந்த போர்களி மைத்து ளாரிரு வோர்களும்.

தேரி றக்கினர் வேழம் வீழ்த்தினர் தேசி கப்பரி தாழ்த்தினர்
வாரி றுத்தனர் கச்ச றுத்தனர் வார்கொ டித்திர ளூறினர்
தாரி றுத்துட றோள டர்த்தனர் தாடு ணித்தனர் தலையொடும்
போரி ரித்தன ரின்ன வாறு பொலிந்த வூரகப் பாசியே. ()

கோயி னீள்பத ணங்கள் விண்டொடு கோபு ரக்குரு மேனிலை
வாயி லாதியி வர்ந்து டற்றிவ ழங்கி னார்படை வீதிகள்
பாய சோரியி னாறு போன்றன பம்பி யூடறத் தேங்கலின்
ஆய மாளிகை மேடை மேனிலை யாழிவாய்ப்பலி லங்கையே. ()

மண்டு நொச்சியினர் சாலமறம் வாடி விழலும்
மிண்டு ழிஞ்ஞையினர் வெய்யவவு ணத்த லைவர்பின்
கண்டு நிற்பவது கண்டுவயி ரங்க டவுறக்
கொண்ட தேரினைவி டுத்துமண் குலுங்க விழியா. (எச)

தார கப்பெயரி னுனெடிய தண்டு திரியாப்
பாரி டத்தொகைக ளோச்சியுயிர் பாற்றி நிமிரச்
சார தத்தலைவ ராற்றலர்த ளர்ந்தொ ழிவுகண்
டோரும் வீரர்க ளிலக்கருமொ ருங்கு பொருதார். (எ௫)

ஆர டுத்தமணி யாழிகள்சி தர்ந்து விழவெஃ
றேர ணைத்தையு மெறிந்துதிரள் வீர ரையெலாம்
காரு வர்க்கடல்க டாயினனு லம்ப வெதிர்செல்
வீர சிங்கம்விடு வாளிமுடி வீழ்த்த தவனி. (எ௬)

உட்கி யோர்கதைம டங்கலுயிர் சோர வுகையா
வட்கி லானிரத மெய்திமணி மோலி கவியூஉத்
தட்கும் வார்சிலைத டிந்துபொரு தீர னயரக்
கட்கு லாந்தொடையன் மார்பிலொரு சூல்க டவினன். (எஎ)

ஆடு போர்க்கொருவ னுனவிறல் வாகு சமரம்
நீட வேணையிளை யோர்களுநி கழ்த்தி யுடையும்
பாடு கண்டுழல்ப கட்டிரத மூர்ந்து சினவிச்
சோடை நெஞ்சினன்னெ ரேலெனவெ திர்ந்து துனையா. (எ௮)

சிலைவ ளைத்தவுணர் தேவர்திசை யானை பிறவும்
குலைய நாகரிடி யென்றுகுழை வுற்ற ழிதர
உலைவி னுனெலியெ டுத்தனனெ ராயி ரமெனும்
அலைசெய் வாளிகடு ரந்தனன ழன்ற வுணன்மேல். (எ௯)

ஆபி ரங்கணைவி டுத்தவுண னக்கணை யொரீஇக்
காயி ரும்பகழி நூறுகட வக்க டிதவை
மாயி ரும்பகழி நூறுகொடு மாற்ற வரதன்
சேய டுஞ்சிலையின் வல்லனிவ னென்று தெளியா. (௮0)

தெய்வ மாப்படைசெ லுத்தவவு ணன்றி றலினன்
வெய்ய வப்படைவி டுந்தொறும்வி டுத்தொ ருவினன்
உய்வ தொன்றுமறி யாதவன்ம ருட்கை யுளனுய்
ஐய மாயையின டர்ப்பவத னைக்க டவினன். (௮௧)

அங்க ணப்படைய வன்வடிவ னந்த மொடுசென்
றெங்கு நின்றுபொர வீரரிமை யாரினைவுற
மங்கும் வல்லவுணர் துள்ளவது கண்டு மனிதச்
சிங்கம் வென்றபடை செம்மல்கையெ டுத்த னனரோ. (அஉ)

சிம்புள் வெம்படையை நோக்கிவிளை மாயை சிதற
உம்பன் மாமுகவன் கைதவமு ஞற்ற விரிய
நம்பி தேர்கிலன லத்தபடை தூணி திறுவி
இம்ப ரோடினன்பி டித்துவர வெண்ணி விரைவின். (அங)

குறுமுனி விளைத்த சாபக் குருகுசுட் டியபே ரோங்கல்
இறுவரை முழையொன் றண்மி யிபமுக னிறந்து தோற்றான்
கறுவொடு தொடர்ந்து போந்த காளையுட் சேற லோடும்
பெறுமுணர் வழியக் குன்றம் பேதுசெய் திட்ட தன்றே. ()

சென்றவன் றிரும்பக் காணாச் சேனைகா வலரொண் வீரர்
துன்றிய விலக்க ரெல்லாந் தொடர்ந்தவந் நெறியே போந்து
நன்றெனத் தோற்றி யாங்கே நவைவிளை பிறனில் கூட்டம்
வென்றவம் முழையிற் புக்கு விளிந்தன ரவரு மாண்மை. ()

வஞ்சனை வாய்த்த தென்று வரைமிசை யிவர்ந்து தீயோன்
விஞ்சிய வவுண ரார்ப்ப வில்வளைத் தனந்த கோடி
செஞ்சரந் தூண்டிப் பூதர் சேனையைச் சிதர்ப்ப நோக்கி
அஞ்சின ரமரர் வீணை யறவன்போ யடிகட் கோதும். (அசு)

எயிற்குல மூன்று மொன்று யிருந்தன வெயிலை முற்றிக்
கயிற்கழ லவுண ராற்றல் காற்றிமா முகவ னெய்ப்ப
அயிற்குலப் படைக டேண்டி யவன்விளை புணர்ப்பிற் பட்டு
வெயிற்குரு மோலி வீரர் வெற்பக மயங்கி னூரால். (அஎ)

நஞ்செனக் கொதித்துத் தீயோ னம்படை யெஞ்சிற் றெல்லாம்
பஞ்சியிற் பறப்பக் காலாய்ப் படர்ந்தன னென்ன மஞ்சன்
அஞ்சலிர் தேவ ரென்னு வணிமணிக் கொடிஞ்சித் திண்டேர்
வெஞ்சினத் தடுபோர் ஞாட்பின் விரைசெல வுந்திச் சென்றான்.

ஆர்த்தன பூத வெள்ள மடைத்தன பதாகை வானம்
போர்த்தன திசைக ளோதை பொலிந்தன சமர்செய் சூழல்
தூர்த்தனர் மலர்கள் விண்ணோர் துளும்பின கடலு மண்ணும்
வேர்த்தன ரமர்த்த வீரர் வேறிருந் தவுணர் தொக்கார். (௮௯)

நெடுமொழி கிளந்து சூழ்வார் வஞ்சின நிகழ்த்தி நேர்வார்
விடுகணை பாய்ந்து பாய்ந்து மெய்யெலாந் தூணி போல்வார்
படுபிண மிடறிச் சென்று பறந்தலை யுழக்கி வீழ்வார்
இடுகிய வீரம் வேண்டா ரிருதிறத் தவரு மாதோ. (௯௦)

மடித்திதழ் தின்னார் பூதர் வாலெயி றழுந்தி மாதர்
துடித்திடு மதர நேரிற் சூழ்ந்தவர் படைக ணம்மேல்
எடுத்திடா ரென்று தீயோ ரிமைமுழு தொழியக் காய்ந்த
தடுத்தகண் வெகுளிச் செந்தீ யழித்திமைப் புளதா மென்றே.

தார்த்தடந் திணிதோட் பூதத் தலைவர்பல் கவந்த மாட
ஆர்த்தழன் முளிபுன் மேய்ந்தாங் கையென நூழி லாடித்
தேர்த்திரண் மிதப்ப நெய்த்தோர் தேங்கியும் போரி னீங்கார்
நீர்ச்செரு விழைந்த பாசி நிலையினைத் தெரித்து நின்றார். (௯௨)

கால்பொரக் கனிந்து நைந்த கனித்திர ளுருவ தென்ன
மால்பொர னேக்கித் தன்னை மதியகத் திழிக்கும் பூதர்
கோல்பொர வவுணர் சென்னி குருமுடி யோடும் வீழச்
சால்பொரு வுற்றுத் தீயோர் தலைவர்க ளுடைந்து போந்தார்.

உடைதல்கண் டார்த்த பூத ரோகையுந் தன்பாற் றேல்வி
அடைதலு நோக்கி வல்லே யந்தகா ளங்கி யென்னத்
தடைஇய சிலைகை வாங்கிச் சரமழை தூர்த்துப் பூதர்
மிடைதரு தலைவர் தம்மை விழிக்குமு னிரித்துச் சென்றான்.

பண்டைநற் றவத்தி னூற்றாற் பாயொளி முகமோ ராறும்
குண்டலங் குலாய காதுங் கொழும்படைக் கரமீ ராறும்
தண்டைகிண் கிணிகள் சூழ்ந்த தாள்களும் பொலியத் தேரின்
அண்டர்கள் சூழ நின்ற வமலனை யெதிரே கண்டான். (௯௫)

தன்னையு மறியா துள்ளந் தழைத்தெழு மன்பு பொங்க
இன்னவ னேயோ வீசன் மகனென வியம்புந் தோன்றல்
என்னனு மன்ன னேயா மிவனென வமைச்சர் கூற
முன்னவன் முன்னர்த் தேரின் முன்னினன் மொழித லுற்றான்.

நாரணன் முதலா யுள்ளோர்க் கல்லது நம்மேற் போர்க்குக்
காரணி மிடற்றாற் குன்னுங் கடனிலை மைந்த வீங்குத்
தாரணி படையி னோடுஞ் சார்ந்ததென் னுரைக்க வென்றான்
பூரணப் பொருளா யுள்ள புண்ணிய னிதனைக் கூறும். (௬எ)

முறைபுரிந் தவரை யோம்பி முறைமையிற் றிறம்பி மன்றே
மிறைபுரிந் தோரைக் காதும் வேந்திலா வேந்த னெந்தை
அறைகழல் வீர விண்ணோர்க் கருஞ்சிறை யிட்ட வாற்றால்
இறையினும் முயிரைக் காற்ற வேயினன் போந்தா மென்றான்.

வரம்பிலா வாற்றற் செம்மல் வரவினைக் கிளத்த லோடும்
வரம்பிலா வின்ப முக்கண் வள்ளலார் தமக்குத் தந்த
வரம்பிலா வரமு மற்று மதித்துமா முகத்துத் தோன்றல்
வரம்பிலாச் சீற்றம் பொங்க மற்றெதிர் கழறு கின்றான். (௬௬)

மாயனூர் திகிரி யீது மார்பிடைக் காண்டி வீந்து
போயினா ரன்றி யென்னைப் பொருதவ ருலகி னில்லை
ஆயினோர் பலரூண் வெற்புக் கடுபடை தமக்கு நீவந்
தேயினா ரிளையைநீயு மேகென விறைவன் சொல்லும். (௧00)

உடுவொளிக் குயர்ந்த திங்க ளுருகெழு பரிதிப் புத்தேள்
விடுமொளிக் குயருங் கொல்லோ விண்டுகைத் திகிரி வென்றான்
முடுகுபு றமைய னூரு மண்டங்க ளன்றி முற்றும்
நொடிவரை யடுநங் கைவே லுன்வயத் தாமே பேதாய். (௧0௧)

பொய்தகு வரையும் புக்கெக் கழுத்தத்திற் புகலு நீயும்
செய்தவ ரிடும்பைக் குன்றுந் திகழ்ந்திடு நும்மார் தேசும்
வெய்திவ ணழியக் காண்டும் வாயினல் விளம்ப லென்னும்
கைதனில் விளம்ப லன்றே வீரர்தங் கடப்பா டென்றான். ()

இன்னண மிறைவன் கூற விபமுகன் மான முந்தப்
பொன்னிவர் தோளை நோக்கிப் பொருசிலை நோக்கிக் கையால்
மன்னிய முகத்து ரோமம் வருடினன் றிரித்துக் கொண்டு
தன்னெடுஞ் சிலையைக் கோட்டி நாணினைத் தழக்கங் கண்டான்.

வன்றிற லிளையோன் றானும் வார்சிலை வாங்கி நாணில்
துன்றொலி யெழுப்பி விட்டான் றுளங்கின வண்ட மெல்லாம்
வென்றில மேனும் போரின் விளிகுவ மேனும் வென்றி
இன்றுள மென்று தீயோ னெரிகணை தெரிந்து கொண்டான்.

மிக்கவ ரில்லா வண்ணம் வென்றசி ரிவன்முன் னோரைப்
புக்கடல் புகழே யாகப் புகலும்வை யகங்க ளென்றே
தொக்கபே ரண்ட மெல்லாந் தூள்படுத் துருவிற் பூசும்
முக்கணை நுதற்கண் வாய்த்த முதல்வனுங் கணைகைக் கொண்டான்.

எண்ணில் பல்கணை தான வன்றொட
வேவொ ராயிரந் தொட்டவை
மண்ணி றுத்தவன் மீட்டொ ராயிரம்
வாளி தூண்டவ வற்றையும்
அண்ண லையிரு வாளி யேவிய
றுத்தொ ரம்பின வன்சிலைத்
திண்மை சிந்திவில் வேறெ டுக்குமுன்
செல்ல வாயிர முந்தினன். (கOசு)

வல்லை வாங்கிய வில்லி னுயிரம்
வாளி தூவிம டித்தவை
அல்ல றுத்திய வாக்கை யாளன
னந்த வாளிது ரந்தனன்
எல்லை றுத்திய மேனி யண்ணலி
லக்க வாளியி னட்டவை
சொல்ல றுத்திய கோடி வாளிது
றுத்த னன்றனு வெங்கணும். (கOள)

வாளி கோடியி ரட்டி யுந்தினன்
மாயை மைந்தன ரன்மகன்
தூளி கண்டவை கோலி ரண்டுது
ளக்கை கோடிற விட்டனன்
நீளு றுப்பற வாயி ரங்கணை
யானெ டுங்கொடி நூறினன்
ஆள வந்தவ னெட்டின் வில்லிறுத்
தாயி ரத்தடர்த் தான்வையம். (சOஅ)

பாய்ந்து வேறொரு வையம் வார்சிலை
பற்றி வெங்கணை யாயிரம்
வாய்ந்த கால்வல வன்பு யத்தின்வ
ருந்த வுய்த்தினை யோன்கணை
ஆய்ந்தொ ராயிர நெற்றி யேற்றவ
யர்ந்து சோரிநி லத்துகச்
சாய்ந்த னன்றடந் தேரின் மாமுகன்
சாய்ந்த வானவ ரோங்கவே. (சOகூ)

கண்டவ வன்படை காவலர் மானம
லைப்பவொ ருங்குகலாய்
மண்டிய ழற்படை யாவும்வ ழங்கவ
ளங்குல வுங்குமரன்
கொண்ட சிலைக்கணி ருங்கணை பௌவமுண்
கொண்டலெ னச்சொரியத்
திண்டலை தோள்கழல் சிந்தம டிந்தனர்
செத்தில ரோடினரால். (சகO)

அழிந்தவு ணர்ச்சியெ ழுந்தெழு தாரக
ளுவிளை வென்கொலென
இழிந்தவு ளத்தின னிப்படை யாலிவ
னெய்ப்பில னென்றுகனல்
பொழிந்தடர் தெய்வத மாப்படை யாவும்பு
குத்தின னன்னவைபோய்த்
தொழுந்தகை யைத்தொழு தண்மையி னின்றதொ
லைத்தவ னெண்ணமெலாம். (சகக)

புராரித ரும்படை போக்கின ஞர்த்தது
போதவு ளத்திறையைப்
பராவிய கங்கையி னேற்றலு நொந்துப
றைந்தன நந்திருவென்
றுராவும னத்தினன் மாயைவ லானிவ
ஞெய்யென வாற்றியது
விராவுவல் வெற்றியெ னக்கிர வுஞ்சவி
லங்கலொ டும்வருவான். (கசஉ)

முப்புர மெண்ணில வாகவி வங்கன்மு
னைத்தெழு சூரிளவல்
அப்புர வாழ்நர்க ளாயொரு சார்வரு
மாழிக ளாகவரை
துப்பின ஞர்வட வைக்கன லாம்புன
றாங்குமு கிற்படலம்
மைப்படி நீள்சிலை யாகவி டிக்குல
மாமுக ஞய்வருவான். (கசங)

நேமிவ ரைப்புடை சூழிரு ளாகநெ
டுங்கிரி யாங்குஞெமிர்
நாமிரு பாரிட ரெண்ணில ராவன
லத்ததி சைக்களிறு
பேமுறு வெற்புற வன்னவை சூழ்பெரு
மால்வரை யாய்த்தழைவான்
தோமுறு காலுரு வாகவ டுக்கறு
ளக்கெரி யாயெழுவான். (கசச)

பொங்கழல் கான்ஞெகி ழித்திர ளாய்ப்புவி
மாதிரம் வான்மிடையத்
துங்கமி குந்தகல் சூரிய ரெண்ணில
ராய்ச்சுல வுற்றழல்வான்
இங்கன னந்தமெ ழுங்கிரி யோடுமி
ழைத்தமை கண்டிளையோன்
செங்கைய யிற்படை தூண்டின னேக்கிய
தோன்முகன் சீற்றமுறீஇ. (கசரு)

இருதுணி செய்குவ னின்னதை யென்றெதி
 ரெய்தலு மார்புதுளைத்
தருவரை யட்டடல் வீரம யக்கம
 கற்றியெ ழுந்துயர்வான்
பொருதிரை யுந்திது ளைந்திமை யார்பொழி
 பூமழை யுண்முழுகித்
திருவளர் கைக்கணி ருந்ததெ ழுந்தது
 தேவரி ருந்துதியே. (ககசு)

குன்றொடு மவுணற் சாடிக்
 குடுமிகைக் கொண்ட சேவ்வேள்
முன்றிறல் வீர வாகு
 முதலியோ ரெவருந் தொக்கார்க்
கொன்றிய கருணை நோக்க
 முதவியா டமரிற் றுஞ்சும்
வன்றிற லாளர் தம்மை
 வருகென வெழுப்பிக் கொண்டான். (ககஎ)

தாரகன் விடுத்த தெய்வத்
 தறுகண்மாப் படைக ளோடும்
கூரிய மாய னேமிக்
 கொழும்படை நின்ற வெல்லாம்
வீரவா குவின்கை யுய்த்துப்
 போற்றென விளம்பிப் போர்செய்
பாரினை யெவருஞ் சூழப்
 பணையெழ நீத்துச் சென்றான். (ககஅ)

போரிடை வீழ்ந்தோர் மெய்யிற்
 பொங்கிமேற் றுளித்த நெய்த்தோர்
ஆரவேற் றுமைப்பட் டென்ன
 வலரிமெய்ம் முழுதுஞ் சேந்தச்
சோரியை மண்ணு வான்போற்
 றொடுகடல் குளித்தான் வீழ்ந்த
தாரகன் வீரச் செங்கேழ்
 தரணிவீழ்ந் ததுவும் போன்றான். (ககக)

வெய்யவ னொளிமை யாப்ப
    விளங்குருக் குமரன் வீரச்
செய்யொளிப் பிழம்பு தோற்றிச்
    செறிந்தென மாலைச் செவ்வான்
ஐயெனத் தோன்றிற் றுங்க
    ணவன்பெரும் புகழ்சீர்த் தென்னப்
பெய்யொளி முழுவெண் டிங்கள்
    பிறக்கம்வாய்ந் தெழுந்த தன்றே. (கஉ0)

மூவுல குய்ய வந்த
    முன்னவன் சீர்த்தி யோடும்
தேவர்கள் புகழும் பாங்கர்ச்
    சீர்த்தென நெடுவா னெங்கும்
தாவில்பல் லுடுவின் கூட்டந்
    ததைந்தன வாய காலைக்
காவன்மூ வர்களும் வேண்டக்
    கடவுளர் சிலம்பைச் சார்ந்தான். (கஉக)

முந்துறத் தேவத் தச்சன்
    முறைமையி னங்கட் செய்த
கொந்தொளி நகரிற் சேனைக்
    குழாத்தொடு மசைந்தா னகப்
பைந்துழா யலங்கன் மார்பிற்
    பண்ணவன் முதலோ ரெல்லாம்
வெந்திற லவுணன் புன்கோற்
    குட்படு வினைக டீர்ப்பான். (கஉஉ)

விசும்பமர் கங்கை தேனு
    விரைநறு மலர்ப்பூந் தாருத்
தசும்பம ரமிழ்த மாதி
    ததைதர வருத்திக் கொண்டே
அசும்புருக் குமரற் காட்டி
    யணிந்தருச் சித்த யிற்றி
இசும்பெனும் பவங்க ளோங்க
    வேத்தினர் தொழுது சூழ்ந்தார். (கஉங)

குடுமிகைக் கொண்ட மண்ணுமங் கலமுங்
கூர்த்தவாண் மண்ணுமங் கலமும்
அடுதிற லவுண னகர்வயிற் புரித
லடாதென வகற்சியிற் றாய்மை
படுமிட னறிந்து செய்தது நிகர்க்கும்
படையொடு பண்ணவ ரெல்லாம்
விடுசுட ரிமைக்கு முருவனை யாட்டி
வியத்தகப் பூசனை புரிதல். (கஉச)

கடவுளர் வழிபா டறிந்துமற் றியாமுங்
கழன்மலர் வந்தனை புரியப்
படர்குது மெனவந் தணைந்தவன் போலப்
பாற்கரன் றிரைக்கட லெழலும்
நடவிய கடிநாட் புடவிதாழ்ந் தமைதேர்
நம்பிரா னேவலிற் றென்பால்
வடதலைக் கிரிகள் பெயர்வன புரைய
வயவர்தேர் புடைவர நடந்தான். (கஉரு)

மண்ணிடை யாங்காங் கிறையமர் தலங்கள்
வழியினேர் பட்டன பாரா
மண்ணியாற் றருகி னிறுத்துழி மணித்தேர்
வார்கொடி புடைத்தலுந் துருவன்
நண்ணிய பிணிப்பிற் றீர்ந்துவீழ்ந் தென்ன
நரலைவீழ்ந் ததுகதி ரதுகண்
டுண்ணிறை களிப்பி னெழுந்தென மாரு
முடுபதி யொளிர்ந்தது விசும்பில். (கஉசு)

இரவவ ணிருந்து காலையி லீசன்
பூசனை யியற்றியவ் வீசன்
பரவுபல் படைக்கு நாயக மான
படைக்கலங் கொடுத்திடப் பெற்று
விரவிய சேனை யொடும்வழிக் கொண்டு
வெஞ்சுரங் குளிர்தகக் கடந்து
வரமலி செந்தி லடுத்தவ ணினிது
வதிந்தன னென்னையா ளுடையான். (கஉஎ)

முந்துதா னளித்த வரமும்பின் றந்தை
யருளுநா ளிறுதியு முழுதும்
புந்திகொண் டிருந்தும் புறப்பொருண் மரபு
புவித்தலை வழங்கிலக் கியமாச்
சிந்தைசெய் தவுணர் தோற்றமும் வலியுஞ்
செய்கையு முழுவதுங் கடாவி
அந்திலொற் றுருக வாகுவை யைய
னகற்றின னவனுந்தாழ்ந் தெழுந்தான். (கஉஅ)

அளைதொறு மவுண ரரக்கர்நோற் றிருந்தா
ரழிதகப் பிலமது புகுத
வளமலி கந்த மாதன மிவர்ந்து
வயங்குபே ருருக்கொடே ழுலகும்
களிமிகு சூர னகரமு நோக்கிக்
காயமே வழியெனச் செல்வான்
தளைவுறும் வீர சிங்கனை யழித்துத்
தடவிய விலங்கைகுப் புற்றான். (கஉகூ)

ஆழியு ளிலங்கை யழுந்தவாங் கெதிர்ந்த
வதிவீர னுயிர்குடித் தேகி
வாழிய வீர மகேந்திரம் புக்கு
வாயில்காத் தமர்கய முகத்துப்
பாழியந் தடக்தோட் பதகனைச் சவட்டிப்
பட்டினம் படர்ந்தருஞ் சிறையில்.
தாழுறுஞ் சயந்த னுளத்தினைத் தெருட்டிச்
சார்ந்தனன் சூர்முத லவைக்கண். (கந0)

எவ்வெவ ரவையுந் தவ்வெனப் பொலிந்த
வீடிலாச் சூரன்வீற் றிருந்த
அவ்வவைக் களமு மவன்றவி சொளியு
மாங்கவன் றேசுமை யாப்பச்
செவ்விய குமர னருளினோர் தவிசு
சிவணலுஞ் சென்றவ ணிருந்தான்
தெவ்விய சூர னெரியெழ விழித்துச்
சிறுவநீ யாரென மொழிவான். (கநக)

முக்கண னுயிர்த்த முருகவேள் விடுப்ப
முன்னிய தூதன்யா னீங்குப்
புக்கதென் னெனிற்கேள் பொன்னுல கழித்துப்
புலவரைச் சயந்தனோ டழியத்
தொக்கபல் லூழி வருத்துதி யன்றே
துயருமச் சிறைதுமித் தொழிப்பின்
ஒக்கலோ டின்னும் வாழ்குவை யன்றே
லும்பிபோ லொருகணத் திறப்பை. (கஙஉ)

சலந்தரன் முதலா நன்குலத் தலைவர்
தருக்கினாற் றேவரை யின்புக்
கலந்தன ரழியக் கவற்றிமாய்ந் ததுநன்
றறிதியே யன்றியுந் தளரா
வலந்திரு வீரம் வரமிக வுடையார்
வல்லுத லில்லவர்க் கவற்றின்
நலந்தரு மேகொ லவரழு நீரே
நலனழி படையென வறியாய். (கஙஙு)

ஆதலாற் றேவ ரருஞ்சிறை சீத்தின்
பார்மதி யென்றுரைத் தீங்குப்
போதென விடுத்தா னென்னனு முளத்துப்
பொங்கிய வெகுளிமீக் கிளைப்ப
மூதறி வெனக்குக் கிளத்தலா னுமைய
னறிவினு முருகனே போலும்
வேதனை யிரிந்தோர் தமக்குநன் றுறுப்பன்
விடுவனே சிறையகத் தோரை. (கஙச)

எம்பிபோ லெனையு நினைந்துனை விடுத்த
விளையவன் யானென வுயங்கத்
தம்பியை யெம்பி யாக்குவன் றரும
மன்றெனத் தாழ்த்தனன் வேற்கை
நம்பியை யெம்பி செல்லிட னென்ன
னடத்துவன் வீரமன் றேயென்
றம்புவி வியப்பச் சிறுவரால் வேற
லமர்ந்துளே னேகுதி யென்றான். (கஙரு)

இகந்துரை கேட்ட வீரனுஞ் சினத்தி
னியம்புவன் மான்முத லோர்தம்
அகந்தையைத் தணித்த வகந்தையா யுண்மை
யறைந்தனை தத்துவந் தோறும்
நிகழ்ந்திடு மண்ட மளப்பில வவற்று
ணிலனுறு மண்டத்தா யிரத்தெட்
டுகந்துளன் யானவ் வனைத்துநின் றளிக்கு
மொருமுத லுனைவிடு முருகன். (கருசு)

என்றுமோ ரியல்பி னின்றதன் னிலைமை
யிருந்தவர்க் கறிவுறுப் பான்போல்
என்றுமவ் விளமை தணத்தலின் மையினால்
யாவரு முருகனென் றிசைப்பர்
நன்றவன் கொளுத்து முதுக்குறை வென்று
நலனெனு மிளமையிற் றணவா
தொன்றலி னறிவி னுனுமங் நாம
முள்ளதெக் காலமு மவற்கே. (கருஎ)

ஆரடு திகிரிக் கூவிரத் தடந்தே
ரடுதிறற் களிற்றினம் பரிமா
வீரரைப் பல்கா லிடமறக் கஞற்றி
வெஞ்சம ருழப்புழி யுயிர்க்கு
வாரமுற் றிரிந்த வெமர்க்குவே தனையை
மண்டிய வெமரொடு மிறந்தியான்
பாரகத் துறுப்ப னிதுவரும் பொருட்டுப்
பண்ணவர் படுசிறை வீட்டேன். (கருஅ)

உம்பரைத் தாங்க வருமுரு கனையே
நானென வும்பர்க ளுயங்கத்
தம்பியா நினையு மெம்பியாக் கொள்வ
றனக்குது தருமமன் மையினால்
நம்பிமற் றிசையா னருள்வழிச் சிறையை
நலியனா தியரென வுளத்துப்
பம்பிய மான முலப்பில தனுற்
பணிந்தது செய்கிலன் றாழ்த்தேன். (கருகூ)

நெருநலே பணிந்து முற்றவப் பயனு
லெம்பிசெ னீள்கயி லாயம்
முருகனை விடுப்பன் மொய்யம ரிகந்து
முரிதிரு விழைவது வீரர்
தருமமன் மையினல் வீரமன் றெனப்போர்
தனிற்படுந் தகைமையே வேட்டிங்
கொருசிறு மீனு நீயொளி வேற
னுவந்தன னெனக்கொள வுரைத்தாய். (௧௪௰)

இன்னதுன் கருத்தே லிங்ஙன மாக
வென்றனன் வீரர்கள் வீரன்
அன்னது செவியிற் புகுந்தெனக் கண்க
ளங்கிகான் றுடன்மயிர் பொடிப்ப
மன்னுயிர் கோறல் பழியிவற் பற்றி
வன்சிறை யிடுமினென் றுருத்துத்
தன்னருகுள்ளோ ராயிரர் தம்மை
யேயினன் றறுகண்வா ளவுணன். (௧௪௧)

முற்றின ரவரை முடிச்சிகை பற்றி
மோதிமுன் னிட்டுநீ யழிவை
பற்றுள வெவையு மின்னினி நுகர்தி
படர்குவல் யானென வெழுந்தான்
வெற்றிகொள் வீரற் பற்றினை தம்மோ
வெனவிறற் றுனையர் தலைவன்
நற்றிற னுடைய சதமுகற் குரைப்ப
நன்றெனப் படையினே டெதிர்ந்தான். (௧௪௨)

இலக்க வீரர்கள் படைவிடச் சூளிகை
யிடந்தொன்று மேலோச்சித்
தொலைக்க நேர்ந்துடல் சதமுகத் தவனுயிர்
துரந்துபே ருருக்கொண்டான்
நிலக்கட் டாட்டுணை பெயர்தொறுஞ் சுவட்டின்வா
ரிதிப்புன னிமிர்ந்தூரை
அலைக்க வைம்பது வெள்ளங்கா வலர்பொர
வவையகத் துயிர்மாய்த்தான். (௧௪௩)

மேரு மால்வரை பொருமொரு தூவிகை
விரைந்தகழ்ந் தெடுத்தோச்சிச்
சூரன் பேரர சவையழித் தோங்கிய
சூளிகைக் குலந்தம்மால்
வீரர் மாளிகை மேனிலை மண்டபம்
விற்பயி னெடுஞ்சாலை
கார ளாவிய கடிமதின் முழுவதுங்
கனன்றுயி ரொடுஞ்சாய்த்தான். (கசச)

ஆயி ரங்கர மைந்துநூ றெனுமுடி
யவுணரா யிரர்சூழ்ந்து
மாயி ரும்படை வழங்கினர் தண்டென
மராமர முரித்தேந்திச்
சேயி ளந்தசை மூளைநெய்த் தோர்கரஞ்
சிரமடி நிலம்வீழத்
தாய டர்ந்தவர்ப் புடைத்துயிர் முழுவதுந்
தனிவிசும் புறவுய்த்தான். (கசரு)

வீரர் வெள்ளமீ ராயிரம் பரிவெள்ள
மொராயிரம் வேழந்திண்
தேரி ரண்டுமா யிரவெள்ளஞ் சேனைகாப்
பாளருந் தற்சூழச்
சூரு யிர்த்தவன் வச்சிர வாகுதூ
தவனெங்க ணுளனென்றே
போரி யற்றிய வடுகளங் குறித்துநேர்
போந்தனன் புகுமெல்லை. (கசசு)

அண்டம் விண்டெனத் தோள்புடைத் தார்த்தன
னடமர் விழைவீரன்
மண்டு தானைகள் வெயர்த்தன வயிர்த்தனன்
மறமிகு சூர்மைந்தன்
கொண்ட தானையைச் செலுத்தினன் ருனையுங்
குலாய்ப்படை யொருங்குய்த்த
மிண்டன் மெய்யவை யழுந்திநெய்த் தோருக
வெகுண்டனன் மேற்கொண்டான். (கசஎ)

இரத மாயிரத் திரதமா யிரம்புடைத் திறுத்தான்
கரிக ளாயிரத் தாயிரங் கரிகடாய்க் கவிழ்த்தான்
பரிக ளாயிரத் தாயிரம் பரிவிட்டுப் படுத்தான்
சரிய வீரரா யிரரையா யிரவராற் றகர்த்தான். (கசஅ)

தாளி னாற்சில தடங்கரத் தாற்சில தடவுத்
தோளி னாற்சில சுலாவலிற் சிலமுறு வலிக்கும்
கோளி னாற்சில கூர்ந்தெழு முயிர்ப்பினாற் சில்ல
வாளி மொய்ம்பினன் விழிப்பினாற் சிலபடை யவிந்த. (கசகூ)

இன்ன வாறுநா லாயிர வெள்ளமு மிகலி
முன்னு றும்படைத் தலைவரு முறைமுறை விளிய
மன்னர் மன்னவன் மதலைவெஞ் சினந்தலைக் கொண்டு
கொன்னும் வண்சிலை குனித்தொ ராயிரங்கணை விடுத்தான். ()

விடுத்த கோலொரு கையினாற் பிடித்துமென் றுகளாப்
படுத்த னன்பதி னாயிரம் பகழிக டூர்த்தான்
அடுத்த தண்டினாற் சிதர்த்தன னயுதம்விட் டெறுழ்த்தண்
டொடித்தொ ராயிர மவயவந் தொறும்புக வுதைத்தான். ()

வருந்தி வாளிபாய் வீரன்வாம் பரியொடு பாகு
நெரிந்து நீறவொண் டேரினை யுதைத்தன னேரான்
விரைந்து வேறுதேர்ப் பாய்ந்தொரா யிரங்கணை நுதலில்
தெரிந்த மூத்தினன் சென்றுதே ரெடுத்துவிண் ணெறிந்தான்.

வீழு முன்னவண் வேறுள சேமத்தே ரனைத்தும்
பூழி செய்தனன் விழுந்துதேர் கெடநின்றோன் பொருவில்
வாழி வாங்கினன் றொடுக்குமுன் வார்சிலை யிறுத்தான்
ஊழி னன்னநாந் தகமுரீஇ யினரிரு வோரும். (கருரு)

பொருது மேல்வையிற் பூரிய னேச்சுநாந் தகக்கை
இருநி லத்திழித் தனனவ னேந்தொரு தண்டம்
மருும மோச்சினன் வருமுனர்த் துணித்திடங் கழிகொண்
டருவி செம்புனல் கொளமுடி யறுத்தனன் வீரன். (கருச)

ஒழிந்த வச்சிர வாகுதன் னுடலினைப் பொதிர்த்திட்
டழுங்கப் போதுவ னேயென வஞ்சினுன் போலச்
செழுங்க திர்த்தின கரன்கடற் கரந்தனன் செருக்கொண்
டெழுந்து ளார்களு மில்லையா தலின்விறல் வாகு. (௧௫௫)

முந்து மண்ணலை யிகழ்ந்தவ னூர்முழு தழித்தாம்
வந்த வந்தபல் வீரர்க ளுயிர்விசும் புறுத்தாம்
மைந்த னுக்கைமண் படுத்தன மறலுந ரில்லை
அந்தி பட்டது போதுமென் றவனொரீஇ மீண்டான். (௧௫௬)

இலங்கை புக்கன்ன் புகுதலு மென்மகன் படைஞர்
குலங்கெ டப்பொரு தாய்கினைக் கொல்வலென் றியாளி
விலங்கு மாமுக மாயிரங் கொண்டவன் விடைப்பத்
துலங்கு போரினு லவனையுந் தொலைச்சிவின் னெழுந்தான். ()

செந்தி லான்றிருச் சேவடி தாழ்ந்துசென் றுரைத்து
வந்தவா றெலா நுவன்றனன் வதிந்தனன் வீரன்
மைந்தன் பட்டது கேட்டழிந் தரற்றுமன் னவன்முன்
முந்து போயவொற் றொற்றிவங் குரைத்தன முழுதும். ()

சீர மைச்சர்கண் மைந்தர்க ளிளவறேர்ந் தவர்கள்
யாரும் வம்மினென் றழைத்தெரிப் பொலஞ்சடைக் கடவுள்
வார மைந்தன்ரு ரகனொடு மலைதொலைத் தமரர்
பார வன்சிறை பாற்றெனத் தூதிவண் விடுத்தான். (௧௫௭)

தூது வந்தது மிருந்தது மொழிந்ததுந் துளக்கிப்
போத லுற்றதுங் கண்டுகேட் டறிதிரே பொறிகால்
கோதை வேலவன் செந்திலான் கூளிவெம் படைகள்
ஓதி ராயிரம் வெள்ளமோ டிவணுறு நாளை. (௧௬௦)

நனித்த கேள்விய ரேனுநூ லாளரை யன்றித்
தனித்தொ ரெண்ணமு மெண்ணலர் தரணிகாப் பாளர்
இனித்த ழூஉம்வகை யிதுவென வுரைமின்க ளென்றான்
பனித்து விண்ணவர் கேட்டொறும் பருவருந் திறலோன். ()

மதுக்கு டித்தவர் குழாமென வரதனம் படையை
நுதுக்கு மென்மரு நொறிலிலா னவனைநம் படைசென்
றதுக்கு மென்மரு நீபொர விழிவியா னழல்காய்
பதுக்கை மேய்ந்தெனப் படுப்பல்சென் றென்மரு மானுர். ()

தத்த நெஞ்சினுட் டோற்றியாங் குரைப்பவர் தம்மைக்
கைத்த லத்திறு லடக்குபு காழ்படு சினத்தான்
ஒத்த வாறெலா முரைப்பதி னுறுபய னெவன்கொல்
அத்த கேளெனக் கரைவறு லரிமுகத் திளவல். (கசுங)

வேட்ட தாறுமா முகன்சிறை விடலது செயினம்
மாட்டு வந்துறு மிடரெவன் வச்சிர னவுணர்
ஈட்ட முன்னெலா மலைத்ததற் கெதிரின்று காறும்
மூட்டி வெந்துயர் சிறைபின்முள் காந்தன னவன்சேய். ()

குமைக்கு மாற்றலி னமக்குமே லிலையுயிர்க் குழுவின்
அமர்க்கட் டோல்வியுண் டாகுமேற் றுணைவர மளித்த
உமைக்கு நாயக னேயல திலையுவன் றுனே
நமக்கு மாற்றல னெனச்சிறு குழவியாய் நயந்தான். (கசுரு)

அளித்த நல்வர மழிக்குமே யீசனென் றயிர்த்தல்
தெளித்த வாயுளீ ரெட்டலா விலையென்றுஞ் சிவணக்
களித்து நல்கினன் மார்க்கண்டற் கவனுளங் கைத்து
விளிக்க வேண்டுமே லரிதுகொ னம்முடை வீறு. (கசுசு)

அல்ல தூஉம்வர மளிக்குஞான் றமலநா யகனம்
வல்ல சத்தியி னல்லது மற்றெவ ராலும்
கொல்லு நீரரல் லீரெனக் கூறின னிளவல்
வல்லை மாய்தலிற் சத்தியே யவன்கையில் வடிவேல். (கசுஎ)

தத்து வந்தொறு முலப்பில தரணியண் டத்தில்
பொத்து நீர்முத லொன்றற்கொன் றளவுபூண் டெரும்
அத்த கும்பல வண்டமும் படைத்தளித் தழிக்கும்
சத்தி நம்முயி ருண்பது தாழ்க்குமே சமர்க்கண். (கசுஅ)

நார ணன்றெழு வாரணற் றருநல னளித்தான்
ஆர ணன்றெழ நாரணற் றரும்வர மளித்தான்
சார நாமிமை யார்த்தெறு தலைமைமுன் னளித்தான்
வார முற்றவர் தொழுநமைத் தெறமழ வானுன். (௧௬௯)

தவத்தி னுலைய னுதற்கனோர் சேயுமாய்ச் சார்ந்தான்
தவற்றி னுலொரு சிறுவனு யவன்றலை தடிந்தான்
தவத்தி னுலொரு மருகனுந் தக்கன்பா லானுன்
தவற்றி னுலொரு சிறுவனு யவன்றலை தடிந்தான். (௧௭௦)

வளமும் வீரமு மைந்தரும் வாழ்க்கையும் வேண்டில்
தளையி னீக்குதி விண்ணவர் தங்களை யன்றேல்
ஒளிறு கைப்படை யோடுநே ருதியொல்லை யென்றுன்
விளியு மூழினன் கேட்டிலன் வேறெதிர் கிளப்பான். (௧௭௧)

ஏயே னெதெண் ணமெனக் கினிதே
ஆயே யிலன்கா லழலப் பினலைந்
தோயே லெனமீன் முலையூட் டநுகர்
சேயே பரமென் றுதெளிந் தனையே. (௧௭௨)

படைபல் கலைநோற் றல்வரம் பயிலான்
சடைசுற் றியதந் தைதருங் கதிர்வேல்
விடல்கற் றெருகு மூறுவெற் பினெடு
மடல்கற் றனனுண் மையிலா தவனே. (௧௭௩)

நெற்றிக் கணிருந் தநெருப் புவிழி
தெற்றென் றறியத் தருசெவ் வியினுல்
கற்றைச் சடையாற் கொருகான் முளையே
பற்றற் றுயரப் பரன்று னலனே. (௧௭௪)

மாயைக் கொருவைப் பெனுமா மையனை
ஆயுற் றனணற் றவமாற் றியெலாம்
ஈயப் பெறுமென் னைவெல்வா ரெவர்யான்
காயப் படுவான் கதிர்வே லவனே. (௧௭௫)

என்று ளிகல்சூர் முதலோ னெனவும்
பொன்று வவுணப் பொருவில் குலமின்
றென்று தினிநல் வினையென் றுணராப்
பின்றே ரரிமா முகன்பே சுவனால். (௬௭௬)

கருவயிற் றுறுமை யானுங் ககனங்கா லழனீர் மண்ணோர்
மருவுத லானு நோற்ற மாதர்பா லுண்ட லானும்
பொருபடை கலேகல் லாது புலவரைக் கொன்று வேதற்
கொருசிறை யமைத்துப் பௌவ முண்டவற் கருள லானும். ()

நோற்றலொன் றானு மின்றி நாழிலாட் டயரும் வெள்வேல்
ஏற்றிட லானு மொன்ப தெனுமுருப் போல விச்சை
ஆற்றினிற் றோற்ற லானு மறுமுகன் பரமே மாயை
தோற்றிய நம்மை மாயை தோய்விலா வவனே வெல்லும். ()

ஆங்கவ னெனவின் னோரை யட்டுயி ரெழுப்ப வல்லேம்
ஓங்குல காக்க வல்லே முறுவரர்க் குணர்த்த வல்லேம்
பூங்கழ லீசன் றாழப் புகன்றுவீற் றிருக்க வல்லேம்
பாங்குமை யிறைவ னுப்பண் மகவெனப் பயில வல்லேம். ()

பரமனும் வேறே வந்த பாலனும் வேறே யாக
பரமனல் கருளி னன்றே பாரளிப் பவர்முன் னமெச்
சுரரையு மடக்கி னமத் துரிசிலாப் பரமன் றோன்றல்
வரமுடை நம்மைப் போரின் மாட்டுதல் வியப்போ தேரின். ()

பன்னெடு மூழி கால முந்துறப் பயிலு மாயன்
அன்னமேக் குயர்த்தோ னதி யவர்க்கெலாம் பின்பு தோன்றி
முன்னவ னருள்பெற் றன்றே யவர்க்கெலா முதல்வ ரானேம்
தன்னருண் மகனைப் பால னென்றெள்ள றகைமைப் பாற்றே.

மகனென வுருவே றாகி மறைவழி யொழுகார் தம்மை
அகநெகத் தாக்கு மங்கத் தவபவத் தொன்றான் மாய்க்கும்
தகவுறு மடியார் தம்மாற் சாடுஞ்சூழ்ச் சியினும் வெல்லும்
உகலுறா வரத்தோர் யாரே யுமையொரு பாகன் சீறில். ()

முகம்விழி மலர்க்கை மூன்று முப்பது முன்பு நாஞ்செய்
மகவினைக் கருள வந்த வள்ளலுக் கீண்டுச் சாடப்
புகுமிறைக் கவைகண் மூன்று முப்பதே பொலிவு மற்றே
திகழுரு வானுஞ் சேயைச் சிவனெனத் தெளிய லாமே. ()

வரமரு ளுருவிற் போதின் மலரடி பணிந்து போற்றி
அருளிய தரும மெல்லா மகனமர்ந் தியற்றி மேலும்
திருவினைப் பெறலா மன்றே தீவினைப் பயத்தா லென்ன
உருவுவே றாகப் போந்தா னுமையொரு பாகம் வைத்தோன்.

அருமறை முதலி னோமென் றறைதரு பதமுஞ் சேர்த்த
திருமுக மாற னுள்ளோர் முகமெனத் திகழுந் தேவை
உருவினு மிளமை யானுஞ் சிறுவனென் றுதித்த மம்மர்
பொருதொழிற் பெருமை கண்டா லல்லது போத லின்றே. ()

அமிழ்தினை நஞ்ச மென்று பருகினு மின்பே யாக்கும்
குமரனைப் பகைஞ னென்றே கொள்ளினும் பெரும்பே றெய்தும்
விமலமெய் யுருவங் காண விளம்புரை கேட்க ஞான
இமிழிசை வேலிற் பொன்ற வெத்தவஞ் செய்தா மென்றான்.

என்றலுஞ் சூரன் சீறி யிமையவர் பாலிற் பட்டாய்
துன்றுபோர்க் கஞ்சு கின்றாய் தூத்தவ முயலப் போதி
கொன்றுவன் பூதர் தம்மைக் குமரனை வேறு மென்றான்
ஒன்றுதன் முதன்மை யொன்றே மதிர்ப்பவர்க் குணர்த்தல் வீணே

அரிமுகன் றமைய னெண்ண மறிந்தழி வெய்துங் காலைப்
பெரிதுநன் றுறுத்தி னுஞ் சிறிதுங்கைக் கொள்ளார் பீடு
விரிதரு காலைத் தாமே விளைவறிந் தொழுகு வாரென் [றான்.
றுரிமையி னிறைஞ்சிப் போர்சென் றடற்றுவல் பெருமவென்

தம்பியை மகிழ்ந்து புல்லித் தனிநகர் சேறி யீங்கு
வம்பலன் புகுந்தா னாகில் வருகென விடுத்திட் டாங்குப்
பம்பினர் தமையும் போக்கிப் பரிவொடு மிருந்தான் வல்லை
வெம்புபோர் மூட்டு வான்போல் வெய்யவன் கடலிற் பூத்தான்.

நாரணன் முதலோர் போற்றச் செந்திலி னயந்த நம்பி
ஆரண முழக்கம் விம்ம வடியவர் துழனி பொங்கத்
தேரணி படைகள் சூழச் சென்றவ னகர்க்க ணித்தின்
ஏரணி யேம கூட மியற்றிப்பா சறைய ணுனன். (௧௧௦)

நாரத னட்டான் போல நண்ணியாங் கிறைவ னுற்ற
சீரினை விளம்பிப் போத வொற்றருஞ் சென்று செப்பப்
போரணி கொடித்தேர்ச் சூரன் பொள்ளெனப் பானு கோப
வீரனை விடுக்க வன்னான் விறற்படை யெழுக வென்றான். ()

அடிகழ னரல வீக்கி யணிவிரல் புட்டில் சேர்த்தி
இடைநெடுங் கச்சிற் சுற்றி யெறும்கொள்சா லிகைமெய் யிட்டு
வடிநெடும் படைக ளேந்தி வார்கிறை தூணி தூக்கிப்
படுமணி யிரதம் புக்கான் பல்லியத் தொழுதி யார்ப்ப. (௧௧௨)

தேர்களிறு பரிவயவ ரிருபதினு
யிரம்வெள்ளஞ் செறியத் தன்பால்
தார்கதுவும் படைத்தலைவர் தும்பைமிலைச்
சினர்சூழத் தறுகட் டெய்வப்
பேர்கலவும் படைநிரைத்த சேமத்தே
ரொருகோடி புடையே நண்ண
வார்கலவு முரசுலம்பக் கொடிதுவன்ற
மதிக்கவிகை நிழற்றச் சென்றான். (௧௧௩)

தன்பெயர்ப்புத் தேட்கின்னுந் தனைசெயினுஞ்
செய்யுமெனத் தரணி வல்லே
அன்பினொடுங் கரந்ததெனப் பெரும்பூழி
கதிரொளிகா லறுப்ப நந்தம்
மன்பகைஞற் குதவிசெய்த லென்னையென
மாற்றுதல்போன் மதம்வி லாழி
கொன்பகடும் வயப்பரியுங் கூர்த்தொழுக்கக்
கோபுரவா யிலைநீத் திட்டான். (௧௧௪)

மாயன்முத லோர்பனிப்ப மகதியாழ்
முனியடுத்து மாயை வல்லான்
காயிரும்போர் பலகடந்தான் கமலன்முத
லோர்படையுங் கைக்கொண் டாண்மை
மேயினன்பொன் னுலகழித்தான் வெங்கதிர்க்குப்
பகைஞன்வரு கின்றான் போர்க்கு
நீயலது பிறர்வேற லரிதென்ன
வரைகிழித்த நெடுவே னம்பி. (௧௧௫)

வறிதுநகை யொடும்வீர வாகுமுக
நோக்கிவரு வானை யெண்மர்
செறிகழற்கா லிலக்கர்படைத் தலைவரா
யிரவெள்ளஞ் சேனை யோடு
முறையினிடங் கழிகோடி யெனவிடுப்ப
வவன்மொழிந்த சேனை மொய்ப்பப்
பறையியம்பக் குடைகவிப்பக் கொடிநுடங்கத்
தேரிவர்ந்து படர்த லுற்றான். (௧௧௬)

போர்பூத்த மைந்தினுக்குந் தானொருவ
னுதலிற்பொற் புறவெஞ் ஞான்றும்
சீர்பூத்த தந்தைமுடிக் கணியுமலர்த்
தும்பைமிலை திறலோன் சேனை
ஏர்பூத்த வடிதோய வவுணரடித்
தவிர்ந்தவினை யிரித்து வல்லே
பார்பூத்த துறக்கமுற வெழுந்ததுபோ
லெழுந்ததெங்கும் படர்ந்த தூளி. (௧௧௭)

இந்திரன்வா கனமிதுவென் றெறுப்பனபோன்
முகில்புடைக்கு மெழிற்ப தாகை
அந்தரமெங் கணுமிடையு மவுணர்நெடும்
படைக்கடலை யமர்க்குங் காலை
வெந்திறல்வா ளிகடுமிக்குஞ் சேட்சென்மி
னெனவெறிந்து விசும்பு ளோரை
உந்துதல்போற் கொடிநுடங்கும் வீரர்படை
குறுமுனிவ னுணரேர்ந் தன்றே. (௧௧௮)

வேய்த்தோடிச் சிலர்வீர வாகுபோர்
மேயினனென் றுரைப்பத் தீயோன்
தாய்த்தாக்கு மடங்கலென வுயிர்குடிப்ப
லெனச்சீறிச் சார்ந்தான் முன்போர்
தேய்த்தார்ந்த புகழவுணர் தெழித்தடுத்து
நேர்ந்தனர்வன் சிலம்பி ஞண்மை
மாய்த்தானைத் தொழுதுவிறற் பூதருமார்த்
தனர்வெகுண்டு மலைக்க லுற்றார். (௧௯௯)

சூழாக்க ளிற்றவுணர் கோனை யாற்றல்வளர்
பூதர் கோனெதிர்கொ லைக்களம்
விழாக்க ளம்புரைய மெய்ம்ம லிந்துவகை
மேவி யாண்மையுளங் கேண்மையின்
வழாக்க டுப்பொடுது ரப்ப வட்டமொடு
வார்ந்தி லங்குவடி வாள்கரந்
தழாக்கி ளர்ந்துவரு சாரி கைத்தொழிற
லைப்ப வாடலொரு பாலெலாம். (௨௦௦)

நீக்க மின்றென வழுந்து றத்தழுவி
நீணி லம்விழுந ரோர்புறம்
தேக்கு நீர்ப்பெயலின் மொக்கு ணேரடி
விசைப்பி னிற்சிதர்ந ரோர்புறம்
தாக்கி ருந்தகரி ஞன னம்பிதிர்த
லைப்ப முட்டுநர்க ளோர்புறம்
ஒக்கு முட்டியினு டற்றி வன்கொடிறு
டைப்ப வீழுநர்க ளோர்புறம். (௨௦௧)

கட்டு கையினெடு கால டுக்குநர்க
ளோர்பு றங்கதழ் புகட்டினர்
ஒட்டி நிற்குநர்க ளோர்பு றங்கருதி
யுய்த்த வெம்படை யுலப்புற
விட்ட ழிக்குநர்க ளோர்பு றந்திகிரி
வீழ வெள்வளையும் வீசுபு
பட்டு நின்றவுட லெஃகு கண்டனர்ப
றித்து நக்கெதிர்ந ரோர்புறம். (௨௦௨)

மல்லி ஞற்பிடிப டுத்தும் வார்சிலைபி
னெற்றி யும்மறல வூக்கியும்
செல்லெ னக்கடிது ரப்பி யுங்கனலி
சிந்து றத்திருகி நோக்கியும்
சொல்லி யும்புடைய கற்றி யுங்கயிறு
துட்கெ னப்பெரிது வீசியும்
எல்லெ யிற்றினுடல் பீறி யும்பொருந
ரெல்லை யில்லவர்க ளோர்புறம். (௨0௩)

வேறு நீடமரின் மிண்டு தம்மிறைவி
மூது டற்றுநர்க ளோர்புறம்
தேறு மவ்வகையெ திர்த்து ளாரிருதி
றத்த ருந்தபுத லோர்புறம்
பாற மால்களிறெ றிந்து டற்றுநர்க
ளோர்பு றம்பகடு தாழவீழ்ந்
தீறு பட்டவரை யட்டு ளார்படைஞ
ரேய்ந்து சூழமலை யோர்புறம். (௨0௪)

படைய றுத்துநனி பாழி கொள்ளுநர்க
ளோர்பு றம்படைவ ழக்குமிக்
குடைப டைக்கணுறு கூழை தாங்கெருமை
யோர்பு றங்கணையும் வேலுமொய்த்
தடுமு டம்புதிற னீங்க லின்றமர்த
லோர்பு றந்தலைக ளற்றுயிர்
விடுமு டம்புகளெ ழுந்து துள்ளுபுவி
யப்ப வாடுவன வோர்புறம். (௨0௫)

இன்ன தானையிரு மாவு மேவியுமஃ
தின்றி யுந்தமதி னத்தினை
மன்னர் போர்த்தலைவ ரேனை யோரினைம
தக்க யங்கரிக டேரினை
வன்ன வண்டுரகம் வைய மால்கரியை
வைப முந்தலைய டுத்துநின்
றுன்ன லார்தலைப னிப்ப வாடமரு
ளுற்றி நின்றனவி டந்தொறும். (௨0௬)

மேக மூர்ந்துபுரு கூதர் தம்மின்விளை
யாடு கின்றதென வேழமும்
மாகம் வாங்கலைக ளூர்ந்து காலிறைவர்
மாறு கொண்டதென மாக்களும்
வேக வண்சிறைமு ளைத்த நீள்சிலைகண்
மேல்கொ டச்சிலையின் மன்னவர்
ஓகை யாலெதிர்வ தென்ன வையமுமு
டற்று வெஞ்சமர்கை மிக்கதே. (உ0எ)

மேக்கு ளான்புடைபு குத்து மாறெனவெ
குண்டெ திர்ந்தவரு ரம்புகக்
கோக்கும் வல்லெயிறு யர்த்தும் வாருடல்கு
ழைக்கு மண்ணடியு ளர்த்தியிட்
டோக்கி நீள்கையுறு தண்டி னேரிரத
மூரு மாவினம்வி ளிக்கும்வால்
தாக்கி யும்படைய ழித்து லம்புவத
மாது நீழல்சுளி வேழமே. (உ0அ)

கந்து கப்பெயர டுக்கு மென்னவொளிர்
கந்து கப்பெயர்வி ஞெய்யெனச்
சிந்து ரத்தநுத லோடை யானைமணி
சேர்ந்த மத்தகமி தித்திடும்
முந்து கிள்ளை யென லொத்த
தென்னமுடு கிப்பறந்திரத மேலடி
தந்தி டுந்தலைவர் வாசி தீரவெதிர்
தானை வாசிதகு வாசியே. (உ0கூ)

இரத மென்றபெய ரேற்கு மென்னவெழி
லார்ப டைச்சுவைகொ ழித்தெழு
விரவு தானைபல பாகு செய்துவிறல்
வாசி யைத்துவைய லாக்குபு
கரம தக்களிறு கூறு செய்துகரு
ணைக்கு வால்பலதி றுத்துவிண்
பரவு தேர்த்தொகுதி வல்சி செய்வபடர்
சூறை போன்றுதிரி வையமே. (உக0)

வெளில்பி ணித்ததொட ரென்ன வீரர்குடர்
சுற்று காலின்விரை குஞ்சரம்
ஒளிமி குத்தவரு ரத்த ழூத்துலவை
வயிர்பொ ரத்துணிய வாலிகால்
அளிமி குத்தமுகி லொத்த சிந்துமணி
யாற்பு யத்தவிறு கோட்டிணைக்
களிமு லைச்சுவடு பூத்த மார்பிறைக
டுத்து ளார்களிறெ திர்த்துளார். (உகக)

நெடுமொ ழித்திறமும் வஞ்சி னங்களுநி
கழ்த்த லோடுதலை யற்றுமண்
படுவ வாடிகிரி சுற்ற லோடுவளர்
பாணி யற்றுகுவ சாரிகை
அடைவி னுடுவம ருங்கு லற்றுடலம்
வீழ்ந்த தாளடிக ளற்றுவீழ்
உடலம் வாயிதழ்ம டித்து வாலெயிற
ழுந்த வூன்றுவன வெங்கணும். (உகஉ)

ஒருவ னுக்குரிமை பூண்ட பார்மகளு
ரந்த ழூமைநல னென்பபோல்
உருவி நின்றகணை வேல்க டாங்கமனு
ரூது றங்குமுட லெண்ணில
பொருத நின்றவர்க ளென்றெ திர்ந்தெதிர்பொ
ராமை யாற்சிலர் சமழ்ப்புற
மருவு மண்டிலவ கைக்க ணின்றபடி
நின்ற மாண்டவுட லெண்ணில. (உகங)

இத்தி றத்தமர்வி ளைந்த காலையெறும்
மிக்க பூதரினு டைந்தன
தொத்த ழற்கணவு ணக்கு லந்தொலைவி
லாத வாற்றலன லன்முனைஇப்
பைத்த பூதருலை யச்சி லைத்தொழில்ப
யிற்றி னன்படைபு ரத்தரேள்
வைத்த சிங்கனொரு தண்டி னீளிரத
வாம்ப ரித்திரள்கள் சாடுபு. (உகச)

மெய்யெ லாங்கணைகு ளிப்ப வையம்விரை
வுற்றி வர்ந்துவில்ப றித்தொரீஇ
ஐயெ னத்தலைபு டைத்த தண்டுறும
வன்கை பற்றியுர மங்கையால்
நைய வெற்றியுய ரத்தி ரித்துயிர்ந
டப்ப மண்டலைய றைந்தனன்
வெய்ய சண்டனினி யுய்தி யேயெனவெ
குண்டெ திர்ப்பவெதிர் மேயினன். (உகரு)

சண்டன் சண்டனக ரெய்து கென்னவொரு
தண்ட மூய்த்தனன வன்கரம்
கொண்ட தண்டமெதி ருய்த்த னன்பொறிகு
லைந்து ளாரிருவ ருஞ்சினைஇ
மண்டு மாயனய ரக்க ணத்தலைவ
னீலன் வார்கதைவ ழங்கினன்
உண்டி யாவியென மாயன் முத்தலைய
சூல நீலனுர மூய்த்தனன். (உகசா)

உயங்கி நீலனவன் வார்மி டற்றெயி று
றுத்தி ரத்தமுமி ழுண்டனன்
மயங்கு சிங்கனொடு சண்ட னுந்தெளிபு
வார்ந்த தண்டமொடு நேர்ந்தனர்
தயங்கு சண்டனெறி தண்டி றப்பவிற
றங்கு மல்லினம ராடினன்
புயங்கெ ழூஉம்பலிய சிங்க னத்தொழில்பு
துக்கி யாருயிர்கு டித்தனன். (உகஎ)

சிங்கனொடம ராடச் செல்லசமுகன் றன்னை
இங்குறுகென நாப்ப ணெதிர்ந்தனன்மது வென்போன்
அங்கவன்பொழி வாளிக் கஞ்சலனவன் வையம்
பொங்கியசினத் தேறிப் புயலுருமென வார்த்தான். (உகஅ)

வேர்த்தனனவ னேக்கி வீரரிற்பத ரொத்தாய்
போர்த்தொழிற்கிவ ணெங்குப் போந்தனையென மீண்டான்
வார்த்தையுள்சுட மான முந்தமைவத னத்தான்
ஆர்த்தடல்கெழு வாளி யலகிலதொடுத் தெய்தான். (உகக)

வருபகழிகள் பற்றி மதுவெறிந்தன னவுணன்
பொருபடைவகை யெல்லாம் பொள்ளெனமிசை யுய்த்தான்
விரைசெலலவ னிரதம் வேலையில்விழ வோச்ச
உருமெனநிலன் குப்புற் றுடற்றுமற்றெழி லேற்றான். (உ௨0)

அடிகொடுமது வுந்த வந்தரநிமிர்ந் துக்காங்
கிடியெனவுர மெற்றி யிம்மெனமறைந் தரிதந்
திடுதிகிரியை விட்டா னெய்தியபடை யின்றன்
படையிலனென மீண்டு பரிவுசெய்திட மாண்டான். (உ௨௧)

தானவர்படை காவற் றலைவர்களொருங் கெய்தி
மானவெம்போ ராட மறந்தணிந்தனர் பூதர்
ஆனறிந்தெறு ழிலக்க ரவரினுளொரு வீரன்
கானழலுண நேர்ந்த காட்சியினெதிர் சென்றான். (உ௨௨)

தண்ட கப்பெய ரன்னவன் வார்சிலை
தலைவணக் கினன்வல்லே
மண்டு தீக்கணை சிதறின னொருமுறை
வயக்களஞ் சூழ்தந்தான்
கொண்ட துஞ்சிலை தொடுத்தது மறிகிலர்
குறையுட லெழுந்தாட்டும்
கண்ட துண்டங்க ணிமிர்ந்ததுங் கறைநதி
பலவுங்கண் டனர்விண்ணோர். (உ௨௩.)

ஒளிம றைத்தது திறந்தென மொய்யிரு
ளுடைந்தது போன்ஞாலம்
நெளிபெ ரும்படை யிறுதலு நெடுங்களம்
வெளிபட நேர்நோக்கி
விளிவ டுத்ததோ நம்படைக் கெனநகைத்
தெஞ்சொரா யிரவெள்ளம்
வளையப் போரளப் பான்கதிர் மாற்றலன்
வஞ்சினத் தொடும்போந்தான். (உ௨௪)

வீற்று வீற்றுவெஞ் சரந்தொடுத் தாடமர்
விளைத்தபூ தர்கடாளை
நாற்று செங்கையை யுரத்தினைக் களத்தினை
நானிலம் படத்தாழ்த்தான்
ஆற்று நீரெனச் சோரிவார்ந் துடற்குறை
யலைத்தன வலியில்லார்
காற்று ணைக்கொரு காற்றெழில் புதுக்கின
ருக்கிரன் கனன்றேற்றான். (௨௨௫)

நெடிய தண்டொடு நேர்ந்தவுக் கிரனுட
னிரைத்தனன் கணைமாரி
அடிகொள் பந்தெனப் பட்டுமீண் டனவது
கண்டெழு விடுத்தான்கைப்
பிடிகொ டண்டினு லதுசிதர்த் தாயிரம்
பெருக்குமுப் பதுமான்றேர்
நடைய றுத்தெழுந் தார்த்தனன் வேறுதேர்
நண்ணியக் கதையெய்தான். (௨௨௬)

அம்பி னக்கதை பொடித்தனு முக்கிர
னழன்றுதே ரொடும்பற்றி
உம்ப ரோக்கினன் விழுந்தவ னுக்கிரன்
றன்னையும் பரிதேச்சி
வெம்பு தேரொன்றி னிவர்ந்துவே தன்றரு
வேலினை யெதிர்விட்டான்
நம்பி சோர்ந்தனன் குன்றொடு தண்டிநேர்
நடந்தெறிந் தனனார்த்தான். (௨௨௭)

குன்றி றுத்தனு மெழுக்கொடு குரகதங்
குமைத்தன னவனெற்றி
வன்றி றற்கணை யயுதமுய்த் தமர்த்திற
மாற்றின னதுகண்டு
நின்ற குன்றமொன் றகழ்தரு பிணுகியு
நின்றனன் கணைமூழ்கி
ஒன்று சாரதத் தலைவரெல் லாமம
ருளுற்றின ருலைவுற்றார். (௨௨௮)

ஆய தோல்விகண் டிலக்கரும் பெரிதம
ராடினர் வருகாலைத்
தீய னுய்த்தகோன் மாற்றினர் மேற்செலச்
செலுத்தின ரதுநோனன்
பாய வாளிக ளெண்ணில தொடுத்தவர்
பரப்பிய கணைநூறி
ஏயெ னச்சிலை யிலக்கமு மறுத்தன
னெறுழ்ச்சிலை யறலோடும். (உஉ௯)

வேறு வான்சிலை வளைத்தவு னன்விடு
விசிகநுண் டுகளாக்கி
ஏறு தேர்பரி பாகனைச் சிதைத்தன
ரிரதமொன் றவன்பாய்ந்து
சீறி நூறுநூ றுயிரஞ் சிலீமுகஞ்
செலுத்திவார் சிலைதேரும்
கூறு செய்தகன் மருமத்து மழுத்தினன்
கூர்ங்கணை சமர்நீத்தார். (உ௩0)

வீர கோளரி நேர்ந்திருங் கணைமழை
விடாதுமேற் சொரிகிற்பச்
சூரன் மாமக னூறுநூ றுயிர
கோடிவா ளிகடேண்டி
நேரும் வாளிக ணீறுசெய் தாயிர
நெடுங்கணை புயத்துய்த்தான்
ஒரும் வீரனு மவனுரம் போழ்ந்துற
வுறுத்தினன் கணையன்னான். (உ௩௧)

வில்லி னுலிவன் றோல்விகாண் பரிதென
விண்டுமாப் படைதொட்டான்
ஒல்லை மேற்படர் பகழிவாய் மடுத்தஃ
துறுதலு மெதிரேவல்
வல்ல வீரனு மெடுக்குமுன் மார்பிடங்
கொண்டவன் மதிதன்னைச்
செல்லு லாய்க்கதிர் மறைத்தென மறைத்தது
தினகரன் போர்வேட்டான். (உ௩உ)

போர்தொ டங்குமுன் வீரமார்த் தாண்டன்கைப்
பொருசிலை துணித்தொட்டான்
வார்நு தற்கணு யிரங்கணை வரித்தனன்
மற்றொரு சிலைவாங்கி
நேர்தொ டுக்குமு னதனையுந் தேரையு
நீறுசெய் தெழுநூறு
தார்ம ணிப்புயத் தேயினன் றூயவன்
றடங்கைவின் முரித்திட்டான். (உ௩௩)

முரித்த வீரன்மார் பத்திடை நாந்தக
முடுக்கினன் முனிவீரன்
பரித்த நாந்தகத் தழுத்தினன் பதகன்குப்
பாயம்பா றிடத்தீயோன்
உரத்தி னுந்தக முரீஇக்குளத் தழுத்தின
னுதிரமோ டுயிர்சோர்ந்தான்
தெரித்து வீரராக் கதனெதிர்த் தாயிரஞ்
சிலீமுக மேல்விட்டான். (உ௩௪)

விட்ட வாளிகள் சூர்மகன் விலக்கிவெங்
கணைகணூற் றினிற்பாகை
அட்ட னன்கடி தொருவனை யமைத்தொரா
யிரங்கணை யான்மோலிக்
கட்ட ழித்தனன் வீரராக் கதன்கருந்
தானவ ரிறைமைந்தன்
முட்டு நாணினன் மோலிவே றணிந்தவன்
மொய்சிலை தொடுத்தீர்ந்தான். (உ௩௫)

மற்றொர் வார்சிலை பற்றுமுன் றேர்ப்பரி
மாய்த்தனன் மற்றோர்தேர்
உற்ற காலையிற் கைச்சிலை துமித்தன
னுருத்திராக் கதனோர்வேல்
பற்றி யோக்கின னதனையும் பொடித்தனன்
பானுகோ பனையண்மிப்
பொற்ற தேரொடு மந்தரத் தோச்சினன்
புழுங்கிவிண் ணெழுமன்னன். (உ௩௬)

வேதன் முன்றரும் வேலினை விடுத்தனன்
வீரராக் கதன்சோர்ந்தான்
பூத லம்விழு தானவன் வேறொரு
பொற்றதே ரிவர்ந்துற்றான்
கோதில் வீரர்க ளவரும் பெருஞ்சமர்
குயிற்றினர் வலிதேய்ந்தார்
ஈது கண்டன னன்றுநன் றெனநகைத்
தெதிர்ந்தனன் விறன்மொய்ம்பன். (உ௩எ)

கண்டு தானவன் வெகுண்டுநீ தூதனுங்
கள்வனு தலினின்னை
மண்டி யாருயி ருண்பது பழியலால்
வருவதொன் றிலையானும்
உண்டு னுருயி ரெஞ்சினர் தமையெலா
முறுத்துவன் சிறையென்றான்
அண்டர் நாயக னிளவலு முறுவலித்
தருளிலிக் கிதுகூறும். (உ௩அ)

நுங்க ளாருயிர் மேலெழுந் தூதன்யா
னன்றியு நுமரெல்லாம்
பொங்கு மன்பினு லடிதொழ மிறைதரு
புதல்வனு தலினென்னை
இங்க ணையென மதித்திடா தெதிர்தலே
யிழிவினி யிவனேடும்
அங்க வன்சம ராடின னெனும்புக
ழாக்குவ னினக்கென்றான். (உ௩௯)

என்ற லுங்கதிர் மாற்றல னிகல்பெ ருஞ்சிலை வாங்குபு
கொன்றி றற்கணை பத்தனைக் கோத்து விட்டனன் வாகுவும்
வென்றி விண்ணவர் தளையற வெய்ய தானவர் நாளற
மன்ற வையகங் கோளற வாளி பத்துறுத் தறுத்தனன். ()

அறுத்து நூறுகோல் கோபன்மே லண்ண லேயின னூறுதொட்
டிறுத்தொ ராயிரந் தானவ னேயி னனவை யாயிரத்
தொறுத்து நம்மவ னயுதமே லுறுத்தி னனவை நேர்கணை
தெறித்தி றுத்தபி னிலக்கமேற் சேர்த்தி னன்கதிர் மாற்றலன்.

செம்ம லக்கணை சிந்துபு சிதறி னனொரு கோடிமேல்
இம்மு றைத்தொகை யின்றியு மெய்து போர்விளை யாடினர்
அம்ம வாளியின் மாய்குவ ரறுத்து மெய்யுருத் தோற்றுவர்
மும்மை வையக மூஞ்சர மூரித் தூணிய தாக்கினர். (௨௪௨)

ஆடு மெல்லையில் வாகுவி னங்கை வில்லிறுத் தானவன்
பீடி லான்சிலை குரிசிலும் பேசு முன்னறுத் தானவன்
நாடி யாயிரங் கணையுர நடவி னனிவ னவன்முடி
ஓட வேழ்சர முய்த்தன னுட்கி வேறுக வித்தனன். (௨௪௩)

கவித்த வன்கவ யங்கெடக் கடவு ளாயிரத் தீர்ந்தனன்
அவித்த நன்மைய னுயிர மழுத்தி னன்குளத் தவைநிலம்
குவித்தொ ராயிர மாயிரங் குவவுத் தோளுர மானனம்
பவித்தி ரன்கொளத் தொடுத்தனன் பானு கோபனங் கயர்ந்தனன்.

நாயக னயர்த்தலு நயத்தவிற லாளர்
மேயினர் தெழித்தனர் வெகுண்டமர் விளைத்தார்
காயிரு மழுத்திகிரி காதுகதை யாதி
ஏயின வணைத்துமுற வேந்தலது நோக்கி. (௨௪௫)

கார்முகம் வளைத்துவிடு காலனிகர் வாளி
போர்முக மிறுத்தவர் புயங்கைமுடி வார்தாள்
பார்முகம் விசும்புமுகம் பாய்திசைமு கஞ்சூர்
ஊர்முகம் விழுத்தின வுலந்தபடை முற்றும். (௨௪௬)

நொந்தவிறல் வீரரு நொறிற்கணமும் யாரும்
வந்துபொரு வாகுவுழை மல்கினர்க ளாங்கே
புந்திதளர் சூர்மதலை பொன்றுமுணர் வெய்திச்
சிந்துபடை நோக்கியெரி சிந்தியெதிர் சென்று. (௨௪௭)

தோன்றன்மிசை வாளிகடு றுத்தினன றுத்தாங்
கான்றவன வன்மிசைய டைச்சின னகற்றி
மான்றவன் மணிப்பொனிர தந்தபவொர் வையம்
சான்றவ னிவர்ந்துதவழ் தேர்சிலை தகர்த்தான். (உ௪அ)

வேறிரத மேறியெழு நூறுவிசி கந்தேர்ந்
தூறுபட வீரனுர முய்ப்பவுவ னம்பால்
தேறுசிலை தேர்பரிசி தர்த்தவுணன் மார்பம்
ஆறுதிர மாகவழி யாக்கினன வன்றான். (உ௪௯)

மற்றுமொரு வையமிசை வாவுதலும் வீரன்
பிற்றலையி ருந்தகணை பெய்தபெருந் தூணி
அற்றுவிழ வற்றமரு மப்புழையி னூடு
பொற்றகணை யேயினன்பொ ருதவன்வி யந்தான். (உ௫௦)

இன்னவனை வாளியினி றுத்தலரி தாமென்
றன்னையொரு பாலமரு மண்ணறரு மோகம்
மன்னுபடை தூண்டவிறல் வாகுவர னேக்கித்
துன்னுபடை யாலறிவு தோன்றுமென நின்றான். (உ௫௧)

தந்தைபடை யாயினுந்த வத்தினுறல் பெற்றோர்
சிந்தையினி னைந்தபடி செய்திடுவ தன்றே
அந்திலுயர் வீரன்முத லோரறிவு மாய்த்து
மைந்தினெடு நிற்பவது கண்டுமகிழ் தீயோன். (உ௫உ)

வென்றிநம தென்றுவில்வ ளைத்தனிக மீது
துன்றுசரம் விட்டடறு ளைத்தல்வினை மிக்கான்
அன்றைவிளை வோர்ந்துகுக னுடலய ரமோக
ஒன்றுபடை யூக்கினனு டைந்ததஃ தன்றே. (உ௫௩)

இரித்தபடை மீண்டுகுக னெந்தையை யடுத்த
தருத்துவிறல் வாகுவிவ னுள்ளுயிரை யின்னே
பிரிப்பலென முக்கணுடை யான்படைபி டித்தான்
தெரித்தவுணன் வானிடைம றைந்துநகர் சென்றான். ()

கரந்தவுண னேகியது கண்டுவிறல் வாகு
பரந்தபடை யோடுவளர் பாசறைய டுத்தான்
அரந்தையொடு தன்பகைய கன்றதறி வெய்யோன்
சுரந்தகளி யாற்கடலு ளாழ்ந்திடவ டுத்தான். (உருரு)

மண்ணிடை யிருந்தகுவர் வான்புலனி றந்தார்
நண்ணுமுனு ணர்ச்சியினம் மாரிவரென் றோது
விண்ணவரொ டும்பொருத வீழ்குருதி யெங்குந்
துண்ணெனவி ரிந்ததுற ழுஞ்சுடர்செவ் வானம். (உருசு)

வாங்குபரி வேடமதின் மாமதிய நாப்பண்
ஒங்கிருடு மிப்பவொளிர் வித்தவெண்வி ளக்கம்
பாங்கருடுச் சேனையொளி பற்றலர்கண் முற்றும்
வீங்கியமு னைப்புலம்வி ழைந்ததகல் வானம். (உருஎ)

அரும்பிய மாலையி லடுத்த வீரனும்
பொருந்திறன் முருகனைப் போற்றி யேவலால்
இருந்தனன் றனதிடத் தெவருஞ் சென்றுதம்
திருந்திய விடங்களிற் சிவணி வைகினர். (உருஅ)

தொன்றறி யாததோர் தோல்வித் தீஞ்சுவை
நன்றுகைப் படுத்தவர் நாம வேலினன்
தன்றனி யுவளகஞ் சார்ந்து மத்தரின்
கன்றிய கவலையங் கடலிற் றாழ்ந்தனன். (உருகூ)

மதலைதன் மனத்தொடு வராமை தேர்தலும்
கதமிகச் சூர்மகற் கனன்று நாளையான்
விதலையுற் றனைவரும் விளிய முக்கணன்
புதல்வனை வேறெனப் புழுங்கி வைகினன். (உசுO)

அதுதெரிந் தாண்டகைச் சூரன் றோல்வியும்
விதுவணி பிரான்மகன் வெற்றி வீக்கமும்
புதுவது காணிய புகன்று வெய்யவன்
கதுமெனத் தேர்கடாய்க் கடலிற் றோன்றினன். (உசுக)

புலரியிற் செய்கடன் புரிந்து சூர்முதல்
உலவிறன் படைஞரை யொற்றிற் கூயினன்
விலகரு மிலக்கவெள் ளத்து வீரர்கள்
கலவின ரெழுகடன் முழக்கங் காட்டினார். (௨௬௨)

மந்திரத் தலைவரு மற்று ளோர்களும்
தந்தியும் புரவியுந் ததைய வெவ்வகை
வெந்திறற் படைகளுந் தேரின் மேவுற
இந்திர ஞாலத்தே ரிவர்ந்து சென்றனன். (௨௬௩)

வெளிறிலா யின்றுநீ வெளிறு தங்குவை
தெளிகென வுற்பனஞ் செய்திட் டாலென
ஒளிவிரா யுடலெலாம் வெளிற வொண்மணிக்
களிகுலா மொருகுடை கவிந்த தென்பவே. (௨௬௪)

மானமா தமையிழப் பெய்தின் வாழ்தரா
மானம்வேல் வீரரு நீங்க வாழ்கலார்
ஆனசீ ராலின மென்ற டுத்தெனப்
பானிலாக் கவரிகள் பாங்கிற் றுள்ளின. (௨௬௫)

வீரர்போ ரிடையுயிர் விளிந்த தானவர்
வாரமா யமரரின் மருவக் கண்டிது
சீரிதோ வெனச்சிர மசைத்தல் போன்றன
ஒரும்வார் கொடிநிரை யுகந்த சைந்தவே. (௨௬௬)

எழுகட லோதையு மேழு மேகமும்
குழுமுறு மோதையுங் கூர்ந்த சேனையின்
விழுமிய வோதையும் வேறுந் தன்னெதிர்
கெழுமுவ தரிதெனக் கிளர்ந்த தின்னியம். (௨௬௭)

படைத்திற நோக்கிமெய் பனிப்ப ரென்றுத
னுடைப்பெருங் கருணையா லும்பர் கண்களை
அடைப்பது கருதிமண் ணணுவிற் சென்றெனத்
துடைப்பருந் தூளிவிண் முழுதுந் தூர்த்ததே. (௨௬௮)

இன்னணம் படையெழுந் தேகுஞ் சூர்முதல்
மன்னரி முகன்மகன் மரித்த பின்னவன்
தன்ஞெரு மகனிவர் தம்மைச் சேனைகட்
கின்னுயிர்க் காவல ராக்கி யெய்தினன். (உ௬௯)

இடங்கழி கொண்டுயி ரிறுப்ப லென்றுசூர்
அடங்கருஞ் சீற்றமொ டண்மு செய்திபோய்த்
தடங்கடல் விடநுகர் சதுரன் சேய்முனர்
முடங்கிய கையினன் முனிவன் கூறினன். (உ௭0)

தனைநுக ரொருவனைத் தருக்க ழித்தவவ்
வனைகழல் வலவனை வருத்தி தேரென
நினையுமு னவன்றர நிமல னேறினன்
அனைவரு மவரவ ரியல்பி னண்மினர். (உ௭௧)

திருமுகப் பரிதியந் தெய்வப் பேரொளி
பருகுபு பெருகொளி படைத்து மைதவிர்ந்
துருகெழு முழுமதி யும்பர் நின்றெனக்
குருமணிக் கவிகைமேற் குலாய தென்பவே. (உ௭௨)

மானமின் றழிதரு மாயை மைந்தனைத்
தானினி யகலெனத் தம்பி னத்தினை
ஆனதோ ரொற்றுவிட் டகற்றச் சோடைகொண்
டானுழி தருவபோ லலைந்த சாமரை. (உ௭௩)

கோளினை நாளினைக் குயின்கு ழாத்தினை
ஆளுநங் கடவுடே ரணுக லுற்றது
நீளிடை யேகுமி னென்று நீக்கல்போற்
றுளுயர் நெடுங்கொடி ததைந்த சைந்தவே. (உ௭௪)

வல்லிசை கேட்டொறு மாழ்கு மாவென
ஒல்லலன் முரசங்கேட் டுயங்குந் தேவர்கள்
மெல்லிசை கேட்டென வுவகை வீக்குறப்
பல்லிய மெங்கணும் பரந்தி யம்பின. (உ௭௫)

ஏழுல கெனத்தனே டெண்ணப் பட்டுவிண்
வாழுல கிருதுவற் புறத்த வள்ளறன்
பாழிகண் டிடும்புவி படர்ந்திட் டாலெனப்
பூழிவிண் ணிவந்தது புகையிற் சூழ்ந்தரோ. (௨௭௬)

புகையிடை நெருப்பெனப் பொங்கிப் பூதரும்
தகைவளர் வீரருந் தழங்கி முன்செலப்
பகைவலி மெலிதரப் பகவ னின்னணம்
அகைமணித் தேர்கடாய்க் களத்தை யண்மினன். (௨௭௭)

விண்ணவர் பொழிமலர் விரையிற் செங்கள
நண்ணிய புலான்முடை நலியக் கூழையின்
அண்ணல்வை கினனணி வகுத்துத் தூசியில்
திண்ணிய வீரர்கள் சென்று கிட்டினர். (௨௭௮)

எலிப்பெருந் தொழுதிக ளிறுப்ப மன்சில
வலிப்பெரு நாகங்கண் மறலிச் சென்றெனக்
கலிப்பெருஞ் சேனையங் கடல்கி ழித்ததால்
சலிப்பறுங் குமரவே டானைக் கங்கையே. (௨௭௯)

இருவரு நேர்ந்தம ரியற்ற வீழ்ந்தன
கரிபல பரிபல காமர் தேர்பல
சரிகுட ரொடும்பல தானை பொன்றின
எருவைபேய் கொடிபல விறுத்த வெங்கணும். (௨௮௦)

தேங்குநெய்த் தோர்கட றிரியு மாதிரை
ஓங்குதேர் கலங்கரி யுழக்கும் யானைமீன்
வாங்கிய குடர்கள்சை வலங்கள் வீரர்கள்
தாங்கரு வடவையந் தழலொத் தாரரோ. (௨௮௧)

கதைதொடை தண்டம்வார் கண்ணி சக்கரம்
துதிதரு மிண்டைகோ ரொடர்செய் தார்களாம்
முதிருமிங் குலிகநீர் முகத்தி னுட்டயர்
மதலையர் போன்றன ரூர்தி மள்ளரே. (௨௮௨)

கருவிபோ ழூர்தியர் கறைகள் சேர்வன
பெருமழை விழுகுடை பிறங்கு மாம்பிகள்
குருதிதோய் முடிமணி சிதர்ந்த கோபங்கள்
இருநில னெமிர்ந்தபன் முல்லை யேய்த்தவே. (௨அ௩)

கண்களு முகங்களுங் கரமுங் கால்களும்
மண்ணிட மெங்கணு மலிந்த நீர்மையால்
தண்ணிய தாமரை ததைந்த லர்ந்தொளிர்
பண்ணையிற் றேற்றின பறந்த லைப்புறம். (௨அ௪)

கோடிமே னுடற்குறை குனிப்பப் பாடெலாம்
ஆடமங் கூத்திவர்ந் தமர்ந்து ளாரெனப்
பாடுறு பிணமலை யாகப் பட்டுவீழ்ந்
தீடறு பிணங்கள்சார்ந் திருப்ப வெங்கணும். (௨அ௫)

எதிரெதிர் வாளொடு மேந்து தோலொடும்
அதிர்கழல் வயவர்த மாக்கை வைகலின்
வதியுயி ரினரென மருண்ட பேய்களை
நுதிசித றுருப்பினை நோண்ட ருந்துமே. (௨அ௬)

இன்னணம் போர்க்கள மிலங்கு மேல்வையில்
துன்னிய பூதராற் றொலையத் தானவர்
அன்னது கண்டதி சூர னென்பவன்
முன்னினன் மறக்கனன் மூளப் பூதர்மேல். (௨அ௭)

மிக்கரி மாமுகன் கான்முளை
வெஞ்சமர் விஞ்சவி ளைத்தலும்
உக்கிர னேர்ந்தொரு தண்டுரத்
தோச்சினன் சாலிகை சிந்திய
தெக்கொடி யோனிலக் கங்களை
யேயினன் மெய்பவை மூழ்கலும்
புக்கவிர் தேரொரு குன்றினுற்
பொன்றின னுக்கிரன் மாற்றலன். (௨அ௮)

சேமநெ டுஞ்சக டண்மினுன்
சென்றிவன் மாவுதைத் தட்டனன்
நாமவி லாவொரு நூறுகோ
னடாயின னுக்கிரன் றண்டுகொண்
டேமறி வித்தனன் வேறுதே
ரெய்தியங் கிப்படை யேயினன்
பூமியும் விண்ணுந டுங்குறப்
போந்தது பற்றிவி ழுங்கினுன். (உ௮௯)

வாரிப்ப டைசண்ட மாப்படை
வாயுப்ப டையயன் வான்படை
வீரிய மாயன்ப டையும்வெவ்
வேறுசெ லுத்தின னலதி
சூரன வற்றையு முக்கிரன்
சொன்றியெ னவயிற் ருக்கினுன்
ஆரிய னுமம லன்படை
யன்பொடு போற்றிவி டுத்தனன். (உ௯0)

கைக்கதை நீக்கிவ ழுத்தினன்
கண்ணுத லான்படை கண்ணுதல்
பக்கம டுத்தது சூர்மகன்
பாரிழிந் தோர்கதை கொண்டுநேர்
உக்கிரன் றிண்புயத் தெற்றின
னுக்கிர னக்கதை வாங்குபு
மிக்கவன் மார்பின டித்துமண்
வீழ்த்தினன் கண்டசு ரேந்திரன். (உ௯க)

பாரிடர் பாரிடம் வீழ்தரப்
பத்துநூ ருயிர மோர்தொடை
சேரவ யிற்கணை தூண்டுபு
செங்குரு திக்கட றேக்கினுன்
காரென வார்த்தெதி ருங்கன
கன்கணை பாய்ந்துரு வத்திழி
சோரியி னேடவன் றேரினைத்
துன்னிவின் னணறுத் தேகினுன். (உ௯உ)

ஓர்சிலை வேறுகொண் டாடக
னுய்த்தவி லங்கலு திர்த்தவன்
வார்புய மாயிர வாளிகள்
வாங்கிவி டுத்தனன் ருனவன்
போர்கழி யக்கன கன்பரி
பொன்றவ துக்குமுன் மத்தனைச்
சேர்கணை யாற்றிறல் சிந்தினன்
சென்றெதி ரேற்றனன் மந்தனே. (௨௬௩).

ஐயிரு வாளிதன் மெய்யுற
வார்த்தொரு வெற்புவி டுத்தனன்
மையனை யானுர மேற்றனன்
வண்டுக ளாயது பத்துநா
றெய்தவ ளுடல டக்கினு
னேற்றுடல் சிங்கன்வி டுங்கதை
ஒப்பென மாற்றியொ ராயிர
வொண்கணை யாலெறும் நீக்கினன். (௨௬௪)

காவல ரிம்முறை நீங்கலுங்
காழிலி லக்கரு ளுள்ளவன்
மேவரு தண்டக னயிர
வெங்கணை தாரகன் கான்முளை
பாவுறு தற்கண ழுத்தினன்
பரிந்தவ னெண்கணை நெற்றியில்
கோவைப டப்புகு வித்தலுங்
குன்றினன் றண்டக னாற்றலில். (௨௬௫)

தண்டகன் பின்வரு சோமுகன்
ருனவ னெய்கணை மெய்புக
உண்டனன் வாளியிற் பாகனே
டோடிர தப்பரி யைச்சினம்
கொண்டவன் வேறொரு தேருறீஇக்
கூரயி லொன்றுவி டுத்தனன்
விண்டது மார்பங்க லங்கினன்
விசயன வற்கிளை யான்விரைஇ. (௨௬௬)

பகழியோ ராயிரந் தூயவன்
பாகொடு கைச்சிலை பாற்றினன்
தகுவனோர் தண்டம்வி டுத்தொரு
சகடம டுத்தனன் மற்றது
புகழ்விச யன்கணை தூளுறப்
போந்தவ னைக்கண்ப டுப்பிய
தகலுந ராயினர் நேர்ந்துபோ
ராடிய வேனையி லக்கரும். (உ௯எ)

பூதர்க டல்கடை மத்தெனப்
போந்தசு ரேந்திர னுடலும்
கோதைவி றற்புய னேக்கினன்
கூர்ங்கணை கொண்டுட றார்த்தனன்
ஆதவ னெத்தவு ணன்கணை
யாயிரம் வீரன்மொய்ம்பு யத்துவில்
காதின னேழ்கணை யாலொரு
கார்முகம் வாங்குபு வீரனும். (உ௯அ)

ஆயிரம் வாளியிற் பாகய
மங்கைவ ரிச்சிலை மாய்த்தனன்
தாயொரு தேர்சிலை கொண்டுவெஞ்
சரஞ்சதம் விட்டிர தந்தபக்
காயமெ ழுந்தவன் றேரிடைக்
கடிதுகுப் புற்றவன் கையிலொன்
றேயவ றுத்தனன் றண்டமொன்
றேச்சினன் றுனவன் வீரன்மேல். (உ௯௯)

வானிலெ ழுந்துவி றற்புயன்
வந்தவன் சென்னியு தைத்தரோ
வானிலெ ழுந்தனன் மீட்டுமவ்
வல்லவு ணன்சுடர் வாள்கொடு
தானும்வி சும்பிலெ ழுந்தனன்
றார்மலி வாகுத னுந்தகத்
தானவன் சென்னிய றுத்தன
னஞ்சியி ரிந்தனர் தானவர். (௩00)

இருபெரு மைந்தரும் வீழ்ந்தது
　　மெண்ணில ரும்படை பட்டதும்
வெருவுமு ளத்தொடு மெஞ்சினோர்
　　மீண்டது நோக்கிவெ குண்டுசூர்
ஒருநொடி யிற்படை நூழில்செய்
　　தார்புகு வேனென வண்மினன்
பொருசிலை நாணொலி கொண்டனன்
　　புலவரு ளஞ்சுழல் கொண்டனர். (௩௦௧)

ஒருதொடை யினிலள விலகணை யுகுமழை யெனவிரவ
வருமவு ணர்களிறை பெரிதமர் மலைதலு நிமிர்கணையால்
குருதியி னலகில நதிவளை குரைகட லொடுபொருத
எருவையி னொடுகழு குகள்பொர விறுவன பலபூதம். (௩௦௨)

கழலினொ டடிதுமி வனவணி கலையொடு தொடைதுமிவ
நிழலுமிழ் சுரிகையி னொடுமரை துமிவன நிலனுகுவ
அழலுமிழ் படையொடு கரதல மறுவன திசைபெயர்வ
சுழல்விழி யொடுதலை யிறுவன தொடுகட லிடைவிழுவ. (௩௦௩)

நொந்தனர் சிலரஞ் சினர்சிலர் நுவலறி விலர்சிலர்போர்
மைந்திலர் சிலர்மற மிலர்சிலர் வஞ்சின மிலர்சிலர்மெய்
நைந்தனர் சிலர்நடை யிலர்சிலர் நந்துயி ரினர்சிலர்கள்
முந்திய வடிபிந் தினர்சிலர் முனைபடை யடுதலைவர். (௩௦௪)

தலைவர்க ளொடுபூ தர்கணனி தளர்வுற வதுகாணுக்
குலமட வியர்வேர் வையின்வரு குமரர்கள் கணையேவ
நிலனவை விழநீ றுவில்பட நிரைவிடு புகைவார்வில்
கலவுமு னவர்தேர் விழவுரங் கடவினன் பலவாளி. (௩௦௫)

நியுதவெண் மர்களொழியவிண்ணெறி நிகழிரவியின்பெயர்கொள்
வயவன்முன் விடுகணை யிருமுறை வருதலு மவைதொலையாப்
பயில்சிலை யொடுதூ ணியுமறப் பலகணை நுதலுரமும்
உயிருலை வுறநட வினனவு ணர்களுறு குலவிறைவன். (௩௦௬)

அலைத்திடு நாண்கொடு சூரன்ம
றைந்துய ரண்டமு கட்டுவழித்
தலைத்தலை நின்றறை கூவியப்
பாற்றவி ரண்டம டுத்தனனால்
இலைத்தலை வேல்வல னேந்தியு
முற்றெதி ராடவொ ழிந்தவுணன்
மலைத்தலை வீழ்ந்துப லண்டமும்
வாவினன் வாவின னம்மிறையும். (௫௬௦)

அஞ்ஞையி ழந்தசி றுரென
நொந்தய னுதிவிண் ணோர்களெலாம்
கைஞ்ஞெரி கொண்டுக வன்றனர்
மால்கறை கண்டம்வி டுத்துவரும்
மஞ்ஞைய னுற்றல றிந்திலி
ரின்னும்வ ருங்கடி தென்றமரர்
மொய்ஞ்ஞும லித்தொகை சூழ்ந்தம
கேந்திரஞ் சூரொடு முன்னினனால். (௫௬௧)

ஆனவு ணப்படை யுள்ளன
யாவும டர்ந்தெதி ரக்குமரன்
ஈனழி கென்றுந கைத்தனன்
வெண்பொடி யின்றிட ராயினவே
ஊனர சாள்பவ னேக்கியு
ளந்தளர் வுற்றெரு சூழ்ச்சியனாய்
வானவ ரஞ்சிய மாயையை
முன்னினன் மற்றவண் முன்னினளால். (௫௬௨)

எமியையி ருந்தர சாள்வது
கண்டவென் கண்களி னைந்தழியத்
தமியையி ருந்தனை பின்னும
மர்த்தற விர்ந்திலை யாவர்கொலாம்
இமிழுறு பாலவிழ் கிற்பினி
றுக்குந ரீங்கெனை முன்னுமஃ
துமிழ்மதி யென்றனண் மாய்படை
யாகுக தில்லென வொன்றுசொல்வாள். (௫௬௩)

திமிதி மிங்கல கிலந்திரி புறக்கட லொருபால்
அமிழ்த சீதமங் தரவரை யுளதஃ தடுப்பின்
நிமிரு நின்பெருஞ் சேனையென் றகன்றன னுயிர்கள்
துமிம டங்கன்மேல் கொண்டனன் றூண்டினன் மணித்தேர். ()

ஞாலங் தன்னுருப் பாக்கிய நாமத்தேர் குறுகி
மூலங் தன்னொடு மகழ்ந்துமுன் னனுமுந்து கால்பட்
டால முண்டவன் முருகத் தாடலி னயர்ந்தோர்
பால ணங்குற வெழுந்தென வெழுந்தநாற் படையும். (௫சு௫)

மற்றை யண்டநின் றிறுத்தவிவ் வண்டத்தின் மலிந்த
முற்று முய்ந்தன குச்சென மொழியுல கேழும்
செற்றி நின்றன மூடுதெண் கடலினுட் காஞ்சி
உற்ற வாறெனப் பூதர்வீ ரர்களுமுள் ளானர். (௫சுசு)

முந்து வாழ்க்கையின் விழைவினி யொழிந்தனம் வேண்டா
இந்த யாக்கைதப் புதறவப் பேறென விமையார்
நொந்து வண்டுதே னுண்கொசு கெனவுரு மாறி
அந்தி னீங்கின ரிரிந்தனர் மலைமுழை யடைந்தார். (௫சுஎ)

அரிமு கத்தவன் கதிர்ப்பகை யங்கிமா முகவன்
பரிவின் மைந்தர்மூ வாயிரர் பின்னவன் பலரும்
பெரிது மோகைகொள் சூரனை வணங்கினர் பெரும
புரிதும் போரினை யாமெனப் போர்த்தன ரொருங்கு. (௫சுஅ)

படையெ டுத்திடு முணர்வின்றிப் பாரிடர் நின்றார்
மிடையும் பாரிடத் தலைவர்கள் வீரமுற் றழிந்தார்
தொடையி லக்கருந் தொலையுங்கொ லோவென வயிர்த்தார்
உடையு நெஞ்சினை வலியுறுத் தூக்கினர் வீரர். (௫சுகூ)

வாழி காங்கெய னனைத்தையு மனத்திடைக் குறித்தான்
ஊழி நாயகன் படையினைத் துரந்தன னோங்கிப்
பூழி யாக்கிமீண் டதுபுரத் தெஞ்சினுர் போலச்
சூழி யானையந் தொகையுடைச் சூரனை விடுத்து. (௫எ௦)

தேரி ருந்தமந் தரமுமாங் கேசிதர் பட்ட
தோரு நாயக னிழந்தவ னுவன்வரக் கனவி
ஆரு மின்பிடை விழித்தென வவலமிக் கெய்திச்
சூரன் வேளையுந் தனிமைசெய் வாமெனத் துணிந்தான். (௩௭௧)

இந்திர ஞாலம்வி டுத்தன னண்மியி
ராயிரம் வெள்ளமோ டேனோர்தம்
சிந்தைம யக்குபு தெவ்வியெ ழுந்ததி
ணிந்துய ரண்டமு கட்டெய்தி
அந்திலி ருந்தது வேலவ னேக்கியொ
ரம்புவி டுப்பவ டுத்தீர்த்து
வந்தது குப்புற லுற்றனர் மண்ணிடை
வன்னமி கும்வய வோர்யாரும். (௩௭௨)

ஏகலை நிற்றியெ னச்சுழ லிந்திர
ஞாலநி றுத்தின னெங்கோமான்
ஆகிய வண்ணம றிந்தவு ணர்க்கிறை
யாடுசி லைத்தொழில் கைக்கொண்டு
பாகனு யங்கமெய் யெங்கு மிருங்கணை
பாய்த்தின னெம்பெரு மானன்னன்
வேகநெ டுஞ்சிலை சிந்தினன் வாளரி
மீதுந டத்திம றச்சூரன். (௩௭௩)

ஈசன ளித்தருண் முச்சிகை வேல்கொண்
டெறிந்தனன் மாற்றவெ ழிற்செவ்வேள்
ஆசுக மாயிர முய்த்தன தின்றட
ரக்கர வச்சிர மேலேவி
வீசொளி முச்சிகை வெளவிவி டாதது
மீளவு டங்குக ரத்திட்டுக்
கேசரி மாயவி ராயிர வாளிகள்
கீழ்ந்தெழ நெற்றியு றுத்தானல். (௩௭௪)

மடங்கலி றத்தலு மாயையின் வெல்லுவ
லென்றும தித்தும றச்சூரன்
தடஞ்சிறை துன்றிய சக்கர வாகவு
ருக்கொடு சாகர நீர்பொங்க

நெடுங்கிரி யின்சிக ரம்புடை சிந்தநி
 ரைத்தரு நுண்டுக ளாய்ப்போத
அடங்கரு வெப்பினெ ழுந்தன ளுர்த்தன
 னண்டக டாகமு டைந்தென்ன. (௫௭௫)

வீரர்கள் கைப்படை மூக்கின்மு ரிப்பன்வி
 ழுத்தகு பூதர்த மைக்கொத்தி
ஆரவி ழுங்குவ ளேடுவன் மீள்வன
 லைப்பனெ டுஞ்சிற கான்மான்றோர்
போரவ னின்னண மாற்றுதல் கண்டபு
 ராந்தகன் மைந்தன்கு றிப்பால்வெள்
வாரண வேந்தனை நோக்கின னுய்ந்தன
 னென்றவன் மாமயி லாய்நின்றான். (௫௭௬)

தன்னொரு வாகன மென்னவி ளங்குச
 தக்கிரு தென்னு மயிற்போத்து
மன்னிய தன்கொடி வாயினி றுத்துவ
 ழங்குவ தென்னமு ழங்கிக்கண்
துன்னிய வார்சிறை மூக்கினு ளர்ந்துசு
 ழன்றுந டித்தெதி ரேகிற்ப
முன்னவ னூர்ந்துமு டுக்கின னத்திற
 மூர்க்கன றிந்தெதிர் கொண்டானல். (௫௭௭)

காலினு ளர்ந்துவள் வாயினெ றிந்துக
 றித்திற கூடுதி ரஞ்சோரச்
சாலவி ரண்டும மர்த்துழி நேமித
 லைச்சிறு தோகைப றித்தெற்ற
நீலநி றக்குரு கெய்த்தது கண்டுநெ
 டுங்கணை பல்லவு டம்பெங்கும்
வேலவ னேவமெ லிந்துகு லைத்தவை
 வீழ்த்துவி ரைந்தது விண்ணெங்கும். (௫௭௮)

ஏகுழி யேகியி ருஞ்சம ராற்றவி
 ளைத்திறை கைச்சிலை யைக்கீழ
வேகமொ டண்மவி ளங்கொளி நாந்தகம்
 வீசியி றுப்பவி ழுந்தன்றால்

போகுயர் புள்ளுரு மண்ணுரு வாய்ப்புரை
யோனல கெங்கும்வி ரிந்திட்டான்
வாகையி னன்கணை யேழ்விட நீர்வடி
வாயது மாற்றநீ ராயுற்றான். (௫௭௯)

வாளிக ளாறுவி டக்கன லாயது
மாற்றவ யங்கெரி யாய்மொய்த்தான்
ஆள்கணை யாயிர மேவம ருத்துரு
வாயது மாற்றம ருத்தானான்
நீள்கணை யாயிர நூறுது ரப்பநெ
டும்பணி யின்குல மாயுண்டு
மீள்வது செய்தன வின்னண மீரிரு
நாள்விளி யாதுடல் வோன்பின்னும். (௫௮௦)

மூவர் தேவர் யாரு மாக மொய்க்கு மோர்பு றத்தினில்
மேவு தன்னி னத்த ராய்வி ராவு மோர் புறத்தினில்
பாவு கோள்க ணாள்க ளாய்ப்ப ரம்புமோர் புறத்தினில்
தூவு கின்ற மேக மாய்த்தொ டங்குமோர் புறத்தினில். (௫௮௧)

சார தங்கள் பேயி னங்கள் சார்வி டங்கண் மாதிர
வார ணங்கள் வாள ராவி னங்கள் வாள ரிக்குலம்
வீர மல்கு சிம்பு ளாகி வேறு வேறி டந்தொறும்
ஆர வெண்ணின் மாயை கொண்ட மர்த்தொ ழிற்க ணின்றனன்.

இலக்க வாளி யெம்பி ரானெ டுத்து விற்றொ டுத்தனன்
இலக்க மாகி யொவ்வொ ரம்பெ ழுந்து சென்று வேற்படைக்
கிலக்க மான சூரன் மாயை யாவு மட்டு மீண்டன
இலக்கர் வீரர் பூதர் தேவர் யாவ ரும்வி யப்பவே. (௫௮௩)

தனித்து நின்ற சூர னத்த டங்கை பன்னி ரண்டுளான்
அனித்த யாக்கை நித்த மென்ற னந்த மாயை செய்கினும்
தனித்து நிற்றி நின்றன் மாயை முற்று றத்து ரந்தனம்
இனித்தெ ரிக்கு மெம்மி யற்கை காண்டி யென்று வீறினான். ()

மாய ஞாதி தேவ ரும்வ யங்கு மற்று லோகமும்
ஆய வெண்ணி லண்ட மும்ம னைத்து மங்க மாயுற
மேய வெம்பி ரானி யற்கை மெய்மை யஞ்ச விண்ணவர்
தூய னஞ்ச லஞ்ச லென்று தூம லர்க்கை காட்டினான். (௫அ௫)

விம்பி தத்த னாகி வெய்ய சூர னிற்ப மெய்யருள்
செம்மல் சற்ற லிப்ப வுண்மை கண்டு செப்பு மம்மவோ
அம்மை யெத்த வங்க ளாற்றி னேன்கொ னம்மை யாமுரு
மும்மை யுங்க டந்த வன்மு ழுத்த மெய்தெ ரிப்பவே. (௫அ௬)

பால னென்றி கழ்ந்த தும்ப டுப்ப மிக்கி ரும்படை
மேல டர்ப்ப வுய்த்த தும்மெ லாம்வி ளங்கு தோத்திரம்
சால நல்கு பூசை யாத்த மீஇப்பி னன்வி டைப்பனேல்
கோல மேனி காட்ட வல்ல னல்ல னென்கண் கொள்ளவே. ()

ஒருக ணத்தி லட்டுமீள வல்ல வும்பர் தம்பிரான்
பொருக ளத்து நேர லானெ னப்பு குந்த மர்த்ததென்
திருகு யிர்ச்செ ருக்க டர்த்த தல்ல தில்லை யீதுசேர்
முருகு கொப்ப ளித்த தார்மு குந்த னுக்கு மெய்துமோ. ()

உளங்கொ ளாத விம்பி தத்தி னின்ன வோதி நின்றிடும்
வளங்கு லாவு சூரன் போத மாற்றி முன்னு ருக்கொடு
விளங்கி னான்வி சாகன் போர்க்கு டைந்தி ழைத்த மாயையால்
துளங்கு வேன லேனெ னத்து ணிந்தொர் சூழ்ச்சி முன்னினான்.

பால னைக்கொ ணர்ந்த தேவர் தங்க ளைப்ப டுத்துமுன்
பால னைப்ப டுப்ப லென்று மந்தி ரம்ப டர்ந்தனன்
ஞால மாதி ரங்கள் வானு நள்ளி ருட்பி ழம்புற
ஆல மென்ன வெண்ணில் வாய்மை கொண்ட வாக்கை யாளனாய்.

இருட்பி ழம்பி னூடு போந்தி றப்ப முன்னு கின்றனன்
மருட்சி மிழ்ப்ப னுக்கு மாய ஞாதி யோர்க ளோதியால்
தெருட்சி கொண்ட றிந்த னர்தி கைத்து ளார்பெ யர்ந்திலார்
வெருட்சி கொண்டு விம்பி னார்வி சாக வென்று கூவுவார். ()

பண்டை னப்ப டுத்த வம்மை பால வோல மாலமுண்
கண்ட னெற்றி யங்கி தந்த கந்த வோல மாமுகச்
சண்டை னத்த டிந்த பிள்ளை தம்பி யோலம் வெய்யசூர்
மிண்டி னத்த கர்க்க நின்ற வேல வோல மோலமே. (ருகூஉ)

மூல மாய னைத்து மான மூல வோல மோலமே
கால மாய்க்க டந்து நின்ற கால வோல மோலமே
பால னுய்மு திக்கு றைந்த பால வோல மோலமே
வேல வோல மோல மென்ன யாவ ரும்வி ளித்தனர். (ருகூ௩)

ஊர்தி மஞ்ஞை யான வும்பர் கோன்ப ணிந்து காரிருள்
சார்தல் செய்து தேவ ராவி தான்ம டிப்ப வூடுசெல்
சூர்த டிந்தி டும்பை யாந்து ரப்ப நல்கு கென்றனன்
வார்த டக்கை வேற்ப டைம கிழ்ந்து நம்பி விட்டனன். (ருகூச)

விடுக்கு முன்னர் மாயை நீவ வெய்ய சூரன் மாவடி
வெடுத்து நீர்க்க டற்கண் வேர்க ளீண்டு சாகை கீழ்மிசை
அடுத்த வைப்பெ லாம டர்த்த மூன்று தேவர் தங்களைப்
புடைத்து நிற்ப வங்கி கான்று போந்த வேற டிந்ததே. ()

கொக்கு ருச்செ குத்த வுங்கு லாய தன்னு ருக்கொடு
தக்க தன்னு டைக்கி டந்த தாரை வாளு ரீஇயடப்
புக்க னன்பொ ருக்கெ னக்கி ழித்தி ரண்டு கூறதா
மைக்க டற்க ணிட்டு மீண்டு வள்ளல் கைத்த லத்ததே. (ருகூரு)

அம்மையி லெண்ணில் கால மாற்றிய தவப்பே றெய்த
இம்மையி லிரண்டு கூறு மெழுந்துகுக் குடம யூர
விம்பித வுருவங் கொண்டு விண்ணவர் மருள வையம்
மும்மையுஞ் சிதர்ப்ப தென்ன முழங்கிமே லெழுந்த வன்றே. ()

அருள்விழி சேர்த்த லோடு மாணவ மாதி மூன்றும்
ஒருவியுள் ளுருகி நிற்ப வூன்றலைப் பொடித்த புள்ளை
மருவுதி கொடியாய் நந்தம் வாம்பரித் தேர்மே லென்றுங்
கிருவியூர் மஞ்ஞை நீத்தங் கெதிர்ந்தமா மயின்மேல் கொண்டு.

திரைக்கட லேழு மொன்ருய்ச் சென்றளாய்க் கலவிப் பொங்க
வரைத்திரள் பொடிக ளாக வானமீன் முகில்கள் சிந்த
நிரைத்தபல் லுலக மெல்லா நிலைதடு மாற வையன்
புரைத்தப லண்ட மெல்லாம் பொள்ளெனக் கடவி மீண்டான்.

இருதிறத் தேங்கள் யாமென் றிருவரு மறியா வண்ணம்
ஒருதிறத் துடலி னூற்றெட் டுகம்பெரும் போகந் துய்த்தல்
கருதுதன் மறத்த லாதிக் கடனெலா மொருங்கு கூட்டிப்
பிரிவுசெய் தாண்டவ வள்ளல் பெருமையார் கணிக்கற் பாலார்.

சூரனே பன்ம னென்னச் சொலத்தகு மிருவர் பன்னாள்
ஒருட லத்தி யாரு மொருவனே யென்ன வாழ்ந்தோர்
ஈருட லிருவ ரென்ன விருப்பரேல் விரிந்த வையத்
தாருடங் கிருந்தோ ரூழ்வந் தடுப்புறிற் பிரியா ரம்மா. ()

தேவரை யளித்துத் தீய வவுணரைச் செகுப்பச் சாபம்
மேவிய தன்று பின்னர் விரவிய வவுணர்க் காத்துத்
தேவரை யலைப்ப வாழ்க்கை தேகமோ டொழிந்த தென்ருல்
யாவர்கண் மாட்டு மின்னுங் கியற்றுதன் முறைமைத் தன்றே.

அடைக்கலம் புகுவின் னோரை யாதரித் தவுணர்க் காதக்
கடப்பருஞ் சாபம் பெற்ருர் கடவுளர்க் கிடும்பை யேய்த்துப்
படைக்கல மிறைமேற் றூண்டிப் பழித்துமெய் வாழ்வு பெற்ருர்
விடைப்பரு வினையி னுக்கம் யாவரே விளங்கக் காண்பார். ()

மண்டிய சிறகர்ப் புள்ளாய் வயங்கிய புலவர் தம்மைப்
பண்டைய வுருவங் கொள்ளப் பணித்தனன் பறப்பை யாகி
விண்டன ரமரர் யாரும் விரைமலர் மாரி தூர்த்துப்
புண்டரீ கத்தாள் போற்றிப் பணிந்துபே ருவகை பூத்தார். ()

போரிடை விழுந்த பூதர் தங்களை யெழுப்பிப் பொல்லாச்
சூரன்முன் கவர்ந்த தேவர் தொல்வள முழுதுந் தன்பால்
சாருற வழைத்து வீர வாகுவாற் சயந்த னோடும்
ஆரும்விண் ணவர்தங் காவ லகற்றினீ ரிறையை நோக்கி. (௬௦௫)

அவுணர்கோ னகர மான மகேந்திர மழிக்க வேலி
உவணமேக் குயர்த்தோ ஞதி யும்பரோ டாங்குத் தீர்ந்து
பவனவே கத்தின் முந்தும் படர்சிறை மஞ்ஞை யூர்ந்து
புவனமேத் தெடுங்குஞ் செவ்வேள் பொருவருஞ் செந்தில் புக்கான்.

தானவர் கரந்தி யாங்குத் தவிரினுந் துருவி மீண்டு
ஞானநா யகற்குக் கூறி நலித்துமென் றகன்றுன் போல
மீனுளர் கடலிற் பட்டு வெய்யவன் மறைந்தா னன்பின்
வானவர் கந்த வேளை வரன்முறை பூசை செய்தார். (௬௦௭)

தாவுமா ணிரதந் தூண்டித் தரணிவந் தெழுத லோடும்
ஆவயிற் கந்த வேளு மமலனைப் பூசை யாற்றித்
தேவர்கண் முதலோர் சூழத் திருப்பரங் குன்றம் புக்கான்
காவல்செய் மகவான் றழ்ந்து கன்னியை மணக்க வென்றுன்.

தூதுவர் தம்மை விட்டான் றுணைமுலை மகளைக் கொண்டு
மேதகு சசிமான் போந்தாள் விறன்முசு குந்தன் போந்தான்
ஆதிநா யகனுந் தானே யறிந்துபல் கணங்கள் சூழ
மாதொடும் போந்தான் வைவேல் வள்ளலும் வதுவை செய்தான்.

சிலபகல் கழிந்த பின்றைத் திருப்பரங் குன்றி னீங்கி
இலகுவிண் ணுலக மாக்கி யிந்திரற் கரசு நல்கிப்
பலரையுந் தத்தம் வைப்பிற் படர்தர வேவிப் பூதர்
குலவிய வீரர் சூழக் குறுகினன் கந்த வெற்பு. (௬௧௦)

குவிமுலைக் களிநல் யானை கோட்டுமண் கொள்ளப் பட்ட
சவிமணி மார்பிற் செவ்வே டையலோ டமர்ந்து சின்ணுள்
அவளையங் கிருவிக் கொண்ட வமரர்கள் வளத்தி ஞேடும்
புவிபுகழ் தணிகைக் குன்றம் போந்துவீற் றிருந்தா னன்றே. ()

பொருவில்வை குந்த மாதிப் புலவர்க ணகரந் தோறும்
ஒருவுறி னமையா வாக வுற்றபல் வளங்க ளென்னும்
திருவெலா நிறைந்த வாற்றுற் சீபரி பூர ணப்பேர்
மருவிய தென்ப வேற்கை வள்ளலார் தணிகைக் குன்றம். ()

கந்தரந் தொறும்விண் ணோர்கள் வளமெலாங் கஞலுந் தோற்றம்
எந்தைவேற் குமரப் புத்தே ளிருந்தரு டணிகைக் குன்றில்
முந்துபல் வளத்தோ டொப்ப முதிர்தவம் புரிதல் போன்ற
தந்தினல் வளத்தை யஞ்சிக் கரந்ததும் போன்ற தன்றே. ()

தீயவர் புரத்திற் பட்ட செயிர்கழீஇப் புனித மெய்த
ஆயிடை வதிதல் போல வமரர்கள் வெறுக்கை முற்றும்
பாயின வண்ணஞ் சொற்றும் பங்கயன் முதலோர் யாரும்
மேயினர் தவங்க ளாற்றி மீட்டனர் போதல் சொல்வாம். ()

சீபரிபூரணநாமப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — உ௦௦௦.

---

## பிரமனருள்பெறு படலம்

---

பூமகள்களி தூங்கப் போர்மகள்குறை நீங்க
நாமகணல னெய்த நல்லருட்கிட னுப
காமருசுதை மேனிக் கலைமகள்வழி பட்ட
வீமலிநறுங் கொன்றை விமலனைநினை வோரோ. (க)

முறுக்கவிழ் நறைக்கமல மூரியணை மேலான்
ஒறுக்குமவு ணக்களைபொ ழித்தயர்வு யிர்த்து
நிறுக்குநிறை செல்வமொடு நீடுலகி ருந்தான்
இறுக்குமெறு ழாய்தமுதல் யாவுமுற வெண்ணி. (உ)

அலத்தகம ணிந்தழகெ றிக்குமடி வாணி
நலத்தகவி ழைந்துடன டப்பவவ ணீங்கிக்
குலத்தமிழ்வ ழங்குகுவ ளைக்கிரிகு டக்கர்
நிலத்தின்முனி ருத்திமகிழ் நின்மலனை யண்மி. (௩)

பூசனைபு ரிந்துபுக ழோங்கியவீ ராட்ட
காசமவி ரீசர்கழல் காதலின்வ ணங்கிக்
கூசலன சங்கடர்கு மாரதிருத் தம்புக்
காசகல வாடியணி மால்வரையி வர்ந்தான். (௪)

அருக்கர்பதி ஞயிரவ ராங்கொருவ ரைப்பின்
ஒருக்குறையி னும்பொருவு ருதசுடர் வேல்கொண்
டிருக்குமரு ளெந்தையெதிர் தாழ்ந்தனனெ ழுந்தான்
திருக்கறுமு ளக்கசிவு தேக்கிவலம் வந்தான். (௫)

ஆலய நுழைந்துமுறை யானணிய ணுகி
மூலவச லத்திறையை மூலமல நாசக்
காலனைவ ணங்கினவர் காலன்முறை யஞ்சா
வேலவனை வித்தகனை வீழ்ந்துதரி சித்தான். (௬)

அன்றையிர வுப்பொழுது வைகவலர் மேலான்
நன்றுமுன ருந்தவந டாத்தியவ ரைப்பில்
சென்றுபுன லாடிவினை தீர்க்குமணி மாலை
மன்றல்கமழ் நீறுடல்வ யக்கினன ணிந்தான். (௭)

தடாதபொறி யைந்துமெறும் சாயவிறை கோலம்
விடாதுளமி ருத்திவிறன் மந்திரந வின்று
வடாதுதிசை நோக்கிவரை யாதனமி ருந்து
கெடாதபய னல்குகிளர் மாதவமு ழந்தான். (௮)

ஏவலினி தாற்றுமெழி ஞமகள்வ ணங்கிக்
காவலனு ளத்திசைவு கண்டுசுனை ஞாங்கர்ப்
பூவலயம் வான்சுடர்கள் பூண்டுருள வூர்வெல்
சேவகன ருட்குறியி ருத்தியருச் சித்தாள். (௯)

இன்னணம்வி ழைந்திவரி ருந்தவமி யற்றக்
கன்னியர்ம ருங்கமர்க டம்பணிபு யத்தான்
நன்னர்வர நல்கநளி மாமயில்க டாவித்
துன்னியக ணத்தொகுதி சூழவணு குற்றான். (௧௦)

கண்டுதொழு துச்சிமிசை கையிணைக ளேற
மண்டுவகை யுள்ளமெழு வல்லையினெ ழுந்து
தண்டென விழுந்துதிவ டாண்முடிக டீட்டி
நுண்டுளிபி லிற்றவிழி நோக்கியய னேத்தும். (கக)

மும்மை மலக்கணத்தின் மோகக் கடலழுந்தி
விம்மற் பவத்தின் மெலிகின்றார் பல்லோர்
விம்மற் பவத்தின் மெலிகின்றா ரென்னே
செம்மற் றணிகைத் திசைநோக்கா வாறே. (கஉ)

நிகழ்பிணிக் கோட்பட்டு நிரயமிது வென்னத்
திகழிடும்பைச் சேற்றுட் டிளைக்கின்றார் பல்லோர்
திகழிடும்பைச் சேற்றுட் டிளைக்கின்றா ரென்னே
பகவன் றணிகை பணியாத வாறே. (கங)

ஒல்லார் நலிய வுரிமைபொரு ளேரொடுந்தோற்
றல்லாந்து வையத் தலைகின்றார் பல்லோர்
அல்லாந்து வையத் தலைகின்றா ரென்னே
வல்லான் றணிகை வழுத்தாத வாறே. (கச)

வழுத்து நான்முகனை நோக்கி நீலவரை
வள்ளல் வேட்டவரம் யாதெனத்
தழைத்த பேரருளி னல்வி னவவெதிர்
தாழ்ந்து வேதனனி சாற்றுவான்
முழுத்த வாண்மைவளர் சூர னெங்களை
முனிந்து வெளவுவளம் யாவையும்
பிழைத்தி டாதுகொடு வந்து பன்மணி
பிறங்கு மிவ்வரையி ருத்தினை. (கரு)

சோத்த நின்னடிய னேற்கு நுந்தையரு
ளொல்லை நாள்வளம னைத்தையும்
யாத்தன் மாதிவள்ப ராப ரன்குறியி
ருத்தி வந்தனையி யற்றினன்

ஆத்த வாதலினெ ணுது நாமமொ
டலங்கு தீர்த்தமிவள் பேரொடும்
பூத்தல் வைகுசிவ லிங்க மும்மிவள்
புணர்ந்த பேரொடுவி ளங்குதல். (௧௬)

சீர்க லந்துவளர் தெய்வ யானைபுணர்
செல்வ னீவரம்வ ழங்குமிம்
மார்க ழிச்செழும திக்க ணுதிரை
மரீஇய பூரணைவ ருந்தினம்
நீர்க லந்தசுனை யாடி யிவ்வயி
னிறுத்த சோதியுரு நோக்குவோர்
பார்க லந்தபதி ணன்கு கல்வியும்
பயின்று நாற்கவியு மாதலே. (௧௭)

என்ன வன்னவைவ ழங்கி நாதனெழி
லால யம்புகுபு வைகினுன்
அன்ன மத்திரமி ருக்கு நாணகல
மாரு நூல்சரசு யாகநீர்க்
கன்னல் கண்மணியின் மாலை தண்டரசு
கனக வொண்சபைய னைத்துமேல்
துன்னி வேளடிபெ யர்ந்து போந்துநக
ருற்ற னன்மறையி ணயகன். (௧௮)

வாணி தீர்த்தமினி தாடி யங்கண்வளர்
வாணி நாதனைவ ணங்குவோர்
பூணு மின்பமுயர் கல்வி செல்வமலி
போத மின்னவென யார்வலார்
பேணி மாதவமி ரப்பு மந்தணிர்
பிறங்கு வேதனருள் பெற்றமை
காண வோதினம ராவ ணைக்கடவுள்
காம மார்ந்தபரி சோதுவாம். (௧௯)

பிரமனருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௨0௧௯.

## நாரணனருள்பெறு படலம்

தொள்ளை பூத்தல ருளத்தவர் நீக்கமுந்
தூய நேயமலி தொண்டர்கள் சேர்வையும்
கள்ள வைம்பொறியும் வென்றெழு வீரமுங்
காழி லாதகலை ஞானவு ணர்ச்சியும்
தெள்ளு பேரொளியின் மூழ்கித் திளைத்தலுஞ்
சென்று தாக்கும்வினை தீர்த்திடு சூழ்ச்சியும்
அள்ளி யள்ளிவர மென்னவ ழங்குமா
லறிவி னூடுவளர் மாதவ நாதனே. (க)

பூத்த தாமரை யிருக்கு மணங்கு
பொங்கொ ளிக்கழ லடித்துணை யல்குல்
யாத்த மேகலை வயங்கு மடிக்க
ணிருத்தி நாளும்வ ருடத்துயில் கொள்வோன்
நீத்த தன்வள நிரப்புதல் வேட்டு
நீடு வாழ்க்கையின்வை குந்தம்வி டுத்துத்
தூத்த குந்தணிகை மால்வரை மேல்பாற்
சூழ லோசனை யரைக்கண டுத்தான். (உ)

ஆங்கு மாநகர மொன்றுவி ளங்க
வாக்கி யங்நகரி டத்தறல் பொங்கித்
தீங்கு தீர்க்குமொரு தீர்த்தம கழ்ந்தத்
தெள்ளு தீர்த்தமரு காகிய வைப்பின்
ஓங்கி லிங்கமுறை யானிறு விப்போ
தூறு தீஞ்சுவையின் போனக மற்றும்
தாங்கி யன்பின்வழி பாடுபு ரிந்து
தாளி ணைக்குளமொ ருக்கியி ருந்தான். (௩)

மருவு மாதவந கர்ப்பதி யானு
மாத வேசன்மகிழ் கூர்ந்தெதிர் தோன்றிப்
பெருகு பத்திமைவி டாதவு ளத்துப்
பிரச நூக்கதுள வத்தொடை மார்பன்

இருகை யுச்சியினி ருத்திவ ணங்கி
  யெழுந்து சூழ்ந்துதுதி விண்டய னிற்பப்
பொருவி லாதவடி மைத்தொழில் பூண்டோய்
  பொருப்பி வர்ந்துவிழை வெய்துதி யென்றான். (௪)

அளித்த நல்லருளை யுச்சியி னேற்றி
  யடிக ளின்னும்வர நல்குவ துண்டால்
களித்த விந்நகர மென்றுமவி ளங்கக்
  காம ருங்குறியி தன்கணெஞ் ஞான்றும்
தெளிக்கு நீயினிது வைகதி றைந்த
  தீர்த்த மாடியிவ ணிற்றொழு கின்றோர்
நெளிக்கும் வல்வினையி னீங்கிவி ழைந்த
  நினைவும் வீடுமுற வாக்குவ தென்றான். (௫)

இரந்த வவ்வர மளித்தெனை யாளு
  மெம்பி ரான்குறியி னெய்திம றைந்தான்
வரந்த ழைப்பவிளை மாதவ னீங்கி
  வயங்கு காவிவரை சூழ்ந்தெதிர் வைகி
அரந்தை தீர்த்தருள்கு மாரதி ருத்த
  மாடி யாற்றுகட னூடிவெண் ணீறு
பரந்த மார்பிலணி யக்கவ டங்கள்
  பாங்கு லாய்த்துவள வேறினன் வெற்பு. (௬)

அத்தி யுங்கொடியு நின்றவ ரைப்பி
  னைந்து மெட்டுமுற வாரவ ணங்கிப்
பத்தி சேர்மணிவண் மாளிகை சூழ்ந்து
  பைய வாலயநு ழைந்து விழைந்த
கொத்த னைத்தையும்வ ழங்குமொ ரைங்கைக்
  குஞ்ச ரத்தொடு குமாரலிங் கேசன்
உத்த மச்சரண நச்சிவ ணங்கி
  யொளிறு வேற்கைபிறை வன்புடை யுற்றான். (௭)

அருவி கொண்டுவிழி நீருடன் மண்ண
  வஞ்ச லிக்கரமு டித்தலை யேற
உருகி யுள்ளம்வள ரன்புதி ளைப்ப
  வுயர்ம றைத்துதிக ளாவின டிப்பக்

கருணை பொங்கிவழி யுங்கடை நோக்குங்
கமலம் வென்றமுக மும்விழி கூசத்
தருண சுந்தரமி குந்தொளி வீசுஞ்
சாமி நாதனுரு முற்றும டுத்தான். (அ)

நெடிது போதவச மாயெதிர் நின்று
நிறைந்த கோலமுள முற்றிய பின்றை
நடலை வாழ்வினைய றுக்கும ருந்து
ஞான சத்திதர னுண்மலர் வென்ற
வடிக ளல்லதிலை யென்றுக திக்த
வற்பு தத்தினெடு மாயிடை நீங்கித்
தொடிபொ லிந்தகர மார்பொடு பின்னிச்
சூழ்ந்து தாழ்ந்தொரும ருங்கி னிருந்தான். (கூ)

மாலை யாமமும கிழ்ந்து வணங்கி
வைக றைப்பொழுது பாதியி றந்த
வேலை நீறுடல ணிந்து தியானம்
விளங்கு மந்திரந வின்றுக ணித்தல்
சால வாற்றியயல் போந்துகு டாது
சார ணித்தலைவ யங்குசு னைக்கண்
ஏல நாட்கடன்மு டித்தவண் வைகி
யிரித்து வன்பொறியி ருந்தவ முற்றான். (கo)

இருந்த வாறுபல நாள்கழி வெய்த
வீது தேர்ந்தவுணர் சூழ்ச்சியி னுற்றான்
அருந்த வந்தபுத லாற்றலும் வல்ல
ராவ ரென்றுமுன்வ ருத்தம்வி ளைத்த
திருந்து தேவர்மகிழ் செய்திட முன்போற்
செல்லு ருக்கொடும றைத்தது நேரப்
பொருந்த வல்லிகள்வ லைந்த வுடம்பிற்
புற்றெ ழுந்துநிமிர் கின்றதை யன்றே. (கக)

புடவி மாதுகடல் வைப்பும்வை குந்தப்
பொற்ற மாநகரு மண்மிய ணைக்கும்
கடனி லாமையின்ம கிழ்ந்தற மன்னுங்
கண்ண ளித்ததென வெண்ண நிரம்ப

உடல முற்றுமறை யத்தழு விக்கொண்
டுகந்த காட்சியினி ருந்தவ மாற்றும்
குடந வின்றகுரி சிற்குவ ரங்கள்
கொடுப்ப நீலவரை வேலனி னைந்தான். (௧௨)

பாரி டம்புடைபல் கோடிந டப்பப்
பரந்து தேவர்பணி மாமலர் தூர்ப்ப
வாரி டம்பனுவல் வல்லவர் போற்ற
வார ணங்கண்முனி வோர்கடு கிப்பக்
காரி டங்கொண்முர சங்கள் கறங்கக்
காமர் தந்திரியின் யாழிசை தேக்கப்
போரி டங்கொண்மணி மாமயி லூர்ந்து
பூர ணப்புனித னுங்கெதி ருற்றான். (௧௩)

களக ணைருளி னுயர் பானு
கம்ப னண்மையி னடைந்து பிடித்த
வளைக ளாயிர முரன்றத ழக்கம்
வார்செ வித்துளைநி ரம்பலும் யோகில்
திளையு ளந்தனை விடுத்தனன் மெல்லச்
சிறையி னின்றும்வெளி வந்திட லுற்றான்
அளையி ருந்துரிக ழற்றி வெளிக்கொ
ளாடுபாம்பொடு மலைத்தனன் மாயோன். (௧௪)

வண்டு வார்தொடைகு டைந்துமு ழங்க
வான துந்துமிம ருங்கு முழங்க
அண்டர் நோக்கமருண் மேனி துழாவ
வாடு வார்கொடிவி சும்புது ழாவக்
கொண்ட னேர்கருணை யான்வெளி நின்ற
கோல நோக்கியிரு கைமலர் கூப்பிக்
கண்டு ளிப்பவுடல் வார்மயிர் பொங்கக்
காத லாற்கழல்ப ணிந்து துதிப்பான். (௧௫)

நாடாது வேட்ட நனிவழங்கும் வள்ளன்மை
தாடா ழுநர்பாற் றகைக்குங் கருணையான்
ஓடாத தானை யுருமுச் சினச்சூரைக்
கோடாப்போர் வெங்களத்துக் கொன்ற விறைபோலும்
குருபரனைத் தாழ்த்த குருநாதன் போலும். (கசு)

பாறுடு செங்களத்துப் பற்றார் திரண்முருக்கி
ஆறுடு கண்ணீ ரமரர் சிறைமீட்டோன்
நீறுடு மேனி நிமலன் வலத்துயிர்த்த
தேறுத வேதற் சிறையிட்டோன் போலும்
தேவியுமை கண்களிக்குஞ் செல்வமே போலும். (கஎ)

தேக்கு மறைமற்றுந் தெள்ளுந் தமிழ்முனிக்கு
நீக்கமின் ஞான நிலையருளும் வாய்மையான்
ஊக்கமி லோமு முணரச் சராசரங்கள்
தாக்கி லுருவாய்த் தழைத்தபிரான் போலும்
தந்தைதாய் நாப்பட் டவிர்ந்தமழப் போலும். (கஅ)

வெளிஞெமிர் ஞான்றீசன் வியங்கொள்ளத் தாங்கி
வளியழல் வார்கங்கை வருந்தும் வழித்தோன்றல்
களிஞிமிறுங் தேனுங் கஞலு மணிப்பொய்கை
நளிமலர்மென் பள்ளி நயந்திருந்தான் போலும்
நாயே னுளமு நயந்திருந்தான் போலும். (கசு)

அறிவிரண்டு மாய வலங்கறிவிற் றூழ்ந்தோர்
செறிவகன்ற யாக்கைச் செருத்தே றுகைப்போன்
உறுவலியின் வைய முடற்று தகரூர்ந்த
எறுழ்மிகுத்த நாற்கோட் டிபப்பாகன் போலும்
எழிற்கலவ மஞ்ஞை யினிதுகைத்தான் போலும். (உ0)

நாரண னின்னண நன்றுது தித்தலும்
பூரணன் மாமயிற் போத்தரு குந்திச்
சீரணி மாதவஞ் செய்திளைத் தாயெனக்
காரணி மெய்கரங் கொண்டுதை வந்தான். (உக)

ஆர்ங்கதிர் வேணிய னுக்கிய ளித்தெதிர்
ஈர்ங்கவுண் மாமுகன் மார்பிடு மாழி
சார்ங்கமு மற்றவுஞ் சாமிய ளித்தனன்
பீர்ங்குரு வீயுற மாடையன் பெற்றான். (உஉ)

பங்குனி யுத்திரம் பாற்கரன் வாரமும்
தங்கிய தின்னரு டந்தரு ளித்தினம்
இங்கிதி லிச்சுனை யீர்ம்புன லாடுவோர்
எங்கணும் வேட்டன வெய்துக வென்றான். (உ௩)

அவ்வர முங்கொடுத் தந்தண ருச்சியும்
எவ்வமி லாரணத் துச்சியு மேய்ந்த
கவ்விய பூங்கழ லான்கமழ் கோயிலுள்
செவ்வியு ளாரொடுஞ் சென்றுவ திந்தான். (உச)

வாடிய பொங்கர்ம ழைக்கும லர்ந்தென
நீடிய செல்வநி றைந்தெழு மாயன்
வீடலி லாதுள்வி சாகனை வைத்தனன்
கூடிவை குந்தங் குளிர்ந்துயிர் காத்தான். (உ௫)

அந்தணிர் மாயன டுத்துவ ரங்கொடு
சிந்தனை முற்றிய செய்தி தெரித்தாம்
இந்திர னேடிமை யார்வரம் பெற்றுறு
மைந்தின ராகிய வண்மையுஞ் சொல்வாம். (உ௬)

நாரணனருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — உ௦ச௫.

# இந்திரனருள்பெறு படலம்

அமராப தீச னடிவணங்கி னோர்கள்
இமையார் வணங்க விருப்பதற் கெனையந்
தமரா னவருந் தழனரக நீந்தி
நிமிர்போக வாரி நெடுவிசும்பிற் றேய்வார். (க)

அரம்பு முற்றிய தான வக்குல
மந்த முற்ற வமர்த்துவிண்
வரம்பு முற்றுல கம்பு துக்கிவ
ழாமை நற்குடி யேற்றினான்
நிரம்பு மாதவ மின்மை யாற்சில
நீடு செல்வம ளித்திலான்
உரம்ப டைத்தவை யெய்து வாமென
வுன்னி னானும்பர் காவலன். (௨)

விண்ணி னீங்கிய டுத்து நீலவி
லங்கல் யோசனை பாதமொன்
றென்ன நின்றதெ னாது சாரிரு
ளோங்கி வாசமு மிழ்ந்துதேம்
கண்ணெ கிழ்ந்தும லர்ந்தொ ழுக்குக
டம்பு முற்றிய சூழலை
நண்ணி யங்கண கழ்ந்து தீர்த்தந
யந்தி லிங்கமி ருத்தினான். (௩)

ஐந்தெ னும்முப சார முற்றவ
தற்கி யன்றவெ லாந்தழீஇ
ஐந்து சுத்திபு ரிந்தி ருந்தவி
சைந்த மைத்ததி லானனம்
ஐந்து கொண்டருண் மூர்த்தி மூலமு
மார்த்தி யாவர ணங்களோர்
ஐந்து முற்றவ ழாது பூசனை
யைந்த டக்கின னாற்றினான். (௪)

புராரி பாங்கர்வ லாரி பூசைபு
கன்று வைகலு மின்னணம்
பராவி யாற்றியி ருந்த னன்பயி
லேனை மாதிரத் தார்களும்
ஒராத பத்தியின் விண்ணு ளாருமு
டங்கு வந்தவ ருங்களி
விராவி யன்பொடு மங்க ணங்கண்வி
ழைந்து மாதவ மாற்றினர். (ரு)

ஆண்டு செல்லவி லிங்க நின்றம
ராப தீசனெ ழுந்தனன்
பூண்ட காதலின் வீழ்ந்து வீழ்ந்துபு
ரண்டு சூழ்ந்துகைத் தட்டமிட்
டிண்டு மாமறை வேண்டு மவ்வள
வுங்க ரைந்தெதி ராடிய
மாண்ட வச்சிர ஞேங்க லேறும்வ
ரங்கொ டுத்தும றைந்தனன். (சா)

அடம்பு தாதகி கொன்றை சூடம
ராப தீசனை யாக்கமார்
கடம்ப மாநக ரெய்தி வாழ்த்துநர்
காத லாற்கழ ருழுநர்
இடும்பை முற்றுமி ரித்து வேட்டன
வெய்து வார்வர மெய்திய
உடம்பெ லாம்விழி யான வன்கிரி
யும்ப ராரொடு சூழ்ந்தனன். (எ)

தீர்த்த நேர்ந்தன வாடி யாடிமுன்
சென்று தாழ்வரை வைகிய
கூர்த்த வல்வினை வல்லை யோப்புகு
மார தீர்த்தமு வந்துதோய்ந்
தார்த்த வாணிதி ருத்த மாடிய
லங்கு பன்பணி வீங்கிருள்
வேர்த்தொ துங்கவி மைக்கு நீலவி
லங்க லுச்சியி வர்ந்தனன். (அ)

சிலம்பு கிண்கிணி வால்வ ளைத்திர
டெள்ளொ ளிக்கலை வார்குரல்
இலம்ப கத்திமிர் வண்டு மார்ப்பவெ
ழான்மு ழாவெழ மங்கையர்
குலம்பு ரிந்திய லாடல் பாடல்கு
லாய கோயின்ம ருங்குபோய்
வலம்பு ரிந்துயர் வார ணக்கொடி
மன்னு சூழல்வ ணங்கினன். (௯)

பாயு மும்மத வேழ மூரிறை
பாயு மும்மத வேழமாய்
மேய வாவச்ச காயன் வார்கழல்
வீழ்ந்து தாந்துபு கழ்ந்போய்
நேய மல்குகு மார லிங்கநி
லாய சோதிப தந்தொழு
தாயெ னத்தகு காயி லைப்படை
யண்ணன் முன்னர டுத்தனன். (௧0)

தாது துன்றிய வாச மாமலர்
தமனி யச்செழு மாமலர்
கோது பாறிய வச்சு தங்குரு
மோலி வானவர் கொடியக
மீது தாங்கினர் நிற்ப வள்ளிவி
ழைந்து தாளிணை தூய்த்தொழு
தியாது மன்பிலி யேற்கு மின்னரு
ளேய்ந்த வாறென விம்மினன். (௧௧)

இரண வல்லவு ணக்கு லத்தெறு
ழாயன் கொன்றம ரம்பொர
முரண விந்தொரு பற்று மின்றிமு
டிந்த பாணியின் வந்தருள்
கருணை யின்றிற நோக்கி யுள்ளங்க
சிந்து நீடெதிர் நின்றவண்
அருண மென்மலர் வென்ற பாதம
கத்த ணிந்துபெ யர்ந்தனன். (௧௨)

தோத்தி ரத்தொடு சூழ்ந்து தாழ்ந்தொரு
சூழல் வைகிம கிழ்ச்சியில்
பாத்தி ரம்பெற மாசை தூசுப
கட்ட ருங்கலன் யாவையும்
ஆர்த்தி மந்திர மெண்ணி யன்றொழி
வெய்த வங்கண கன்றுபோய்ச்
சீர்த்த கோயிலி னண்மை யிற்சுனை
தென்பு றத்தெதிர் கண்டனன். (௧௩)

ஆவ யிற்புகுந் தாடி நாட்கட
ஞற்றி யாரண நாடரும்
தேவ தேவன ருச்ச னைப்பணி
செய்ய வெண்ணிவி சும்பிடைப்
பூவ மன்றொளிர் கற்ப கப்பொழி
லூடு பூத்தம டுக்கிளைத்
தோவ ருந்தனி யுற்ப லக்கொடி
யொய்யெ னக்கொணர் கென்றனன். (௧௪)

சிலத ரோடினர் பொள்ளெ னக்கொடு
சென்று தாழ்ந்தனர் வைகலும்
மலர்தல் வேட்டம னத்தி னன்வளர்
கோயில் சூழ்தல்வ லித்தொளி
அலர்வி மானமு றுத்து மாறவ
மாற்று கின்றசு னைத்தலை
உலவை யொன்றுடை யான்க ழற்றுணை
யோங்கு பூசையு ஞற்றினன். (௧௫)

ஆத லானவண் வைகி யாருயி
ரல்லன் முற்றும றுத்துயர்
நீதி வாழ்வரு ளேந்தல் செங்கழு
நீர்வி நாயக னயினன்
தீது தீரிய வன்ன வன்கழல்
சென்று தாழ்ந்தவ லாரிபின்
நாத னலைய நன்று சூழ்ந்துந
றுஞ்சு னைக்கணி றுத்தினன். (௧௬)

காலை நண்பகன் மாலை யுங்கடி
　　கொண்ட லர்ந்தொளிர் காவியும்
சோலை நீர்நிலன் வல்லி யிற்சுரும்
　　பார்க்கு மேனைய பூக்களும்
மேலை நாட்டணி யுண்டி மற்றுமெண்
　　வேலை மாக்கடல் போனிரைத்
தாலை யம்புகுந் தாக மத்துள
　　வாறு பூசனை யாற்றினன். (௧௭)

அருச்ச னைப்பணி யின்ன வாறுமுப்
　　போதும் வைகலு மாற்றுழி
விருச்சி கத்துறு மார னுண்மிளிர்
　　பூர ணைக்கண்வி சாகனார்
திருச்சி றப்பமு னின்ற னர்திக
　　ழன்பு பொங்க வலாரிமென்
தருச்சி றந்தபன் மாம லர்த்திர
　　டாள்க டேய்த்தொழு தேத்தினன். (௧௮)

அருள்பொழி முகங்கள் போற்றி யலர்விழிக் கமலம் போற்றி
மருமலர்க் குவளை பூத்த வரையுறழ் திணிதோள் போற்றி
பெருவர மளிப்ப நீண்ட பேரெழின் மணிக்கை போற்றி
இருள்வினை துகைத்துச் சேர்ந்த விணைமலர்ப் பாதம் போற்றி.

பேரரு ளுடையா னென்னும் பெற்றிமை யுலகோர் தெள்ளக்
கூரிருண் மலத்தி னழுந்து கொட்புறு மிழுதை யேற்கும்
சீரருள் புரிந்து தேவர் சிறையினைச் சீத்துக் காத்த
ஆரருள் போற்றி யாரு யிரமுறை போற்றி போற்றி. (௨௦)

மண்ணுயி ரனைத்து மல்க மழைமுகி லானாய் போற்றி
விண்ணுயி ரனைத்து மல்க மிளிரமிழ் தானாய் போற்றி
கண்ணுருக் காணக் கண்ணுட் கனலுரு வானாய் போற்றி
எண்ணுயிர்த் தொழின்மை முற்ற விரந்தர மானாய் போற்றி.

பரிதிமெய் யுடற்றும் வெப்பின் பரிதியாங் கடவுள் போற்றி
வருமதி குளிர்க்குஞ் சீத மதிப்பெருங் கடவுள் போற்றி
செருவழல் பொடிக்குஞ் சீற்றச் செருவழற் கடவுள் போற்றி
கருதுளங் கடவு மாவி கடவுயிர்க் கடவுள் போற்றி. (உ௨)

மாமனு ரினைய கூற மருகனூர் மகிழ்ந்து வார்விற்
காமனூர் கொடுத்த வாக்கைக் கண்ணனூர் முகத்தை நோக்கித்
தூமனு மோலி வேந்த சொல்லுதி விழைவை யென்ன
ஏமனூர்ப் பூழ்த்த கேழ லெயிற்றினர்க் கிறைஞ்சிக் கூறும். ()

தானவர் கவர்ந்த செல்வஞ் சகலமு மீட்டா யன்றே
ஈனவை பெறுதல் வெஃகி யெம்பிரான் றிருமுன் போந்தேன்
வானவர் தாமும் போந்தா ரவரவர் வரங்கள் கொண்மார்
கானவிர் கடப்ப மாலைக் கடவுளென் றிதுவுஞ் சொற்றான். ()

துறக்கம்வாழ் குவளை வாங்கிச் சுனையிடைக் கால மூன்றும்
முறுக்கவிழ் மலர்கண் மூன்று முகிழ்க்குமா றிருமித் திட்டேன்
நறைக்கடம் பணிந்தோய் நாளு நயந்தணிந் துலக மெல்லாம்
இறக்குமந் நாளு மன்னி யிருக்கவக் கழுநீர் மாதோ. (உ௫)

இம்மல ரணியுங் காறு மேழையேற் கிடரின் றாக
செம்மனீ காட்சி தந்த திருத்தகு மிந்த நாளில் [கொண்டோர்
பைம்மலர்ச் சுனைநீர் தோய்ந்தோர் பருகினோர் தெளித்துக்
வெம்மைவல் வினைக ளோப்பி விளங்குநின் னுலகஞ் சேர்க. ()

இந்திரன் வேட்ட வெல்லா மெம்பிரா னருளிச் செய்தான்
அந்தரர் தாமுந் தத்த மாக்கமுற் றருளப் பெற்றார்
பைந்தருக் காம தேனுப் பகர்நிதி மணிக ளாய்தம்
சந்தமார் சுதன்ம மென்னுஞ் சபைமுத லனைத்தும் பெற்றான்.

பன்முறை தாழ்ந்து போற்றிப் பண்ணவர் கணங்கள் சூழ
வின்மலி கோயி னீங்கி விசும்புபுக் கமர்ந்தா னந்தக்
கொன்மணி வயிர வேலான் கொண்டுசென் றூட்டிச் சாத்தும்
தென்மணி நீரும் பூவுந் திருமுடி யென்று மேறும். (உ௮)

இந்திர தீர்த்த மென்ன விருஞ்சுனை நாம மெய்திற்
றிந்திர நகர மென்று மியம்பிடப் படுமால் வேதன்
இந்திரன் வாழ்வு மேனை யிமையவர் வாழ்வு மெல்லாம்
இந்திர ஞால மாக வின்னருள் விளக்கு மவ்வூர். (௨௯)

தேவர்க ளுலகுக் கெல்லாஞ் செல்வங்க ளாக்கி நின்ற
காவியங் கிரிபோல் யார்க்குங் கண்ணிய தளிப்ப துண்டோ
ஓவிய பொறியி னீரே யும்பர்கோன் பேறு சொற்றும்
பாவிய புகழ்சா ணுகம் பணிந்துறு பேறு சொல்வாம். (௩௦)

இந்திரனருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — ௨௦௭௫.

---

## நாகமருள்பெறு படலம்

---

நாக நாடிய நல்லரு ணல்கிய
ஏக வானைத் தணிகை யிறைவனைப்
பாக மின்றெனி னும்பணி கின்றவர்
தேக மன்றுகொ றேகமென் றுவதே. (௧)

முன்னொரு காலையின் முரண்மணி யிமைக்கு
முடிகெழு சுரர்களு மவுணர்க டிரளும்
துன்னிய சமரிடை யிருதிறத் தவருந்
தொலைந்தவர் தொகைபல வாதலை நோக்கி
இன்னுயி ரிறப்பதன் றுயமர் புரிய
வெண்ணின ரதுபெற மாயனை யடுத்தார்
அன்னவன் கடல்கடைந் தமுதெடுத் தயின்று
லனுங்கல மதுபுரி வாமென வலித்தான். (௨)

நிரைகதிர்க் குளிர்மதி தறியென நிறுவி
நெடுகிய மந்தர மத்தென நாட்டி
உரைதகு வாசுகி கயிறெனப் பூட்டி
யொளிர்மணிப் பாற்கடல் கொறுகொறு வென்ன
வரைவல மிடந்திரி தரக்கர நீட்டி
வாங்கினர் கடைந்தனர் வல்விடம் பிறந்த
திரையெனப் புவனங்க ளனைத்தையு மடுப்ப
வெழுந்தது விதும்பின ரிரிந்தன ரெவரும். (௩)

கயிலையை யடைந்தன ரிரந்தனர் சோதிக்
களத்தினைக் கறைக்கள மாக்கின ருய்ந்தார்
வெயிலுமிழ் மணிப்பணி யணியென மிளிரும்
வித்தக னருள்கொடு மீட்டுமக் கடலைத்
தயிரெனக் கடைந்தன ரெடுத்தன ரமிழ்தந்
தம்பதி யடைந்தனர் வாசுகி யுடலம்
பயில்வரை யுரிஞலிற் பிணர்பட வலியும்
பாறிய தாய்ந்தது படர்ந்தது தணிகை. (௪)

விண்டலர் கஞ்ச மலர்ந்து விரைக்கழு நீர்பூத்து
வண்டுளர் கின்ற குமார திருத்த மகிழ்ந்தாடிக்
கண்டவ ரஞ்ச வலங்கொடு குன்று கதழ்ந்தேறி
அண்டர்க ளுத னடித்துணை போற்றி யசைந்தன்றே. (௫)

அன்றுமுழி வெய்த வகன்றுபு றத்தய லேமேல்சார்
ஒன்றிய தண்சுனை யொன்றெதிர் கண்டவ னுற்றாடி
மன்றல்க மழ்ந்தக டம்பணி மார்பன்ம லர்ப்பாதம்
நன்றுளம் வைத்துந லத்தகு மாதவ மாற்றிற்றால். (௬)

பன்னெடு நாள்கழி வெய்தவு ளம்பரி வீற்றீர்ப்பான்
கன்னிம யிற்பெரு மானெதிர் போந்துக ருந்திண்மை
மன்னுமு டற்பிணர் நீத்துவ ழங்கம கிழ்ந்தாடிப்
பொன்னடி தாழ்ந்துபு குந்தது தன்புகழ் சால்வைப்பு. (௭)

நாகசு ஊனப்பெயர் நண்ணிய வத்தகு தீர்த்தத்தின்
மேகநி றத்தின ஞேடுப டார்ந்துவி ழுச்சேடன்
ஓகையி ளுடியு ழுந்துத வம்பல்வ ளங்கொண்டங்
கேகன தின்னரு ளாலுல கெய்தியி ருந்தானல். (அ)

திண்மைவி ழைந்தவர் நோய்நனி தீரவி ழைந்தோர்கள்
ஒண்மைவி ழைந்தவர் செல்வம்வி ழைந்தவ ரொப்பற்ற
வண்மைவி ழைந்தவர் நாகசு ஊனக்கண்ம கிழ்ந்தாடின்
அண்மையி னெய்துப வண்ணல ருட்கொரி லக்காகி. (கூ)

அராத்தவ மாற்றிவி ழைந்தன பெற்றத ழைந்தாமால்
இராப்பக லற்றசு கத்துளம் வைப்பவி ரும்போதம்
விராய்த்துயர் வீட்டிய வந்தணிர் வேலைய டைத்திட்டோன்
உராய்த்தள ருள்ளமொ ருங்கவு ழுந்தது ரைப்பாமால். (க0)

நாகமருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — உ0அரு.

---

## இராமனருள்பெறு படலம்

---

இல்லறத் திருப்பினுந் தணிகை யெம்பிரான்
நல்லருட் குரியவர் நவையி னீங்கினர்
வெல்லலர் வினைதுற வறத்தின் மேவினும்
வல்லிதன் கேள்வனை மனத்துன் ஞர்களே. (க)

அறந்தலை யெடுத்திடு மயோத்தி மாநகர்
சிறந்திடுந் தசரதச் செல்வத் தாதைவாய்ப்
பிறந்தசொற் பிழைப்பதற் கஞ்சிப் பெய்கழல்
மறந்தழை யிராமன்வார் வனத்துச் செல்லுநாள், (உ)

அரக்கர்பட் டிமைபுரிந் தஞ்சொற் சீதையைக்
கரக்கவெங் கவலையங் கடலுட் டாழ்ந்துராய்ப்
பரக்குமுந் நீர்க்கடல் பருகு மாதவன்
இருக்கைபுக் கடித்துணை யிறைஞ்சிக் கூறினன். (௩)

ஓங்கிய விந்தவெற் புறுத்தி மண்ணிடை
நீங்குபு பனிவரை நிலனை நேர்பெறத்
தாங்கிய வெந்தைசா னகியை வெளவிய
தீங்கினர் தமைத்தெறுந் திறநல் கென்றலும். (௪)

செந்தழன் முளிவனஞ் சிதைத்திட் டாலென
ஐந்தெழுத் துண்மையா லழிவி லாணவ
மைந்தினை முருக்கிய மாத வத்தினன்
கொந்தொளி மணிமுடிக் குரிசிற் கோதுவான். (௫)

பகைபிணி மண்ணைபன் மந்தி ரத்தினும்
மிகையறன் கடையுள வெருட்சி பித்திடர்
வகையெனைத் தையுமற மாற்றி யாவர்க்கும்
தகைநல மளிப்பது தவள நீறரோ. (௬)

நலிபெரும் பாவமு நாச மாக்கலான்
ஒலிகெழு பன்மமுள் ளுடற்று பீழைகள்
சலமெனக் கழுவலிற் சாரம் வேட்டவப்
பல்னுற விளங்கலிற் பசித மென்பரால். (௭)

தயங்கிய நீறுடற் றரித்தி லாரெனின்
இயங்கற மெத்துணை யியற்றி முற்றினும்
பயங்கது வுதலிலை பலவு முற்றிய
இயங்கலில் பயிர்க்குறு காவ லின்றென. (௮)

உரைத்தன வறமுனூற் றூர்க ளாயினும்
வரைத்தவவ் வறப்பயன் வருதல் காண்பரால்
தரைத்தலை நெறிமுறை தழங்க நாட்டுவோய்
புரைத்தப விதியினும் பூதி பூசுவோர். (௯)

பூதியா முறைமையும் புகலக் கேட்டியால்
கோதிலா மனுமுறைக் கொற்ற வேந்தனே
பாதியாள் சத்திபத் தினியின் வைகுற
ஏதிலா ணவந்தபு மிணையில் வேதியன். (௧0)

ஊழியே பாணிக ளுலப்பி லண்டமே
கேழிலா மண்டபங் கேழ்த்த வேதிகை
ஆழிசூழ் புவியவி யரிமெய் யாதியா
வாழிமா மெய்ம்மைவண் பசுக்க ளாவியா. (௧௧)

நெற்றியங் குண்டத்து நெடித டங்கிய
பொற்றநீள் விழியெரி புணர்த்து வேள்விசெய்
தற்றமில் வேள்வியி லவிர்வெண் பூதியைப்
பற்றற வுயிர்க்கெலாம் படிவத் தார்த்தினன். (௧௨)

விண்ணவ ருடல முழுவதும் பொடித்த
வெண்பொடி யணிந்தரு ளிறையப்
பண்ணவர் முழுது முறுப்பினு ளடங்கும்
பசுமயம் பொடித்தவெண் ணீறு
புண்ணியம் வளர்க்கு முயிர்க்கெலாந் தரிப்பப்
புகன்றன னஃதிரண் டாகும்
எண்ணுவை திகநீ றிலகிய சைவ
நீறென விரண்டையுந் தெரிப்பாம். (௧௩)

உலகருக் குரிய மறைவழி வேட்கு
மோங்கிய விரசையிற் பொடித்த
இலகுவெண் ணீறு வைதிக பூதி
யின்னது புத்தியே யளிக்கும்
மலமறு சத்தி பதிந்தவர்க் குரித்தாய்
வயங்குமா கமவழி தீக்கை
நிலவுசெங் கனலிற் பொடித்தவெண் பூதி
நிகரிலாச் சைவவெண் ணீறு. (௧௪)

முத்தியே யன்றிப் புத்தியும் வெஃகின்
முகிழ்க்குமாற் சைவவான் பூதி
அத்தகு சைவ மூன்றதாங் கற்ப
மனுகற்ப முபகற்ப மென்ன
உத்தம மான கற்பமென் றுரைப்ப
துரைத்தவான் மயமனு வோடும்
பைத்ததா மரைமெல் லடையின்வா னேற்றுப்
பரந்தமேல் வழும்பினை நீக்கி. (௧௫)

கூட்டுமா னைந்தும் பொழிந்துறப் பிசைந்து
குவால்படத் திரட்டியோ மத்தின்
நீட்டுநா வெரியிட் டெடுத்தரித் தாளா
நிறையமைத் திருத்தியோம் புவதாம்
காட்டுலா மயத்தை யிடித்துமுன் போலக்
காண்பதா மனுகற்ப மற்ற
தோட்டெரி மேய்ந்து வனம்படு நீற்றை
யுரைத்தவா றுனுற்றுவ தாகும். (௧௬)

பெறலருங் கற்ப மாதிய தீக்கை
பெற்றமந் திரத்தொடு மணிவோர்க்
கிறுவது செல்லாப் பகைகளு மில்லை
யெய்துறுப் பொருள்களு மில்லை
உறுவலிப் பாச முழுவது முருக்கி
யுயர்கதி யண்மைய தாகும்
நெறியுளி தீக்கை பெற்றணிந் திறைவ
னீள்கழல் வணங்குதி யென்று. (௧௭)

அருடகு தீக்கை புரிந்தெழுத் தைந்து
மளித்தருந் தமிழ்முனி சொல்வான்
இருளறு மினைய பூதிதீக் கையினெய்
தாதகூத் திரர்க்கவர்க் கிழிந்தோர்க்
கொருவுவ விறைவன் றிருமடைப் பள்ளி
யொண்பொடி சூத்திரர்க் குரித்தாம்
குன்ரயழன் மேய்ந்த வனத்துவெண் ணீறு
கோடலாந் தாழ்ந்துளோ ரெவர்க்கும். (௧௮)

மந்திரங் கேட்டி யரசனே சாத
    மயத்தினை யேற்றல்வா மத்தான்
ஐந்தினை வாக்க லகோரத்தாற் பிசைத
    லழலிடை யுருட்டிவைத் திடன்மால்
சிந்துதற் புருடத் தாற்புகை பீதஞ்
    சிவப்பறு கருமையுந் தீர
இந்துநேர் பூதி யெடுத்தலீ சம்பெய்
    திருத்தல்கா யத்திரி மனுவால். (௧௯)

சிரநுதன் மருமு முந்திநான் கினுநேர்
    திகழ்ந்தவீ சானமுன் னான்கின்
இருமுழந் தாள்வண் புயமுழங் கைமுன்
    கையெழிற் களம்வெரிங் காதென்
றுரைசெய்பன் னிரண்டுஞ் சத்தியோ சாதத்
    துறுத்தரந் தோணுத லொன்கும்
விரலிரு மூன்ற னளவிட லேனை
    யிடத்தொரு விரலள விடலே. (௨0)

வத்திரம் புலிமான் றோலிவற் றென்றுன்
    வட்டம்வாய் கொளவிர லிருநான்
கத்தகு மளவை யிரட்டிநே
    ரகல முயரமு மாகநன் கமைத்த
பைத்திகழ் பொடியைத் தற்சனி கனிட்டை
    பாற்றுமூன் றினுஞ்சிந்தா தள்ளி
மெய்த்தலை யணிதல் கனிட்டையங் குட்டம்
    விடுத்தவற் றிடுவது மாகும். (௨௧)

ஒருவிர லொருகை யானிட னுத்தூ
    ளனஞ்செயா தணிதறெய் வந்தீக்
குருபரன் வித்தை யெதிர்வழி வழுக்கள்
    கூறிட நீசர்முன் னணிதல்
தரைமுக நோக்கி யணிதனின் றணித
    றருநச்பா லொருகையி னேற்றல்
எரிநர குய்க்கு மிவைவிடல் சந்தி
    யில்லுழி நீரின்றிப் பூசல். (௨௨)

இனையவெண் பூதி தரித்தலோ டீச
  னின்னருள் புரிந்திடுங் கண்டி
புனைமதி முகமொன் றுதியீ ரைந்தின்
  மேலும்பூண் டுள்ளன கோவை
தனின்முக மொத்த வல்லன வாகா
  தயங்கிய சிரஞ்சிரஞ் செறிய
இனியநா ணிடைக்கோத் திடையிடை முடிந்திட்
  டேற்றுநா யகமணி மேலான். (உரு)

சிரங்கர மணிவ சிரங்கரங் கொண்ட
  திகழ்மிடற் றணிவவெண் ணான்கால்
உரஞ்செறி மாலை நாபியி னளவா
  முரமள வாதலு முரித்தே
வரஞ்செறி மனுக்க ளலகிடு மாலை
  மணிகனூற் றெட்டதன் பாதி
தரம்படு மதனிற் பாதியு மாகுஞ்
  சமைக்கமூன் றளவையு மொன்றால். (உச)

சத்தியோ சாதத் தாட்டிவா மத்தாற்
  றகமதித் தகோரத்தாற் றாபம்
பத்தியி னளித்துப் பகர்புரு டத்தாற்
  பையவா டையிற்புன லுலர்த்திச்
சுத்தவீ சான மனுமுத லாகச்
  சொல்லிய பிரமமோ ரைந்தும்
வைத்திடு மணியொவ் வொன்றற்கு நூறு
  வரிசையி னுரைத்தெடுத் தணிக. (உரு)

பரசிவன் பூசை புரையநா யகத்துப்
  பண்பொடு பூசனை புரிந்து
பரர்விழிப் படாமை மணியொலி யெழாமைப்
  பரனுரு வுளத்திடை யிருத்திப்
பரவுமந் திரங்க ளுயக மணிமுன்
  பற்றியெண் ணுகமறந் தேனும்
பரநனி வழங்கு நாயகங் கீழாப்
  பயிலுற வணியல்பார்த் திவனே. (உசு)

கடல்பருகு மருந்தவத்தான் கருணைசுரந் தினிதளித்த
கடலமிழ்த நிகரருளைக் கைக்கொண்டு விடைபெற்றுக்
கடகமள விலகிரைத்த காமரயோத் திக்கிறைவன்
கடவுண்மணி நீறணிந்து கருதுமனு வலகிட்டான். (உஎ

நித்தனுமைந் தெழுத்திலக்க நிரம்பவல கிடமுக்கண்
அத்தனெதி ரெழுந்தருளி யவாவியதென் னுரையென்னப்
பொத்தியவன் புளத்தோடும் பூங்கமலத் தாள்வணங்கி
நித்தியநின் மலவனக நிரிகவெனத் துதித்துரைப்பான். (உஅ)

சானகியைக் கவர்ந்தரக்கன் றடங்கடல்சூ ழிலங்கையினான்
ஆனவனைச் சேனையொடு மடர்த்தவளைக் கொடுநாயேன்
ஈனடைய வரமருள்வ தென்றுமறு வனுந்தாழ்ந்தான்
ஊனருள வெழுந்தருளு முமைபாகர் முறுவலித்து. (உகூ)

பக்குவமில் லார்க்குண்மைப் பரஞான மெவ்வுருவால்
எக்கருணை யாலியைய விளைத்தாலுங் கொள்ளாமை
மைக்கடல்சூ ழுலகமெலா மதித்தறியத் தெரிப்பார்போல்
அக்கணொரு திருவிளையாட் டானருளிச் செய்கின்றார். (௩O)

மாரவேள் கணையலைத்தோர் வழியறியா ரதுபோல
வீரமார் தருமானம் விழுங்கப்பட் டுஞற்றறனுக்
கேனும்வான் பயனிரவா திழிந்தபய னிரந்தனையால்
கோலமார் சிவஞானங் கொடுக்கின்று மதனாலே. (௩க)

உலகமெலாந் தொழிற்படுத்து மோங்கொளியா கியவெவமையும்
உலகமெலா மவாவுயிரை யுற்றொழியா மலவிருளும்
உலகமெலா மதுவதுவா யுற்றறிந்து மலப்பிணியால்
உலகிறந்த வெமையறியா வுயிரெனுநின் னையுமறியாய். (௩உ)

தேயமிடம் பொருள்போலத் தீராமை யுடங்கியைந்த
மாயவுடல் வேறுமேன் மங்கையுயிர்க் கெவனுவள்
போயபவந் தொறுமீட்டும் புகழிகழீண் டுற்றனவோ
காயமொழிந் திக்குடிக்குக் கரிசுறினீக் குவைகொல்லோ. (௩௩)

சிற்றிலிழைத் தாடுநர்பாற் செறிந்தாடும் விளையாட்டுப்
பொற்றமனை யறம்புரிகாற் புந்திசெயி னகைதரல்போல்
அற்றமிலா வில்லறமென் றுதரிக்கப் படுவதருள்
பற்றுமிகும் போதுன்னிற் பழுதெனத்தோற் றுவதன்றே. ()

மங்கையுரை யானுந்தை மரணமடைந் ததுமீண்டை
மங்கையொழி வாலொருநீ வருந்துவதுங் காட்சியவே
மங்கையராற் றுயர்பெரிதும் வளருமெனு முரைச்சான்று
மங்கையரை வேறெடுத்து வகுத்துரைக்க வேண்டுமோ. (௩௫)

வழும்புதடி குடரென்பு வார்நரம்பு மேதை நெய்த்தோர்
தழும்புழுக்கண் மூளைமயிர் சருமமா திகள்குழும் [காட்டாய்
கொழும்பொதியைப் பகுத்திடுங்காற் கோற்றொடியா ளெவள்
விழும்பிணத்தெவ் வுறுப்பில்லை விழையாமை விடல்கிளவாய். ()

என்றுமோ ரியல்பினதா யென்றுமா னந்தமாய்
என்றுமா ருயிர்க்கிரங்கி யிடர்முழுதுந் துமிப்பதாய்
என்றுநீங் குவதின்றி யென்றுமருந் துணையாகி
என்றுமோங் கெமதருளே யெய்திவாய்ந் திருவென்றார். (௩௭)

அருள்புரிதல் கேட்டலொடு மயோத்தியா னருண்மறுப்ப
வெருவியநெஞ் சினனுகி வீழ்ந்துபல முறைமொழிவான்
இருவினையே னென்செய்கே னிராக்கதர்செய் கையுஞ்சீதை
உருவுநினை தொறும்வெகுளி காமமுமோங் குவவென்றான். ()

பெருங்கருணை யொடுநகைத்துப் பேதுறே லெனத்தேற்றி
அருங்கதவீ ரமும்படையு மளித்தருளி யிடந்துடியின்
மருங்குலுமை யாட்கருளும் வானவர்நா யகர்மறைய
ஒருங்குபகை துமித்தான்போன் றுவகையனைப் பணிந்தனனன்

இலங்கைபுகுந் தரக்கருயி ரிருவிசும்பிற் குடியேற்றி
அலங்கனறுங் குழன்மாதோ டணிபிரா மேச்சுரத்து
நலங்கிளருஞ் சிவலிங்க நயந்திருத்திப் பூசித்துச்
சலங்கெழுபா தகத்தொடக்குத் தணந்தமரு மந்நாளில். (சo)

முந்திறைவ னருண்ஞான மோகத்தா லிழப்புண்ட
வந்தவினை நினைந்துநினைந் தயர்கின்று னதுபெறுவான்
சிந்தையிற்சே வடிநினைந்து தியானித்தா னுங்கெதிரே
வந்தருளிக் கூத்தனுர் மற்றவனுக் கருள்புரிவார். (சுக)

உள்ளமடங் கியதில்லை யுள்ளமடங் குறினல்லால்
தெள்ளரிய சிவஞானஞ் சிவனுது செருத்தணியை
நள்ளுவையே லுளமடங்கு ஞானமுமெய் துவையென்றூர்
துள்ளுமுள மகிழ்சிறப்பத் துதித்திறைஞ்சி விடைகொண்டான்.

நெடிபடுகா னமும்பதியு நெடுநெறியா னீந்திப்போய்
வடியயில்வேல் வலத்துயர்த்த வள்ளல்செருத் தணியண்மிக்
கடிகெழுதீர்த் தம்படிந்து காமர்வரை வலஞ்செய்து [தான்.
முடியிவர்ந்து பணிந்துள்ளான் முறையாற்புக் கெனத்தொழு

அன்றொழிய வழிநாளா லலைநதிபுக் கினிதாடித்
தொன்றிறைவற் கருள்புரிந்த சூழலிருந் தனனேற்றூன்
மன்றல்கமழ் கடம்பணிந்த வரைமார்ப னெதிர்தோன்றி
நன்றருளுஞ் சிவஞான நயந்தேற்றுப் பதிபுக்கான். (சுச)

எற்றுபுன லயோத்திநக ரிராமனருள் பெற்றபடி
பற்றறுத்த வுயர்தவத்தீர் பகர்ந்தனமா லினிச்செவ்வேள்
கற்றைநறுஞ் சுருட்கூந்தற் கானவர்தங் குலவிளக்கை [வாம்.
முற்றிமறை யொழுக்கனைத்து முடித்துடன்போந் ததுமொழி

இராமனருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — உகங௦.

# களவுப் படலம்

செந்திரு மணந்த கேள்வ னுயிர்த்தரு டெய்வக் கற்பின்
சுந்தரி யமுத வல்லி யென்பவர் சுடர்வேற் செங்கை
மைந்தனை மணப்ப வுன்னி மலர்விரி சரவ ணத்து
முந்தருந் தவங்க ளாற்ற முருகனுங் கண்மிக் கூறும். (க)

இந்திரன் பாங்க ரண்மி யிருமதி யமுத வல்லி
சுந்திரி புவியின் மாட்டுத் துகளறு முனிபாற் றோன்றி
வெந்திறல் வேடர் சார்பில் விளங்குதி கருத்து முற்றப்
பிந்துற வரைதுஞ் சென்மி னென்றனன் பெயர்ந்து போந்தான்.

அன்னண மமுத வல்லி யமரர்கோன் பாங்க ரண்மி
மன்னுநாற் கோட்டு வேழம் வளர்த்திடத் தெய்வ யானை
என்னுமப் பெயரின் வைகி யெம்பிரான் பரங்குன் றத்து
முன்னினன் வதுவை யாற்றத் தவப்பயன் முற்றி நின்றாள். ()

துளங்கெரி வளர்த்து மூழ்கிச் சுந்தரி வடிவு நீக்கி
விளங்குசுக் குமதே கத்தின் மேதகு தொண்டை நாட்டில்
வளங்கொண்மேற் பாடி மாட்டு வளர்வரைச் சார லண்மி
உளங்கொளு மன்பு பொங்க வுயர்தவ மாற்று நின்றாள். (ச)

ஆவயின் முன்பே வைகி யருந்தவ மாற்று நின்றோன்
தேவரும் வியக்குஞ் சீர்த்திச் சிவமுனி யென்பா னுங்கோர்
தாவுமான் பிணையொன் றண்மத் தகையெழி னோக்கிக் கண்ணால்
மேவருங் கலவி துய்த்தா னத்தகு வேலை தன்னில். (ரு)

கருவென வகட்டி னுற்றாள் காமரு பிணைமான் சென்று
பெருகிய வருத்தந் துன்னப் பீளுரு மகவை வேடர்
உருகெழு வள்ளி கெண்டி யுற்றிடும் பயம்பி லுய்த்து
மருமலி கானம் புக்கு மறைந்தது வேடர் கோமான். (சு)

அம்மைநற் றவங்கள் சால வாற்றினேன் மகப்பே றின்றி
இம்மையின் வறங்கூர்ந் துள்ளா னேந்திழை மனைவி யோடும்
கைம்மலை யுலம்புஞ் சார லேகுவான் கண்டு நண்ணி
விம்மிமிக் கழுத கொம்பை விம்மிதத் தொடுங்கைக் கொண்டு.

வருந்திய வருத்தந் தீர வரையுறை கடவு ணம்பால்
திருந்தழ கெறிக்கு மிந்தச் செல்வியைத் தந்த தென்னா
முருந்துறழ் முறுவ னல்லாண் முகப்புறக் கொடுத்திற் புக்கு
விருந்துக ளோம்பி வள்ளி யெனப்பெயர் விதித்தா னன்றே. ()

நித்தலுங் கடவுட் போற்றி நிரைந்தனர் குரவை யாடி
நித்தலு முருவே றாக நீர்மையின் வளர்க்க லுற்றார்
தத்தையுங் கிடந்தி ருந்து தவழ்ந்தெழுந் தொதுங்கிச் சிற்றில்
முத்தினி லிழைத்து வண்ட லாட்டினின் முதிய ளானாள். (௬)

தனைநிகர் மாதர் பாங்கர்ச் சார்தர வேகி நீலச்
சுனைகுடைந் தாடிச் சோலைத் தூமலர் குற்றுப் பந்தும்
புனைமணிக் கழங்கு மற்று மூசலும் புணர்ந்து நோக்கித்
தினையினிக் காத்தி யென்னத் தீம்புனங் காவல் கொண்டாள்.

இதண்மிசை யிவர்ந்து தட்டை யெறிநெடுங் கவணை கொண்டு
புதன்மறைந் தடுக்குங் கிள்ளை பொறிமயில் புறவு மற்றும்
கதிர்படு புனத்தி னீங்கக் கருதியா லோல மென்னச்
சுதைநிகர் மொழியா ளோப்பிச் சூழ்ந்தன ளிருக்குங் காலை. ()

மகதியாழ் முனிவன் வேற்கை வள்ளலை வழிபா டாற்றத்
தகவுறுந் தணிகை யோங்கல் சார்பவன் கண்டு தாழ்ந்து
பகரரு வளமை சான்ற பாவையை மணக்கும் வண்ணம்
புகலுது மென்று வல்லே போந்தனன் றணிகை வெற்பு. (௧௨)

புரிவளை யலறி யீன்ற புதுநிலா மணியும் பொன்னும்
விரிமலர்த் தாதுங் கோட்டின் வீசுவெண் டரங்க மெற்றும்
கரிசறு குமார தீர்த்தங் காதலி னாடிப் போந்து
தரியலர்க் கடந்த வேலான் றாட்டுணை வணக்கஞ் செய்தான். ()

தூணமுந் தளிர்கள் காலத் தொல்வரை யுருகா நிற்பப்
பாணறி கின்ன ரங்கள் பாடுவீழ்ந் தவச மாக
வீணைகைக் கொண்டெ டூாலின் விளையமிழ் துகுத்துப் பாடிக்
காணிய விறைவ வென்று காரிகை திறத்தைக் கூறும். (கச)

அண்ட முற்று மரும்பய னல்குசீர்
கொண்ட விந்தக் குலவரை மேற்றிசை
அண்டர் போற்ற வணிமையி னுள்ளது
மண்டு பேரொளி வாய்ந்தமேற் பாடியே. (கரு)

அப்ப திக்கொரு சாரட லாழியான்
ஒப்பி றன்மக ளோடுநீ யாட்டயர்
வைப்பெ னக்கிரி யாய்வளர்ந் தல்கியாங்
கொப்பெ ழிற்கிரி யொன்றிருக் கின்றதே. (கசு)

ஓங்கன் மாயனு டுத்தபொன் னுடையொத்
தாங்கு மூடிக மங்ககழ் செம்பொனும்
பாங்க ரூழ்த்துகு பன்மலர்த் தாதுவும்
நீங்க லின்றி நிரந்ததவ் வான்வரை. (கஎ)

ஐய நீகணி யாவது தேர்ந்தென
உய்தி பெற்றன மென்றுறு மோகையால்
மெய்ம லிந்தன போன்றன வேங்கைகள்
கொய்ம லர்த்திரள் கொண்டுத ழைத்தன. (கஅ)

நின்னு ளங்களி கொள்ளூ நெடுமயில்
தன்னி னங்கட ளிப்பது செய்குவான்
பொன்ன கர்க்கிறை யேவப்பு ணர்ந்தென
மின்னு குத்துமு ழங்குவ மேகமே. (ககூ)

ஒழுகு வெள்ளரு வித்திர ளோதையும்
விழும மார்வெறி யாட்டய ரோதையும்
தழுவு மவ்வரை தையனற் செவ்வியள்
குழும வாவெனக் கூவுவ தொத்ததே. (உO)

ஏந்த னின்வர வேற்றுநின் சென்னியில்
வேய்ந்து கொள்ள விழைந்தன போன்மெனக்
காந்த ளுஞ்சுனைக் காவியு மௌவலும்
பூந்தண் பிண்டியும் போதுக டாங்கின. (உக)

கள்ளு றைத்துக் கடிமலர்த் தாதுறீஇ
வள்ளி தழ்த்திரள் வாலொளி நீளறை
கொள்ள வுய்த்துக் குமரநீ யாட்டயர்
பள்ளி யெங்கும் படுப்பன பைம்பொழில். (உஉ)

மயின டாவுநின் வண்மைம கிழ்ந்தென
மயில்க ளாடுவ மாங்குயி லுந்தம
தியலு ருக்கொ ளிறையுமவ் வூர்தியாய்ப்
பயில்வு தேர்ந்தெனப் பாடெழூந் தார்ப்பன. (உங)

ஆடு வேல்வல னேந்தி யடுத்திடும்
வாடு றாமது நீபம லர்த்தொடை
கூடு வாங்குடை வாமெனு மோகையால்
ஓடு மீளு முலாவும ளிக்குலம். (உச)

யானை மாமுகத் தேந்தற் கிளையவன்
யானை யைக்கடி தொட்டவ னீங்கொரு
மானு யிர்த்த மகட்குறு மென்றுபன்
மானி னங்களு மோகைம லிந்தன. (உரு)

நம்மி னத்தொரு மாவைந லிந்தவன்
நம்மி டத்தினு மன்புந டாத்துமச்
செம்மை நாம்பெறுஞ் செவ்விய தாமெனக்
கொம்மை மென்றளிர் கூர்ந்தன கொக்கினம். (உசு)

மதுவை மாட்டிய வானவ னேமியைப்
புதல்வி யைப்புறந் தந்திடத் தூண்டலும்
கதுவி யெண்ணிலு ருக்கொடு காத்தெனத்
ததைவ தேத்தடை தண்வரைப் பாலெலாம். (உஎ)

நரந்த மாதுளை நாளிகே ரம்முருக்
கரம்பை யாசினி யாம்பிரந் தீங்கனி
நிரந்த ரித்தன நின்னெதிர் காணிய
வரந்த ழைத்த வரைகொடு நின்றென. (உஅ)

கருது தம்பயன் கைக்கொளுங் காலமென்
றிருது வேற்றுமை யின்றியொ ருங்கவண்
மருவு கின்றன போன்றவ யின்றொறும்
பெருகு மெவ்வள னும்பிணை கின்றன. (உகூ)

அங்க ணீமுன் னருளிய வாறுபோய்
நங்கை சுந்தரி நற்றவ வேடர்பால்
தங்கி யேனலந் தாழ்குரல் காத்துறும்
எங்கு மற்றவ ளுக்கிணை யில்லையே. (௩0)

நினக்கு நேரழ குள்ளவ ரில்லவள்
தனக்கு நேரழ குள்ளவர் தாமில்லை
மனக்கு வேட்டபொ ழுதவை வாய்த்தலின்
இனிக்க முற்றுவ தெங்கணு மில்லையே. (௩க)

புருவம்வார் செவிகண் கவுள்பணைத் தோள்கை
புணர்முலை கவான்முத லுறுப்பும்
பொருவுமொன் றிணையொன் றலதுவே றெவ்வா
பூங்குழல் வாணுத னாசி
திருமுகங் கனிவாய் களம்வயி றுந்தி
செறிந்தகா ழல்குலோவ் வொன்றே
மருவலி னவற்றுக் கொப்பன வில்லை
யாயினு மொருமுறை வகுப்பாம். (௩உ)

உலகின்முச் சுடர்மு னுடையிரு ளொதுக்கி
யுமைவிழி புதைத்தஞான் றிறுத்த
குலவிருட் குழாத்தைப் பணித்திறை நாட்டக்
கொழுஞ்சுடர் மூன்றினுந் தவாத

பலர்புகழ் திமிர மெனுங்குழல் வதனப்
பாங்கரிற் றதைதலின் முழுத்த
நிலவுமா தவஞ்செய் துமிழ்ந்ததன் னகத்து
நீனிறக் கறையெனப் படுமால். (ருரு)

பிடிநெடு நாசி பிறைமுகத் திரும்பு
பெருகொளி வாணுதல் புண்டோய்
வடிநுதி செந்தா ளட்டுவார் கூந்தல்
வகிர்ந்தகிற் ருகமூன் றுறுப்பும்
கடிமலர்ப் பகழிக் கழைச்சிலைத் தடக்கைக்
காமவேள் காரிரு ளோதித்
துடியடிக் கயவாய் முறஞ்செவி வேழந்
தூண்டுகைத் தோட்டிபோன் றனவே. (ருச)

மாப்பெருஞ் சூரை வென்றிடு நின்னை
வணக்கவார் செவியளிக் குவளை
ஏப்புழை படுத்த திக்குழ ணுணி
விருபெரும் புருவவில் சிலையில்
கோப்பமை யாத கூரெதி ராத
கொழுங்களி விழிக்கணை யமைத்துத்
தீப்படு மதவேள் கவிகைநின் றணைய
திருவெழி லுடையது முகமே. (ருரு)

வார்ந்தபைங் கூந்தற் சைவலஞ் செவிமென்
வள்ளைகட் குவளைவாய்க் குமுதம்
ஈர்ந்துகட் கமலந் தழைக்குநீர் நிலையி
னிருந்தன கவுட்டுணை பலவீ
ஆர்ந்தொரு கோளி காஞ்சியி னின்றுங்
கைதுவே றினமலர் பலவும்
சார்ந்தலர் கமுகா யமிழ்தமும் பொதிந்து
தழைந்தது மங்கல மிடறு. (ருசா)

கந்தரக் கமுகென் றுரைத்திடும் புல்லுக்
கடிமலர் பலமலர்ந் ததுகண்
டுந்தெழில் வேயென் றுரைத்தகு புல்லு
மொளிர்ந்தசெங் குடங்கைமென் கமலம்

சுந்தர விரலுற் பலமுகிழ் காட்டிச்
சுரர்துதி பாடலங் காஞ்சி
அந்தினின் றதனை நிகர்த்தின மாமென்
றடுத்திருந் தனபொரும் பணைத்தோள். (௩௭)

கொடிற்றுநீர் நிலைகண் டடுத்தன வுரத்துக்
குருகுகுன் றுதிய வுருவாப்
பொடித்திட லானுஞ் சூரனு நேமிப்
புள்ளுருப் பலகொள லானும்
படித்தலை யிரண்டு மொக்குநீள் சிறைய
பகைக்குரு குருத்தப வுருவே
றெடுத்தழிந் ததுநிற் புணர்குரு கிருந்தாங்
கெனைத்துமாய் மன்னிநிற் பனவே. (௩௮)

கருங்குழன் மேக மீழவண் டொடையற்
கணத்தினன் மின்னியஞ் சிறைய
சுரும்பினுற் சிலம்பி மலர்மதுத் தாரை
சொரிதலி னுயங்குபு சாய்ந்த
மருங்குலஞ் சீயஞ் சரண்சர ணென்று
மருவவஞ் சலையென நெடுமால்
ஒருங்கிரு குன்றம் பெயர்த்துநின் றதுபோ
லொழுகிய துரோமமா வல்லி. (௩௯)

கூந்தல்கா னெனக்கண் ணுழைக்குறி காட்டக்
கொங்கைவெற் பெனப்புயம் வேயின்
வாய்ந்தன வுந்தி வலம்புரி காட்டு
மணிக்கட லெனப்புடை பணிந்த
ஏந்தக லல்குன் மயிரொழுக் கெனுமா
லினிதுகண் படுக்குநெட் டரவி
போந்தடுத் தெழினி யுள்ளுறப் பைத்துப்
பொற்பவீற் றிருந்தது தகையும். (௪0)

ஆர்ந்தபன் மணிக்காழ் விரிசிகை பருமம்
மலங்கொளிக் கலாபமே கலைமின்
கூர்ந்தொளி துளும்புங் காஞ்சியென் றுரைக்குங்
கோலமா ரெழினிகால் வாங்கும்

சேர்ந்துவார்ந் தொழுகிப் போந்தொறுஞ் சிறுகிச்
செறிசுடர்ப் பூணிடைக் கொண்டேர்
சார்ந்தபொற் றாணம் போன்றன மகர
வாயணி தயங்கிய குறங்கு. (சக)

மதர்விழி நீலந் திருமுகக் கமலம்
வயங்கிய மூரலந் தளவம்
பிதிரொளி யுருவத் தியற்றளிர்ச் செயலை
பெருவனப் பங்கைமாந் தளிரென்
றதிர்திறற் காம வாளிகள் வாங்கு
மாவநா ழிகைபொருஞ் சிலம்பு
கதிருகு பொன்னங் கிண்கிணி பாத
சாலமுங் கவைஇய கணைக்கால். (சஉ)

திருமுகங் கமல மிணைவிழி கமலஞ்
செய்யவாய் கமலநித் திலந்தாழ்
வருமுலை கமலந் துணைக்கரங் கமலம்
வலம்புரி யுந்திபொற் கமலம்
பெருகிய வல்குன் மணித்தடங் கமலம்
பிடிநடைத் தாள்களுங் கமலம்
உருவவட் கவ்வா றுதலி னன்றே
யுயர்ந்தது பூவினுட் கமலம். (சஙு)

படைவிழி நேர்ந்த நீலமு முகநேர்
பதுமமு மூரனேர் தளவும்
புடையொளி கஞற்று மேனிநே ரசோகும்
பொன்னடித் துணைபொரு மாவும்
தடைஇய பணைத்தோள் புரைகழைக் கரும்புந்
தடக்கையிற் பிடித்தலி னன்றே
மிடையுமூ வுலகி னுயிர்க்கெலாங் காமம்
விளைப்பவ னுயினன் மதவேள். (சச)

அவணடை வல்லா தாயினு மெண்க
ணன்னமு மடிவிழிக் கூந்தல்
திவளுரு வல்லா வாயினு நேமிச்
செங்கைய கமடமீன் புயலும்

இவளிடை யரிய தவத்தினுற் கற்ற
லெய்துமே யெனமதித் ததனுல்
உவமையில் களியும் பெருமையுந் தழீஇய
வெனிலினி யுரைக்குமா றெவனே. (சரு)

தணப்புறி ஞெருகாற் பெரிதுநீ யாற்றுந்
தன்மையி னிருந்தன போலும்
கணப்பிர மரஞ்சூழ் கடிமலர்க் கூந்தற்
காரிகை விழியென வொருகை
மணப்புறும் வேலு மவளிளஞ் சாயன்
மருட்டிய வூர்திமா மயிலும்
குணப்பெருங் கடலே யிவ்விலை யாயிற்
கூடுவ தருங்குரைத் தகற்சி. (சசு)

அத்தகு மயிலைக் கண்டமாத் திரையே
யவள்பெருங் கவினுளந் துரப்ப
வித்தக விரைய நீமணம் புணர
விளம்புவா னெழுந்தவென் விழைவால்
முத்திற வுயிர்க்கு முயிரென நின்ற
முதன்மையை யென்பது மயர்த்திங்
கித்திறங் கிளந்தே னனைத்துநீ யறிதி
யெம்பிரா னெழுந்தரு ளென்றுன். (சஎ)

கேட்டலு மகிழ்ந்திங் கிருவென முனியைக்
கிழமையி னிருத்திமுன் புறத்தின்
ஈட்டிரும் பொருளின் றுறைகளுங் கற்பி
னியற்றுமக் கடியுமண் வழங்கக்
காட்டிய குமரன் களவெனு மின்பக்
கடற்றுறை வழக்கமு முலகில்
நாட்டிய நுதலுங் கருத்தொடுந் தமியே
நண்ணினன் வள்ளிமால் விலங்கல். (சஅ)

மயில்பூ வைகள்கிள் ளைபுரு மடமான்
அயலே கவகற் றியகன் புனவாய்ப்
பயில்வா ளவைதாம் படரா நடுவான்
இயலா தவனெய் தியசெவ் வியினில். (சகூ)

வெள்ளம் பலவென் னுமினார் குழுவும்
உள்ளம் புறமென் னவொருங் கியிடை
விள்ளும் பரிசில் விழைபாங் கியுஞ்சூழ்
கொள்ளும் படிகூர் பொழினண் ணினளால். (ருo)

குயிலோ டெதிர்கூ வுதுமென் றுமணி
மயிலோ டுமொரு டுதுமென் றும்வரைப்
பயினீர்ச் சுனைபாய் குதுமென் றுநெடும்
கயிறம் மனைகைக் கொளுவா மெனவும். (ருக)

ஒளித்தார் தமைநே டியுமுப் புறனில்
விளித்தார் தமைநே டியும்வெற் பெதிர்கூஉய்க்
களித்தார் தருகா தன்மதித் துமிவ்வா
றளித்தேங் குழலா ரகல்வுற் றனரே. (ருஉ)

பழகுற் றதளிர்ப் பொழிலும் பலநாள்
விழைவுற் றதவப் பயனும் விரவ
அழகுக் கழகாக் குமணங் கனையாள்
சுழல்வண் டலர்கொய் துசுலா வுறுவாள். (ருங)

மந்தா ரமணங் கமழ்கு ழலிடை
நந்தா வொளிநா றுபளிக் கறையில்
முந்தா டியதோ கையின்மூ ரிநடத்
தந்தா மரைவாள் விழியாக் கினளே. (ருச)

நின்ற மாதுமுன் றணிகையங் குன்றநீத் தடுத்த
வென்றி வேலவன் விளங்குதன் னுருவினைக் கரந்து
குன்ற வாணர்தங் குலத்திறை யெனவுருக் கொண்டு
வன்றி யாதிவேட் டையிற்செல்வா னெனமருங் கடுத்தான். ()

மாசை வண்கயிற் றிறுக்கிய குஞ்சியும் வார்வில்
தேசு லாமலர்ச் செங்கையுந் திருவரைக் கச்சும்
ஓசை யங்கழற் றுளுமற் றுருவுமா டவர்க்கும்
ஆசை மூட்டுமவ் வேட்டுவ னகத்தொடு கிளப்பான். (ருசு)

## கோவைக் கலித்துறை

### காட்சி

பூந்தா மரையும்பைங் காவியு முல்லையும் பூத்தகொக்கும்
தேந்தா துகுக்கு மசோகமுந் தீங்கரும் புந்தழுவிக்
காந்தா ரழற்குண வாறோ னுருக்கொடு காழ்பகையின்
சீந்தா வெமைப்பொரு வான்சென்று பாசறை நின்றனனே. ()

### ஐயம்

பகுதியி னண்ட முடிவிற் சுடர்பர லோகங்கொல்லோ
தகுதியின் வாழுமை மாதுலகோநந் தனியுலகோ
விகுதியில் லாச்சுத்த மாயா புவனத்தொன் றோவிரையப்
புகுதியென் றுள்ளந் துரப்பநின் றீங்கொளிர் பூங்கொடிக்கே.

### துணிவு

தடையா திருப்பி னமதா ருயிர்நனி சாடுமெனப்
படையாண் மதர்விழி பல்காற் றடுப்பன போலிமைகள்
புடையா டுவவடி தோய்தலிற் பூமகள் போக்கரும்பே
றுடையா ளெனவைகு மாதலிற் பூதலத் தோரணங்கே. (ருகூ)

### வியப்பு

அங்கனும் மேனிநல் லாள்விழி போற னமக்கணியாம்
பங்கயன் மாலும் பரவுந் தணிகைப்பைம் பூஞ்சுனையில்
செங்கழு நீர்க்கு மரிதுசெவ் வேற்கு மரிதவடன்
பொங்கிளஞ் சாய னிகர்த்தல் பொறிமயிற் கும்மரிதே. (சுo)

### குறிப்பறிதல்

சிறுகிய வாடி வெயிலிற் றினகரன் றீயுமிழ்ந்தாங்
கிறுகிய வாரிளம் பூண்முலை யேந்திழை மாதுளத்து
முறுகிய காதல் சிறுகிய நோக்கின் முகிழ்த்தனள்விண்
மறுகிய வாலமுண் டோனருள் போன்ற வளம்பொழிற்கே. ()

### புணர்ச்சி துணிதல்

வறங்கூர்ந் தவன்கைத் தலத்திமை யார்கை வழுக்கிவந்து
நிறங்கூ ரமிழ்தம் படிற்பின்பு மாந்த நினைவதுண்டோ
அறங்கூர் தணிகை வரைக்குவ டேய்க்கு மலர்முலையைத்
திறங்கூர் கிளையிற் பிரித்தது நாமுன்பு செய்தவமே. (சுஉ)

காண்டன்முந் துறுத்த கூற்றுக் கைக்கிளை தலைவ னெய்தப்
பூண்டதன் காத ஞட்டிப் புகுமுகம் புரிந்த நங்கை
நாண்டக நுதல்வே ராட நகைமுகங் கரந்து வேற்றோர்
மாண்டவுட் சிதைவு காணு மரபினு னிறைஞ்சி நின்றாள். (சஅங)

மையவிர்ந் தொளிருங் கூந்தன் மணிக்குழ னெகிழ்ந்து சோரப்
பெய்யும்வண் காதி லொன்று பெயர்ந்துமண் ணிடத்த தாகக்
கையணி தொடியு மற்றுங் கழல்வன செறித்துப் பல்கால்
நையிடை நுழைந்து நில்லா நன்கலை யுடுக்கு நீராள். (சஅச)

ஓதியு நுதலு நீவி யொளிர்முலை வருட வையன்
பேதுகொ ளுளத்தி ஞேடு முகுவன பெரிதுந் தாங்கி
மாதர்வண் கலைகால் யாத்து வலிந்துபொய்த் தொடுங்கி யன்பன்
ஆதரத் தெடுத்துப் புல்லுந் தொறுமெழுங் கைய ளானுள். ()

உரைத்தபன் னிருமெய்ப் பாடு மொளிர்பசுங் கொடியி னின்ற
விரைத்தமைக் கூந்தற் செவ்வாய் வெண்ணகை மடந்தை யெய்த
இரைத்துவண் டிமிருந் தாரா னியற்கையம் புணர்ச்சி மற்றும்
தரைத்தலை வழங்கு மாறு தான்செய முன்னி னுனல். (சஅசு)

புணர்ச்சி

பொருப்பின் வளர்கொடி புல்லினி தாகலிற் பூரணனும்
விருப்பி னுடலமொற் றித்துநின் றுங்கிவ் விலங்கல்வளர்
அருப்பின் முலைப்பசுங் கொம்பொடொற் றிப்பின லாதமையா
துருப்பின்னி யெங்கு மிலாநல னெய்திய வுள்ளகமே. (சஅஎ)

தலைவியைமகிழ்தல்

எனதா ருயிர்க்கு முடலே யவளுட லீர்ங்குழலாள்
தனதா ருயிர்க்கு முடலே யெனதுடல் சார்ந்துநின்ற
எனதா ருயிர்க்கு முயிரே யவளுயி ரேந்துகொங்கை
தனதா ருயிர்க்கு முயிரே யெனது தனியுயிரே. (சஅஅ)

### தெய்வத்தை மகிழ்தல்

ஆரா வமுதனை யாளையென் னுருபி ராகிநின்ற
வாரார் முலையைவள் ளிச்சிலம் பூடு மணப்பநல்கும்
சீரார் தணிகைக் குமாரலிங் கேசன் றிருவருளின்
பேரா விரகு மறவே னுலகு பெயரினுமே. (சுசு)

### கிளவி வேட்டல்

ஆடிய கூத்தன் முடிமதி வாணுத லேங்கரத்தோன்
பீடியல் கும்பம் பெருமுலை பின்னவன் சென்னிமிலை
தோடியல் காந்த டணைக்கர மென்னிற்றுன் மாண்புமைகைக்
கூடிய கிள்ளை குறுந்தொடி யாண்மொழி கேட்பதென்னே. ()

### நயப்புரைத்து அயிர்ப்பொழித்தல்

பண்டே யுளனு முளனும் பிணைந்தவப் பண்பின்வளர்
கண்டே யனைய மொழிமான் முகத்துக் கதிர்த்தமிழ்தம்
கொண்டேர் செவிகண் முகந்து குமிழின் மறிவிழியின்
உண்டே மலர்சுனை வாய்வண்டு காண்மெய் யுரைமின்களே. ()

### பிரிவச்சம்

மணிநீர்க் கயத்து மலரிடை தட்பினும் வார்கழுத்துப்
பிணிநீர் மையிற்சற்று நீங்கினு மூழி பெயர்ந்தனைய
துணிநீர் மகன்றிலிற் றண்டாது காமத் துறைபடியும்
அணிநீர் மையினுயி ரோராங் ககல்கதி லம்புவிக்கே. (எஉ)

### பிரிவுணர்த்தல்

இமையார்க் கிறையவன் வீரட்ட காசத்தெம் மானிமயத்
துமையாள் கணவன் றணிகைப்பி ரானரு ளாலுவன்றன்
அமையாப் பதம்பெறி னுரிழப் பாரலர் வாழ்க்கைநல்லார்
தமையா ணினைத்தணப் பேன்கொ றளர்ந்தெற் றளர்க்கலையே.

### பருவரல் நினைத்தல்

தெளிவா னமிழ்த நுகர்ந்து சிறிய விடநுகர்தாங்
களிவார் குழலி மனத்தைப் பிரிசொ லழுங்கல்கண்ட
தொளிவா னவர்த முலகுஞ் சமழ்ப்பவொண் டாதுறைத்துக்
குளிர்வாய் பொதும்பர் குலாயெழில் வாய்ந்தொளிர் குன்றகத்தே.

தெய்வத்தன்மை கூறல்

இந்நாள் வரையு மெனையறிந் தாயில்லை யிந்தமணம்
முன்னு நுதலிற்று முண்டுகொ லோமுறி வாய்ந்தகொம்பர்
அன்னயவ் வாறறி வானன்று கூட்டிய வக்கடவுள்
பின்னு வெறுப்பினுந் தான்றுணி யாது பிணிப்பிக்குமே. ()

தன்னிலை யுரைத்தல்

உயிர்நீத்த தேகமு மொண்மணி நீத்த வுரகமும்வார்
மயிர்நீத்த மானுங் கலைநீத்த திங்களும் வாங்கிமுற்றாப்
பயிர்நீத்த சூலுமிற் பாற்றினென் னீர்க்குப்பின் னுவதன்றிச்
செயிர்நீத்த பொற்றொடி யாய்முந்து சேக்குந் திறனில்லையே.

விடலரிதென்றல்

எண்குணத் தானிம யச்சிலை வாங்கின னேற்றுமராத்
திண்குணத் தானரு ளாலவன் முற்றன்மை தேக்கிடினும்
பெண்குணத் தானுயர் மாதே விடலிபெட் பேனலன்பண்
வண்குணத் தாடளி பாடல றுவள்ளி மால்வரைக்கே. (எஎ)

தெளித்தல்

அறன்மறந் தல்ல புரிவா ரமர்க்கிடைந் தஞ்சுநர்பால்
மறன்மறந் தல்ல புரிவாரு மாகுவன் மாதுநின்னைப்
புறன்மறந் தல்ல புரிகுவ னேலிப் புகன்மொழியின்
திறன்மறந் தல்லற் பெயரா தமைதி திருந்திழையே. (எஅ)

இடமணித்தென்றல்

காந்தளம் போது கமழுமெம் மூர்வரைக் காவியிற்றேன்
மாந்தளி பாய்ந்துறும் மூர்வரைச் சோலை மதுநுகரும்
தேந்தளி தூவுஞ்சில் லோதிநல் லாய்சென்று மீட்சிசெவி
போந்தளி வாட்கண் மறிவது நீட்டிக்கும் பூங்குழலே. (எகூ)

அகல்பவன்வற்புறுத்து ஆயத்துய்த்தல்

என்மனம் பாச மெறிவலை யானெறி யும்வலைஞன்
நின்மன மாகக் கரந்திங்ங னேவந்து நின்றிடுவல்
பன்மல ரோடை படரனம் போலநின் பாங்கியரில்
நன்மணம் வீசு நறுநுதன் மாது நணுகுகவே. (அ௦)

கிழத்திசேறல் உளத்தோடுகிளத்தல்

எருத்தத் திரண்டு விழிபடை யாமையென் னுருயிரை
வருத்தத் திருத்த முகம்பிறக் கிட்டு மயினடக்கும்
திருத்தத்தை நாணி விளர்த்தவென் னுதய னூர்திசெங்கோல்
பொருத்தத்த னூர்தியும் பண்டே விளர்த்துப் புகழ்கொண்டவே

ஆங்கவளருமை பாங்குறத்தெரிதல்

கூம்பிய கையினர் கோட்டிய சென்னியர் கோதுதப
ஓங்கிய வுள்ளத் தொழுகின ராயவெள் ளங்குமுதம்
தேம்பிய சிற்றிடை யாண்முகந் திங்கள்செத் தாலிங்ஙனே
காம்பிய ரேளி கிடைத்தது மாயங்கொல் காண்பரிதே. (அஉ)

பாங்கியை யறிதல்

திருவரு மாறுரு வாய்விளை யாடுநஞ் செய்கையென்ன
இருவரு மோருயி ரேயல்ல தில்லென் றியம்பினவால்
குருவரு வாளரி சிந்திக் கரிகுழைத் திட்டவைவேற்
பொருவரு நீள்விழி தாங்களு மொன்றெனப் புக்குழன்றே. ()

மணந்திவ் வாறு மகிழ்ச்சி தலைக்கொளீஇத்
தணந்த வேலவன் றுங்கருங் காதலால்
அணர்ந்த பாம்பி னரும்பவிழ் காந்தள்சூழ்
புணர்ந்த பூம்பொழிற் போதுதன் முன்னினன். (அச)

வழிநிலைப்புணர்ச்சிக்கு வள்ளல்சேறல்

வாளாங் கிருப்பினுந் தன்னருள் சேர்ந்துயிர் வாழ்வுபெறத்
தாளாங் குறுக்குந் தலைவனை நாடிற் றகைவுமுண்டோ
தோளாங்கு முன்பறி யாதளித் தாள்வயிற் றுன்னிநிற்பின்
மீளாங் கலந்தன்றிச் சேறுநெஞ் சேவள்ளி வெற்பிடத்தே. ()

கிள்ளை வாழ்த்தல்

அந்தா மரைமல ரன்னமன் னுண்முலை யானைநின்றேள்
கந்தாக யாப்பையென் றேமுந்து பாய்ந்துண்மை காட்டுதலால்
சந்தார் தணிகைத் தடவரைத் தாழ்சுனைக் காவியினிச்
செந்தார்ப் பசுங்கிளி வாழிய வூழி சிறக்கநின்றே. (அரு)

முன்னியதுயரோடு மின்னிடைநிற்றல்

புலம்பிய வென்னிலை நோக்கிக் கவர்படு புந்தியொடும்
வலம்படு தோள்வள்ள லாங்கே கவலுங்கொல் வண்சிறைப்புள்
சிலம்பிய சோலை புகுங்கொலென் றென்னுளந் தேம்புதலால்
நலம்பட வெண்ணிய தெய்தரி தாங்கொ னளிவரைக்கே. ()

பயில்பொழிலவளெனப் பையுணீங்கல்

தீம்பா லடியிற் கிடத்திய நீலந் திகழ்வதுபோற்
காம்பா லியன்ற பெரும்பணைத் தோளிதன் காமருருக்
கூம்பா வளத்த பொழின்முழு தாய்நனி கூரிடும்பை
ஓம்பா வளிசுரக் கின்றது வள்ளி யுயர்வரைக்கே. (அஅ)

மாதுதன்மை யீதெனக்கிளத்தல்

காட்சிப் பொருளுங் கருத்துப் பொருளுங் கருத்தடங்கும்
ஆட்சிப் பொருளு மகற்சிப் பொருளு மடுப்பினங்கே
மீட்சிப் பொருளு மெனநிற்ற லாற்கொன்றை வேய்ந்தமுக்கண்
மாட்சிப் பொருளைத் தெரிப்பது வள்ளி வரைப்பொருளே. ()

தனிநிலைகண்ட மனமகிழ்வுரைத்தல்

உருவிளக் கூர்நுதற் றேட்டி விழிக்கய லொண்கொடிற்றுத்
திருவிளக் காடிமென் றேண்முழ வாரத் திரட்கவரி
குருவிளக் கோர்முலைக் கும்ப மயிரொழுக் குக்கொடியென்
மருவிளக் கெண்மங் கலத்தொடு மாதெதிர் கொண்டனளே. ()

மெய்தொட்டுப் பயிறல்

நந்தவெஞ் சூர னடுகளம் போந்த நளியமிழ்தம்
மந்தரம் போலுயி ரீவது வள்ளி வரையமுத
சுந்தரி பூண்முலைக் குன்றமொன் றேதொடித் தோணுதலும்
கொந்தல ரோதியுங் கோமள மாருரு யாவையுமே. (கூக)

பொய்பாராட்டல்

இயங்குந் திறனுடைந் தீரா யிரமருப் பேய்ந்துடற்றத்
தயங்குந் திறலயி ராவணஞ் சார்வது தையனல்லாய்
உயங்குங் கெனவிடைச் சீய நலியு முவாமருப்பின்
வயங்கண்டு வாளாங் கிருந்தது வெள்ளி வரையகத்தே. (கூஉ)

இடம்பெற்றுத் தழாஅல்

வீராட்ட காச விமலன் றணிகைவெற் பாள்குமரன்
தாராட்டு வீரர் முதலோர் கணத்தர ணத்தநெடும்
போராட்டு வேலுங் கணேயும் பொரும்புறம் போக்கொழியக்
காராட்டு பூங்குழ லாயென்னை யாத்தநின் கண்ணிணையே. (௬௩)

நாணடமழைக்கண் வாணுதல்புதைத்தல்

ஒலிதழற் பூதத் தொளிர்விழி யோடுனக் கொற்றுமையால்
மெலிதரு காற்றுணை வேரூர் நினையன்றி மென்கரமே
பலிதரு கென்று மடவார் நிறைகொள் பரனுபிர்த்த
வலிதகு மைந்தன் றணிகைவெற் பேருமிம் மால்வரைக்கே. ()

இடையூறு கிளத்தல்

கந்தென் மணிப்புயத் தானிங்ஙன் வாடக் கருத்தைவெளி
தந்தென் முகத்தி லிருத்தியென் றேதடங் கண்புதைத்தாய்
மைந்தென் மதர்த்துப் புடைத்துப் புளக மலிமுலையாய்
முந்தென் மனத்தைப் பிணித்தது னங்க முழுவதுமே. (௬௫)

நீடுநினைந்து இரங்கல்

ஏமங் கனிந்தவெ னெஞ்சகம் போலு மிடுகிடைமென்
தூமங் கனிந்த சுருணெடுங் கூழைத் தொடிக்கரத்தாய்
சேமங் கனிந்த கனிகண்டு நாவெழுந் தீம்புனல்போற்
காமங் கனிந்துநின் யாவர்கொ லாற்றக் கடவர்களே. (௬௬)

வருந்தி நாண்விடுத்தல்

மலமாயை கன்ம மொழியினல் லான்முத்தி வாழ்க்கையில்லைக்
குலமார் மடமச்ச நாணெழிந் தாலன்றிக் கூட்டமில்லைச்
சலமார் பிறவியுட் பெண்பவம் போனனி தாழ்ந்ததுண்டோ
நலமா ருலகத் ததுவொழி மாதவ நாடிலமே. (௬௭)

மருங்கணைதல்

வளியென்று மாடணு காது வசைவரு மென்றனைய
தெளியொன்று சிற்றிடைக் கோபகை செம்பொற் சிகரியன்ன
களியொன்று கொங்கை களிவண்டு காள்குழல் காதலிப்பின்
அளியென்ற நாமங் குறிப்பாம் வெளிப்படை யாவதின்றே. ()

கலவியின் மகிழ்தல்

ஒருரு வாக விருப்பினு மென்பய னொற்றுமைகொள்
சீருரு வாகிய செம்மலுந் தேவியுந் தானுமென
ஈருரு வாகவும் வேறிருந் தானெம்மைப் போலவின்ப
நீருரு வான கரணங்கள் யாவு நிகழ்த்துதற்கே. (௬௬)

நயத்தல்

ஆயுந் தொறுந்தொறு மின்பந் தருங்கலை யாங்கறிவு
மாயுந் தொறுந்தொறு மின்பந் தரும்வள்ளல் வார்கழல்கள்
தேயுந் தொறுந்தொறு மின்பந் தருஞ்சந்து தேங்குழனிற்
றேயுந் தொறுந்தொறு நேராத வின்பஞ் சுரந்திடுமே. (௪00)

தீராத்தேற்றம்

முருகிய ருமமரை மாதரு நாணமுன் னேனிடத்துப்
பெருகிய காதற் பிராட்டியு மெச்சநிற் பேணியென்றும்
உருகிய வன்பி னுடங்கமர் வேனுறு சான்றளிதேன்
பருகிய காவி வரைவா ழறுமுகப் பண்ணவனே. (௪0௧)

ஆயத்துய்த்தல்

கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்ப் பசுங்கதிர்ப் பொற்றொடி
ஒருங்கிய நின்னுட லாருயி ராவென் னுயிருடலாப் [யாப்
பெருங்கடல் சூழ்ந்த விடத்தும் பிணைந்தன பேசுவதென்
மருங்கிய லாயம் புகுதக வாயம் வளம்பெறவே. (௪0௨)

பிரிபவனேக்கி யருமைகண்டழுங்கல்

திரைதவழ் நீர்க்கட னுப்பட் செலற்கரு நாற்படையின்
நிரைதவழ் நொச்சிச் சிறையகத் தும்பரை நேர்ந்துகொளற்
குரைதவழ் நெஞ்ச மதித்தில மும்ப லுல்லைசுற்றார்
வரைதவ ழாயத்து மாதரி யாளென்று மாழ்குதுமே. (௪0௩)

பிரிபவனுரைத்தல்

திருத்தகு மாது புறத்தவ ளாய்விழி சென்றுபற்றின்
உருத்தகு காமக் கவலையொன் றில்லை யொழிந்தெனது
கருத்தவ ளாய்நிற்கு மேற்கலன் மாய்த்தவர் கையறைபோல்
வருத்தமிக் காகின்ற தாலென்ன மாயம் வரையகத்தே. (௪0௪)

இடந்தலைப் பட்டிவ்வா றியற்றி நீங்கிய
உடம்பிடித் தடக்கையுத் தமனற் பாங்கனுன்
இடந்தலைப் படுதன்மே லியற்ற வைத்திடை
தொடர்ந்துபல் விம்மிதந் தோற்ற முன்னினுன். (கOரு)

வள்ளியை மணந்தவவ் வடிவு நீங்கினுன்
தெள்ளிய வேறெரு சிலம்ப ஞயினுன்
கொள்ளைமான் வேட்டையிற் குறுகு வானெனை
ஒள்ளிய தினைப்புன முற்று நண்ணினுன். (கOசு)

உட்குநா ணின்றியாங் குகப்பு நோக்கியும்
புட்குழா மோப்பினள் புகலு மேதகு
பட்குலா மொழிசெவி பருகித் தேக்கியும்
கட்குலாங் களியனுய்ப் பரிவு காற்றினுன். (கOஎ)

அவ்வுழி யவ்வரை யரையன் வேட்டையான்
பவ்வமென் றயிர்ப்புறும் பரிச னத்தொடும்
செவ்விய தினைப்புனஞ் சென்று முற்றினுன்
வெவ்வினை தீர்ப்பவன் வேங்கை யாயினுன். (கOஅ)

உலைவறு மறைகளு மோங்கு நூல்களும்
கலைகளு முழுவதுங் கதித்து வேர்முதல்
இலைமுடி வாயுரு வியைய வாங்கதன்
நிலைபெறு முயிரென நிமல னிற்றலும். (கOகூ)

கண்டனர் கானவர் கனிமுன் னில்லது
வண்டுதேன் ஞிமிறுற மலர்ந்து தாதுதேன்
நுண்டுளி சிந்திவிண் ணோக்கி நின்றது
கொண்டதோர் மாயையின் கொள்கை யென்றனர். (ககO)

தீங்கிது கணிச்சியிற் றெறுமி னென்றனர்
ஓங்கிய பணைகளை யொழிமி னென்றனர்
தாங்கிய வேரொடுந் தறிமி னென்றனர்
வீங்கிய பராரையை வீட்டு மென்றனர். (ககக)

முயற்சியின் வேட்டரை முதல்வன் கையமைத்
தியற்கைநல் லெழிலுடை யேந்து கொங்கையைக்
கயற்கணல் லாய்கணி காமர் நம்புனத்
தயற்கண்வந் தெழுந்தவா றறைதி யென்றனன். (ககஉ)

ஐயயா னிதன்வர லாறு தேற்றிலேன்
ஒய்யென நீயிரின் றுக்குன் றெய்துழி
வெய்யதாய் விண்ணினின் றிழிந்த தாமெனப்
பொய்யகல் வளத்தொடும் பொலியக் கண்டனன். (ககங)

என்னிஃ தூற்றவா றென்று நாடுமுன்
முன்னினிர் நீயிரே முற்றி நோக்கினீர்
பின்னரென் னுவதோ பெரும வென்றனள்
அன்னவ னேவமா னறைந்த வாறென்றான். (ககச)

வரையுறை கடவுணல் லருளின் மாட்சியால்
திரைவள ரமிழ்தனுய் சிவணிற் றுருகுமால்
விரைமலர்க் கனியிது வெற்பி னின்றனக்
குரைவளர் துணைமையி னுறுகென் றேகினான். (ககரு)

தந்தையிவ் வாறெதிர் சாற்றி யேகலும்
பைந்தொடி யடுத்தனள் பணியி வர்ந்தனள்
கொந்தலர் குற்றனள் குழலின் வேய்ந்தனள்
அந்தழை வாங்கின லல்குல் சேர்த்தினாள். (ககசு)

அலத்தக மலர்ந்தசீ றடிக டோயவும்
மலர்த்தகைத் தொடிக்கரந் தழுவி வெளவவும்
நலத்தகு பரிமள நகில்கள் புல்லவும்
நிலத்தலைப் பேரின்ப நிமல னீடினான். (ககஎ)

விம்மிதம் பலபல விளைத்து நிற்றலின்
செம்மலங் கனியினைத் தீர முன்னலள்
பைம்மயி லெனவதிற் பயிறன் மேயினாள்
அம்மர மணைத்தெழு கொடியு மாயினாள். (ககஅ)

கிளிமயில் குயில்புருக் கேழ்த்த பூவைகள்
அளியினஞ் சேவலோ டாடி நீங்கவும்
களிவரக் காட்டினன் கண்டு நெஞ்சகம்
விளிவருங் காமநோய் மிடைய மெல்கினாள். (கககக)

பொரவளி யசைவபோற் பூத்த சாகையங்
கரமல ரிளமுலை கலந்து தைவர
விரவிய புளகமு மகிழ்வு மேவரப்
பரவிய மெலிவுதீர் பரிசுங் கண்டனள். (கஉ0)

தனையறி யாவகை மகிழ்வு சான்றவப்
புனைமலர்க் கோதையாள் போந்து வேட்டைதீர்
வனைகழற் றாதையின் வரவு தேர்ந்தொரீஇத்
தினைநடு வளரிதண் சென்று வைகினாள். (கஉக)

கோற்றொடி தனைவிடாக் கொள்கை யாலவண்
வேற்றுரு வாகிய வேங்கை நாயகன்
வீற்றுமோர் விம்மிதம் விளைக்கத் தன்னொரு
கூற்றினை வேங்கையிற் குலாவ வைத்தனன். (கஉஉ)

இளையவ னெனுமுரு விகந்து வேடர்தம்
களைகணுங் காளையிற் காட்சி தந்தவன்
விளைமுதிர் விருத்தனாய் விழைவு காட்டுவான்
மிளைவயி னவ்வுரு மேவி னானரோ. (கஉங)

அராவுரியெ னத்திரையு மாக்கைசிலை நேர
விராவுமயிர் வெள்ளொளி விரிப்பவிமை நால
உராவிய விழித்துணை யொசிந்தரிது நோக்கத்
தராதல மழுத்திய றண்டுகர மன்ன. (கஉச)

கைத்தசை கவுட்டசை கழற்றசைக டுங்க
மெத்திய சழங்கனுடை வீழ்ந்துநடை தட்பத்
தத்தடி யிடுங்கழ றளர்ந்துதடு மாற
ஒத்தகர னேடுதலை யுங்குலைகு லைப்ப. (கஉரு)

இடுகிடை மிடைந்தகுர வின்மொழி வழங்கப்
படுமொழி கொளாதவொரு பண்புசெவி காட்ட
விடுசுடர் விபூதிமெய் விலங்குறவி ளங்கத்
தொடுகடவுண் மாமணிக டோளனமுன் னுட. (கஉசு)

மேதினி யளப்பவரின் மென்மெல நடந்தங்
கூதைநனி நாசியி னுயிர்த்திடை யிடைக்கண்
ஊதவுகு வானென வுலைந்துநிலை கொண்டே
ஆதவன் மறைத்தகுடை யோடெதிர டுத்தான். (கஉஎ)

மன்றல்கமழ் நீறுநனி வாழியென வீந்தான்
குன்றவர் தமக்கிறை குடங்கைகொடு பூசி
இன்றுபய னுனதின மென்றுள முவந்து
நன்றுவர வென்னையடி கேணவிலு கென்றுன். (கஉஅ)

திரைக்குமுடன் மூப்பிது சிதைந்திளமை சேர்நும்
வரைக்குமரி யாடவென வள்ளல்வரை யாள்வோன்
விரைக்குமணி நீரிது விளைத்தலரி தேயென்
றுரைக்கணயி ராதவ னுடங்குகொடு சென்றுன். (கஉகூ)

முதுக்குறைவு போலுடலின் மூப்புமுதிர் தூயோய்
புதுக்கணியி னியும்விளை பூம்புனமி ருந்து
மதுக்குவளை வாய்விரி வரைக்குமரி யாடிப்
பதுக்கைவரை யாருணவு பண்பினுகர் கென்றுன். (கரு௦)

மங்கையிவர் நங்குமரி வார்சுனையி னுட
இங்கணவி னுரிவர்த மக்கினிய நல்கித்
தங்குகென வொண்கனி தயங்குமது மற்றும்
அங்கணுத விக்கடித கன்றுமனை புக்கான். (கருக)

பட்டிமை விருத்தன னுகப்பயிற வுற்றுக்
கட்டழகு கண்ணிணை கவர்ந்துகளி கொள்ள
எட்டனை யுறுப்புமொழி யாதெளிது நோக்கி
மட்டுவிரி கூந்தலுரை யாடமகிழ் கூர்ந்தான். (கருஉ)

உள்ளமணை யக்கடிது கக்குமிரு கையும்
பொள்ளென வெழும்புணரு மன்பனென வாக்குத்
தள்ளியெழும் வாயிதழ் தனைப்பெரிதும் வெளவ
விள்ளுமிரு வார்தொடை விராவநனி துள்ளும். (கநங)

பூங்குழன் முலைத்துணை புணர்ந்ததொடை வாட
வீங்குயிர் விடுக்கும்விரி வாயினுயிர் காலும்
தாங்கரிதெ னத்தரையில் வீழுமெழு நிற்கும்
ஓங்குபசி யேயெனன வுரைத்தவைம றைத்தான். (கநச)

கிழங்குகனி தேன்விரவு கேழ்த்ததினை மாவும்
வழங்கவெதிர் வாங்கிவயி றார்தரமி சைந்தான்
பழங்கணுறு பொய்ப்பசி பறைத்திளைய கள்வன்
முழங்குபுனல் வேட்கையென மூதுயரு ழந்தான். (கநரு)

இப்புற வரைத்தலை யிகந்துவரை யேழ்போய்
அப்புற மடுப்பினவ ணுள்ளதொரு தீர்த்தம்
வெப்புற மிடைந்தபுனல் வேட்கைதணி கென்ன
மைப்புறவ ளுயறிய வல்லனல னென்றான். (கநசா)

துவளிடையி னோடடி துளும்புமென முன்னிக்
குவளைவிழி யாய்வறிது கூறிவிட லென்றாங்
கவளுடனெ ழக்கதையி னுதரவு பற்றி
உவளக மடுப்பதென வொண்சுனைய டுத்தான். (கநஎ)

நிச்சமு நினக்குரிய நீர்ச்சுனையி தேகொல்
முச்சகமு முத்தொழிலு மும்மலமு மல்ல
விச்சென வெறுத்தவரு மேவரிய தென்றே
நச்சிநறு நீர்நளின நன்கைகொடு துய்த்தான். (கநஅ)

வந்தபய னெய்தியது போலுமட வாய்கேள்
இந்தவள வார்சுனை யிரும்புனன்மு கந்த
அந்தவள விற்கடிதெ னார்வவுள நின்மேல்
முந்தியது பிந்துவது மூப்புமினி யென்றான். (கநகூ)

பஞ்சினு மிதிப்பவுலை யும்பதம டந்தை
அஞ்சின ணடுங்கினள றந்தலைபி றழ்ந்த
நெஞ்சின ளினைந்தபரி சென்னென நினைந்து
விஞ்சுவெகு ளித்தழல் வெதுப்பவுரை செய்வாள். (கசO)

மேதையென நின்றனை விருத்தரிலை நின்போற்
காதுபழி பாவவழி கண்டுமறி யாய்கொல்
மாதர்மட வார்சிறு மகாரொடு புனைந்த
தீதிலுரு வத்தையு மயிர்க்குநெறி செய்தாய். (கசக)

ஆய்தவடி விற்கணொரு மூன்றவிரு மண்ணல்
தூயவளர் வேடமொடு தோற்றுதிநீ வாழி
நேயமலி மெய்யடியர் நேர்ந்துழியு நின்போல்
மாயமென வெள்ளுமொரு வான்பழியும் வைத்தாய். ()

உரைத்தமொழி நாவினை யொறுப்பலெழி ஞேக்கும்
புரைத்தவிழி சூன்றிடுவல் புந்திதுயர் மூழ்க
விரைத்திரு கரத்தலம் விழுத்துவல னைத்தும்
அரைத்திடுவ லெங்குமிசை யாக்கிடுவ லின்னே. (கசங)

தேவரினொ ருத்தனலை திண்புவிபு ரக்கும்
காவலர்க டம்மினொரு காளையனு மல்லை
ஆவதெனு றப்பறையி ஞர்த்தரிய டர்ப்போன்
சாவவிழு புன்னரி தடிந்ததிற ஞமால். (கசச)

வஞ்சியர்க டஞ்சமனை வாழ்க்கையர்க ளேனும்
அஞ்சுமுல காள்பவனை யாள்பவனு மஞ்சும்
விஞ்சமரர் தம்மைமிக வஞ்சுவர்விண் ணோரும்
நஞ்சணி மிடற்றனை நலக்குமறி வில்லோய். (கசரு)

பித்தரு மதித்திஃது பேசுதிறன் வல்லார்
மைத்துனரு நெஞ்சொருமை வாய்ப்பினல திவ்வா
றொத்தபடி வாயினழி யாரொருவர் மாட்டும்
எத்திறநி னைத்தியினி தேருகடி தென்றாள். (கசசு)

நெற்றிமிசை முற்றுபுரு வங்கணெளி கிற்பக்
கற்றையெரி தோய்த்தகணை யென்னவிழி சேப்ப
விற்றரள மென்னவெய ராடவுரை தள்ள
முற்றுடல்வெ திர்ப்பமொழி மாதையிறை பாரா. (கசஎ)

இப்பிழைபொ றுத்துளமி ரங்கியருள் கென்னக்
கைப்பதுமம் வள்ளியிரு காற்பதும முய்த்தான்
வெப்புமிக வொய்யெனவி திர்த்துதறி நீக்கி
ஒப்பின்மன வேகமொடு ருத்துவழி மீண்டாள். (கசஅ)

கற்பின்வலி யுங்குறவர் காமருகு லத்தின்
பொற்பின்வலி யும்பொதுளி மாட்சிநனி பூத்த
அற்பில்வெகு ளிச்சுவையை யார்ந்துளம தித்தான்
வற்புரைய பாங்கனைம ரீஇப்புணரு மன்றல். (கசகூ)

பாங்கனை நினைத்தல்

அருளிற் கலந்துறி ஞாராத வின்பத் தழுந்தவிடை
இருளிற் கலப்பதொன் றில்லை யினைந்துகு நெஞ்சகமே
தெருளிற் கலந்தநற் பாங்கனைச் சேரிற் றெரிவையென்னும்
பொருளிற் கலப்பதற் கையமுண் டேயெப் புவனத்துமே. ()

தாற்று வாழைத் தணிகைச் சிலம்பின்முன்
போற்று மாவச் சகாயனைப் புந்தியின்
ஆற்று பாங்கனென் றுதரித் துன்னலும்
தோற்றி னைவர் சொற்கள் வழங்குவார். (கருக)

பாங்கன் றலைவனை வினுதல்

முன்னே குழவியி னுட்டயர் கான்முடி வானவரைக்
கொன்னே குமைத்தவஞ் ஞான்றுங் குழைவிலை கொற்றமுற்றப்
பின்னே யவுணத் திரள்சாய்த் துழியுமொர் பீழையில்லை
என்னே வறிதமர் ஞான்றயர் வேர்தில வேலவனே. (கருஉ)

தலைவ னுற்றதுரைத்தல்

தேவரை யஞ்சாத் திறல்சா லவுணத் திரண்முருக்கிப்
பூவரை யஞ்சா றெழுவே றிகழ்ந்தது போற்றுணைவா
மூவரை யஞ்சாத் தமியே னெறுழ்நல முற்றுமொரீஇ
மாவரை யஞ்சான் மடக்கொடி வெற்றியின் மன்னியதே. ()

தலைவனைக் கழறல்

கரும்பொன் று தோளியிடங்கொண்ட நாதன்கை வேற்படையோய்
இரும்பொன் று தேவர் வலியளப் பானெய்தி நாப்பணட்ட
துரும்பொன் று கொல்லோதொகுவரைப்புன்குடித் தோன் றுமுலை
யரும்பொன் று பூங்கொடி யாற்றலை மாற்றி யளுர்செய்பவே. ()

தலைவ னுளந்தளர்ந் துரைத்தல்

விண்டா ரமரிற் றிறங்காணி னல்லது மேன்மையெண்ணார்
கொண்டார் மனைவி குணங்காணி னல்லது கூட்டமெண்ணார்
வண்டார் குழலி வளங்காணி னல்லது வாய்மையெண்ணாய்
கண்டா யலைகழ றுநிற்றி யாலென் கருத்தனவே. (கருரு)

பாங்கனிற்பவை நினைந்துரைத்தல்

பெருமையைக் கல்வியைப் பேணுந் தவத்தைப் பிறங்குகின்ற
அருமையை மற்று மழிப்பதன் றேவடர் காமவெந்நோய்
இருமையை யெண்ணலர் பானு மிளிவர லேனினக்குக்
கருமைய தன்றுகண் டாயண்டர் போற்றுங் கருணையனே. ()

கலைவ னிகழ்பவை கூறல்

கடலினை வாய்ப்பெய் வடவையை மீட்டக் களன்மடுத்தாங்
கடலினை வாய்வைத் துழல்கருங் கண்ணி யவயவத்தென்
மிடலினை யாருமுன் மிக்கறி வேனின்னின் மேதினியில்
தொடலினை யாய்ந்து விடலினை மன்னே துணையவனே. (கருஎ)

தலைவன் றன்னிய றன்னுளத் தெண்ணல்

துணைவனு மின்ன கழறுக சூழ்தரு நல்வினையும்
அணைவன வல்லன வாக வுலகம்ப லோடலரும்
பிணைவன வாக பெரும்பணைத் தோளி பிறழ்ந்துமின்னுங்
கணைவன வாள்விழி யன்றியெவ் வாறுயிர் காப்பதுவே. (கருஅ)

தலைவன் றலைவி தன்னிய லெண்ணல்

வருநாள் கழிவதொன் றில்லையென் றேவற் புறுத்தியதும்
ஒருநாள் கழிவதில் லாக்கடி யுற்றது முன்னியுன்னிப்
பெருநாள் கழிவன போலுங் கணத்திற் பிழைப்பதுண்டேல்
திருநாள் கழிவதில் லாத்தொண்டை நாடன்ன தேமொழிக்கே.

நிற்பணிபவரு நிலைதிரிகலரேன் வற்புரைபாங்கன் வகுத்துரைத்தல்

ஆலங் கொதித்தட மேல்வரு மேனு மடற்கெழுந்து
காலங் கொதித்துக் கனன்றுறு மேனுநிற் கண்டவரும்
சீலங் கொதித்த நிலைதிரி யார்செம்ம லேமலர்ந்து
நீலங் கொதித்த விழியாட் குடைவது நீதியன்றே. (கசுO)

தலைவன் கையற்றுரைத்தல்

ஒழுகிய வெள்ளத் ததிர்நின்ற மென்புல் லொழுக்கின்வழி
முழுகுவ தல்ல தெழுவதுண் டேமுடி வானவர்சூழ்
தொழுகுல மேபிரும் பீர்க்குஞ் சுரிமுகக் காந்தமென
எழுகிளி யோப்பு மடமானென் னுருயி ரீர்த்ததுவே. (கசுக)

பாங்கன், ஆற்றுந்தன்மை தேற்றிலையென்றல்

எல்லா முணர்ந்த குறுமுனிக் கோத்துரைத் திட்டதுமுன்
கல்லா லடியி லிருந்தார்க் கொருமொழி காட்டியதும்
வில்லா லவுணக் குலம்வே ரறுத்துவிண் ணோர்க்கருளும்
வல்லாண் மையுமற் றும்பொச் சாத்தி செல்ல மனம்விடுத்தே.

பாங்கன், தெருட்டுந்தன்மை மருட்டினையென்றல்

முற்று முணர்ந்த முதுக்குறை வாளர்க்கு முன்னியொன்று
பற்றும் வகையெவ ரேதெரிப் பாரவர் பண்பின்வழி
மற்று மறிந்து நடப்பதல் லால்வடி வேற்கரவா
எற்று மணித்திரை முந்நீர் முதிர்ந்த விருநிலத்தே. (கசுங)

பாங்கன், வினைத்திறமுரைத்தவ ளியற்றிறம்வினுதல்

வீசுந் தரங்கக் கடல்விழு வோரின்விம் மாந்துளத்தை
ஆசுந் தடையி னிறுத்தவல் லாவயில் வேலிறைவா
பேசுந் தனுவினை யாரே பெயர்க்கவல் லார்பெயரக்
கூசுந் தளிரடி மாதியல் யாதினிக் கூறுகவே. (கசுச)

தலைவ னவளியல் பாங்கற்குரைத்தல்

பொன்னெக்குங் கொங்கைப்பொறிசுணங்கோர்முலை போதொடொக்கும்
மின்னெக்கு நுண்ணிடை செங்கழு நீரொக்கும் வேல்விழிமா
தென்னெக்கு மேனி யுளமுந் தனவ வெனவவொக்கும்
நின்னெக்கு நீர்மையில் லாய்செல்லு மாலிந் நெடுவதியே. ()

பாங்கனைச் செல்கவென்றல்

நின்னடி போற்றி யெவரு நினைத்த கருமமெலாம்
தன்னமுந் தாழ்வின்றி முற்றுவ ரேற்றமி யேன்பொருட்டு
முன்னவ நீயே முயலின் முகிழ்ந்த முலைப்பணைத்தோ
ளன்னவள் கூட்ட மமையாமை யாவரி னுவதுவே. (கசுசு)

தேற்றுபுபாங்க னுற்றிடைச்சேறல்

உருவா யுருவப் புவனத்தில் யாங்க ணுறினுமொழிந்
தருவா யருவ நிலையொன் றிற் சேரினு மன்றிநம்மான்
மருவாய் மலர்ப்பதத் தொன் றினும் வல்லை யினைப்பல்கண்டாய்
குருவாய் மயிலினை வேலவ வேதுங் குழையலையே. (கசுஎ)

பாங்கனை யாற்றுப்படுத்தோ னுரைத்தல்

சென்றனள் கொல்லோ தினைப்புனந் தீர்ந்து சிறுகுடில்வாய்
நின்றனள் கொல்லோ நெடுந்தகை யன்னை ணிலையறிவாய்
ஒன்றினன் கொல்லோ வுவப்பொடு மீண்டு குறுகுங்கொல்லோ
என்றலை யாதிநெஞ் சேமணம் பாணித்த லின்றினியே. (கசுஅ)

பாங்கன் குறிவழிப் பாவையைக் காண்டல்

நங்கையி லங்குசம் வாணுதல் பாச நயனமிரு
கொங்கைகள் கோடு புரிநூ லிடைகுல வல்குலரா
கங்கையிற் றாய மதம்பாய் புழைக்கைக் கவான்கடுக்கும்
மங்கையின் னுளன்றி யில்லைவை வேலன் மனத்தவளே. (கசுகூ)

எளிதிற்காட்டிய விறைவனை அளிவளர்பாங்க னன்பிற்பணிதல்

மாயத்தி னேருழி நீக்காது புன்குடின் மாட்டமலும்
தாயத்தி னுப்பட் டவிராது பூம்புனந் தண்பொழில்வாய்
ஆயத்தின் வண்ட லயராது மாதை யகப்படுத்த
தோயத்தின் வார்சடை வீராட்ட காசனைச் சூழ்குதுமே. (கஎ0)

பாங்கன் றலைவியைவியத்தல்

கூந்தல் வதனம் விழியென வேழங் குடைதுவசம்
வாய்ந்த புயமுலை யல்குலெ னச்சிலை வாளிமுர
சாய்ந்த விடையென மார னழகுடற் றப்பொருவான்
போந்தது வேட ரறியார் புதல்வியிற் போற்றினரே. (களக)

பாங்கன் றலைவனைவியத்தல்

இம்மாதர் பின்னர்த் திரியாது நின்று மிவள்புணர்ச்சி
நம்மா தரவின் முடியுமென் றுள்ளியு நாடறிந்து
விம்மாது காத்தவ னேயுர வோன்வெளி யேவிடுங்கால்
தும்மாது நின்றவர் தாமுங் கயவரித் தொல்புவிக்கே. (களஉ)

பாங்கன் வருத்தந் தகுமெனவுரைத்தல்

தோன்றுன் றனதொரு கூற்றிற் சுடர்த்தொடி யாளணியாய்
ஆன்றா னெனினும் பிரிவரி தேயறி யாமையந்தோ
மான்று யெனவு நிறைபொறை சால்பு மதிமுறையும்
கான்று யெனவுங்கை வேலனை வீணே கழறினமே. (களங)

பாங்கனு முறைக்க ணின்று பரிந்துபல் கிளவி காட்டி
ஆங்கவன் றன்னைக் கண்ட வடலிப முகத்தெம் மண்ணல்
ஈங்கிவ ணிலைமை கூறி யிடந்தலைப் படுங்கா றையன்
தாங்குத லரிதென் றுன்னித் தறுகண்மா வேழமானுன். (களச)

மும்மதக் கலுழி பாய முகமறிந் தலையக் காது
மைம்மலை யுலநாற் காலின் மருவின தூளி யாகக்
கொம்மெனத் தருக்கள் சாய்த்துக் குவட்டின முருட்டிச் சேய்க்கண்
கைம்மலை முழங்கி நேரே கடுகிட்ட ததனைக் கண்டாள். (களரு)

போமிடம் வேறு காணுள் பொள்ளென வெருளி நீங்க
நாமவுள் ளத்த ளாகி நடுங்கிமீண் டிரிய லுற்றுள்
ஆமது தெரிந்து கள்வ னியல்பினுங் கணைவான் போலக்
காமர்முன் னுருவ ளுகிக் கன்னிமுன் விலங்கிச் சென்றுன். ()

அஞ்சலே யஞ்ச லென்னு வணைத்தொரு கரத்தின் மாதைக்
குஞ்சர மடுத்துச் சிறக் குமைப்பவன் போல வேற்கை
குஞ்சியின் மேக்க தாக்கிக் கும்பிடக் களித்து வேட
மஞ்சனை யஞ்சிற் றென்ன மறைந்தது தெய்வ வேழம். (களஎ)

தணிவறு காதன் மீக்கூர் தம்பியை யிடரி னீக்கி
மணிநகை மாதைச் சேர்த்த வண்மையி னுனு நேரில்
கணிகவெற் பமரு மைங்கைக் கடவுளெம் பெருமான் றன்னை
அணிகிள ருலக மாவச் சகாயனென் றன்பிற் போற்றும். (களஅ)

நஞ்சட வெழுத லோடு நடுங்கின ரிரிந்த தேவர்க்
கஞ்சலி ரென்று முக்க ணமலன்கை யமைத்த ஞான்றே
துஞ்சிய கவலே போலத் தோன்றலங் கணைத்த லோடும்
குஞ்சரப் பயத்தி னேடு கூர்பரி வணங்கு நீத்தாள். (களகூ)

எனைத்துமங் கறியான் போல வேழையை வினவி நம்மைக்
கனைத்துவண் டிமிருங் கூந்தால் கலப்பிக்கும் வாயி லாக
அனைத்தும்வெற் பமருஞ் செவ்வே ளயர்திரு விளையாட் டென்ன
நினைத்ததென் னுள்ள மற்றே யாகுநீ யஞ்ச லென்னு. (கஅ0)

மறைமுடி யறியா வேட மன்னவ குமர னுங்கண்
உறைமதுப் பொதும்ப ருள்ளா லொண்டொடி மாதைக் கொ
நிறைமகிழ் திளைப்பப் புக்கு நீடிய பரிவு நீத்தும் [ண்டு
குறையினை முடிப்பா னன்னுள் குறிப்பறிந் துரைக்க லுற்றுன்.

பிரிந்துழிவருத்தந் திருந்திழைக் குணர்த்தல்

வரிந்தா லனைய மணிநகை வாங்கு சிலைப்புருவம்
சொரிந்தா லனைய திதலையம் பூண்முலைத் தோகைநின்றேள்
பிரிந்தா லனைய வணங்குநல் லூழிற் பெயர்ந்தடுத்துப்
புரிந்தா லனையமுற் றின்பமும் பூப்ப தரிதுலகே. (கஅஉ)

பயந்தோர்ப்பழிச்சல்

கயந்தலைக் கும்பல் வெதிர்சாய்த் தளிக்குங் கணவரைவாய்
வயந்தலைக் கொண்ட விவட்பயந் தோனும் வளர்த்தெடுத்துப்
பயந்தலைக் கொண்டநற் றாயும் பணிலங்கை யேந்தியுநல்
நயந்தலைக் கொண்ட நளினங்கை யேந்தியும் வாழியரே. ()

கலவியின் மகிழ்தல்

அயிலுந் தொழும்விழி விஞ்சையர் நாட்டினை யச்சுறுத்தக்
குயிலுந் தொழுமொழி கின்னரர் நாட்டைக் குழைப்பவைகும்
மயிலுந் தொழுமெழின் மாதர்நல் லாண்மணிக் கொங்கைதழீஇ
பயிலுந் தொறும்விருந் தாயின வீதென்ன பண்பிவட்கே. ()

பாங்கவை யுண்மகிழ்ந்துரைத்தல்

அம்மைப் பிறப்பி னுஞற்றுநல் லூழி னடுத்தெளிதில்
இம்மைப் பிறப்பினிம் மாதினைக் கூட்டிய வேந்தவிடை
மும்மைப் பிறப்புல கத்தினிற் கேண்மை முதிர்கவென்றும்
உம்மைப் பிறப்பு முளதேன்மற் றுங்கு முறுதகவே. (கஅரு)

அணிதிருத்தல்

கருமந் தழூநர் மனம்போ லிருள்குழல் கைபுனைந்து
தருமந் தழைந ருளம்போ லொளிர்நுத றைவந்துமின்
பருமந் தழையப் பயிற்றிப் பதநூ புரந்திருத்தி
அருமந்த மெய்முழு துந்தொட வென்னோ வருந்தவமே. (கஅசா)

அணிந்ததுநாண அறிந்துளந்தேளித்தல்

பொன்னே மணியே புனக்கிளி யேபுயல் வாயுமிழ்ந்த
மின்னே யமிழ்தே விளக்கொளி யேவிரைப் பூங்கொழுந்தே
கொன்னே யயிர்த்துள நாணே லொளிருநின் கோலமெல்லாம்
நின்னே யனையவ டன்னணி யாக நிகழ்த்தினமே. (கஅஎ)

பாங்கியோடுவருகேனப் பணித்தல்

நயந்தெனக் கார வருளினை யாயினங் காப்புழவ
இயந்தனக் கேற்பநின் றேங்கு மருவியிம் மால்வரைவாய்
வயந்தனக் கேற்றவை வாள்விழி நின்னுயிர் மாதொடன்றிப்
பயந்தனக் கேற்றப் படர்தலை யாதும் படரலையே. (கஅஅ)

பாங்க னிற்பயில் பண்ணையின்
நீங்கு வேலவ னேரிழைப்
பாங்கி யிற்பயில் பண்ணையும்
ஆங்க ணுற்ற வமர்ந்தனன். (கஅகூ)

கேழிலவேலோன் தோழியையடுத்தல்

எய்யா மினித்தமி யேசென் றிளமரக் காவகத்து
மையா ரளக மதிநுத லாளை மருவும்வகை
கையா லமிழ்தங் கனிவாய் மடுத்தல் கடுப்பவின்னே
நையா தவளுயிர்ப் பாங்கியி னண்ணுது நன்னெஞ்சமே. (கசூ0)

பாங்கியைக்கண்டவன் பகரவலித்தல்

உடங்கிய மெய்யுயி ரூழின் பகுதி யுணர்ந்துறுத்தத்
தொடங்கிய மொய்யருள் வீராட்ட காசத் துணைமுதல்போல்
நுடங்கிய நுண்ணிடை மாதொடெம் பானுவ லாதவின்பம்
அடங்கிய முன்னிற்கு மாயிழைத் தோழிக் கறைகுதுமே. ()

ஊர்வினுதல்

கற்றைக் கவரி மயிர்வேய்ந் தகத்துக் கடிப்புழுகு
முற்றக் கலவி வழித்து முதிர்சந் தகில்புகைத்திட்
டெற்றைக்கும் விண்ணெத் திருக்குநும் மூரெது வேந்துகவண்
சுற்றிக் கிளிகடி யுந்தொடித் தோட்டுவர் வாய்க்கிளியே. (கசூஉ)

வழிவினுதல்

குழைவளர் காது மறியக் குளிர்முகஞ் சூழ்ந்தசைய
வழைவளர் சாரற் றினைப்புனங் காக்கு மடக்கொடியே
முழைவளர் குன்றத்து நும்மூர் மொழிந்திலை யேனுமவ்வூர்க்
கழைவளர் முத்தங் கனையிருண் மேய்நெறி காட்டுகவே. (கசூங)

பெயர்வினுதல்

பதியும் பதியாப் பதிநெறி யும்பதி சேர்நெறியாப்
பொதியுங் கருத்தினை யோபுக லாயது போகமணி
நிதியுந் தருவு மொருங்குருக் கொண்டன்ன நேரிழையாய்
வதியும் பெயரினை யேனுந் தெரிப்ப மதிப்பதுவே. (கசூச)

வேழம்வினுதல்

பவளத் திருவுரு வீசன் றணிகைப் பதிக்கரையன்
தவளத்த நீறணி வீராட்ட காசத் தனிமுதன்மேல்
கவளத்தின் வீங்கிக் கடுகிய வேழங் கடுக்குமுவாத்
துவளத் தொடுத்துவிட் டேன்வந்த தோவிங்குத் தூநகையே.

கலவிஞதல்

காவித் தடவரை யுள்ளூற ருள்ளக் கரிசுமுற்றும்
மேவித் தணித்தருள் வீராட்ட காசு விமலனங்கைத்
தாவித் தழங்கு மறியொத்த மானென் சரத்தொடிங்கண்
வாவித் திரிவிழி யாய்வந்த தோவுள்ள வாமொழியே. (௧௯௬)

வன்றிவிஞதல்

வருமுலைக் கோட்டது மாழையங் கண்ணிகர் கண்ணதென்றோ
உருமுலை யோதை யுவாவுங் கலையு முரைத்தல்செல்லாய்
பொருமுலை வாய்வடி வேல்படு வன்றி புகுந்ததுண்டோ
குருமுலை வீபுனை கோதா யிதுவோர் குறியதன்றே. (௧௯௭)

வேங்கைவிஞதல்

கருமா னுரைத்திடின் வீராட்ட காசங்கைக் கொண்டருளும்
பெருமான் மருமத் தணிபடுப் பேனிற்க பேழ்கயவாய்
இருமா நிலமஞ்சும் வேங்கையெய் தேனெய் துழிபகர்ந்தால்
குருமாந் தளிர்நிறத் தாயுடை யாங்குழ கற்கதுவே. (௧௯௮)

சிங்கம்விஞதல்

சிங்கத் துரியுத்த ராசங்கத் தண்ணற்குச் சேமம்வைக்கும்
சிங்கத் துரியுத்த ராசங்க மாகவொர் சிங்கமெய்தேன்
சிங்கத் துருவிவ ரச்சிலைத் திச்சிலை சென்றதுண்டு
சிங்கத் துருவங்கொ ளுண்ணிடை கண்ணுறிற் செப்புகவே. ()

அருட்டிறத்திளமுலை தெருட்டாமைவினவல்

அருளிற் கடுத்ததன் றென்றோ கெடுதி யறைந்திலைமேற்
றிருளிற் கடுத்த குழலா யிடுகிடை தேய்ந்தொழிய
மருளிற் கடுப்ப வனமுலை நாளும் வளர்வதனைத்
தெருளிற் கடுப்பத் தெருட்டா திருப்பதென் செப்புகவே. ()

கண்ணி பூங்குழற் கோண்ணுமோவேன்றல்

அறியு மறிவுக் கறிவாகி நின்ற வமலனறி
குறியு நெறியுங் கடந்த குமாரலிங் கேசனும்வீழ்
முறியு நறுமலர்க் கண்ணியு மொய்குழற் காகுங்கொல்லோ
மறியு மறிய மறியு மதரரி வாட்கண்ணியே. (௨0௧)

மொழியாமைவினுதல்

மருந்தினை வான நிதியினை வேட்பினு மாட்டுளதேல்
விருந்தினர் மாட்டின்மை மேவச்செய் யார்விரி நீருலகோர்
பொருந்திய பல்லக டாவுய்த்து வேண்டினும் பூங்கொடியே
திருந்திய வோர்விடை யேனுங்கொ டாத திறமெவனே. (உ0உ)

பாங்கி தலைவனையயிர்த்தல்

பித்தினர் போலப் பலதொடுத் தார்பிறங் கெக்கலைக்கும்
வித்தினர் போல விடையும் விடுத்தனர் மெய்ம்மையுளம்
பொத்தினர் போல வுரைக்கொத்த வில்லின ரல்லர்பொற்பூங்
கொத்தினர் யாவர்கொல் சேயரு மல்லாக் குறிப்பினரே. (உ0ங)

பாங்கி தலைவனைத்தெளிதல்

ஊர்தங்கிச் சென்னெறி மீண்டுறு நாமத்தி னுற்றுப்பன்மான்
போர்தங்கு வேட்டை புரிந்தெதல் லாம்பொய் யிடைக்கிரங்கி
வார்தங்கு கொங்கை தெருட்டி முறியு மலர்த்தொடையும்
கார்தங்கு கூந்தலிற் சூட்டுதற் கோவிவர் காதனெஞ்சே. (உ0ச)

பாங்கி தலைவியைப் பரிமளத்தயிர்த்தல்

ஒழுகுங் கரிய குழலுங் கலம்பகத் தொள்ளொளியின்
முழுகுந் திலக நுதலு முழவுறழ் தோளும்விரைப்
புழுகுங் கலவு முலையும் புலவோர் துணியுளமும்
மழுகும் புதுமணம் வீசுவ நந்தம் வளர்கொடிக்கே. (உ0ரு)

தோழி தலைவியைத் தோற்றத்தினயிர்த்தல்

வளைவளர் கையன் விழிவளர் பாற்கடல் வார்துவரின்
கிளைவளர் காட்சிய சேயரிக் கண்கிளர் வேய்பொருதோள்
உளைவளர் சொல்லிக்கு வீங்கிற் றிடையுமுண் டில்லையெனத்
தளைவளர் கொங்கைக் கினியிட மின்று தடவுரமே. (உ0சு)

ஒண்டொடிப்பாங்கி ஒழுக்கத்தினயிர்த்தல்

தண்டலை வாய்த்தர ளங்கொடு சிற்றி றனையிழைத்து
வண்டலி னாட்டயர் வீழாண் மணிக்கழங் கம்மனையும்
கொண்டணை யாள்குரு மாமணி யூசலிற் கோளுமில்லாள்
பண்டணை யாத வொழுக்கின ளின்றிப் பசுங்கிளியே. (உ0எ)

ஒள்ளிழைப்பாங்கி யுண்டியினயிர்த்தல்

தீம்பான் மிதக்குஞ் செழுஞ்செந்நெல் வல்சியுஞ் செங்கரும்பின்
ஆம்பா கடுத்தசிற் றுண்டியு நோலையு மல்லனவும்
ஓம்பா வினிதெடுத் தூட்ட வுவந்துண்ட வட்கவைதாம்
வேம்பா யிருந்தன போலும் விழையா வினைவினவே. (உ௦அ)

செய்வினைமறைப்பிற் றேமொழியயிர்த்தல்

திரையகஞ் சேர்கடன் மெல்லென் பொருள்செறி வுற்றவெல்லாம்
கரையகஞ் சேர்ப்பது போல்வெளி கண்ட கரைவதன்றி
வரையகஞ் சேர வொளித்திடு மத்தகு மாகடல்போல்
விரையகஞ் சேர்குழ றன்னகம் விள்ளா விரகினளே. (உ௦௯)

இலவிதழ்ப்பாங்கி செலவினயிர்த்தல்

வெள்ளிடை யேமுகஞ் செய்தெழு வெள்ளம் விழையமலர்க்
கள்ளிடை வீழும் பொழில்படர் வாண்முன்பு காழ்சிறைக்கால்
நள்ளிடை யேயெழு சின்னீர் விழைய நடந்தொருசார்
தள்ளிடை நோமென் றிரங்குநள் போலத் தவிர்கிற்குமே. ()

பல்வளைத்தோழி பயில்வினயிர்த்தல்

மோட்டிளங் கொங்கை முருகுயிர் பூங்குழன் முத்தநகை
வாட்டிறம் வாட்டிய வாட்டடங் கண்ணிவள் வைகலுந்தாய்
தீட்டிய பூண்முலைத் தொய்யிலின் மார்புறச் சேர்ந்துதுயில்
காட்டிய கண்ணுக்குக் காட்டிலள் வேறுகண் ணுற்றசைந்தே.

எதிர்ப்படுபுணர்ச்சி யீர்ங்குழலுணர்தல்

கருவயிற் றூதலுங் காமரு சாயல் கழிந்துபசப்
புருவயிற் றூத லுறழத் தலைவரொண் டோள்புணர
மருவயிற் றூகும் பொழிலாடன் மற்று மறந்துபெண்மைத்
திருவயிற் றூவதன் றேமட வார்தந் திருவுருவே. (உ௧உ)

இருவருமுள்வழி யேந்தல்வினாதல்

வள்ளந் தணித்து மதர்த்துப் புடைத்த வனமுலையீர்
கள்ளந் தணித்தருள் வீரட்ட காசத்தெம் மான்கடவுள்
வெள்ளந் தணித்த விரிசடை யானை விரவலர்போல்
உள்ளந் தணித்திங்குப் போந்தது காணி னுரைமின்களே. ()

தாழ்குழற்பாங்கி தலைவன்குறிப்பறிதல்

ஏந்திய கண்ணிய ருள்ளமிங் கேசென்ற தெண்ணின்மெய்யே
காந்திய பொற்கொடி யன்னா ணிதம்பக் கடன்முழுகும்
போந்திளங் கொங்கை வரையூ டிவரும்பொங் குந்திமிரம்
சீந்திய கூந்த னெடுங்கான் புகுந்து திரிகிற்குமே. (உகச)

தளிரியற்பாங்கி தலைவிகுறிப்பறிதல்

வண்டென வன்பர் மலர்முகம் பாயு மலர்க்கரத்துத்
தண்டளிர்க் கோதை சுலாவுந் தயங்குகட் பார்வையந்தேன்
மொண்டுணு முள்ளே களிக்கும் புறத்து முனிந்தனபோற்
கண்டிடுங் கண்டன மென்மொழி மாதர் கயற்கண்களே. (உகரு)

அலர்முலைப்பாங்கி யன்புகண்டுவத்தல்

மருளுங் கடந்து மருண்மாயை கன்ம வகைகடந்தெப்
பொருளுங் கடந்தவிர் வீராட்ட காசப் பொருளொடுயிர்
அருளுங் கடந்து கலந்ததொப் பாமென் னளவுகடந்
திருளுங் கடந்த குழலியொ டான விவர்கலப்பே. (உகசு)

பெய்வளைப்பாங்கி பிறைதொழுகென்றல்

முந்நாண் மதிக்கலை செவ்வா னெழுந்தது மூசளிசேர்
மைந்நாண் மலர்க்குழன் மண்டலந் தாங்கிய வாளரவின் [வாய்
பைந்நாண் மணியல்குற் பைந்தொடிப் பேரமைத் தோண்மட
கைந்நாண் மலர்க்கம லங்கண்டு கூம்பல் கடனமக்கே. (உகஎ)

கோற்றொடிப்பாங்கி வேற்றுமைவினுதல்

வாரித் தடுவில் லுழவர்கள் சூழும் வரையமுதே
பூரித் தனமுலை தெய்வங் கமழ்ந்தது பூங்குழலும்
பாரித் தனபணைத் தோள்சே யரிபரந் தன்றுவிழி
சீரித் ததங்க முழுது மிவைதாந் திகழ்வதென்னே. (உகஅ)

சுனையாடல்கூறித் தோழிநகுதல்

முலைத்தலைக் குங்குமந் தெய்வக் குழலின் முருகுவிம்மக்
கலைத்தலைத் தூசு கதுவக் கடைவிழி மைகரைய
மலைத்தலை வான்சுனை கண்கவர் காமர் வழங்குவதேல்
கொலைத்தலை வேலன்ன கண்ணாய்மற் றியானுங் குடைகுவனே.

பொற்றேடிப்பாங்கி புணர்ச்சிகூறல்

மயிலடி கொங்கை பொறிப்ப மணிகள் கவுட்கிடத்தப்
பயிலிதழ் மூடிகஞ் சேர்த்த வெரிநுற் பலம்வரிப்பக்
குயிலிசை மென்மொழி யாய்மற்றுஞ் சாலக் குயிற்றவற்றே
வெயிலியல் பன்மணி சூழ்வெற்பின் வாய்நம் வியன்சுனையே. ()

அவ்வவளப்பாங்கி யணங்கேனக்கிளத்தல்

மணங்கேழ் சுனைகுடைந் தாடச்சென் றூளும் வரைவளரோர்
அணங்கே யெனநிற்கு நீயு முருவு மதுநிழற்ற
இணங்கோர் மணியிற் கதித்த வுருவு மெனத்துணிந்தாம்
குணங்கேழ் முதலுரு நீயோ வவளோ குறித்துரையே. (உஉக)

நாணுவபலவு நாடியதோழி வாணுதனடுக்கங் காணியவுரைத்தல்

அழல்சுழித் தார்க்கு மடல்வே லொருவ ரணிநிறத்து
நிழல்சுழித் தார்க்குங் களிறென்று நேர்சென் றுபாய்ந்ததந்தோ
கழல்சுழித் தாங்கே புடையின தாக்கிக்கை வேறிரித்துச்
சுழல்சுழித் தோடுங்கண் ணய்வரை வாய்வெற்றி தோற்றினரே.

இருவருந்தணவா வியல்பிருதிறத்து மருவியபாங்கி மதியுடம்படுத்தல்

பன்னீ ருயிரும் பதினெண் ணுடலும் பயின்றியக்கும்
அந்நீ ரெனவடல் வேலோன் றனக்கு மமிழ்துயிர்க்கும்
முந்நீர்த் தரள முறுவன் முரிபுரு வத்திவட்கும்
நன்னீ ருயிரொன்று மெய்யிரண் டாகி நயந்ததுவே. (உஉங)

ஏவினசெய்வலேன் றேந்தலிரத்தல்

கழைவளர் முத்தமும் வேங்கையம் போதுங்கைக் கொண்டுதொ
திழைவளர் கொங்கைக் கிடுகோ தினைப்புனத் தீண்டுகிளி [டுத்
மழைவளர் சாரற் பெயர்க்கோநும் மாட்டுவா ளாங்கமைகோ
குழைவளர் செஞ்செவி யீரென்னை யேவலிற் கொள்ளுமினே. ()

பிணக்கறுதோழி பெருமையினகற்றல்

விரையாக் கலிமும்மை வேயகத் தோரும் விழுமிதென
வரையாக் கடன்படும் வள்ளல்கொ லாமென மாண்டவுறுப்
புரையாக் கிடந்தன வுத்தகு நீகட னுண்டெழுகார்
குரையாக் கலவுகுன் றிற்சிறு வாழ்க்கை குறிப்பதன்றே. (உஉரு)

இழிகுலத்தாளெனு மேந்திழைப்பாங்கிக்குத்
தொழுகுலத்தாளெனத் தோன்றல்செப்பல்

திருமா றனது குலக்கொழுந் தென்றுசிந் திக்குமுக்கட்
பெருமான் றனது குலத்தினைப் பேணுமப் பெற்றிகொள்ள
வருமா தெனமுன்னு மும்பர்க ளெண்ணம் வகுப்பவொண்ணு
துருமாந்தளிரன்னவொண்டொடிப்பேதையையொண்ணுதலே.

எங்குலமிழக்குமென் றிகுளையகற்றல்

குன்றிய லுத்தொடர் வல்லின முன்பின் குறுகநிற்பிற்
குன்றுவ துள்ள வளைவயி னின்னொடு கோற்றொடியைக்
குன்றிற கீர்த்தவ ஞாதியர் நன்கு குறிக்கினுமெங்
குன்றவர் வண்குலங் குன்றுவ புன்சொற் கொழுந்தெழுமே.

தலைவனுங்குலந் தழைக்குமென்றியம்பல்

பெயர்வினை சேரி னிடையுரி யாங்கும் பிறங்கெழில்வாய்ந்
தயர்வினை யெய்தா தினிதிய லாநிற்கு மாரணங்கே
மயர்வினை தீர்த்தருள் வீராட்ட காசத்தெம் மானருளால்
உயர்வினை யேநங் குலமென்று மெம்மா லுறுவதுவே. (உஉஅ)

ஒண்டொடிப்பாங்கி யுலகுரைத்தொழித்தல்

கலைத்துறை போய வறிவிற்குங் காமர் குலங்களுக்கும்
சிலைத்துறை போய நலத்துக்குஞ் சீர்மை பயப்பநிற்கும்
நிலைத்துறை வையத் தியற்கையின் மாதினை நீபுணர்க
மலைத்துறை நாட்டும் படைத்தழும் பேய்ந்த மலர்க்கரனே. ()

அண்ணன்முறையல தெண்ணிலனென்றல்

வையத் தொழுக்கது மாமறைக் கண்ணதும் வாஞ்சைமிக்கோர்
உய்யத் தொடர்வது மோங்கின்ப மாவது முற்றிவண்யான்
செய்யத் தொடர்வது கண்டாய் திதலைமென் பூண்முலையாய்
நையத் தொடர்வன வேமற்றை மன்ற னயப்பனவே. (உ௩0)

ஆயிடைப்பாங்கி யருமையினகற்றல்

நண்ணுங் கருத்துடை வீராட்ட காசத்து நாதனருள்
பண்ணுங் கருத்தும் பயிலுங் கருத்தும்பல் கான்மறந்து
கண்ணுங் கருத்து மதன்வழிக் கண்ணுங் கலந்ததொப்பாம்
எண்ணுங் கருத்தவெம் மாதோ டெனக்கிங் கியல்வகையே. ()

மன்னவனின்வழி முன்னுவளென்றல்

நினைப்பித் தடுத்தருள் வீராட்ட காசநிமலன்மற்றும்
முனைப்பித் துயிர்வழி நின்றதன் றேமன முற்றும்விற்ற
எனைப்பித்தி னீக்க விரங்குவை யேலினி மாதர்நல்லாள்
தனைப்பித்தி கைக்குழ லாய்நின தேவலிற் றந்திடுமே. (உ௯உ)

அவளறிவுறுக்கவேன் றிகுளையகற்றல்

சடம்படு மாவியு மாவியு மாயிற்சந் திக்கவிடை
யுடம்படு மெய்யொன் றுறவேண் டுவதுட லோடுயிர்வந்
திடம்படு மாயி னிடையொன்று வேண்டுவ தெற்றுக்கண்ணால்
மடம்படு கண்ணிக்கு நீயே மொழிய வலித்தியின்றே. (உ௯௩)

ஒழித்துறிற்பழிநிற் கொழியாதென்ன வழுத்தபுகிழவன் வருந்தியுரைத்தல்

புரப்பான் விடுப்பி னுலகமென் னும்புரை தீர்ந்தவள்ளல்
கரப்பா னெனிலிரப் பானெங்ங னுய்யுங் கனிமொழியைத்
தரப்பான் மையையல்லே யாயிற் றபுகமற் றியான்பழிநீ
துரப்பான் புகுநெறி யில்லைகண் டாய்சுடர்ப் பூண்முலையே.

பிறைநுதற்றேழி பின்வருகேன்றல்

கற்றைப் புரிசடை வீராட்ட காசக் கடவுளருட்
பற்றைப் புரிகலர் போற்கொடி யாரெமர் பார்த்திபனே
இற்றைப் பொழுதரி தாங்கண்ணி யேற்ப தெமக்குமெய்யே
மற்றைப் பொழுது வரினெளி தாகும் வரையகத்தே. (உ௯௫)

கையுறையேலேனக் காவலயிரத்தல்

மாவைத் தணித்துய ரத்தியைச் சாய்த்துவண் வேங்கைகுழைத்
தேவைத் தவரொடு மாய்த்தென தங்கை யிருந்தநறும்
பூவைத் தளிரைநுங் கைபகத் தாக்கிப் புலம்புமெனைக்
காவைத் தமர்த்த படைவிழி வேய்த்தோட் கனங்குழையே. ()

காதலற்கிகுளை பேதைமையூட்டல்

தணியா வருள்வளர் வீராட்ட காசத் தலைவர்விழை
அணியா மிருகமெய் தீரவை தாமிங் கடுத்துவிடின்
பிணியா முழுந்துயிர் மாய்வதல் லாற்பிழைப் புண்டுகொல்லோ
துணியா வறிவு புறத்தின்றி முற்றிய சூழ்ச்சியரே. (உ௯எ)

பேதைமையூட்டிய பெய்வளைத்தோழிக்குக்
காதலன் பொருந்தக் கட்டுரைத்தல்

மிருகக் குலங்களெஞ் சாத்தனி வேட்டை விளைக்குமென்னெஞ்
சுருகக் கடவிய வோடரிக் கட்படை யொண்முகத்தீர்
கருகக் கரம்வைத்த பல்லவம் பாய்ந்து கலக்கியுயிர்
பருகக் கடுகிய மாவஞ்சு வீரெனப் பார்த்திலமே. (௨௩௮)

பிணைநடைத் தலைவியைப் பேதைமையூட்டித்
துணைமுலைப்பாங்கி துணைவனையகற்றல்

கலைத்தொழிற் குள்வைத் தளித்தற்குக் கைவைத்த காமர்வெற்பா
கொலைத்தொழிற் குள்ளமுங் கையுங் குறித்துவைத் தார்கடங்கை
மலைத்தொகு தீம்புனங் காப்பான் பலவுயிர் வாட்டுகிற்பாள்
சிலைத்தொழிற் றேண்மெலி வெங்ஙன மோர்ந்தருள் செய்யுமன்றே.

பேரறிவுடைமை பெருந்தகை கிளத்தல்

கடங்கலுழ் வேழ முதலா மிருகக் கணந்துமிக்கும்
மடங்கலுந் தன்னினங் காப்பதன் றேமதி வாணுதலாய்
தொடங்கரு வன்கொலைப் புன்குடித் தோற்ற முறினுமன்ற
படங்கிள ரல்குலென் ஞேயறிந் தோம்பும் பரிசினளே. (௨௪௦)

விளைவிலளவளேன விகுளைவிலக்கல்

கரம்பை திரம்வளர் காரனை யாய்கனி வேட்டிளம்பூ
வரம்பைபை மந்தி யடுக்கு மடுக்கத் தகன்குறிச்சிக்
குரம்பையிற் கொம்புக்குக் கொங்கை யரும்பில பிள்ளைமையின்
வரம்பை யிகந்து வயங்கரி கண்கண் மலர்ந்திலவே. (௨௪௧)

இளையளாயினு மென்னுயிர்க் கணங்கெனத்
தளையவிழ்தாரான் றாழ்ந்துரைத்தல்

உளையவ ளாயுயிர் ஞான்றே மடங்கலொண் மாக்குழவி
அளையவ ளாயெழு வேழத் தயிற்கோட் டவிர்முருந்து
களையவ ளாயெழு கல்லதர் நாட்டுக் கனங்குழையாள்
இளையவ ளாயினு மாரணங் கென்னுயிர்க் கேந்திழையே. (௨௪௨)

இவற்றிளமுலையா ளிணக்கமறிந்திலளெனக்
கவற்றியவுளனொடு காவனிற்றல்

தளவைத் தகர்த்த தவளத்த வாணகைத் தண்மதியப்
பிளவைத் தணித்த பிணைநுதற் பெய்வளைத் தோளியொடாங்
களவைத் தெரித்திலள் பாங்கியு நீயுங் கதித்தவிழை
வளவைத் தணித்திலை நெஞ்சேயென் செய்து மகன்வரைக்கே.

தன்னறிவுளதெனத் தலைவற்கிகுவளை
முன்னுறுபுணர்ச்சி முறைநிறுத்துரைத்தல்

பலாவம் பொழிலி னொருதா யுயிர்த்த பலமஃபிற்கும்
கலாவம் புனைந்த களிமயின் மூத்த தெனக்கருதச்
சுலாவம் பரகிமிர் வெற்பினெம் மாதுக்குத் தோன்றன்முன்னம்
இலாவம்பு வாய்ப்ப முதுக்குறைந் தாளென வெண்ணமுண்டே.

ஆற்றியதோழிக் கவனயந்துரைத்தல்

கானொத்த கூந்தற் கனியொத்த செவ்வாய்க் கருநெடுங்கண்
வானொத்த நுண்ணிடை மாதர்நல் லாய்மயர் கூர்ந்தவுளம்
தேனொத் தமிழ்தொத்த மென்றீங் கிளவிசெப் பாவிடினே
ஊனொத்த வாழ்க்கையு ரூமே துவர வுலக்குவதே. (௨௪௫)

அன்னையைப்பாங்கி யஞ்சியச்சுறுத்தல்

முந்தினை யாங்ஙனஞ் சென்றனை பைங்கிளி மூரிமயில்
செந்தினை யார்த்தியென் றென்னுயிர் மாதையுஞ் சீறுமன்னை
வந்தினை யாநிற்ப வென்னையுஞ் சீறும் வளம்புனத்துக்
கந்தினை யாத்தன்ன தோளாயினிச்சென்று காப்புக்கொண்டே.

அன்னவடமரை யஞ்சியச்சுறுத்தல்

வில்லின ரம்பினர் வீங்கிய சீற்ற விளைவினர்வன்
சொல்லின ரென்னையர் தீம்புனங் காவலிற் றேற்றுவரால்
புல்லினர் போக்கருந் தன்மையி னாய்ப்பொலந் தேர்க்கதிரோன்
கல்லினன் மேற்றிசை மெல்லிய லென்னிற் கலங்குவளே. ()

குறியெதிர்பெருது கோற்றவேலவன்
முறுகியதுயரின் முட்சிமீட்டுரைத்தல்

இட்டிடை வெஃகி யதுபோற் றுளும்பி யிறுக்குமுலை
மொட்டினை வெஃகி யதுபோற் பிணியுண்டு மொய்யரிக்கண்
பெட்டிக வின்றி யதுபோற் கறங்குதி பேதைநெஞ்சே
மட்டினை வெஃகி வரைநோக் கியமுட மானநின்றே. (உசஅ)

சொல்லவட்சார்த்தித் துன்னிடம்பெற்றுத்
தாங்குயிர்வேலோன் பாங்கியையிரத்தல்

கன்னற் பொருசிலைக் காமனும் வாளி கடவியென்மேல்
இன்னற் பொருந விளைத்துவிட் டானெய்த் திளிமொழியாய்
நென்னற் பொழிற்குறி நல்கின ளென்னுயிர் நிற்கும்வகை
மின்னற் பொறிநுண் சுணங்கே ரிளமுலை மென்கொடியே. ()

பாங்கியோடோற்றுமைப் படவிறைகிளத்தல்

பைந்தாட் குவளை யடைச்சிப் புணரிய பைம்பொழில்வாய்க்
கந்தார மென்மொழி கைகலந் தாடுகங் கண்ணுறுகோ
சிந்தா குலத்தி னிரங்தேற்குத் தான்செய் குறிநிலையைத்
தந்தாங் ககன்றவள் பின்சென்ற நெஞ்சந் தணப்பரிதே. (உருo)

உள்ளமுழவதும் வேள்ளிடையுமிழ
வேட்டபாங்கிக்கு மீட்டு மீதுரைத்தல்

வம்மோ வினிய மிழற்றுஞ் செழுந்துவர் வாய்க்கிளியே
தம்மோ வெனநின் றிரப்ப வடுத்துத் தயங்குகங்குல்
நம்மோ ரனையண் மலர்வேய்ந்து பொய்த னயந்துதமர்
தம்மோ ரனைய விருள்புலர் வைகறை தாழ்குழலே. (உருக)

நின்னுளம்விழைந்த மின்னிடைமடந்தையை
யெய்யேன்யானென விகுளையியம்பல்

பள்ளம் படர்ந்த பெரும்புனல் போலெறும்ப் பார்த்திபனின்
உள்ளம் படர்ந்த வுருவத்த ளோரை யுழப்பினெங்கும்
வெள்ளம் படர்ந்தன மெல்லிய லாருள்ளும் யார்விரிவீக்
கள்ளம் படர்ந்த கணவரைச் சூழ்ந்துயர் காவகத்தே. (உருஉ)

தலைவிவண்ணந் தலைவனியம்பல்

ஒளிதங் கியமதி தங்குஞ் சகோரமொண் வள்ளையின்வாய்க்
களிதங் கியசுற வேறுக நீங்குங் கதிர்க்குவட்டின்
அளிதங் கரும்பொற் கணிமலர் பூக்கு மகன்கடல்வாய்த்
தெளிதங் கியபன் மணியிமை யாநிற்குந் தேமொழிக்கே. ()

கோவ்வைவாய்ப்பாங்கி செவ்வியிலளென்றல்

செவிமரு ளுசலுந் தேங்களிச் சந்தத் திணிமுலைநேர்
சவிமணிப் பந்துங் கவுணிகர் தண்ணீர் நிலையுமகில்
அவிமலி கூந்தல் பொருமலர்க் காவு மழகுபெரு
கவிமணி மோலிக் குரிசிலெம் மாது கலப்பின்றியே. (உருச)

செம்மலிதுவே செவ்வியாமென்றல்

திருந்தவந் தாளுங் குமாரலிங் கேசனைச் சிந்தைவைத்துப்
பெருந்தவந் தாவி னுழப்போர் கடுப்பப் பிணைந்தவுள்ளம்
வருந்தவந் தாமரை மாதுநின் றூலது வேமம்மர்நோய்
பொருந்தவந் தீர்த்தென்னை யோம்புறும் வாயில் புனமயிலே.

குறையயர்ந்தேனெனப் பாங்கிகூறல்

வருக்கைப் பொழிலை நினைந்தெழு மும்மத வார்மருப்புப்
பருக்கைப் பொருப்பெதிர் வாழையங் கானம் படர்சிலம்பின்
இருக்கைப் பொருப்பர் புதல்விய ரெங்குறை யீங்கயர்ந்தாம்
திருக்கைப் பொருவடி வேற்பொலந் தார்ப்புயத் தேர்மன்னனே

கேடும்பீடுங் கூடியமுகத்தா னீடியகுறையை நாடியவனுரைத்தல்

உணங்கு குலாவிய தேரையஞ் சாரலொண் பூம்பொழில்வாய்
அணங்கு கொலாமுரை யாயென் றெதிர்த்தனு மாயிழையாய்
பிணங்கு குலாய பெரும்பணைத் தோட்பிறை வாணுதலாட்
கிணங்கு குலாம்விழி முத்துக மூர லிலங்கினவே. (உருஎ)

நீக்கலினுகிய நிலைமையவ னுரைத்தல்

தண்டலை வானரம் வானரப் பூஞ்சுனைத் தாழ்வரைவாய்
மண்டலை நாட லரிதாஞ் சிலம்பின் மறவர்குழாம்
எண்டலை யேலா ரிடர்பெரி தாற்றுந ரென்னைசெய்கோ
புண்டலை வேய்ந்து பொறிதும்மு வேற்கைப் புரவலனே. ()

அந்திலைநோக்கி யாண்டகைகலங்கல்

பின்னிலை வேட்டல் பெரிதினி தேபின்னர் மாறிநின்று
தன்னிலை தேய்ந்து தணியா ருயிரைத் தழீஇக்கொடொன்று
முன்னிலை யீச னருள்போற் றமுவி முனிதுயர்கூர்
என்னிலை நோக்கி யிரங்கவல் லார்ப்பெறி னேழைநெஞ்சே. ()

புரவலன் மடலே பொருளென மதித்தல்

பஞ்சாய் முருந்தின் முறுவற் பவளச்செவ் வாய்க்கிரங்கி
நெஞ்சா யலைகிளை யில்லார் நெடியர் நிழல்சிறியார்
துஞ்சா வனந்த ரெருகுப்பா ரெனினுந் துலங்குநம
தெஞ்சா விடும்பை யெளிதொழிப் பாரிங் கிருந்தனரே. (௨௬௦)

மடலேற்றுலகின் வைத்தவனுரைத்தல்

என்பா லருளுங் குமாரலிங் கேசனை யேத்தலர்போல்
அன்பா லிணங்கு மணங்களை யார்பொருட் டாவிறைய
வன்பால் விலக்கிய பெண்பெறின் வையத் தவர்க்குமன்னும்
ஒன்பா னுயிருற்ற பெண்ணன்றி வேறுரு ரானில்லையே. (௨௬௧)

ஒண்மடல்யானே யூர்வலென்றல்

கவளத்த வேழக் கவர்மணிப் போர்வைக் கடவுள்விழை
தவளத்த நீறென் பெருக்குந் தரித்துத் தருமடன்மா
பவளத்த வாய்நங்கை பண்பினைப் பாடிப் படங்கைதழீஇத்
துவளத் தடாய வுளத்தாய்நம் மூர்வயிற் றாண்டுதுமே. (௨௬௨)

அறனின்மைகூறி யாங்கவண்மறுத்தல்

கலைமுற்றும் வையத் திழவா தளிக்குங் கடனடுத்த
இலைமுற்றும் வார்மட லேந்தக லல்கு லிடைநெருக்கும்
முலைமுற்றும் பொன்விளை மாதினை வீழ்ந்து முரித்தணியின்
சிலைமுற்றுந் திண்புய யார்கண்ண தாகுந் திருந்தறனே. (௨௬௩)

விலகியபாங்கிக்குத் தலைவனெதிர்விளம்பல்

அருளு மருளு நலனுமெ லாம்பண் டறிவுடையேன்
இருளு மருளு மிணர்மலர்க் கூந்த லிலங்குதொடித்
தெருளு மருளும் வழங்குஞ் சிதரரிக் கண்பொருட்டு
மருளு மருளு மடனுடை யேனின்று வாணுதலே. (௨௬௪)

எழுதரிதென்ன வேந்தவலவிலக்கல்

பொழிலொன்று பூங்குழ னல்லா ளவயவம் பொற்பவெலாம்
எழிலொன்ற நாடி வரைந்துகைக் கொள்ளினு மின்பமிக்காம்
தொழிலொன்றுந் தீட்டவல் லாய்வல்லே யேற்றுணை யப்புகுக
தழலொன்று வேற்கை தளிரொன்றி நின்ற தனிவள்ளலே. ()

கருத்துறிற்றேழிலுங் காட்டுவலென்ன
வருத்தியிற்றவலவ னவட்கெதிர்கிளத்தல்

நவையவங் கட்ட குமாரலிங் கேச னளியருளால்
அவையவங் கட்டழ கார முழுது மமைத்துவல்லே
சுவையவங் கத்தொழில் சாணிய வாவியுந் தோற்றவல்லேன்
கவையவங் கொத்துழன் மால்வரை மாது கருத்துறினே. ()

மெய்த்திறம்விளம்பின யாயின்வேஃகல
பேர்த்திறம்விளம்பின போலுமென்றேள்ளல்

உருத்தக வாக்கி யுயிரும் புகுத்து முயர்வுவல்லின்
கருத்தழி முன்னமெம் மாதே யெனவொரு கன்னிதனைத்
திருத்தக வாக்கிக்கைக் கொண்டமை யாது திறனிலர்போல்
வருத்தமிக் கைய விரப்பதென் னேவெங்கண் மாட்டுவந்தே. ()

எள்ளற்பாங்கியை யிறைவனெதிரேள்ளல்

முட்டாட் கமல முதல்வனைப் போலெம்மை முன்னினைகொல்
கட்டா ரலங்கற் கருங்குழ லாய்கரு மால்சிரங்கை
வட்டா டியதிறல் வீராட்ட காசத்தெம் மான்வகுத்த
ஒட்டா ரவையின் மறையோ டுலக வொழுக்கயர்த்தே. (உசுஅ)

மடலினூக்கம்வரவரத் தணித்தோ
ளடல்வேலண்ண லாற்றவுரைத்தல்

துணிந்தொன்றும் யான்சொல்ல வல்லேன்சுடரிமைக்குந்தரளம்
அணிந்தொன்று கொங்கை யணங்கனை யாளடித் தாமரைக்கீழ்ப்
பணிந்தொன்ற நின்னுளத் தாதர வோதிப் பயிற்றினல்லால்
தணிந்தொன்று வார்க்கருள் வோயிது யான்செயத் தக்கதுவே.

மதியுடன்படுப்ப வலித்தபாங்கி
கதுவியவுரிமை மதியோடுகிளத்தல்

திருகிய வாவி யிருள்வழி நிற்பச் செறிந்தவிருள்
அருகிய வீச னருளு மதன்வழி நிற்பதுபோற்
பெருகிய நீரிற் பெயரி னுடங்கு பெயர்குவளால்
கருகிய பூங்குழற் காரிகை யீதவள் காதன்மையே. (௨எ0)

கோற்றொடித்தலைவியைக் குறைநயப்பித்தற்குத்
தெள்ளியபாங்கி மெள்ளவுரைத்தல்

மூவரு மேத்துவ தொத்தது மூரிச் சிலைமுதன்மை
யாவரு மாற்ற வணங்குவ தொத்த திருங்கொடைக்கை
காவரு தோற்றங் கவற்றுவ தொத்ததக் காவலரிங்
காவரு தோற்ற நகையது நீயு மறிவதுண்டே. (௨எக)

அறக்கழிவுடையன வலர்முலைப்பாங்கி
குறிப்புவெளிப்படுத்தக் குறித்துரைத்தல்

வயமான் றுருவுநர் போலடுப் பார்நென்னல் வாயெனக்குக்
கயமா மலரன்ன கண்ணுய் கருத்து நெகிழ்வித்தங்கே
புயமார் தரவண்மிப் புல்லினர் வன்சொலிற் போக்கவின்றும்
பயமார் பொழிலினர் காணுதி நீயும் பரிசடுத்தே. (௨எ௨)

ஆங்கவன்றளர்வு பாங்கிகூறல்

பிடியொடு தோன்றிய குஞ்சர நோக்கிப் பிடித்துணங்கும்
கடியொடு தோன்றிய கண்ணியொ டென்னைக் கடைக்கணித்துக்
குடியொடு தோன்றிய கொள்கையி னுய்குழை கிற்பினல்லா
தடியொடு தோன்றுந் தொழில்புரி யார்பித்தி னுழ்ந்தனரே. ()

மடன்மாவேற வலித்தனனென்றல்

விண்ணோங் கியபெண்ணை மாமட னேக்கும் விழையகிலா
மண்ணோங் கியவெருக் கின்முகிழ் நோக்கும் வரைகுவன்போல்
எண்ணோங் கியவென தின்னுரு நோக்கு மிதுவுமுண்டால்
பண்ணோங் கியமொழி யாயறி யேனவன் பாவகமே. (௨எச)

கவர்பொருட்பாங்கிக்குக் கவர்பொருள்வகையா
லென்றுரைத்தவனையென விறைவிகூறல்

உயங்கிய வண்புல வோர்க்கருள் செய்ய வொலிகடல்புக்
கியங்கிய வல்லவு ணக்களை மாய்த்திருந் தோடுணையாத்
தயங்கிய மாமறை யோம்பலிற் றாழ்குழ லாய்வரைவாழ்
நயங்கிளர் நம்பிக்குங் கான்வளர் நம்பிக்கு நாட்டமொன்றே.

பாங்கிதன்மேற் படுத்தியபொருளை
யாங்கவடன்மே லாக்கினள்கிளத்தல்

வானெனத் தோற்றிய வீரட்ட காசத்து வள்ளல்பெம்மான்
யானெனத் தோற்றிய மாமல மாய்த்திட் டிருந்தவத்தோர்
தானெனத் தோற்றிய செய்தியெல் லாந்தனக் காக்கிவிடும்
கானெனத் தோற்றிய பூங்குழ லாய்கடல் சூழ்நிலத்தே. (உஎசு)

மடலரிதாயினும் வரைபாய்வுண்டென
அடல்வேலண்ணல யஞ்சினளெதிர்தல்

வெள்ளாங் குருகு மகன்றிலுந் தூங்கும் வியன்குடம்பை
உள்ளாங் கருவு முலப்பில தோங்கு பனையெனினும்
கள்ளாங் கொழுகும் வரைபாய் தலுமுண்டு காதனெஞ்சே
தள்ளாங் கடிதெதிர் வாந்தணப் பாரந் தளர்வினையே. (உஎஎ)

குறைநயப்பித்தபின் கோய்தளிரேந்திக்
கறைபயில்வேலோன் கண்டனனிரத்தல்

ஆலங் கனிந்த விழிக்கா விகளள்ளி யள்ளியுண்ட
சீலங் கனிந்தவென் னுயி ரோடுஞ் செறிந்தவுளம்
கோலங் கனிந்த கரத்தா மரைதளிர் கொண்டளிப்பின்
ஏலங் கனிந்த குழலாய் பழியன் றியைபுடைத்தே. (உஎஅ)

அரிதுமறைவிடுத்த பெருமையைத்தெரிப்பான்
கையுறைவகையிற் பெய்வளைவிலக்கல்

களம்பயில் கண்டத்த னேகம்ப நாதன் கருணைவளர்
வளம்பயின் மாந்தளி ராகவை வேலெங்கு லத்திறைவன்
உளம்பகை யென்ன வொருமா வெழுதலு முள்ளவெலாம்
இளம்பகை யெற்றிகழ் வாரெங்கு லத்தோ ரெழின்மன்னனே.

(இதுவுமது)

மாசின் மணியை வலம்வரும் போதி வனத்தரசின்
ஆசின் மணித்தழை யாயினு மேனை யரசைவென்ற
காசின் மணியக லல்குலிற் சேர்த்துங் கடனரிதால்
தேசின் மணியெறுழ்த் தோளாய் திலகத் திருநுதலே. (உஅ0)

(இதுவுமது)

காவிரி யாற்றங் கரையானைக் காவெண் கனியுகுக்கும்
பூவிரி நாவற் புதுத்தழை யாயினிப் பூதலத்தில்
பாவிரி பாவலர் பாவினுங் கேட்டறி யாரெமர்கள்
தாவிரி வேல்வலத் தாயது வேற்குந் தகுதியின்றே. (உஅக)

(இதுவுமது)

உடம்பிடி யன்னகண் ணுளர சாளு மொலிமதுரைக்
கடம்பணி பூந்தழை வீழ்வதொன் றனுங் கதிர்முடியோய்
அடம்பணி செஞ்சடை யண்ணறன் பிள்ளைக் கணிபடுத்திட்
டிடம்பட வைப்பதென் றத்தழை யென்று மிறுத்திலமே. ()

(இதுவுமது)

மந்தா நிலமுந் தமிழும் வளரு மலயவெற்பில்
சந்தார் தழைகொண் டருளநின் றுய்தகை சாலுரவோய்
கந்தார் மணிப்புயத் தார்பலர் மார்புங் கலப்பதெனப்
பந்தாடுஞ் செங்கையெம் பாவைதொ டாளந்தப் பாதவமே. ()

(இதுவுமது)

அடுக்கத் தனிநலம் வீசுஞ் சுசீந்திரத் தண்ணலெதிர்க்
கடுக்கைத் தழையுங் கடிமலர்ப் போதுங்கை கூப்பினல்லால்
உடுக்கத் தகுவது மொண்முலைப் பூங்குழ லாடணியாத்
தொடுக்கத் தகுவது மல்லகண் டாய்சுடர்ப் பூணவனே. (உஅச)

(இதுவுமது)

கற்பகத் தேந்தழை மேருவின் றென்சார்க் கலித்தெழுந்த
பொற்பகத் தேய்க்கும் பொலங்கெழு நாவலம் பூந்தழையும்
வெற்பகத் தேயெங்கண் மாதணிந் தால்விண் ணரமகளென்
றற்பகத் தேதுமில் லாமலை வாழ்நர்க ளஞ்சுபவே. (உஅரு)

(இதுவுமது)

ஊட்டிய தென்ன வொளிகிறப் பூந்தளி ரும்பருந்தாழ்
கோட்டிய வேழச் சிலையான் குறித்து விடுங்கணையுள்
வாட்டிய வெந்துயர் வாளிகொண் டீயு மரத்ததென்றால்
நீட்டிய வண்புக ழோய்வஞ்சிக் கெங்ஙனஞ் சேர்ப்பதுவே. ()

(இதுவுமது)

நிரைக்கு மணிகுவ டோங்குந் தணிகை நெடுங்கிரியின்
விரைக்கும் வியன்சுனைச் செங்கழு நீர்விண் ணகந்தனக்கும்
தரைக்கு மடிப்பரி தான்ஞான சத்தி தரன்புயத்துக்
குரைக்கும் வகையன்றி யேற்கும் வகையில்லை யுத்தமனே. ()

சேட்படுதலைவன் சேட்படைப்பாங்கி
கோட்படலின்றிக் கூடியநினைத்தல்

அருளுந் திறத்தினள் போற்பசைத் தீஞ்சொ லறைவதல்லால்
இருளுந் தொழுங்குழ லாட்ககத் தேபசை யேதுமில்லை
மருளுந் தகநின் றினைவதி னுவதென் வன்னெஞ்சமே
பொருளுந் துணையுமுன் புல்கிய வேமப் பொழிலிடமே. (உஅஅ)

குறிப்பறிபாங்கி மறைத்திடினேன்னை
யுள்ளியதரிதேன வள்ளலைத்தழாஅல்

தந்தை வயிற்றி னிருந்தன்னை பாங்கர்த் தவிர்ந்தகரு
அந்தி லுயிர்த்த வழியினல் லாலவன் மீட்டணைதல்
எந்த வழியினு மில்லைகண் டாயிலை வேற்கரவா
முந்தை மணமின்னுங் கூடுங்கொ லோமுகில் சூழ்பொழிற்கே.

தளர்ந்தவனபெரிதேனத் தளர்வுநீக்கல்

கொல்லி மருங்கெறும்ப் பூதம் புணர்த்த குவவுமுலை
வல்லி மருங்குலம் பாவைகண் டென்னவண் ணம்பிறிதாய்
எல்லி மருங்கிருந் தாமரை யென்னவி ருந்தனையால்
சொல்லி மருங்கக லாத்தொழில் வாய்ந்த துணர்க்கரனே. ()

அன்புற்றதோழி யசதியாடல்

தழைகொண்ட தங்கை யுரைகொண்ட தாற்றனி வேட்டையுளம்
கழைகொண்ட வார்சிலைக் காமரு வேளைங் கணைகொண்டதால்
பிழைகொண்ட நெஞ்சம் பிணைந்தறி யாப்பெருமான்களம்போல்
மழைகொண்ட சாரல் வரைவாய் நிகரில்லை மன்னவற்கே. ()

இன்னகைகண்ட மன்னனுறுத்தல்

இடித்துத் தடித்து வழங்கிய நீல வெழிலிமழை
பொடித்துத் தரணி புரப்பதன் றேபுரை தீர்கிளவி
நொடித்துத் தரள நகையெழில் காட்டி நுவல்குறையை
முடித்துத் தருவதற் கையமுண் டோவென் முனிநெஞ்சமே. ()

கையுறைபுகழ்ந்து காவலனீட்டல்

வெள்ளி வரையினு மேரு வரையினும் விண்ணினுமில்
வள்ளி வரைநும் புனத்தய னென்னல் வளர்ந்ததெய்வக்
கள்ளி வரைதம ருங்கணி வாய்க்கடி யார்ந்ததிது
உள்ளி வரைவுசெய் தேனுமர் வீழு முகப்பினதே. (உ௬௩)

பாங்கிகையுறை தாங்கினளுரைத்தல்

தாக்கிக் கடுகிய மும்மத வேழந் தனியிடரின்
நீக்கிக் கருணைசெய் தாய்நிலை யாத துயரழுந்த
நோக்கிக் கடிமலர்ப் பூந்தழை நுன்கைய தெங்கரத்த
தாக்கிக் கொளாது விடினற னேவன் றருளுமன்றே. (உ௬௪)

கையுறையேலாக் கடனிவையென்று பையரவல்குற்குப் பாங்கிபகர்தல்

புல்லரும் பான பருவமெ லாஞ்சென்று போதுகொண்ட
மெல்லரும் பாதித்தன் முன்னெகிழ்ந் தாங்குவெய் யோன்கனிவாய்ச்
சொல்லரும் பாநிற்குந் தோறுங் கரைந்த துளக்கின்மன
நல்லரும் பார்குழை நோக்கக் குழைந்தன் று நன்னுதலே. ()

கையுறையேற்றற்குக் காரணம்விளம்பல்

தன்னுயிர் சாயினுஞ் சாய்கவென் றுன்னித் தறுகணொடு
நின்னுயிர் மேல்வந்த நீள்கரக் குஞ்சர நீக்குமவர்
மன்னுயி ரூசலி னிற்பவுங் கைத்தளிர் மாழ்கவுமிங்
கென்னுயி ராரணங் கேபுார்த் திருக்க வியல்பில்லையே. (உ௬௬)

ஏற்பதினேலாமையிற் பழிமிகுமேனப்
பாற்படத்தலைவிக்குப் பாங்கிபகர்தல்

வினையின் விளைவினை யார்கடப் பார்விரி பூங்குழலாய்
தினையின் வளம்புனந் தீராக் கரிவென்ற செல்வரங்கை
நனையின் மணித்தளி ரேற்பதி னூங்கு நவையுள தாம்
பனையின் மடல்புனைந் தியாவரு மார்ப்பப் படர்தரினே. (௨௬௭)

தோகையைக் கையுறை தோழியேற்பித்தல்

விண்ணத் துயர்ந்த சிவபுரத் தெல்லை விரிபொழிலும்
வண்ணத் துயர்ந்த விதற்கிணை யில்லா வறியவென
எண்ணத் துயர்ந்த விறைவரிவ் வோங்க லெழுந்ததெய்வத்
தண்ணத் துயர்ந்த கணித்தளி ரீத்தனர் தாழ்குழலே. (௨௬௮)

ஏற்றவள்வண்ண மேந்தலுக்குரைத்தல்

உளரிய மென்னரம் பின்மொழி யோடரிக் கண்மடவாள்
விளரிய வங்கமெ லாம்வரு டிக்கொண்ட வீழ்தளிரால்
தளரிய வண்ணம்பெற் றுள்செல்லு மாவியுந் தாங்கினளால்
வளரிய வான்மருந் தோவைய நீதந்த வண்டளிரே. (௨௬௯)

குறியிடந்தலைவன் கோள்ளக்கூறல்

புறங்கொண்டு பார்ப்பி னிருளாய்ப் புகுந்தகத் தேகலவின்
நிறங்கொண்ட பன்மணி நீடொளி யாய்நிவந் தோங்கியழல்
மறங்கொண்ட வேங்கை யதனுடை யான்வண்ண மானுவதால்
அறங்கொண்ட செஞ்சிலை யோயெங்கண் மாத ரணிபொழிலே.

நீடமைத்தோளியோ டாடிடம்படர்தல்

அரும்பு முலையி னவிர்குவ டேங்க வமிழ்திசையின்
சுரும்பு முரலும் பொழிற்கிளி யேங்கத் துணைவிழியின்
விரும்பு நறுஞ்சுனைக் காவிக ளேங்கவென் றுடுகஞ்செல்
கரும்பு விழைபணைத் தோளாய் வளர்க்குநங் கார்ப்புனமே. ()

ஆயவேள்ள மாயத்தினகற்றல்

அப்பொழிற் சாரற் சிலர்போய்க் கரக்க வருவிதத்தும்
உப்பொழிற் சாரற் சிலர்போய்க் கரக்க வுதன்புடைய
மைப்பொழிற் சாரற் சிலர்போய்க் கரக்க வளங்கனிந்த
இப்பொழிற் சாரலின் யாந்துரு விச்செஃறு மேந்திழையே. ()

குறியிடத்துய்த்து மறைபவளுரைத்தல்

களிக்கய லன்னகண் ணுய்மயி லாடுவ கண்டொளிரும்
பளிக்கறை பூம்பொழில் வைகுதி யான்பசுந் தேன்மழையின்
துளிக்கவண் டார்மலர் குற்றுத் தொடுத்துத் துணையவந்திங்
களிக்குவல் வார்ந்தகி லாவியுண் டீழ மணிகுழற்கே. (௩0௩)

தனிமைகண்டிறைவியைச் சார்ந்தவனுவத்தல்

பூரியர் மார்பும் பொருந்து மருமத்துப் பொன்னுமைதீர்
ஆரியர் நாவு மசையு மலர்நா வகத்தணங்கும்
சீரிய நின்போன் மனத்தகத் தாதலுஞ் செல்லச்சென்று
வேரிய பூம்பொழி லுள்ளகத் தாதலு மேவரிதே. (௩0௪)

வாடிடைநோக்கி வருந்தினன்போல
ஆடமைத்தோளியை யார்வமோடணைதல்

பெருத்தன தோளொடு கொங்கை மதர்த்த பிணைவிழிக்கண்
திருத்தக வல்குல் வளர்ந்தது கூந்தறெய் வங்கமழ்ந்த
குருத்தளிர் மாமை கவர்ந்தது மேனி கொடிமருங்குல்
விருத்தமென் ஞேநினக் கென்னெடு காண்டொறு மெல்குதியே.

மணந்ததலைவன் மகிழ்சிறந்துரைத்தல்

கலைமுற் றமிழ்தந் தரினுங் களங்க மதியுமுயிர்
நிலைமுற் றமிழ்தந் தரினு நெடுவரை வாய்ப்பயிலா
அலைமுற் றமிழ்தக் கடலுமொவ் வாவணிப் பூண்முலையைச்
சிலைமுற் றியவெனை நேரார் சகோரமுந் தேவருமே. (௩0௬)

தலைவன்விடுத்தல்

செவ்வாய்ப் பவளமும் வெண்ணகை முத்துந் திரிந்துகொட்கும்
அவ்வா ளரிக்கட் கயலு! மடர்குழற் சைவலமும்
எவ்வாயுந் தோன்ற வியலுநின் னுய மெனுங்கடலுள்
ஒவ்வா வுவவு மதிபோற் புகுதக வொண்கொடியே. (௩0எ)

தலைவியைப் பாங்கிசார்தல்

கொடியவுங் கோட்டவும் பல்லவந் தீண்டிற் குழைதருநின்
தொடியவுந் தூக்கிப் பறிப்பன வோதுக டீரனிச்சம்
படியவுஞ் சாயு மணிநூ புரப்பதப் பாவையிங்கே
கடியவுந் தேர்ந்து கொணர்ந்தேன் செறிந்த கருங்குழற்கே. ()

குழாத்திடைத்தலைவியைக் கொண்டுசேறல்

பூத்தரு கான மணிந்தா லெனப்புதுப் பூங்குழலின்
ஏத்தரு நாண்மலர் வேய்ந்தே னிரும்புத ரேதுணையா
மாத்தரு தீந்தினை மேய்ந்து வருடைநன் மானினத்துக்
காத்தரு நீழல் பயில்வரை யாயங் கலந்தருளே. (௩௦௯)

முன்னம் அறிந்தவள் மன்னவற்குரைத்தல்

தொண்டக மேங்கப் புதுவோர் துவன்றத்தொன் மாண்பொய்கைவாய்
முண்டக மேந்து முருகன்கொண் டாடு முதுவிழவு
கண்டக மோகை மலர விரவு கழிப்பிச்சென்மோ
வண்டக மார்க்குங் குழலாட் குயிரன்ன மன்னவனே. (௩௧௦)

வந்தகிழவனை மாயஞ்செப்பிப் பொறுத்தகாரணங் குறித்தவள்கூறல்

அண்ட மகட்டி னடக்கிமென் றேரகை யடைகிடக்கும்
விண்ட மலர்ப்பொழிற் குன்றக நாட்டுவிள் ளாதவன்பு
கொண்ட விவர்வண்ணம் யாதென வோர்நாட் குறுகிவினைக்
கண்டரிற் கோடுங்கோ லோநின் பெருமையெங் காவலனே. ()

நுணங்கிடைப்பாங்கி வணங்கிக்கூறல்

பண்ணையு மேனலங் காவலும் பாற்றியெம் பாங்கரன்பும்
எண்ணையு மாக்கிய நீயெம்மை யன்றி யிரும்புனல்கால்
கண்ணையும் வால்வளை வீழ்தளிர்க் கையையுங் காத்தருளாய்
மண்ணையும் வானையுஞ் சூழ்புக ழோய்மற வாதுநின்றே. ()

வீங்குதோட்டலைவி வேளாணெதிர்தல்

முன்னு யிறுதியு மாய்நடு வாய்முழு தாயெவர்க்கும்
மன்னுய் வயங்கிய வீரட்ட காசனை வாழ்த்துநர்போல்
அன்னுய் விருந்து புறந்தரு நீர்மையி னுன்றனவால்
துன்னு யெனப்புள் விலங்கினைக் கூவுநஞ் சூழ்புனமே. (௩௧௩)

குறிப்பறிபாங்கி கொற்றவற்குரைத்தல்

பகல்வந்து பன்னுட் பெயர்தி பருவரு மாலையெனும்
இகல்வந்த தின்னுங் கொழியா யெனினெவ னேவெவரும்
புகல்வந்த தேர்த்தொழில் பாகனுந் தீர்கநின் போக்கொழிக
தகல்வந்த வூணனி நல்குகம் வாழி தனிவள்ளலே. (௩௧௪)

போழுதுநீட்டிப்பப் போற்றேடிதளர்தல்

ஒழுகுதம் மோங்கற் புனத்தரி தேனுமொண் கிள்ளைமயில்
புழுகுகத் தூரியும் போற்றித்தம் பெண்ணொடு போதுவன
எழுகரு மேகம்வட் டிக்குநஞ் சாரற்கண் டெய்த்திலர்கொல்
முழுகிய தேமலர்க் கோதைநல் லாய்நந்த மொய்ம்பினரே. ()

துணைவன்வரவு தோழிகூறல்

பொறிவயி னீங்கி யிறைவனை நாடும் புருடனைப்போல்
வெறிவயி னூர்த்த குழலாய் விரைந்துநம் வேந்தர்பொற்றேர்
நெறிவயி னீந்தி வருவது காண்டிசி னீள்பொழிற்கண்
குறிவயி னீங்கி யலமரல் கண்டு குறுகுதுமே. (ஙகசு)

தாமஞ்சான்ற தாழ்குழற்கிழவி ஏமஞ்சான்ற வுவகைக்கிளவி

தாமே தமதுயி ராக்கையும் வாட்டுநர் தாம்பலரே
ஆமே பிறரை யணங்குறுத் தாமை யமரருக்கும்
நாமே குடங்கரி னுட்சுட ரேய்ப்ப நலன்கரப்பத்
தேமே விரும்பொழி னல்குந ரென்னர் திருந்திழையே. (ஙகஎ)

மணிநகைத்தலைவி மறைந்தவற்காண்டல்

தானுற்ற நோய்வண்டற் றண்மணல் வைகியுந் தாழ்குழற்குத்
தேனுற்ற பூக்கொய்து மின்புறச் சேர்ந்துந் தெரித்துமற்றிங்
கியானுற்ற நோயறி யாதயர்ந் தேகுகின் றூர்மணித்தே
ரானுற்ற தாற்றொடர் நெஞ்சமெட் டாமை யலர்முலையே. ()

தலைவிநீட்டிப்பத் தலைவன்மெலிதல்

காயம் பரந்த வுடுக்களி னுப்பட் கலைமதிபோல்
ஆயம் பரந்த நடுவட் குலாய்வண்ட லாட்டயர்ந்து
தாயம் பரந்தநம் மாருயிர் வைகிற்றுத் தாழ்மடைக்கண்
தோயம் பரந்தெனச் சேறிநெஞ் சேவரல் சூழ்ந்திலையே. (ஙகக)

மற்றிணிதோளான் பெற்றுளமலிதல்

கிள்ளைசெய் நன்றியென் னேயுயிர்த் தோழி கிளந்துவிட
வள்ளைசெய் வாள்விழி மாதர்நல் லாள்வள ரேனலெலாம்
கொள்ளைசெய் கின்ற தெனக்கூய்க் குறுகப் பரத்தருமால்
தொள்ளைசெய் மாந்தரின் மாழ்குவ தின்றினிச் சூழ்பொழிற்கே.

மருமலர்க்குழலி யருமைசெய்தயர்த்தல்

கணமன்றிக் கைத்தவர் மாட்டுங் கருத கருங்கழலார்
குணமன்றிக் குற்றங்க ணுடாக் குணப்பெருங் குன்றமன்னர்
மணமன்றிச் செல்பகல் காணு தவரின்று வாணுதலாய்
பிணமன்றிச் செய்திலர் நம்மையெவ் வாறுளம் பேணுவதே.

பறைந்தனர்விளியச் சிறந்தவனடுப்ப
நிறைந்தகாதலிற் சொல்லெதிர்மழுங்கல்

தனக்கே தகுதி யிருந்துந் தளர்வினைச் சாற்றல்செல்லா
தெனக்கே யுடன்பட் டெழுந்தநல் வாக்கிறை யோனையன்று
மனக்கே விடலருங் கேண்மையிற் காட்டிய மாமழைக்கண்
நினக்கே தருங்கொ லெனநீர் விடுத்து நிகழ்த்தினவே. (௩௨௨)

முன்னுளிழக்கின் மின்னிழைமெலிதல்

முயங்கிய கைகளை வாங்கிப் புணருமுன் னேபசப்புத்
தயங்குவ தாற்றண வாப்பெரு நீர்மை தகைத்தளித்த
வயங்கிய வைநுதி வேலோன் மருமம் படர்ந்துமுன்னாள்
உயங்கிய வாருயி ரெவ்வாறு தாங்குது மொண்புவிக்கே.(௩௨௩)

மையலிற்பெயர்வான் கையுறைமறுத்தல்

சொல்லுவ தீதென் றுணர்வாள் கொடுஞ்சொற் சுமந்தலரோ
புல்லுவ தாலென்று நாணிநிற் பாட்குப் புகழ்மருந்தாய்
ஒல்லுவ தேனுந் துயவறி யாவொரு நீபுரையச்
செல்லுவ தானின் கரந்தொட மாழ்கிய தேந்தழையே. (௩௨௪)

அருமையிற்றலைவ னுற்றியவேட்டும்
பெருமையிற்றலைவி பிறைநுதற்கியம்பல்

வாணுத னீவு மயிலெனுந் தாழ மலிவியெனும்
காணுத னீடுமென் றேங்குங் கரைந்த கருத்தறியும்
பேணுத னேக்கும் பிரியாமை காட்டுமப் பெற்றியனல்
கோணுதல் யாது நிகழ்ந்தின்று பெண்மையிற் கோற்றொடியே.

வரிவளைத்தோழி வரைவுகடாதல்

தழுவிய மென்பற ழோடு குரக்கினந் தாயெழுந்து
குழுவியல் சோலையுங் குன்றினும் பாயுங் குலச்சிலம்பா
கழுவிய மாமணி போனிறை காரிகை யாண்மடந்தை
வழுவிய லாகிற்கு மாலினி நீவரை யாதுறினே. (௩௨௬)

வரைவுடன்படாது மன்னவன்கிளத்தல்

வருக்கைக் கனியற்று வார்நீர் மருங்கெழுந் தாழையில்வீழ்ந்
திருக்கக் கனியிளந் தாழைய தென்றிள மந்தியெண்ணுத்
துருக்கக் கிரிவயின் வந்திருந் தேவர்தொன் மாண்குலங்கள்
தருக்கக் கிளரு மணங்கினை யோவிது சாற்றுவதே. (௩௨௭)

மறுத்தறகாதென வரைவுகடாதல்

கற்பகச் சோலை யுடையோர் களுநனி காதலிக்கும்
பொற்பகச் சோலை யகினறுஞ் சந்தனம் பூண்டுயர்ந்த
வெற்பகச் சூழலின் வாழ்ந ரெமர்விரைப் பூங்குழலாள்
அற்பகச் சூழ்ச்சியி னுய்ப்புனங் காவ லறிந்தனையே. (௩௨௮)

வரைவெமர்சூழ்வரேன வரைவுகடாதல்

சந்தனங் காரகில் குங்கும மின்னன தாமுதிரின்
முந்தினர் கொள்ளு முறைமழைச் சாரலின் முன்னுமன்னை
பைந்தினை காப்பவள் யர்ரையென் றுணந்தம் பாவைகொலென்
றந்தினின் றுய்ந்துகண் ணூறழித் தாளணி நீறளித்தே. (௩௨௯)

கிழத்தியறிவுரைஇ வரைவுகடாதல்

பளிக்குரல் வேய்நெற் படுத்திபக் கோடுபற் றிச்செழுந்தேன்
துளிக்குமென் கூந்தலர் வள்ளையி னேச்சுமை சூழ்சிலம்பா
களிக்கய னேக்கி தெருமர லுள்ளங் கடியுடன்வந்
தளிக்கின லாது களிப்பரி தாயடல் வேலண்ணலே. (௩௩௦)

இற்சேறிப்பறிவுறீஇ வரைவுகடாதல்

நிரம்பிய கால மறிந்தெமர் நீடுசெந் தேனழித்துக்
குரம்பையிற் போதருங் குன்றினெங் கோமள மாமயிலை
அரம்பொடி யாக்கும்வை வேலிறை வாவன்னை நீயினியில்
வரம்பிக வாதியென் றுள்புனங் காவல்கொன் மன்னுவதே. ()

புரையுறுகிளவியின் வரைவுகடாதல்

பார்ப்பினந் தோகையி னுள்ளே யடக்கிப் படர்பருந்தை
வேர்ப்பெழச் சீறு மயில்வளர் சோலை வியன்சிலம்பற்
கோர்ப்பில தாயின் வினையே னுரைத்துமென் ஞெள்வளையின்
ஆர்ப்பெழ மாலைப் புனைவா னறிஞரி ஞய்ந்ததுவே. (௩௩௨)

இட்டுப்பிரிவி னிட்டிடைதளர்தல்

ஆமா னினந்திரி யுந்தடஞ் சார லகன்சிலம்பர்
வாமான் மணிப்பொலந் தேரும் வலவனுந் தாமும்வந்து
தேமா நறும்பொழில் காணல னுண்டு செறிபசப்பின்
நாமாண் பழியத் துறந்தார் வரவு நவின்றதுண்டே. (௩௩௩)

புள்ளிவணநோக்கி யெள்ளியுள்ளுடைதல்

பைந்தா ரகலத்துப் பார்த்திப ரென்றுநம் பைம்பொழில்வாய்
வந்தாரந் நாண்முத லாவள ரேன னுமக்கிரையாச்
செந்தார்ப் பசுங்கிளி காண்மயில் காள்செல்ல விட்டனமே
முந்தார்ப் பொடும்விலங் குற்றிலிர் மொய்ம்பர்முன் னுவகையே.

கச்சிவமுவலயவ ளச்சமிக்குரைத்தல்

ஈண்டிய வான்குள கோருழி வாய்ப்பெய்வ தின்றியெங்கும்
வேண்டிய வாறு வருடைக டேருந்தம் வெற்பினுக்குத்
தூண்டிய தேரினர் மீட்சியுண் டேற்றெழு தெய்வமல்லல்
பூண்டிய லாது விரிச்சியிற் காக்கவென் புல்லுயிரே. (௩௩௫)

ஆற்றுவதேனத்தே ராற்றிவணப்போற்றல்

பிணிநா முழப்ப தறிந்து பிறங்க ளிகர்பெருந்தேர்
மணிநா வடக்கி வருந்தொழி லார்சென்ற வானதரைப்
பணிநாண் மலர்க்கொம்பர்ப் பாய்ந்துபைந் தாது படுத்தழியல்
அணிநாண் மலர்க்குழன் மூசுதிர் வம்மி னளிக்குலமே. (௩௩௬)

வடுவ்கிர்க்கண்ணி கோடுமைகூறல்

கூடா தவருழைத் தீங்கிழைப் போரைக் கொடியரென்போர்
வீடா தவருழைத் தீங்கிழைத் தாரை விராயறியார்
நாடா தவரவர் நல்லரென் றேத்தினு நன்னெஞ்சமே
வாடா தவரல்ல ராவரன் னுரை மரீஇயவரே. (௩௩௭)

பலவுமெண்ணி யலர்முலையிரங்கல்

காமரு மாமை பசலைகைக் கொண்டது காதலரைத்
தாமரு நாடு தகைத்ததென் னேவித் தனிமைகண்டு
பேமரு பீழை பிணித்தது வல்லே பெருநிலத்தோர்
நாமரு தீச்சொ லிறுமாப் புளத்தை நலிந்ததுவே. (௫௫௮)

இதுவலதென்பா லெய்துவதேவனென
விதுநுதற்றோழிக்கு மெலிவோடுகிளத்தல்

சூடிய பூவும் கருகிய வோலையுந் தோகையரும்
நாடிய காலை நிகர்ப்பரென் றதன்பர் தந்நகர்வாய்
நீடிய வாழ்க்கை நினைந்துவிட் டானிறை தாங்கிநைவேன்
வாடிய வாவியன் றேபுறம் போவது வாணுதலே. (௫௫௯)

கருத்தழிகிழத்தி கலங்கிமொழிதல்

விடங்கழி காலத் தராவென வென்மெலி வைத்தணப்பான்
இடங்கழி வாம்பரித் தேரோ னுடன்சென்ற வேழைநெஞ்சம்
மடங்கழி காதன்மை மல்கக் கருணைவை யாமைகண்டங்
குடங்கழி வேன்கொலென் றுன்னலி னுங்கொ லுருநிலையே.

மற்காட்டுதோளர்க்குத் தற்காட்டுறுதல்

அம்மையி னரைத் தவம்புரி யாதவ மேபிறந்தேற்
கிம்மையின் யாவ ரிதனிறம் பெற்றன ளேந்திழையென்
றும்மையி னுங்கு முடங்குற றேற்றி யொழிந்தவர்க்குச்
செம்மையி னங்கப் பசும்பொன்னைக் காட்டுபு செப்புவரே. ()

மையுறுகண்ணி கையறுகிளவி

முயங்கிய வண்சிறை யன்றின் முதிர்பிரி நோயறியின்
உயங்கிய வென்னிலை கண்டு முறுரி னிருக்ககில்லீர்
தயங்கிய கைவளை கொண்டகன் றூர்தவி ரூரின்வல்லே
இயங்கி யடாதென்பிர் நீயிரெய் யாமையென் றீவினையே. (௫௬௨)

கோலத்தொழிற்புள்ளிது கூறுதென்றல்

வண்டான முங்குரு கும்பெரு நாரையு மற்றுநம்மை
விண்டா ரணைய விளம்புங்கொ லோவிரி நீர்ச்செறுவும்
தண்டா மரைத்தட முந்தவ ழோடையுந் தண்கழியும்
கொண்டா ருயிர்முற்று முண்டுண்டு தேக்குமக் கொள்கையவே.

ஆழியிழைப்பதிற் பிழைபடுமென
மீதூர்நெஞ்சை மீட்சியிற்படுத்தல்

ஒருவிய காதலர் தாமொழிந் தாங்கொழி யார்வரினும்
வருவரென் றுற்றவு மையுற்று நையவும் வான்பிணியுள்
இருவிய விந்திலே யின்றியு மாழி யிழைப்பதனால்
வெருவிய வாவி பழியெழ நீங்கலு மேவுநெஞ்சே. (௩௪௪)

இரவிநீங்கப் பருவரலுறுதல்

வண்டலுற் றுடும் வயின்றெறுஞ் சார்மலர்த் தாட்சுவடும்
கொண்டலுற் றேறும் பொழில்வா யளித்த குறியிடமும்
கண்டலுற் றேயுயிர் தாங்கிய யான்கவ லக்கதிர்த்தேர்
விண்டலுற் றேயன்பர் தேரினுந் தீமை விளைக்கின்றதே. (௩௪௫)

மாலைகண்டவள் சாலவுள்ளழிதல்

அழுவக் கடற்கழி மீனிரை தேரன்னம் பேடைபுடை
தழுவக் கடிமரச் சேக்கைக ணடுந்தண் மாலையம்போ
தெழுவக் கதவுறழ் தோளுரத் தாரெய்து நாட்டுமுண்டாய்ப்
பழுவக் கனலிற் சுடவல்ல தோவவர் பாலினுமே. (௩௪௬)

குருகுறுபருவரல் கருணையினுட்டல்

சேவற் குருகொடு சக்கர வாகச் செழும்பெடைகாள்
நாவற் குருமலர்ச் சாகையஞ் சேக்கையு ணவதெல்லாம்
காவற் குருமணி மோலியர் காரிகை கைக்கவர்ந்து
நீவற் குருகியன் றேயல தாயி னிகழ்த்துமினே. (௩௪௭)

சுவாகதநோக்கித் தூதுசெல்கென்றல்

பெண்டூது வந்தன னென்றுகை கூப்பிப் பெருநயப்புக்
கண்டூது வண்டுளர் தார்வரை மார்பர்க்குக் காதனெஞ்சம்
மண்டூ துலைமெழு காயின ளென்று வருதிகிள்ளாய்
ஒண்டூ துணமனை யாளுக்கும் பாளித முன்வயத்தே. (௩௪௮)

போதுகூம்பப் பேதுற்றுரைத்தல்

சீராழி வையத்து வால்வளை யோடுகச் சென்றுவிட்ட
போராழி வையத் தவர்மது வாருமம் போருகங்கள்
ஓராழி வையத் தவனுன் மகிழ்ந்தொழி யக்கவறல்
நீராழி வையத் தறியினென் னீரு நினைகுவரே. (௩௪௯)

ஆன்மணிவேய்ங்குழற் காற்றாதுரைத்தல்

தருமக் கடவு ளெனுமிமி லேறு தனக்கினமாய்
வருமக் குலத்தெறு ழான்கழுத் தார்த்த மணியெனுளம்
பொருமக் கறங்குவ தென்றாற் புனவேய்ங் குழலவர்தேர்
திருமக் கடவி வருமுன்ன ராருயிர் தின்றிடுமே. (௩௫௦)

மந்தாநிலத்தோடு நொந்தாங்குரைத்தல்

பைந்தா ரகலந் திளைவளர் சாரற் பசும்பொழில்வாய்த்
தந்தா ரொருங்கிய வைகலெல் லாந்தண் குளிர்விரவ
வந்தாய் செழுந்தமிழ் மால்வரை யீன்றமந் தாநிலமே
சிந்தா குலமுறக் கொன்வந்து தீயிற் செறிவதென்னே. (௩௫௧)

தானுறுபிணியிற் றண்கடல்சேர்த்தல்

ஓங்கிக் கரைக்கண் விழுந்து புரண்டுமிக் கோலமிட்டு
வாங்கிக் கலங்கி மறுகித் துளும்பு மணிக்கடலே
தாங்கிக் கரையுநெஞ் சோடல மந்த தமியனைப்போல்
நீங்கிக் கவற்றுநர் கேண்மையை நீயுங்கொ ணீணிலத்தே. (௩௫௨)

மதியெழல்கண்டு கதிசேலலென்றல்

தண்பாற் பெருங்கட னற்றா யுடன்பிறந் தாரமிழ்து
மண்பாற் பரவுந் திருவு மமிழ்த கலைவடிவும்
விண்பாற் கதியென்ன வெண்டிங்கள் வெப்பந் தரினுநன்றே
கண்பாற் கழற்கழ லான்கண்ட நின்னுருக் காட்டிநில்லே. ()

கண்ணிலநினக்கெனத் தண்சுனைக்குரைத்தல்

தவளைக் குரற்கிண் கிணியடிப் பாவையர் தங்களொடும்
திவளக் கலவிநின் றாட்டயர் வேன்றிறத் தும்முறையோ
துவளக் கதுவிய தென்னையென் றித்துணைப் போதுசென்றே
குவளைக் கருங்கண் விழித்தனிர் நோக்கக் கொழுஞ்சுனையே. ()

கண்படைபெறாது கங்குனோதல்

புரங்கட் கிளநகை காட்டிதன் கண்பொதி ஞான்றினுமேழ்
துரங்கக் கடவுளில் லாக்கங்கு னீடத் துளங்கும்வெந்நோய்க்
கரங்கக் கடிநக ராருயி ராக வதிர்முழவின்
இரங்கக் கருங்குயி லென்கண் படாதவர்க் காணலுற்றே. (௩௫௫)

அனமோத்தியலுநள் கனவிற்றளர்தல்

அடுத்தமைக் கேயெதிர் நெஞ்சினை மீட்டு மடாத்தொழின்மை
தொடுத்தமைக் கேயெதிர் கண்களை மீட்டுந்துன் ஞரெனநீ
விடுத்தமைக் கேது விளம்பென வேந்தன் றனைமெலிவில்
படுத்தமைக் கேதுமின் ருவிழித் தேன்கொடும் பாவியனே. ()

நறைக்குழற்றேழி சிறைப்புறத்துரைத்தல்

கலைக்கோ டுழவடை கீறிப்பைந் தேன்கவர் கானவர்க்கும்
மிலைக்கோடு மீக்கும் பயவா திருவிடர் வீழுமன்பர்
மலைக்கோ டுறுகுரு கீர்தொழு தேன்முத்தம் வாள்விழியும்
முலைக்கோடு பொன்னும் விளைக்குமிந் நீர்மை மொழிமின்களே.

அலர்மிகுகின்றமை தலைவற்குரைத்தல்

காணுப் பெருந்துய ரோநிழ லீன்ற கருந்தளிர்போற்
பேணுப் பெரும்பசப் போபெருந் தேவ ருலகுநிமிர்
மாணுப் பெருங்கௌவை யோவன்ப விங்ஙன் வளர்த்தவற்றுள்
கோணுப் பெருமைய தியானறி பாக்குக் குறித்துரையே. ()

அழிபாடுளத்தவள் வழிபாடுமறுத்தல்

காமங் கடலிற் பெரியது கையகன் றுலங்ஙனே
தோமங் கடல்வட வைக்குமிக் காவதென் றேல்வியுயிர்க்
கேமங் கடனுல கத்திலின் றேனு மினியொழிக
பேமங் கடலைப் பிரானையுன் ஞரன்ன பெற்றியரே. (௫௫௯)

வாழிதணிகேனத் தோழியிரத்தல்

வார்விரல் வாட்கண் மணிப்புனல் சோர வருத்திடினும்
ஆர்விர னீப்பவ ராயிழை யாயளி யேனினது
சீர்விர வாரருள் பெற்றிசை யப்பொலந் தேரவர்நம்
கார்விர வோங்கற் குறியினின் றுரின்று காண்பதுவே. (௫௬0)

நெறித்தமைக்கூந்தன் மறுத்தேதிர்கோடல்

அரிக்கு மவர்தமைக் காண்பது வேட்டரி வாட்டடங்கண்
தரிக்கு மவருழை யேயெனை நீத்துத் தனியுளமும்
பரிக்கு மவர்கைத் தழைக்கென தோள்களும் பாரிக்குநா
விரிக்கு மவர்க்கிசை யாமையென் னுவது மேதினிக்கே. (௫௬௧)

மணந்ததலைவன் மகிழ்ச்சியிற்கிளத்தல்

சிறைபட நின்ற பெரும்புன லச்சிறை சிந்துதனும்
துறைபடச் செல்வது போலன்பி னுள்ளந் துணையவுந்தான்
பொறைபட வந்து பொலங்கொம்பி னெல்கிப் பொழிலழகு
நிறைபட நின்ற நிலையய ராதியென் னெஞ்சகமே. (௫௯௨)

பரிவுற்றிறைவன் பாகற்குரைத்தல்

அடுத்தாங் கழியுயிர் நல்கு மமிழ்தசஞ் சீவியெனின்
விடுத்தாங் குயிர்விளி யாது விராய்வெற்ற வின்பமுற்றும்
மடுத்தாங் ககன்று வருத்துமிம் மாதரைத் தேர்வலவா
தொடுத்தாங் கிசைப்பி னுயிரை யலாதில்லைத் தொல்புவியே. ()

பகற்குறியிழக்கும் பரிசுதேர்பாங்கி
தகக்கிளிமொழிக்குத் தளர்வோடுகிளத்தல்

சிலம்பெதிர் கூய்த்தெளி நீர்ச்சுனை யாடித்தண் டேம்பொழில்
நலம்பெறு மூச னடாய்வண்ட லாடி நறுஞ்சினையிற் [வாய்
குலம்பெறு பூக்கொய்யும் வாழ்க்கையெல் லாங்குலைப் பானின்றதால்
சலம்பெறு வேங்கை யிணர்த்துமென் றேற றளித்தலர்ந்தே. ()

விளைதினைகாட்டி வேட்டைமேலிட்டுத்
தளையவிழ்பொழிலிற் சாரலையென்றல்

விளைந்தன வாற்றினை காண்டிவெற் பாமென் புனத்தயன்மா
வளைந்தன வாலென வேட்டையை மற்றினி வாரலையோ
உளைந்தன வாலெம் முளத்தொடு தாழ்குர லுண்குருகு
துளைந்தன வான்மகிழ் வென்னைய ரோடடல் சூழ்கணியே. ()

தெய்வக்கணியோடு நைவுற்றுரைப்பக்
கறைப்போலிவேலற்குச் சிறைப்புறக்கிளவி

கொய்வதன் றேதினை யென்றலர் தூற்றிக் குழையவெம்மைச்
செய்வதன் றேநின் குலக்கணி தெய்வத் திருக்கணியே
உய்வதன் றேயெமக் குற்றுநின் றுயை யொழிந்துநனி
நைவதன் றேயினி யுள்ளது போலுமிந் நாகத்திலே. (௫௯௬)

சிறைப்புறத்தலைவற்குக் குறிப்புரைகிளத்தல்

வீழ்ந்தார் தமையெதிர் வீழா துலைய வெறுத்தவர்தாம்
வாழ்ந்தார் புகழொடு மென்பதுண் டோதெய்வ வான்கணியின்
தாழ்ந்தாந் தகமதித் தாமனை யேந்தகை யாருளங்கள்
போழ்ந்தாய் தினையு மழிப்பா யினித்துயில் பூங்கணியே. ()

தினையோடுபுலம்பி யினிவரலென்றல்

அளிப்பான் புகுந்தவந் நாண்முத லின்றை யளவும்வண்டின்
களிப்பான் பெருநலங் காட்டிய நும்மைக் கதிர்த்தினைகாள்
விளிப்பான் புகுந்தது வேங்கையவ் வூழ்வினை விண்ணவர்க்கும்
ஒளிப்பான் புகலரி தாமென்றென் றுள்ள முயங்குதுமே. ()

நாவளயிப்புன நண்ணலமறிகேன
வாள்விணயவர்வர வறிவுறீஇவிலக்கல்

வாங்குங் குயத்தின ரின்னே வருகுவர் வார்பொழில்காள்
தூங்குங் குளிரரு வித்திரள் காள்சுனை காள்புனங்காள்
வீங்குங் குவட்டினங் காள்விளை யாட்டின் விரவுநும்மை
நீங்குங் கொடுவினை யேமென்னும் வைகலு நேர்ந்ததுவே. ()

வரைவுபாணித்த பருவரல்கிளத்தல்

வளைவாய்ச் சிறுகிளி யோப்புங் கருவியும் வாரிதணும்
விளைவார் தினைப்புன மேல்வைத்த காவலு மீட்டுவிழித்
திளைவார் புனலொற்றுந் தானையும் வெய்யவர் சேர்ந்தவில்லும்
முளைவா னிறைவைகுங் காவலுங் காட்டிற்று மொய்யருளே. ()

குறிப்புவேறுபடல் குறிப்போடுகிளத்தல்

ஆரக் குரல்க ளகப்படு மேனுமெம் மல்லற்கஞ்சிச்
சாரக் கவலுஞ் சிறுகிளி காடகை தீர்ந்ததென்றோ
வாரக் கதிர்முற்று மாற்றிய தாளின் மகிழ்சிறப்பச்
சேரக் கருதுகின் றீரெம்மைப் போலினிச் செல்லலின்றே. ()

பரிவுறுவருத்தந் தெரிவுறக்கிளத்தல்

ஆடிட நோக்கி யலர்சுனை நோக்கியன் பூடுருகக்
கூடிட நோக்கிக்கொய் பூம்புன நோக்கிக் குழைதனன்றே
வாடிட நோக்கிய தென்னையென் றெம்மை மரீஇயினர்க்கு
நாடிட நோக்கி யுரைத்திடு நன்றி யிருந்திடினே. (ருளஉ)

நெடுந்துயரலைப்ப நீங்கத்துணிதல்

பீழைசெய் தார்கட் குதவிசெய் வாரெவ ரேபிரிவு
மாழைசெய்நோக்கின்மொழியின்மென்சாயலின் மாறுகொண்ட
ஏழைசெய் மாவுங் கிளியு மயிலு மிவைகிளவா
பூழைசெய் வார்கைக் கரியடர்த் தார்க்குப் புகன்மறியே. ()

வழியயக்குற்றவள் கழுமலுற்றுரைத்தல்

அழிந்தது சாய னடையொடு மாமையொ டஞ்சொனலன்
இழிந்தது காணென் றிறுமாப் பொடுமெழிற் றோகைகிளை
மொழிந்தன வாயினு நம்முயிர் காக்கு மொழியதுவே
கழிந்தன வாயினுந் தெய்வத வேங்கைநக் காப்பதுவே. (௩எச)

வறும்புனநோக்கி மன்னவன்மறுகல்

கருவிப் புயறவ ழுந்தடஞ் சாரற் கனமணிவெள்
ளருவிப் புனலின் வளர்தினைப் பூம்புன மைதெழிநீர்ந்
திருவிப் புனமென நீன்றா ழெறுழ்த்திறங் காட்டிற்றந்தோ
மருவிப் பிரிநர்தங் கேட்டுக்குஞ் சான்று வழங்குவதே. (௩எரு)

கருத்துவேறுபட வருத்தமிக்குரைத்தல்

ஐந்தென வோது மவத்தையு நீங்கி யவக்கலப்புத்
தந்தெனை யாண்டருள் வீராட்ட காசத்தன் றுளொழிய
முந்தென வோங்கும் புவனமுந் துன்ப முகிழ்க்குங்கொலாம்
வந்தென வோகை செறிக்குமிச் சாரல் வருத்துவதே. (௩எசு)

மின்னுருக்காணது பன்னிமிக்கழிதல்

சுனைபொழி தேங்குவ ளைகண்கள் காட்டத் தொடுத்தவிறுல்
நனைபொழி சாரல் வளர்பணை தோளிணை நாட்டமலர்க்
கனைபொழில் வார்தளிர் மென்னிற மீட்டக் கவலமற்றியான்
துனைபொழில் வேங்கையுங் காட்டிற்று மாதர் சுணங்கினையே.

அணங்குறுபதிபுக லரிதெனக்கலங்கல்

எந்திரம் யாத்த வெயிலோ டகழில்லை யாயினும்வான்
தந்திரம் யாத்தவெஞ் சேனையின் றுயினுந் தாழ்மனனே
மந்திரம் யாத்த வயினனு காமணி நாகமெனச்
சுந்தரம் யாத்தவ ளூரிது வாயினுஞ் சுட்டரிதே. (௩எஅ)

இரவுக்குறிநினைந் தேந்திலைவேலோன்
பரவையயல்குற் பாங்கிக்குரைத்தல்

பகலிரை மாறிய ஞான்றிர வூடு படர்ந்துழுவை
புகலரி தாமிடத் தும்புகுந் தேகும் பொருப்பணங்கே
இகலெறுழ் வார்சிலை யார்பெருங் காவ லியைந்தமர்நும்
அகல்வரைச் சீறூர்க் கினிவிருந் தாக வணுகுதுமே. (௩எசு)

தோம்படலுளதெனத் தோழிமறுத்தல்

பொறிவயின் யாத்த வருடைநன் மானைப் புகன்றுநப்பாக்
குறிவயின் யாப்புண்டு வேங்கைகள் குன்றுங்குன் றத்துவெற்பா
நெறிவயி னீளிர தஞ்செல்லு மாயினு நேர்ந்தெவரும்
வெறிவயிற் சோடை விடிந்தன்றி யிற்றெருறும் வீவதின்றே. ()

பின்னிலைமுனிந்து பெருந்தகைகவறல்

கண்ணடிக் குள்ளொளிர் சாயையென் கையி னிருவுகென
மண்ணடிக் கோட்டி யழுமழப் போலவென் வன்னெஞ்சமே
பண்ணடிக் கின்ற பணிமொழிப் பாவை பரிசறிந்தும்
எண்ணடிக் கின்ற விரவூ டலைத்தி யெனைப்பிடித்தே. (௩அக)

தளர்வறத்தோழி தழீஇக்கூறல்

அஞ்சிறை வாவ னறுங்கனி தேர்ந்துண் டகல்சிலம்பின்
நஞ்சிறை வேல்வலத் தாயன்பர் வந்தரு ணல்குமென்றேன்
நெஞ்சிறை கொண்ட துமிழுமுன் கண்ணீர் நிறைக்குமன்னே
பஞ்சிறை கொண்ட பரிபுரச் சீறடிப் பைந்தொடியே. (௩அஉ)

கடனறிதோழி யுடன்பட்டுரைத்தல்

ஆற்று வுளத்தினை யண்ணலு மாதவ னீடொளித்தேர்
தோற்று தொழிந்தன னுண்டுளி மேகஞ் சுரந்தனவால்
கூற்று மெனவிலங் கும்விலங் காற்றிற் குறிச்சிபுக்கு
மாற்று விழிப்புனல் வல்லிகொள் ளாவகை வைகுதியே. (௩அங)

மறிநேர்நோக்கி குறியிடங்கூறல்

பிண்டிப் பொழில்புடை சூழ்ந்திள வேங்கை பிரசமென்பூ
மண்டிப் பொதுளி வணங்கிய சாகை மலிந்துதினை
உண்டிப் பசுமயிற் சேக்கைய தாயுறை முன்றிலதால்
வண்டிப் பியமலர்க் கொம்பரன் னுண்மன்னும் வைகிடமே. ()

சூழ்ந்தவன் வினவத் தோழிகுறித்தல்

நாற்றிய செஞ்சடை வீராட்ட காசத்து நாதர்பொற்றாள்
ஏற்றிய சென்னிய ரல்லா ருளத்தி னிருண்டகங்குற்
போற்றிய வாடவி னுன்வரை வாழ்நர் புகன்றணியும்
ஊற்றிய தேமலர் யாவிரை யாவை யுரைவள்ளலே. (௩அரு)

குறிப்பறிதலவன் மறித்தெதிர்வினுதல்

ஞாலங் கருது நகுகதிர் முத்த நகைமடவாள்
ஏலங் கமழுங் குழல்போ லிருண்ட விரவினுமர்
நீலங் கலந்த நெடுங்கணல் லாய்நெஞ் சுவந்தணியும்
கோலங் கனிந்த மலரென் கலவையென் கூறுகவே. (௩அசு)

தோடுத்தவினுவுக்குத் தோழிசெப்பிறுத்தல்

புழுகுகத் தூரி கருப்புரங் குங்குமம் பூம்பனிநீர்
இழுகுமட் டேறிளந் தாதோ டரிஞ்சி யெடுத்தசந்தின்
முழுகுபொற் றோளினர் கற்சுனைப் பூத்த முழுநெறியின்
ஒழுகுகட் டாரின ரெல்லியெங் குன்றினுற் றுடுநரே. (௩அஎ)

அரவகலல்குற் காற்றுமைதணிதற்
கிரவுறுகுறியும் வேண்டுமென்றியம்பல்

காமப் பிணிக்கென் றமைத்தது கங்குலக் கங்குலின்வாய்த்
தாமப் பிணிக்கு மருந்தாய்த் தணிப்பதல் லாற்றனித்து
நாமப் பிணிக்கு மருந்தறி யாநறுங் காழகிலின்
தூமப் பிணிக்குழற் காமரு சாயற் சுடர்த்தொடியே. (௩அஅ)

அடல்வேலண்ண லாற்றுமைநுவறல்

வீக்கிய பாசப் பிணிப்பிற் றழீஇக்கொண்ட மென்பறழின்
வாக்கிய தேம்பொழின் மந்திக டுஞ்சுமஞ் சார்சிலம்பன்
தேக்கிய தேறற் களிவண்டு தன்பெடை சேரக்கண்டு
நீக்கிய வாவியர் போன்றுயிர்த் தானந்தி நேரிழையே. (௩அகூ)

ஆங்கவன்வரவு பாங்கிபகர்தல்

கொடிப்பகை சாம்பப் பகலதற் கஞ்சிய கூகைசென்று
முடிப்பகை வேந்தரின் வேண்டிரை தேர்முழை சூழ்சிலம்பன்
கடிப்பகை வேடர் பராவுங் கடம்பன் கடியுங்கண்டு
தொடிப்பகை பாணிக்கென் றுமையிங் கேவரல் சொற்றனனே.

வரவுகேட்ட மாணிழைகலங்கல்

கருணைக் கடல்வளர் வீரட்ட காசக் கடவுளுயிர்
இருணைக் குடைய வுருக்கொண் டெளிவந்த தென்னவன்றோ
அருண்மிக் குடையவ ராயிர வூடரி யாளிப்பன்மா
வெருண்மிக்க சோலை வரனுஞ்செய் தேன்வினை யேனிருந்தே.

துயரினிவிடுகேனத் தோழிநயப்பித்தல்

கானவர் வார்விற் கணைபிழை யாதகண் ணார்சிலம்பன்
ஏனவண் சூழன் மிளையு மிறும்பி னிறுவரையும்
தானவ ணீந்தி வருதன்மெய் யேமுன் றளர்ந்துநின்றால்
மானவ மானகண் ணேயெவ ளுகுநம் மாட்சிமையே. (ருகூஉ)

மடம்படுபேதை யுடம்பட்டுரைத்தல்

முன்னுந் தனிநின்ற சூழலிற் பேரின்ப முற்றுவித்தார்
பின்னுந் தறுகட் கடாங்கவிழ் வேழம் பெயர்த்தளித்தார்
என்னுந் தமக்கியை பில்லேற் கிரவினு மின்றிறுத்தார்
கொன்னுந் திருவுள மின்னுமென் கொள்ளினுங் கூற்றமின்றே.

காய்துயிற்றோழி தாய்துயிலறிதல்

துடுமென வாரிச் சுனையில்லை வேல்கொண்ட தோன்றலுக்கு
விடுமென நீயிர் நிறுத்திய வாழைமென் றீங்கனிவீழ்ந்
திடுமென காரண மோவினி வேறு பராய்விடவும்
படுமெனல் கோடியன் னையென் னனைத்துயில் பற்றினையே. ()

அரையிருளிதன்கண் வருகுவரேன்றல்

கொட்டிய வேய்மணி சோலைமென் றுதிற் குளிப்பவைதாம்
அட்டிய மாரிக் குறுந்துளி யானலங் கும்பொருப்பர்
கட்டிய வாரிளங் கொங்கைநல் லாய்நங் கவினளிப்பான்
ஒட்டிய காலமு மீதுவல் லேயிங் குறுவரன்றே. (ருகூரு)

கோங்தோளிவேலோன் வந்தனனேன்றல்

அழுந்தலை வேலை யடுத்தெழு மேக முருமெறிய
எழுந்தன தோகை மயிலின மார்ப்பொடு மீண்டரவம்
விழுந்தன மேகலை மெல்லிய லாய்வெயி லத்துலந்த
செழுந்தளிர்ப் பூங்கொடி முல்லைசிந் தாகுலஞ் சிந்தியதே. ()

முயங்கவம்மென முற்றிழைக்குரைத்தல்

பூரண கும்ப முலையிரு மாப்பப் பொதியிருளில்
ஆரண மன்ன மொழியா னடல்வேற் கரந்துணையா
வாரண மென்ன வயினடுத் தான்மரு மந்தழுவாக்
காரண மென்னு மினியில்லை வம்மோ கனங்குழையே. (நூசுஎ)

குறிவயிற்றலவியை நேறிவயினுய்த்தல்

சுனைக்கரு நீல மலர்ந்தது காண்சுணங் கேர்முலையாய்
வினைக்கரு வீசன் வதியும்வெய் யோன்விளங் கும்பகலில்
தனைக்கரு வாட்கண் ணிகர்க்குங்கொ லாமிது தானெனச்செய்
முனைக்சுரு நோயுற் றுறங்குவ தாமென்று மொய்யிருளே. ()

இடத்துய்த்தகல்பவண் மடத்தகைக்குரைத்தல்

சந்தனச் செச்சையி னுலால வாலஞ் சமைத்துநறைக்
கொந்தலர்த் தண்ணறுந் தாதெருப் பெய்து குளிர்பனிநீர்
உந்தகைத் தோங்குநம் முல்லைகள் பூத்தவொண் டோகைகுழற்
கிந்தமைக் காரிருள் வேய்வன கொய்திங்க ணெய்துவனே. ()

மறிமருணேக்கி குறியேதிர்வுரைத்தல்

வார்ந்துயர் வாழைப் பொழிலின் வருடைநன் மான்கனிமிக்
கார்ந்துழை நீண்ட வருநெறிக் குன்றத் தசைந்துறங்கச்
சேர்ந்திவர் நாகத்துத் தேமொழி யாய்செறி கங்குலிங்கண்
சார்ந்ததென் னேய்க்குப் பிறிதில்லை யென்றுகொ ளூழ்குழலே.

அன்புமீதூர வளவளாய்க்கலத்தல்

பண்டே புரிந்த பழுதற்ற நல்வினை பான்மதியம்
கொண்டேலகாறிய கொண்டல்கொண் டுள்ளே கொழுங்களியார்
வண்டே மருங்கு விடுத்து மணிநிற வேய்தழைப்பத்
தண்டேன் மொழியுடைத் தாய்வந்த வாறுயிர் தானெனவே.

கலவியிற்றேற்று நலனேடுத்துரைத்தல்

அருகிய நோக்க மளிக்கு மிளநகை யாங்குயிர்க்கும்
குருகிய லோதை கொழிக்குங் கொழுந்தளிர் போற்றுவளும்
உருகிய காத லுகக்கு முடங்குறை கென்னப்பைந்தேன்
பருகிய வாயுந் துடிக்குமின் னேயிவள் பண்புகளே. (சூ0உ)

வயந்தருவேலோ னயந்தவனுரைத்தல்

பங்கய மானனஞ் செங்கரம் பாதம் பரவையல்குல்
செங்கயல் வாட்கண்க ளென்மர் செறியிர வூடெனைப்போற்
பொங்கய வாழ்க்கை மரைமலர் போலொளிர் பூவையுறுப்
பிங்கய ராமை மலர்ந்தின்பத் தேன்பொழி வெய்த்திலரே. ()

பரிவகறவலவனே டரிவைகட்டுரைத்தல்

குரும்பிவன் மீகத் தகழ்ந்துணு மெட்குக் குழாமொருபால்
விரும்பிவல் வேழத் துலவையின் வேர்மிசை மாவொருபால்
அரும்பிய சீற்றத் துவாப்புலி யோடம ராட்டொருபால்
சுரும்பிவர் தாரவ வெங்வனம் போந்தனை சூழிருட்கே. (சOச)

இன்பநிறைவேலோன் றுன்பமறுகிளவி

பொல்லா விலங்கு மலகையும் பூதமும் போரணங்கும்
ஒல்லா விரவி னுருமெறி மீமகமு மூரரவும்
எல்லா மெழிற்கணி காசலத் தேந்தல்செந் தாளிறைஞ்ச
வல்லார் தமையடுத் தாரையு நோக்குங்கொன் மாணிழையே.

நீங்குறுவேலோன் பாங்கியிற்கூட்டல்

எடுப்பிய தோகையுந் துஞ்சுக நீரொலி யாலிருந்தாய்
படுப்பிய வாட்கண் படாவிள மாக்களுங் கண்படுக்க
அடுப்பியை பாங்கியு நீயு மணையி னனந்தல்கொள்க
விடுப்பியை யாவுளத் தேனுமங் கேசெல்க மின்கொடியே. ()

நீங்கியதலைவியைப் பாங்கிசென்றடுத்தல்

குதுகல மார்த்துங் குமாரலிங் கேசன் கொழுஞ்சரணென்
பதுகல வாரிற்பைங் கோட்டலர்க் கூக்கிப் பருவரனீ
மதுகர மார்ப்ப மலர்ந்துசெந் தேனக்க மௌவன்முல்லை
யதுகர மேந்திவந் தேனணி யாய்குழற் காரணங்கே. (சOஎ)

வல்லிநுண்மருங்குலை யில்லிடையுய்த்தல்

இட்டிடை நோவ விரிசிகை நூபுர மேங்கமரை
மொட்டிகல் பூணிளங் கொங்கைகள் பொங்க முருகுவிம்மக்
கட்டிய கூந்தல் பிடர்த்தலை சோரக் கடுகலல்குற்
பட்டியல் பாவைநல் லாய்பையப் பையப் படர்மதியே. (சOஅ)

தலைவனயன்மிச் சார்ந்தபினேங்கல்
ஸலமரனீங்க வளைபிடியேன்றல்

வீற்றுவல் வீரர் மிடையினு மாங்கவர் வீரமுற்றுங்
காற்றுவை வேலிறை வாறங்கள் காவல் வரையிற்சென்று
போற்றுவ தாவதொன் றுண்டு புலம்பிய பூவையன்னாள்
ஆற்றுவ தாக வலம்புரி வாய்வைத் தருளுவதே. (சஂ௦கூ)

இன்னணமோழகவல மன்னவேன்றகற்றல்

அம்பலு மோங்க லரும்புதி தாவதின் றேனுநெறி
உம்பலும் யாளியு மேனவு மூறுசெய் யாவிடினும்
நம்பலுங் காவலு நின்வயி னீளினு நன்றிதன்றே
வம்பலுங் காலங்கொ லோபிரி யாவன்பு வாய்ந்தவர்க்கே. ()

பாங்கிகேட்பப் பையுளேய்தி
நீங்குறுவேலோ னேஞ்சோடுகிளத்தல்

புள்ளுவர் பார்வை வலையொடு கண்ணி புறத்திருவி
உள்ளுற யாத்துப் பறவையு மாவு முடற்றுய்வெற்பின்
நள்ளுநள் போல நயமொழி காட்டிய நங்கைபின்பு
விள்ளுநள் போலுரைத் தாளென்ன பாவம் விளைந்ததுவே. ()

ஆகியபரிவு பாகற்குரைத்தல்

அணங்கோ கடலி னமிழ்தோ வணிமயி லோவெனப்பொற்
சுணங்கோ டெழுமுலை யாள்புறத் தேசென்று சூழ்ந்தநெஞ்சிற்
பிணங்கோ முடங்குவ மோவெனின் வாய்ந்தில பேசுவதென்
கணங்கோடி காவதங் காமரு தேருந்துங் கையவனே. (சகஉ)

விளங்கியமதியிற் றுளங்குறுகிளவி

குருமணி வேட்பக் கொழுந்தெழு காமத்தின் கோளறிந்தும்
திருமனை மூடுஞ் செயிர்த்தலை நின்றதிங் காணினையே
பொருமனை மாயினு நீமறை யப்புகல் வாய்கொலொன்னார்க்
குருமனை யானை வரதனை யாங்க ளுறுவகையே. (சகங)

இராவுறுதுயரங் குராலோடுகிளத்தல்

தோகைக் குராய்த்திரி வஞ்சிய நாகந் துளையிரவில்
பாகைக் குராலம் படுத்தசொல் லாள்கண் படாப்புலம்பில்
கூகைக் குராலஞ்சச் சொற்பயிற் றுதிகொன் னுான்புழுக்கல்
வாகைக் குராமரச் சூழலின் மல்க வழங்குதுமே. (சகச)

அல்லகுறிப்பாட்டின் மெல்லிடைவருந்தல்

புல்லா டவனை யறியா திரையெனப் போந்தடுத்து
நில்லா துழுவை பசியோ டியங்கு நெடுஞ்சிலம்பன்
ஒல்லா தளித்த வுளத்தனு ரோடுகு நாகத்தோள்வீ
நல்லா யிசைப்பது கேட்டுறங் காவென் னயனங்களே. (சகரு)

நையிடைமடந்தை கையறுகிளவி

ஊன்றலைச் சேவற் சிறகரிற் பின்னி யொடுங்கியின்பம்
சான்றலைச் சேரன்றில் காளேனைப் போற்றள ராதுதுயில்
ஆன்றலைச் சேர்நுங் கனவின் வரக்கண் டறிந்ததுண்டோ
நோன்றலைச் சேரரு நோய்தலைக் கூட்டிய நோன்மையரே. ()

மாலுறுவருத்த நீலமோடுசார்த்தல்

கண்ணீர் கவிழ்த்துக் கருந்துக ளாடிக் கருகிநெகிழ்ந்
துண்ணீர் கழிய வெளிவந்து நின்றனை யுற்பலமே
விண்ணீள் வரையி னெனைப்போற்குறிபொய்த்து மெல்குவிக்கும்
தண்ணீ ரிலாத தலைவனை நீயுங்கொல் சாற்றுகவே. (சகஎ)

காணுவகையிற் பொழுதுநனியிகந்து
மாணுத்துயரின் வாணுதல்கிளத்தல்

காவலர் மாய வினிவரு வாரென்னுங் காதன்முற்றும்
மேவலர் போன்மதி வீறி விளித்தது வீயவவ்வா
றேவலந் தேனன்ன நாய்மனைக் கோழியி னேய்ந்துமெல்லாம்
ஏவலந் தாங்கு மிறையினு மேசற வெய்தினனே. (சகஅ)

குறித்தலைச்சென்றோ னெறிக்கவன்றிறத்தல்

பொறிகா ணுமக்குப் புலனனி யூர்த்திய போதுஞ்செல்லும்
நெறிகா ணுதற்குத் துயவுறு வீரின்று நேர்ந்ததில்லை
வெறிகான் மலர்க்குழ லாளைவிட் டெங்ஙன மீளுகிற்பீர்
குறிகா ணுதற்குநெஞ் சேமுயன் றுய்குழைந் தாய்திரும்பே. ()

காட்சியாசையிற் களம்புக்குக்கலங்கி
வேட்கையின்மயங்கிய கையறுகிளவி

எறிந்தளி வேங்கையின் மூசுவ தென்றுமெய் யாமின்றிதோ
செறிந்தலர் வேங்கையின் மொய்ப்பவன் றுய்திருந் தேடியிங்கே
மறிந்தளி யேமுயிர் மாழ்கிய போதைக்கு வான்மருந்தாய்ப்
பிறிந்தவர் செங்கழு நீர்நறுங் கோதை பிறங்குவதே. (சஉ0)

தன்பிழைப்பாகத் தழீஇத்தேறல்

சிலம்புங் குருகுறை நீண்மரச் சூழலுஞ் சிந்தலர்கட்
கலம்புங் கடிச்சுனைச் சூழலு நீக்கி யயிர்ப்பிலதோர்
நிலம்புஞ்ச வெள்வளை யாய்கிளந் தேனெனி னீடிரவில்
புலம்புந் தலைவ னடுத்தணங் கோடங்குப் போவதுண்டே. ()

புகாக்காவலப் புக்கெதிர்ப்பட்டுழிப்
பகாவிருந்திற் பைந்தோடிகிளத்தல்

அடுவது வன்பசி யென்றடுத் தாற்கன்னை யேவலிற்கை
தொடுவது முன்னுய்த்துப் பூசுநன் னீர்கொடு தோழிமற்றியான்
படுவது முன்னலன் பின்கடைச் செல்லப் பரிந்துதழீஇ
விடுவது கண்டிலன் வன்மையி னீக்கி விரைந்தனனே. (சஉஉ)

காமஞ்சிறந்து காதலிகிளத்தல்

துணைபுண ரன்றி லுடல்பல கோடி தொடர்ந்தெடுத்தே
இணைபுண ரன்பின மீண்டையென் றேற்றிய வென்னுளம்போற்
கணைபுண ரங்கையி னருளந் தானுங் கருதினன்னை
அணைபுண ரன்றறி யாதிர வூடழி வாசுமின்றே. (சஉங)

நாணுமிகவர நன்னுதல்கிளத்தல்

வீணுக் கிடம்பெரி தாகிய நின்னுள மேவியிங்கே
பேணுக் கிடஞ்சிறி தாகிய ஞான்றுமென் பேதையுளம்
நாணுக் கிடம்பெரி தாயது காணே னவிற்றுவது
பூணுக் கிடம்பெரி தாகிய மார்பத்துப் போர்மன்னனே. (சஉச)

காவன்மிகுதி மேவருகிளவி

கழுது முறங்குங் கனையிருள் யாமத்துக் காரிகையாள்
கொழுது வரிவண்டு கூட்டுணுந் தார்ப்புயங் கூட்டமின்றி
அழுது சிவந்தகண் ணேடழுங் காநிற்ப வன்னைதுஞ்சாள்
எழுது மிரும்புக ழோயினி யான்செய்வ தென்னருளே. (சஉரு)

ஆற்றதுதீமை யறிவுறுகலக்கம்

கருமுச்சி வன்முலை யாய்கவி னீங்குக் கழியவன்பர்
இருமுச் சிவமத முந்தரு மீச னிருஞ்சினம்போன்
றுருமுச் சிவந்துர றுந்தடஞ் சார லுலந்தமணி
தருமுச் சிவண்பணி யாறியங் காதிருந் தாலுநன்றே. (சஉசு)

இதுவிதுபடுமிர வேந்தல்வரவும்
விதுநுதற்கின்பம் விளைத்திலதென்றல்

ஊர்விழ வாயினு மில்விழ வாயினு மூர்கொண்டும்ப
ரார்விழை வாண்மதி தோன்றினுங் கூகை யறைபறையோர்
கார்விழை யேறு கடுமுரண் மான்குரல் காதுறினும்
போர்விழை தார்ப்புய னுருயிர் மாழ்குநம் பூங்கொடியே. ()

அவனளிசிறந்துழிக் கவர்மனகிளத்தல்

திருந்திய வாருயிர் மாசறத் தோன்றிய செவ்வியன்ன
வருந்திய மேகம் வழங்குமின் னுன்வழி காண்பரிதால்
இருந்தியன் மாவெதிர் வுந்தெரி யாதிர வூடுநம்பால்
பொருந்திய காதலர்க் கண்ணிய வுள்ளும் புழுங்குவதே. (சஉஅ)

நோந்துவாட்கண்ணி வந்தவழியெள்ளல்

மல்கும் பசப்பின் மதிவா ணுதலிப மாமருப்பு
வெல்குங் குமமுலை மூழ்க விரிநீ ருலகமெல்லாம்
புல்குந் துயிலிற் படாது விழிபொழி நீர்திளைக்க
நல்குந் தலைவரென் னேய்காணன் மாரினி நன்னுதலே. (சஉகூ)

மைப்பட்டகண்ணி கைப்பட்டுக்கலங்கல்

தணந்தொழி காலை யெலாமே சறவு தகப்பெருக்கி
நிணந்திடு நீருள்ளி நிற்குமென் னெஞ்ச நிறைநெகிழ்த்தார்
மணந்திட முற்றிவ ளாவிய ஞான்று மகிழ்பெரிதாம்
குணந்திக ழாதல்லன் மிக்காவ தென்னிதன் கோளணங்கே. ()

பகற்குறிவிழைந்தோள் பறவையினேக்கி
நகைக்கதிர்வேலோற்கு நவிற்றிதுவென்றல்

அளம்படு வார்துரும் பண்மினர் நேர வமர்ந்தசெவ்வேள்
இளம்பொழிற் காவி வரைகுறித் தேகு மெழிற்குருகீர்
உளம்படர் கூர வொழிந்தாரை யண்மியும் மன்றியுய்யாள்
வளம்படு மேனலங் காவல்கொண் டாளென்று வாய்விடுமே. ()

முற்றிழைமடந்தை பேற்றவழிமலிதல்

பூரித்த கொங்கை ஞெமுங்கக் கரம்புறஞ் சூழ்ந்திறுகப்
பாரித்த நின்புயம் புல்லினி தேபய னென்னையென்னை
வேரித்தண் பொங்கர லைத்துளர் வாடை மெலிவறியாச்
சீரித்த நின்னே டெமியாம் பகல்சில வாய்விட்டதே. (சகூஉ)

எய்தியமகிழ்ச்சி யிகுளைக்குரைத்தல்

தம்மாண் பிகந்து தணிந்துழிக் கௌவை தரும்பகைதீர்ந்
தம்மா வணங்கனை யாய்குன்ற நாட னடுத்தலொடும்
விம்மா நெகிழ்வளை விண்டன தோள்கள் விளர்ப்பொருவிச்
செம்மாந்து வம்பு சிதர்த்தன கொங்கை திவண்டகண்ணே. ()

பைந்தோடித்தலைவியைப் பாங்கிகழறல்

இருவி யிடந்தொறும் பற்பல தோன்றின வீதெமர்தேர்ந்
தொருவிநமைப்புனங் காவல்கொண் டாலொண் கிளிமொழியாய்
கருவி முகிற்குலஞ் சூழ்வரை நாடனைக் காணரிதாம்
துருவி வருங்கிளி யோப்பு வயின்வயிற் றுன்னலுற்றே. (சஙச)

இட்டிடைமடந்தை விட்டுயிர்த்தழுங்கல்

என்னைக் கெனைவியங் கோளி னிறுவு மியல்பொருகால்
அன்னைக் குரைப்ப விரைந்தெழு நெஞ்சங்கு னேபெரிதும்
தன்னைக் கரத்த றருமெனு நீயுயிர் சாய்ந்திறினும்
மின்னைக் கவற்று மிடையாய் நமர்க்கது விள்ளலையே. (சஙரு)

ஒண்டோடிதலைவ னுள்வழிப்படுதல்

சான்றோர் துவன்றிய மன்றமுந் தக்கோர் பொதியினும்வில்
ஆன்றோர் விழவயர் சூழலு மாத ரடுத்துவிழை
வான்றோ யுவகைத் துணங்கையி னுனுமென் மாட்டிரங்காக்
கான்றோ யலங்கலந் தோளனை யாங்கணுங் கண்டிலனே. (சஙசு)

மஞ்சனூர்புக நெஞ்சோடுகிளத்தல்

எந்நாளு மின்ப மெளிதுறு சூழ்ச்சி யிருப்பவிட்டுப்
பன்னாளு மின்னற் படுவதென் னேபையு ளோடரிய
நன்னா ணிகக்கவின் னேபுறம் போந்து நலிநெஞ்சமே
அந்நா ளகன்றில மென்றூர் பதிசென் றடுத்தும்வம்மே. (சஙஎ)

ஆங்கவனூர்புகப் பாங்கிக்குரைத்தல்

எழுந்த வலரின்னு மெங்கு மெழுக விடைமுரிந்து
விழுந்தவென் பெண்மை விழுந்தே முழுதும் விளிகவினிச்
செழுந்தண் மதிமுகத் தாயன்ப ரூர்க்குச்செல் வாந்துயரின்
அழுந்த விடுப்பது மாண்மைகொ லாமென் றறைவதற்கே. ()

நோந்துதேளி வோழித்தமை பைங்தோடி கிளத்தல்

வரையுறை தெய்வத நோக்கி மலர்க்கை விசும்பெடுத்துப்
புரையுறை வாய்மொழி யாகப் புகலல் புகலலென
விரையுறை மார்பர் தெளிவொழித் தேற்கொரு வேற்றுமையில்
பிரையுறை பாலன்ன பெற்றியெஞ் ஞான்றும் பிறழ்ந்திலதே.

அணங்கிவணநோக்கிய வச்சமிக்குரைத்தல்

எவ்வுழி நோக்கினு மவ்வுழி யவ்வவை யாயெதிர்ந்தும்
செவ்வுழி வாட்கண் படுத்தாற் கனவத்துச் சேர்ந்தணைந்தும்
ஒவ்வுழி யாமென் றுளத்தே நனவத்தொவ் வாதுறைந்தும்
அவ்வுழி வேறணங் காகாமை யன்ப ரகன்றிலரே. (சசO)

தன்னையர்தந்தை தாமறிந்தோவேன்
றன்னதினேழுந்த வச்சமிக்குரைத்தல்

ஆராத காத லகன்கரைப் பட்டுள்ள மாழ்ந்தலைய
வாராது காவலர் விட்டது வேற்று வரைநிலத்தோர்
சாராத விவ்வரை வாய்வர வெந்தை தமையறிந்தோ
சூராத நோக்கொடு மென்னையர் கண்டுகொல் சூழ்ந்திலனே. ()

எச்சமில்பாங்கியி னச்சமிக்குரைத்தல்

விருந்தெனப் போந்தும் விரைமலர் சூட்டியு மிக்களிக்கும்
அருந்திற லான்வயி னன்னளென் றிவ்வூ ரலர்தொடுப்ப
இருந்தனை யோவென்று தோழி வினவுதி யென்னினிநாம்
திருந்திய செய்வகை தீமறை யோர்திகழ் விக்குமுன்னே. (சசஉ)

நேறிப்படு நாட்டத்து நேரிழைத்தோழிக்கு
முகிழ்ந்தகோங்கை நிகழ்ந்தவைமறைத்தல்

மண்ணுங் கதிர்மணி போலுருச் சாயலு மாமதர்ப்புக்
கண்ணுங் கவின்பணைத் தோளு நுதலுங் கதுவினவென்
றெண்ணுங் கருத்தினை யின்னுங் குழக்கு மிடத்தினென்றுன்
நண்ணுங் கவலை யெனக்கினி யின்று நறுநுதலே. (சசங)

தமர்தற்காத்துழீத் தன்னுளத்துரைத்தல்

புனங்காவ லின்முன் புகுத்திய வன்னை புறக்கணித்து
மனங்காவ லின்மையி னின்றுவைத் தாளுயிர் வாழ்வகையென்
சினங்காவல் கொண்டவை வேலருந் தேர்வன தேர்கிலரால்
கனங்காவல் கொண்ட கடிவரைச் சாரலங் கார்ப்பொழிற்கே. ()

அலரிற்காத்தமை மலர்முகத்தலவி
யுயிரோரன்ன வொண்டொடிக்குரைத்தல்

ஆவா விதுவென்ன காரணம் வண்ட லயர்பொழிலும்
காவா வளர்தினைப் பாங்கும் படியுங்கண் ணார்சுனையும்
ஓவா துழனு மொருதே ருளதென வூருரைப்பப்
பாவாய் புறத்தினிப் போகலென் றுளன்னை பைந்தொடியே. ()

தோற்றப்பொலிவாற் காத்தமைகிளத்தல்

சுனைக்கடி நீலந் துரப்பன கண்கடுன் ணார்துளங்கும்
முனைக்கரிக் கோடு முரிப்பன கொங்கை முழுநிறவேய்
தனைக்கழைக் கோலத் தடிவன தோள்கள் கவன்றினிநீ
மனைக்கய லேக லெனவுருத் தாளன்னை வார்கொடியே. (சசசு)

வருத்தஞ்சுட்டி யிருத்தியதுரைத்தல்

வாடிய தோளு மலிபுனற் கண்ணுநன் மாமையெழில்
ஓடிய மேனியு மொள்வளைச் சோர்வு முயிர்ப்பெழுவுள்
நீடிய நோயி னிலைகாண் முகமு நினக்குறலென்
ஆடிய சோலைசெல் லாதியென் றுளஞ்ஞை யாயிழையே. (சசஎ)

மணப்பட்டுக்கலங்கிச் சிதைந்தவழித்தோழிக்கு
நினைத்தல்சான்ற வருமறையுயிர்த்தல்

இமையா ரியல்பினை யோதுயில் வாயலை யென்னுமன்னைக்
கமையா லியன்றன தோளாய்வை வேலர்க் கணங்குகொண்டார்
தமையா வதுந்துயில் சாருங்கொ லோவெனச் சாற்றமுன்னி
நமையார் மதிப்ப ரெனப்பைய நெஞ்சி னவின்றனனே. (சசஅ)

காப்புச்சிறைமிக்க கையறுகிளவி

தாயுந் தளரத் தனிக்காவல் கொண்டன டாங்கவல்ல
நீயுந் தளர நெடிதயர்த் தாயென்று நீர்ப்பரப்பில்
பாயுந் தகட்டு வராலினந் தேரும்பைங் காற்குருகீர்
வாயுந் தமக்கின்மை செய்தார்க் குரைத்தல் வலிமின்களே. ()

உயிராக்காலத்துத் தன்னுளுயிர்த்தல்

முயங்கிய நாளுமொன் றேயின்ன ளுரு முதிரவிட்ட
தயங்கிய தார்வரை மார்பனை நோவதல் லாற்றையலாய்
உயங்கிய தென்னென் றுசாவல்செய் யாரை யுடையதென
மயங்கிருட் கங்குலை யூரினை நோவ வழக்கில்லையே. (சரு௰)

உயிராக்காலத்துத் தோழிக்குயிர்த்தல்

செஞ்சுவ ணீவு மணிக்குழை வார்செவித் தேமொழியாய்
அஞ்சுவ லாயை யெனினு மவரோ பிரிதல்செல்லார்
நெஞ்சுவன் ஞேயி னிறுத்துந ரேனு நிணந்தநட்பின்
எஞ்சுவ தென்று மெனக்கில்லை யன்ப ரிடத்தினன்றே. (சருக)

நிகழ்ந்தமைசெவிலிக்கு மறைத்தமைநிகழ்த்தல்

வல்லிய மன்ன வெறுழான் கடியு மணந்தவன்று
மெல்லிய நூலிடைக் கஞ்சிய பொய்யுமுள் விம்மவிம்மி
அல்லியங் கோதைநல் லாயழ வன்னையின் னுவவலம்
சொல்லிய வென்னக் கரந்தேன் றுகள்விழித் தூர்த்ததென்றே()

நாணுச்சுருங்கப் பேணியகற்பிற்

பெற்றுழிமெலிவு பெருதுழிக்கிளத்தல்

சின்னாட் புணர்ச்சி சிதைவின்றித் தானே திகழ்ந்துசெல்ல
முன்னாட் டவப்பயன் முற்றின வேயம் முறைதிறம்பிப்
பன்னாட் டலைவர் பராமுக மாகிப் பருவருதற்
கந்நாட் டவறுமிக் காயது போலு மலர்முலையே. (சருரு)

அலர்தாயறியிற் றல்லவனேடவன்பதி
சேல்லவேண்ணிச் சோல்லவலித்தல்

அறிந்தா லலரன்னை யென்னுயிர் வாழ்த லருங்குரைத்தென்
றெறிந்தா டளிமலர் வாயிசை பாடு மிணர்ப்பொதும்பர்
செறிந்தார் சிலம்பற் குரைப்பிற்றன் னூர்க்குத்தெரிந்துநம்மை
மறிந்தாழ் துயரென்று மின்ருக வுய்ப்பகொல் வண்கிளியே. ()

ஆயமண்ணவல யறிந்தவைகூறல்

கைதலை வைததுக் கணிகா சலத்துக் கடவுளைத்தாழ்ந்
துய்தலை யுற்றவர் போலவன் ஞய்கண் டுவகையன்பர்
எய்தலை யெய்த்த விழியேயெய் யாத விழிக்கியம்பப்
பொய்தலை விட்டுநின் ருர்வண்ட லாயத்துப் பூவையரே. (சருரு)

சேவிலியறிந்தமை கவவலயினுரைத்தல்

பலநா ளிடையிட் டொருநா ளடுப்பினும் பார்த்திபரைக்
கலவா தழுங்குங் கடனல தில்லைக் கனையிருள்வாய்
வலம்வா ரயிலொடு வந்தமை நோக்கி வரைமுருகோ
அலதோ ரிறைமக னேவென் றுசாவின ளன்னைமின்னே.(சருசு)

சேவிலிகளவு தேரிந்தமைகூறல்

கொடியோர் கொடுமையை யேற்றிக் குடங்கை முகனிகுத்து
வடியோ டெதிர்விழி வாரநின் றேன்மருங் கன்னைவந்து
பிடியோ வெனுநடை யாயின்னல் யாவ தெனப்பெயரா
மடியோடு நின்னுரை யென்றுள்ள வாய்மை வழங்கினனே. ()

அலரேழச்சேவிலி யறிந்தமைகூறல்

வல்லுரை வாயின ரேதிலன் காதலி வம்மெனவே
எல்லுரை யாடி நகுதனு நாணிமற் றியான்பெயர
நல்லுரை யாடு நறுங்குழ லேயன்னை நன்றறிந்து
புல்லுரை யாயின வேயென்று வாடினள் பூமுகமே. (சருஅ)

பொழுதுமாறும் புரைவதன்மையி
னழிவுதலைவந்த சிந்தையிற்கிளத்தல்

என்றாழ் தணந்தவண் டாமரை போலெழி றீர்ந்துமுன்கைக்
கன்றாழ் கொளவிட்ட காதலர்க் கோது கனையிருள்வாய்க்
கொன்றாம் பெனக்கழை மீமிசை பின்னுங் கொடுநெறிநன்
றன்றா டுறவெய்யை யாய்வரு மாறென் றலர்முலையே. (சரு௯)

ஐயச்செய்கை தாய்க்கெதிர்மறுத்துப்
பொய்யெனமாற்றி மெய்வழிகொடுத்தல்

வணங்கிடை நள்ளிர வூடய லேகிவந் தாளெனநீ
பிணங்கலை வாழியன் னையகன் வானது பேதுறுத்த
வணங்குகின் ருள்சுட ரில்லா விடத்தசை யாள்பகலும்
இணங்குறு நற்றுணை யின்றேற் புலம்புக் கினைகுவளே. (சகூ0)

இதுவென தலைவனை யியற்பழித்துரைத்தல்

மறுகணி வீதி விழாவயர் நீல வரைப்பதியின்
அறுகணி வார்சடை வீரட்ட காசனை யண்மிலர்போல்
உறுகணி னுளுநட் டேஞ்செல நன்மையுன் னுருரைத்தும்
பெறுகணில் லாரம்ம வோவென்னர் நாம்விழை பெற்றியரே. ()

தலைவி தலைவனை யியற்படமொழிதல்

உருப்பவிர் தீக்கதிர் காலும் பரிதி யுலகமெல்லாம்
விருப்பவிர் மேகம் விளைப்பதன் றேவிழு மக்கடலுள்
அருப்பவிர் பூண்முலை யாய்விழுந் தியானமுந் தத்துறந்தங்
கிருப்பவ ரேயென தாருயிர் காவற் கிருப்பவரே. (சகூ௨)

பொழுதுநீட்டிப்பப் பூங்கொடிகவறல்

தாழைத் திறந்து கதவந் திறந்துடற் சார்கலிங்கச்
சூழைத் திறந்து வருடித் துணைமுலை புல்லுமந்த
ஊழைத் திறந்தவழ் வேலரென் னேமறந் தாரொழிந்தார்
யாழைத் திறந்தக லின்றெனப் பேசு மிளங்கிளியே. (சகூ௩)

வருந்தோழிற்கருமை வாயில்கூறல்

ஆவண வீதி துயின்றில பேரர வங்கடவுட்
காவண மன்றங் கடிந்தில காவல ரோவிலரால்
தீவண வேல்வலச் செல்வர் பதன்றெரிந் தன்றியுறார்
பூவண மேனிநல் லாயிதற் கோசெல்லல் பூண்பதுவே. (சசுச)

கூறியவாயிற்கு வேறிதுகிளத்தல்

காலை யரும்பிப் பகலினெல் லாங்கடிப் போதுகொண்டு
மாலை யலர்வதென் றன்மம்மர் நோய்மலி யூறுமன்னே
வேலை யலையின் விடியு மளவும் விரவுமென்றால்
ஓலை யணிந்த செவியாய் நமக்கினி யுய்தியென்னே. (சசுரு)

இரவுவருவானை யிகுளைவிலக்கல்

ஊறும் பலவுள வேயுற வின்மை யுரைப்பினும்யாம்
தேறும் படியிலஞ் சேர்பதஞ் சற்றே திறம்பினஞர்
ஆறும் பருவத்த ளல்ல ளணங்களை யாளண்ணலே
வீறும் பகலிற் பெறுதி யிரவிங்கு மேவலையே. (சசுசு)

பகல்வருவானைப் பாங்கிவிலக்கல்

முருகியங் காரி னியம்புபைஞ் சாரன்மொய்ம் பூம்பொழில்வா
செருகியம் போது செறிகுழன் மாதொடு சேர்ந்துளங்கள் [ய்ச்
உருகியங் காடு முழுவ லெல்லாமல ராயுலகில்
பெருகியங் கேதம தாம்பகல் வாரல் பெருமையனே. (சசுஎ)

பகலினுமிரவினும் பயின்றுவருகென்றல்

முற்று முலையெனுஞ் சக்கர வாக முதல்வநின்கைப்
பொற்று மரையிற் பகன்மகிழ் கூர்தலும் பொங்கிருளிற்
பற்று நினது முகமதி யானுயிர்ப் பாவைமுகத்
துற்றுர் சகோரங் களித்தலுங் குன்றத் துறுவனவே. (சசுஅ)

பகலினுமிரவினும் அகலிவணேன்றல்

எல்லிற் கமல மிவள்விழி நேர விரவியிற்சீர்த்
தல்லிற் குவளை நிகர்ப்ப நினதா னனமதியின்
வில்லிற் கவினுவ தேனு முளமோ மிகவிடைந்தப்
புல்லிற் கியைந்தில தண்ணல் வரலிரு போதுமிங்கே. (சசுகூ)

காமமிகலுரைத்து வரைவுகடாதல்

காவிக் கருங்க ணிமையிடை யாடநின் காமருரு
மேவிக் களித்தல் விலக்குவ தென்று மெலியுமிவள்
ஆவிக் கிரவிற் பகலிற்சற் றேவந் தடுத்தொழியிற்
பாவிக் குறுதி பயிற்றுவ தின்றது பார்மன்னனே. (௪எ0)

வன்சொற்கிளந்து வரைவுகடாதல்

மறையா லிவணல முண்டுயிர் வாட்டும் வழியலது
முறையா லிவணல முண்டுயிர் காக்கு முதுக்குறைவு
நிறையா லுயருமன் னுவரி தாங்கொ ணிரைநிரையாய்த்
துறையா ரருவிவெண் டுசெனத் தோற்றுநின் றொல்வரைக்கே.

பழிப்புரைகிளந்து வரைவுகடாதல்

அல்லார் களத்தனை வீரட்ட காசத் தடிகளைநெஞ்
சொல்லா தவரின்வல் லாய்பொய் யுரைப்பவுற் றுரிடும்பை
கல்லா யலைத்தலைக் கற்றுய் மெய்யோதுங் கருத்தணுவும்
இல்லா யிதுவென்ன நாடகமேந்திலை வேலவனே. (௪எஉ)

தெளிவிடைவிலக்கி வரைவுகடாதல்

ஆற்றுந் திறமிவட் கெங்ஙன மெய்து மலருலகில்
தூற்றுந் திறத்த சுடர்த்திரி நெய்யிற் சுடுபுனற்கண்
போற்றுந் திறத்தன வல்லமுன் கையிற் பொருத்துவளை
பாற்றுந் திறத்ததன் றுனுத லூரும் பசப்பண்ணலே. (௪எங)

அருளின்மை தகாதென வரைவுகடாதல்

மணக்கும் பரிசினல் லானுயிர் வாழ்க்கை மணப்பதின்றித்
தணக்கும் பரிசினில் லாத்தடங் கண்ணிதன் பானினக்கே
நிணக்கும் பரிசில்லை யேற்றகு மோநிலை சோர்ந்தவள்ளி
உணக்கும் பரிசின் முதலரிந் தாலொக்கு மொள்ளியனே. ()

கையறுதோழி கண்ணீர்துடைத்தல்

என்னுயிர் வாட வெனதொளி வாட வெனக்குயிராம்
நின்னுயிர் வாட நினதொளி வாட நெடும்புனலுள்
தன்னுயிர்ப் பாவையுஞ் சாம்ப நினது தடங்கணந்தோ
மன்னுயிர்ப் போடக் கலுழ்வதென் னேமணிப் பூண்முலையே.()

கையறுதோழியை கையிடையாற்றல்

அயிர்த்திர ளாலடர் வாரியைக் காத்தென வார்நிறையால்
செயிர்த்தவன் காமந் தகைத்தே நமதுளந் தேய்ந்தழிய
வயிர்த்திர ளேங்கும்வண் சாரல்வில் லோற்கண்ட வாள்விழிமன்
உயிர்த்தய லேயிடர் நீப்பக்கொ லாம்புன லூற்றுவதே. (சஎசு)

வரைதல்வேண்டித் தோழிசெப்பிய புரைதீர்கிளவி

கிழங்குவண் சார லிடந்தொறும் வீழ்வன கேழ்த்தவள்ளி
முழங்குவண் டேனினஞ் சூழ்தேத் தடைமொய் யடுக்கமெலாம்
ஒழுங்குவ மாலை யருவியு மோங்குவ வொண்டொடியாய்
அழுங்குவ தேநமக் காக்கிப்பொய்ச் சூளுற்ற வண்ணல்வெற்பே.

புரைதீர்கிளவி புல்லியவெதிர்வு

மருளிற் பிணைந்துபொய்ச் சூளுறு வார்கொல்வை வேலரன்னுப்
இருளிற் பிணைந்த விருவினை மாற்றியெல் லாங்கழிப்பி
அருளிற் பிணைந்தவ ராங்கிரு ளோடு மணைந்தவொப்பாம்
பொருளிற் பிணைந்ததம் வாய்மையிற் பொய்மை புகுந்திடினே.

களவலராகச் செவிலிகட்டுரைத்தல்

ஓங்குந் தணிகை வடிவேற் கடவுளை யுன்னலர்பால்
வீங்கும் பிழையினம் மெல்லியன் மாதின் விழுக்குடிக்குத்
தாங்கும் பழிமொழி சார்ந்தது நன்றினிச் சாருங்கொலோ
யாங்குந் தணப்பரி தாம்வரும் பாலன யாவர்க்குமே. (சஎக)

காமமெய்ப்படுப்பக் கண்டனள்கிளத்தல்

மென்னா லெழினியி னுள்ளே கதிர்த்த விளக்கொளிபோல்
நன்னூல் கிளந்த வணியுட் கிடந்தோர் நலந்திவளும்
பன்னூறு கோடிநற் பாங்கியர் சூழப்பைம் பூம்பொழில்வாய்ப்
பொன்னூ புரங்கள் புலம்பப் புகுநம் புனக்கிளிக்கே. (சஅ0)

அளவுமிகத்தோன்ற வறிந்தனள்கிளத்தல்

முல்லை யளவு நிலாவின மூரன் முறுவலிடம்
இல்லை யளவு முலைக்கினி மார்ப மிலகுபெண்மை
எல்லை யளவு நிரம்பிற்று மாதுக் கிறுமலநோய்
ஒல்லை யளவு முலவாமெய்ஞ் ஞான வுவாவெனவே. (சஅக)

தலைப்பெய்துகண்டோள் சாமியென்றயிர்த்தல்

காந்தளம் போது விராய்த்தொடு கூதளங் கண்ணியன்கை
ஏந்தயில் வேலினன் முன்னொரு நாளிவ ணெய்தல்கண்டங்
காய்ந்தலர் தூவி யடிதொழு தேனின்று மண்மல்கண்டேன்
வாய்ந்ததன் மந்திர மோவிந்த வில்லு மயூரனுக்கே. (சஅஉ)

வணங்கிடைத்தலைவி யணங்குகண்டயிர்த்தல்

காம்பிய ரேள்கண் மெலிந்தன சாம்பின கண்கனகம்
தேம்பிய மாமை சிதைந்தது தேவர் சிறைமுருக்கி
ஓம்பிய வேலர்க் குறுமணங் கோமற்று மொன்றுகொலோ
கூம்பிய கொங்கைக் குறுமணி மூரற் குறுந்தொடிக்கே. (சஅரு)

காதலிவிழுநோய் கட்டினிற்றெளிதல்

சில்லரிப் பன்மணி நூபுரச் சீறடிப் பேரமைத்தோள்
வில்லரிப் பைங்கட் கருங்குழல் வெண்ணகை மெல்லியலாள்
கொல்லரிப் பைம்புனஞ் சூழ்வளஞ் சாரலிற் கொண்டவெந்நோய்
சொல்லரிப் பன்றியன் னைகட்டி னடித் துணிவுறவே. (சஅச)

வேலனைக்கூஉய் வெறியாட்டெடுத்தல்

பொறியாட் டெறுழ்தணித் தூர்ந்தோன் றணிகைப் பொருப்ப [னையாள்
செறியாட் டொடுங்கவு றங்கிய செல்ல றெளிப்பவினை
மறியாட் டுதிரம் விராய்ப்பலி தூய்வண் பிரப்பிருவி
வெறியாட் டயர்கிற்ப வேலன் புகுந்த விளைவெமக்கே. (சஅரு)

வெறியிணைவெரீஇச் செறிகுழல்கிளத்தல்

தரளத் தொடையுந் தமனியத் தாருந் தனமுகட்டுப்
புரளத் தொகுத்தவெல் லாநம்மைத் தாம்புற மாக்கியநோய்
கரளத் தனிமிடற் றான்மகற் பேணிக் கடிநகரம்
திரளத் தவிரினுந் தீங்கே யிருப்பினுந் தீங்குளதே. (சஅசூ)

வெருவியதலைவிக்குத் தோழிவிளம்பல்

கவலையுற் றாழ்வது வேண்டா நமது கருத்துறவு
தவலையுற் றாழ்தல் வருதலுண் டேயித் தலைவிடுத்துச்
சவலையுற் றுள்ள முகாமே யறக்குணத் தானறுந்தேம்
துவலையுற் றார்பொழிற் குன்றுறி னென்வெறி சூழ்வகையே. ()

கழங்குபார்த்துழிக் கழங்குமெய்யேயெனப்
பழங்கண்டூரப் பாங்கிபகர்தல்

குறிப்பாற் பிறிது பொருளினைச் சின்மொழி கூறுவபோல்
வெறிப்பாற் றணிகை வரையயில் வேற்கை விசாகன்கொலாம்
முறிப்பான் மையினெழி லாட்கணங் கீந்தா னெனுமொழிதான்
நெறிப்பான் மையினல னென்பது வோவிந் நெடுங்கிரிக்கே. ()

நின்வெறியாட்டி னீப்பரிதாகு
மின்வெறியாட்டென வேலனுக்குரைத்தல்

வேண்டிய வேல வெறியாட் டயர்க வெறிப்பநின்னைத்
தூண்டிய தாயுந் துளக்க முடிசுடர் வேற்கடவுள்
ஈண்டிய பூசனை யேற்க விவற்கு னிகப்பரிதால்
மாண்டியல் வாட்கண் மடக்கொடிக் காற்ற வளரணங்கே. ()

முகிழ்முலைப்பாங்கி முருகற்குரைத்தல்

அடியே னறிந்த வினையா ளணங்கண்ட வாணர்மணி
முடியே ருழுமடி முன்னோய்கின் னுள்ளமுன் னுததன்றே
பொடியே மூலகமும் போர்ப்ப வரைபுழை யாக்கியநீ
கடியேல் வெறிமனை வேலோ னிரப்பக் கலப்பதன்றே. (சசகூ0)

தையனோய்பிறிதேனத் தமர்கோளக்கூறல்

ஒருஞான சத்தி தரனணங் காலுவட் கென்பவற்றுன்
வருஞான சத்தி தரனெனு நாமம் வழங்கவினிப்
பெருஞானம் பெற்றனம் பேரமைத் தோளி பிணையுருவத்
திருஞான மாற்றிப் பசலையு மையலுஞ் சேர்த்தவர்க்கே. ()

அன்னைக்கரிவை யின்னல்வேறென்றல்

மாதுற்ற நோய்க்கு மலையாண் மகனை மதிபுரையும்
காதுற்ற சங்கக் குழையான் புதல்வனைக் காமர்பொய்கைப்
போதுற்ற வாறு முகவனை யிங்குப் புகுத்தியன்னாய்
பேதுற் றனைவெறி யாடலும் பாடலும் பேணிகின்றே. (சசகூஉ)

அழிபாடுளத்தவ னன்பனுறத்தழீஇப்
பழிதீர்முறுவல் சிறந்தேதோற்றல்

முறுவ னமக்கினி தாக முரிபுரு வத்தணங்கே
சிறுவ னுரையினர் வாய்நனி கூம்பத்தெய் வத்தின்மின்னேய்
குறுவ லெனுமன்னை யோகைகொண் டாடக் குறுகியளாய்
உறுவல் விலங்கனை யான்செல்லச் செய்ததவ் வொண்முருகே.

களவறிவுறீஇ வரைவுகடாதல்

வாரித் தலையின் மணிவே லொடுநின் வரவுகண்டு
வேரித் தளிமலர் வேலனெனன் றேக்கினனண் மீட்டொருநாள்
பூரித்த தார்ப்புயத் தாய்கண்டு தாயிவட் புக்கொழியாச்
சீரித்த வேலவன் யாரையென் றையஞ் சிறந்தனளே. (சகூச)

காவன்மிகலறிவுறீஇ வரைவுகடாதல்

புதுக்கலங் தேக்கு நறுநீ ரெனப்புறத் தேதிகழும்
முதுக்குறை வாண்டவுள் ளன்பொடு காமமு மொய்யலரும்
விதுக்குறை வாணுத லாட்குள்ள வாகண்டு வெய்துநந்தாய்
மதுக்குழ லார்பலர் காவலினேய்த்தனண் மன்னவனே. (சகூரு)

வெறியச்சுறீஇ வரைவுகடாதல்

வழிமொழிந் தேவல் செயப்பணி யாதுமன் னுபொழிய
விழிமொழி தள்ள விடுப்பது நீதிகொ லோவலதூஉம்
பழிமொழி யோபெரும் பாவமும் வந்தன் று பன்மறிசாய்த்
துழிமொழி வண்பலி தூய்வெறி யாட்டுகந் தாளன்னையே. ()

சிறைப்புறத்தலைவற்குச் சேறியெயிற்றிகுளை
பிறர்வரைவுரைத்து வரைவுகடாதல்

பரிகொண்டு வாங்க லணைப்பரி பண்ணிய வேழநிலம்
நெரிகொண்ட தேரு நெடுங்கடை வாய்த னிரைகொண்டவால்
அரிகொண்ட வாட்கண்ணி மங்கலங் கூறி யடுப்பவென்றும்
உரிகொண்ட வன்பினர் தாமிதற் கேது முணர்ந்திலரே. (சகூஎ)

அன்னைகேட்ப மின்னிடைக்குரைத்தல்

சிற்றி லடுத்துச் சிறுசோ றிரந்து தெருச்செலுங்கால்
முற்றி லடுத்து முழுச்சோ றடுமன் றுன் முண்டகக்கை
பற்றி னடுத்தெரி சூழ்வலென் றேபரி வான்வருட்டி
எற்றி னுரைத்தவர் யாண்டைய ரேதில ரீண்டமின்னே. ()

ஒண்டோடித்தலைவி யுயிர்செலவடுத்த
வேற்றுவரைவை மாற்றெனக்கிளத்தல்

எள்ளாத வின்னற் கிரையா விருத்திய தன்றிமன்யாம்
விள்ளாத காதல மாகவுள் ளாது விடுத்தவர்பால்
தள்ளாத கேண்மைமுன் பேதந்த பாலுந் தலைதிறம்பி
நள்ளாத வேதிலர் பாலினு மாக்குங்கொ னன்னுதலே. (சகூகூ)

பிரியின்வாழாப் பெற்றிமைதலைவற்
குரையெனத்தோழிக்கு வரிவளைகிளத்தல்

பிரிந்தா லரிதுயிர் வாழ்க்கை புடைபெய ராமுயக்கம்
புரிந்தாலு மன்றி லெனக்கிள வாய்புது கித்திலங்கள்
வரிந்தா லனைய முறுவற்செவ் வாய்மதர் வாள்விழியாய்
தெரிந்தார் தமையுந் தெருட்டுதல் சான்ற தெளிவினர்க்கே. ()

நின்னின்றமையா ளென்றுரையென்றல்

மதுவார் குவளைக்கு நீரன்றி யில்லைமன் னுருயிர்க்கு
விதுவார் சடைப்பெரு மானன்றி யில்லை வினையுடற்குக்
கதுவா ருயிரன்றி யில்லை நலநின் கருணையன்றி
எதுவா மடக்கொடிக் கென்றுரை வேலவர்க் கேந்திழையே. ()

வந்தவர்மீளுமுன் வெந்துயர்தெரிக்கெனல்

வந்தவர் வாம்பரித் தேரின்று மீள வலித்ததில்லை
நொந்தவர் நின்னடுத் தாருளில் லாநுதி வேற்கரவா
பந்தவ மான பயோதரப் பாவை படர்மலிநோய்
சிந்தவ ளாவெனிற் கேட்குவர் கொல்லோ திருந்திழையே. ()

அன்னக்குரையேன நன்னுதல்கிளத்தல்

கூளுற் றுரைப்ப லெனுவி நினக்குத் தொடுகழலான்
வாளுற்ற கண்மை வரித்துக் குழலின் மலர்செருகி
மூளுற்ற வன்பின் முலைமுகம் வைத்து முழுவிமெல்ல
மீளுற் றனனன்னைக் கோதி னவைவிர வாமைநன்றே. (ருOக)

ஆற்றுத்தன்மை தோற்றித்தலைவி
யறத்தோடுநிற்பத் திறத்தோடுகிளத்தல்

அளியே னினைதற்கு நீயன்றி யில்லை யணங்கனையாய்
களியேய் களிறனை யானை வரையக் கடாவலொன்றே
வெளியே யனைக்கென் விழுப்பெரு நோயை விளிக்கவல்ல
தெளியேய் மருந்திது வென்பதொன் றேசெய்க லாயெனினே.

வணங்கிடைத்தலைவி யணங்கெதிர்கண்ட
புகர்தபுசேவிலி யிகுளையைவினுதல்

கடுக்கந் தரம்வைத்த வீராட்ட காசன் கருணையில்லார்க் [யாள்
கொடுக்குந் திகழ்ந்தென வொள்ளொளி வாடின ளொண்டொடி
அடுக்கந் திகழ்வரை யாங்குநின் னேடுத் தாட்டயர்ந்தாள்
நடுக்கந் திகழிட் டிடையக லல்கு னறுநுதலே. (ருOரு)

களிறிடைவிலக்கி யொளிறுவேலிறைவன்
மின்னிடைக்குதவி யன்னக்குரைத்தல்

குமரித் தடஞ்சுனை யாடினண் மீண்ட குறுநெறியின்
அமரிற் றலைமடங் காமத வேழ மடர்ப்பவிரீஇத்
தமரிற் றலைப்பிரி யாமைத லையளித் தேதனக்கங்
கெமரிற் றலைப்படல் கோடியென் றுனெ றெறும்ப்புயனே. ()

நற்றாய்க்கன்னை பெற்றியிதேன்றல்

அரும்பிற் றிலமுலைத் தாமரை மூர லணித்தளவம்
விரும்பிற் றிலவிழிக் காவி யளியொடு மேவன்மலர்ச்
சுரும்பிற் றிவண்டில தோதியென் னேநஞ் சுடர்த்தொடிவேள்
கரும்பிற் றுவண்டனள் போலும்வில் லார்ந்த கனங்குழையே.

அன்னதுநற்ருய் தன்னையர்க்குறுத்தல்

யாழியன்மொழிக்குத் தோழிகிளத்தல்

என்வாய் மொழியன்னை வாயி னறிந்த வினியநற்ருய்
தன்வா யறிந்து தழலெனச் சேந்து தடங்கண்மலர்
முன்வாய் விதியன்றி யில்லையென் ருறினர் மொய்யமரில்
பின்வா யடிபெய ராதவென் னையர் பிறைநுதலே. (௫0அ)

வடிநெடுவேலோன் கடிவருமாறு

வடுவகிர்கண்ணிக்குக் கடுமொழிகிளத்தல்

வள்ளத் தெழுந்த வனமுலை யாயன்பர் வந்திடலும்
பள்ளத் தெழும்புனல் போலெழுங் காதலைப் பண்பின்மறை
வெள்ளத் தெழுது மெழுத்தென நந்துயர் வீடுநெறி
உள்ளத் தெழுதி யுறுநாள் கழியா துளுற்றுதற்கே. (௫0௯)

மழைமேல்வைத்து வரைவுகடாதல்

இடித்துத் தடித்துத் திசைதொறுங் கான்றிந் திரதிருவிற்
பிடித்துத் ததைந்த பெருமுகி லேபெருங் கோடைவெப்பு
முடித்துத் தினையளிப் பாய்கொன் முயற்சியெ லாந்தபுத
நடித்துத் திரிவைகொல் லோவறி யேனிந்த நாகத்திலே. (௫௧0)

நாட்டிணையுயர்த்தி வரைவுகடாதல்

ஒருத்தற் குலம்பிடிக் கூண்பல வூட்டியுண் டோங்குசிழற்
பொருத்தற் குகைப்பது நின்னகநா டெனிற் போர்த்தலைவா
வருத்தற்கெமையொன் றுந்தேற்றிலைபோலவெம் மாதைநின்னில்
இருத்தற் கினைந்திலை யென்னறி யாங்கொ லிருநிலத்தே. ()

ஊரையுயர்த்தி வரைவுகடாதல்

புள்ளும் விலங்கும் புதிதுறு வோரும் பொருந்துநரும்
விள்ளும் விலங்கும் பசியிடர் நோயென வீழுநலம்
தெள்ளும் விலங்குட் டிருந்திய வூரற்குச் செய்வினையின்
தள்ளும் விலங்கு முளமெனின் மன்னே தகவில்லையே. (௫௧௨)

இல்லுங்குடியும் பிறப்புஞ்சிறப்பு
மிறப்பக்கூறி வரைவுகடாதல்

வேங்கையு மற்றும் விஞயிளை யாண்மெய் யெழிலும்வளை
பூங்கையும் விள்ளப் புறக்கணித் தாயினும் போற்றிலையேல்
தீங்கையு மில்லுங் குடியும் பிறப்புஞ் சிறப்புமெண்ணின்
மூங்கையு முற்றிய வாக்கியு நேரு முதுநிலத்தே. (ருகஉ)

வையிலவேலோன் வரைவுடன்பட்டமை
பையரவல்குற் பாங்கிபகர்தல்

வாழிய நீதுயர் வீழ்கநின் மாமை வளஞ்சிறக்க
கேழியல் யாவ ரிடத்துமில் லோன்கிளை யோர்துவன்ற
ஊழியல் வேத வொழுக்கமை சான்றோ ருடன்குழும
யாழியன் மென்மொழி யாயடுத் தான்மண மெய்துதற்கே. ()

உழந்ததுயரத் தோக்கமுமெதிர்ந்த
தழைந்தமகிழ்ச்சியுந் தலைவிகிளத்தல்

நீட்டித்து மன்றலை நீப்பவர்ப் பெற்றோர் நிறையுளத்துப்
பூட்டித் தகைக்கும் பொறிப்பே றரிது புணர்கனவு
மாட்டித் துகைக்கும் வருத்தமுங் கௌவையு மற்றுமன்னுய்
வீட்டித் திருத்தரு நல்விளை யோவினி மேவுவதே. (ருகரு)

மறுப்பர்கோலோவென மறுகுபுகிளத்தல்

தீதிலர் மாட்டுச் சிறக்குந் தணிகைச்செவ் வேலிறையை
ஓதிலர் மாட்டுறு செல்லலுற் றூழெ னுளம்விடுத்துப்
போதிலர் மாட்டுத் துணிந்தன ரோபுக லாய்புகுந்த
ஏதிலர் மாட்டுக் கருத்திளை மாற்றி யெமரணங்கே. (ருகசு)

தமர்வரைவேற்ற லிகுளைசாற்றல்

குருவாய் வெளிக்கொள வீராட்ட காசக் கொழுஞ்சுடராங்
கொருவா மலந்தணிந் தோங்கரு ளாயுறு மாயைகன்மம்
மருவா மையினன்ப ரெய்தலுங் கௌவை மறைந்தெவரும்
திருவா ளணையன்றி நாட்டில ரேட்டையிற் றீர்திருவே. (ருகஎ)

அவன்வரைவுமறுத்துழி யணிவளத்தோழி
யன்னகக்கணங்குறு மின்னலீதென்றல்

அடுத்தவல் வேழம் வருமுலை யாகத் தழுந்தவணைத்
தெடுத்தகை வேலின் விலகி யினமலர் சூட்டியளாய்
விடுத்தவர் தோட்புணை யில்லா தவைசனம் மெல்லியலாள்
கடுத்தவத் தீற்றிய செல்லலை யன்னைப் கடப்பரிதே. (ருகஅ)

உதவிசெய்தவலவர்க் கல்லதுநிவனயின்
மதர்விழிவாழ்க்கை யரிதெனக்கிளத்தல்

வேழங் கடந்தவர்க் கல்லாது வேற்ருேர்க் கெனவிதிக்கின்
வாழங் கடலிடத் தென்றே யிருக்கு மடநடைமான்
வீழங் கடிவரை மார்பரி னுமும் விதிப்பதல்லால்
யாழங் கடர்மொழி யன்னைப் பிறரி னியல்பில்லையே. (ருகக)

அணிபடுத்தணங்கி னழகினுக்கோத்த
திணிவரைத்தோளனச் சேவிலிநாடேன்றல்

பாடக நூபுரங் கிண்கிணி பாதம் பருமமல்குல்
சூடகந் தோண்முலை நித்திலந் தோடு குழைசெவிமெல்
லாடக மாமல ரோதி யணிந்திவ ளேர்க்கியைய
மாடக யாழ்மொழி யாய்மதி யாயொரு மஞ்சனையே. (ருஉ0)

குஞ்சரங்கடிந்த குமரனையன்றேரு
மஞ்சனுமில்லெனப் பாங்கிவவித்தல்

அறியாப் பொருளின்றி யெல்லா மறியு மறிபொருள்சீர்
பிறியாத் தணிகையில் வீராட்ட காசப் பெருந்தகைதன்
குறியானு மொத்தவன் குஞ்சரங் கீழ்ந்த குமரனன்றி
வெறியார் மலர்க்குழ லாயில்லை வேறுவிண் ணேருளுமே. ()

இன்னணநிகழ்தலின் மின்னிழைமாதின்
சிந்தையேன்னேனச் சேவிலிவினுதல்

அணியினும் பூசினு மோகையில் லாளடுத் தாயநல்லார்
பணியினும் பார்வை வழங்காள் பகலோன் குடகடலில்
தணியினும் பாளிதம் வேண்டா ளணங்கிற் றலைப்படுதல்
துணியினும் பாவமென் றுயிவ ளெண்ணஞ்சொல் லாய்கிளியே.

வண்ணக்கிளிமொழி யெண்ணமீதென்றல்

உற்ருர்க் குரியவர் பொற்ருெடி மாதரென் ருேதுபொருள்
பற்ருதல் கொண்டநம் பாவை பகட்டின் பணைக்கைமுகத்
தெற்ரு வொருகைத் தழீஇமலைந் தோப்பு மிறைவர்மணம்
முற்ருமை கூட்டுங்கொ லோவென வெந்துயர் மூழ்கினளே. ()

மறுத்துழியாற்ரு வண்மொழித்தலைவிக்கு
நிமித்தங்கூறி நீடாதென்றல்

கூடிற்று மன்ற லெனவே விரிச்சி குலாயதிடன்
ஆடிற் றலர்விழி வாங்கமைத் தோளு மணிமுலையும்
ஓடிற் றிடனின்று காக மனைக்குரைப் பான்புகுங்கால்
நீடிற் றிலதினி மன்றல்பொன் னேயெவர் நீப்பினுமே. (௫உச)

தந்தைதன்னையர்க்குத் தாயினிதுரைத்தல்

சான்ருே ரிரந்த விரப்பு நமது தனிக்குடியின்
வான்ருேய் வனைய புகழ்மையு நோக்கி மருதுபெண்மை
யான்ருேட் புணர்ப்பினல் லாற்கொடை சான்ற வவையுலகம்
மூன்ருே டளிப்பினு மாமோ முகிழ்ந்த முலைவிலையே. (௫உ௫)

வருவனவேற்று வழங்குவதல்லது
திருவிழைமாதர்க்குப் பொருளிலையென்றல்

உரையுணர் வாக்கை கடந்த பதமுவற் ருற்பணிக்கண்
விரையுநர் பாலருள் வீராட்ட காசன் விழையவவர்
வரையுட ஞடு தருவன வேற்று வழங்கினல்லால்
தரையுள தோவிலை யாகும் பொருள்விண் ணுந் தானிலதே. ()

புரவலர்க்கிதுவளை பொருளெனக்கிளத்தல்

இடைப்பா லதுபெறின் முந்நீர் முதிர்ந்த விருநிலத்துக்
கடைப்பா லதுந்தலைப் பாலது மாமெனுங் கட்டுரையின்
நடைப்பான் மையும்பழு தாமோ விறைவநம் மார்விழைவு [யே.
கொடைப்பான் மையின்முடித் தென்ருே நிறுவுதி கோற்ருெடி

நன்மையுந்தீமையும் பிறிதினைக்கூறிப்
பொருளெனக்கிளந்தவள் வரைவுகடாதல்

வழியா னுறுநர்க்கு வீராட்ட காசன் மலர்ப்பதம்போற்
கழியா விழைவின ராயினுங் காழறு சான்றவர்நன்
மொழியான் வருமின்ப மல்லது மெய்கதிர் வேற்றலைவா
பழியான் வருமின்பம் பற்று ருயிர்சாய் பதத்தினுமே. (ருஉஅ)

கடுமொழிகூறி வரைவுகடாதல்

முழங்கிய மாலை யருவியஞ் சாரன்மொய் வேடர்குழாம்
கிழங்கினை வேட்டெழு வள்ளியைக் கேட்டிடை நாட்டும்வெற்பா
வழங்குமென் றேருளி நலனுண்டு நீத்தன் மரபுகொல்லோ
பழங்கணிற் றீரெம்மைப் பூண்கநின் றேரிற் பரியினமே. (ருஉகூ)

நலந்தோர்வுவுரைத்து வரைவுகடாதல்

கெழுவிய காதலை யென்றெம துள்ளங் கெழீஇயதன்றித்
தழுவிய காதல மென்றுநின் னுள்ளந் தழீஇயதின்றே
எழுவியல் வான்புயத் தாய்வரை யாயெனி லின்றெமது
வழுவிய மாமை வளந்தந்து சேறிநும் வான்பதிக்கே. (ருநூ0)

வரையுநாள்சுட்டி வரைவுகடாதல்

ஊர்கொண் டதுமதி மெல்லிணர் வேங்கையொள் வீமலர்ந்து
சீர்கொண் டதுவெற்பன் காதலி செல்வி யெனுமொழிவிண்
பார்கொண் டனவின்னும் பைந்தொடிப்பாவைதன்பானலங்கண்
நீர்கொண் டதுமருந் தோகண்ட தின்று நெடுந்தகையே. ()

வரைவிடைவைத்துப் பொருள்வயிற்செல்வோன்
ஓம்படைக்கிளவியிற் பாங்கிக்குணர்த்தல்

சுவலிற் றுயல்வரும் பூங்குழை வார்செவித் தோகைநல்லாய்
அவலித் தணங்குநை யாவகை தேறற்கன் றுணவநோய்த்
தவலிற் றலைவரும் வீராட்ட காசன் றனியருளால்
கவலைத் தடஞ்சுரந் தாய்ப்பொரு ளானும்மைக் காண்குதுமே.

ஆற்ருத்தலைவியைத் தேற்றிச்செல்கென்றல்

செவ்விய தீஞ்சொற் சிலம்பா நுவன்றவஞ் ஞான்றவைதாம்
அவ்விய மாத லறிந்தா மடுக்கு மமயமன்றிக்
கவ்விய வேருெரு காரணத் தாற்கணந் தாழ்த்துறினும்
நவ்விய வாட்கண் கலும்வாட் குரைத்து நடமதியே. (ருஙஙு)

ஆற்ருத்தலைவியைத் தேற்றுதலரிதாற்
ருழ்க்சலன்வரைவெனப் போக்கோவேலித்தல்

அன்னை த னீக்கஞ் சிறூர்க்குரைத் தாற்றி யகல்வரிதால்
அன்னைத னீக்கத் தடுத்தவ ராற்ற வமைவரன்றே
என்னைத னீக்கத்துய் யேனென்னு மாயி னியம்பும்வழி
என்னைத னீக்கநில் லாதெனத் தேற்றிங் கிளங்கிளியே. (ருஙச)

பிரிந்தமைபாங்கி திருந்திழைக்குரைத்தல்

வெப்பா னளவிய தேன்வாய் மடுத்தோர் விடுத்தலுண்டல்
அப்பா லவற்றுளொன் றுந்துணி யாரது போன்மயிலின்
ஒப்பா யுறுபொருட் கேகினர் காணது வானலஞ்செய்
இப்பாலதோவின்ன லப்பாலதோவிவ ணெண்ணரிதே. (ருஙரு)

பிரிவுகேட்டவள் பருவரலெய்தல்

கன்ருல் விளவெறி காழ்கனி பூட்டிக் கருதலரூர்
வென்றான் றணிகையில் வீரட்ட காசனை மேவலர்போற்
சென்ரு னெனுமுன்னர்த் தீவினை யேனுயிர் தேய்ந்தழிவ
தென்ரு லினிவைகு மாறெங்ங னுவ தெனக்கனமே. (ருஙசு)

நன்னெறிவிளவதி னைந்துகலேன்னேன்
வஞ்சிநுண்ணிடை நெஞ்சோடேகவறல்

முன்பந்த மாயவை யெய்தார் முதல்வன் முழுத்தவுயிர்
வன்பந்த மாய்த்தருள் வீரட்ட காசன் மலரடிபோற்
றன்பந் தடாச்சுடு வான்சுரம் போக்கென்றுந் தோல்விசெல்லா
இன்பந் தரூஉநெறி யென்றுங் கறிந்து மினைதிநெஞ்சே. (ருஙஎ)

வருத்தமிக்கவள் கருத்தழிந்துரைத்தல்

வெஞ்சின வேலொடு போந்துமந் தார மிடைநிழலின்
வஞ்சின மோதி வருட்டித் தெருட்டி மணந்ததெல்லாம்
நெஞ்சின தேயன்று நீள்சிறை மஞ்ஞையு நின்றதுண்டு
துஞ்சின தேலவர் வாய்மையென் செய்கோ சுடர்க்குழையே.

இயற்பழித்திகுவள வற்புறுத்தியது

வித்தினை யாக்குந் தலைப்பெயன் மாமழை மென்பயிராம்
அத்தினை யாக்கும் பெயன்மறந் தாங்கடு வேலரையர்
முத்தினை வீழ்த்த முறுவனல் லாயென் மொழிதுமின்னற்
கொத்தினை நீப்பக் குறித்தவர் மீட்டுங் குறித்திலரே. (ருஙகூ)

வன்புறையெதிரழிந் தாற்ருதுரைத்தல்

தொடுக்குந் தொடலை யணிந்துபைந் தார்சுரு ளோதியின்வாய்
மடுக்குந் தொழிற்கு வரிவளைத் தோளிதன் வாரெறுழ்த்தோள்
விடுக்குந் தொறுமஞ்சு மெல்லுயிர்ப் பாவிக்கு விட்டுப்பன்னுள்
அடுக்குந் தொழில்வைத்த தெய்வத மோவருட் பாலதன்றே.

ஆற்ருத்தலைவி தேற்றுமாறுரைத்தல்

வெறுக்கை யுடங்கிய வன்பினர் யார்க்கும் விளங்கிழையாய்
வெறுக்கையெனினும்விள்ளாமைசெய்காரணத்தால்விழைந்தாம்
பொறுக்கை யிருப்பவர் தங்கட னென்று போனவர்நாள்
நிறுக்கை யிகந்தணை யார்தக்க தன்றிது நேரிழையே. (ருசக)

மென்னடைக்காலவர் கன்னகந்தழுவியெம்
மெய்யிடையுறினு முய்துமென்றியம்பல்

மந்தா நிலமவர் வான்வரைப் பூஞ்சுனை வாய்த்தவழ்ந்து
பைந்தா துகுக்கும் பரிமளச் சோலை பயின்றுசுலாய்ச்
சிந்தா குலமுறுந் தீவினை யேன்மெய்த் திளைப்புறினும்
கொந்தா ரொளிமணிக் கோற்றெடி யாயுய்தி கூடுமன்றே. ()

பருவங்கண்டு பருவரலுழத்தல்

கொண்டன் மிகுத்துக் குரைகடன் மேய்ந்து குளிர்மழையின்
மண்டன் மிகுத்து வருவது போலும் வருமுனன்னுய்
துண்ட மழற்றி நனியுயிர்ப் போங்கச் சுடுதிவலை
விண்ட மலர்க்க ணிரப்புவ தீதென்ன விம்மிதமே. (ருசங)

ஆயிடைத்தோழி யழிந்தியற்பழித்தல்

காண்டலை மாற்றிக் கவலையிற் றாழ்த்திய காதலன்போல்
வேண்டலை வேண்டுமன் றானெடுங் குன்றமும் வீடருநோய்
தூண்டலை மேயதன் றேசுடர்ப் பூண்முலை யாய்முழுதும்
மாண்டலை மேய்ந்த மழைப்படம் போர்த்து மறைந்ததுவே.

அவன்றிறநோக்கிக் கவன்றனள்கிளத்தல்

பெருகிய கௌவையுங் கௌவையி னும்பெரி துங்கழுமுற்
றுருகிய வெவ்வமு மவ்வினைக் கேத முறுநமர்தம்
திருகிய சிந்தையுந் தீதிலர்க் கச்சஞ் செறித்தனவோ
அருகியெ னெஞ்சி னலாதிருட் போது மடுக்கலரே. (ருசரு)

போய்த்ததுசூளெனப் புகன்றியற்பழித்தல்

வெறுத்தியல் பல்லன மேலெவன் செய்வது வேண்டுமன்னாய்
உறுத்திய வஞ்சினம் பொய்த்ததன் றேயுது தேற்றுவபோல்
நிறுத்திய கைவளை நில்லா தரள நிரைநெடுங்கண்
மறுத்திய லாநெட் டுயிர்ப்படுத் தோரை வருத்துவதே. (ருசசு)

வஞ்சினங்காவல ராயினுங்காவலின்
எஞ்சலரேமக்கென வியற்படமொழிதல்

அழத்தினை வேட்டுணும் பெண்டீர்வல் சீயமுன் னானவுந்தம்
மழத்தினை வேட்டு வளர்ப்பன வேமதர் வாட்கணல்லாய்
முழத்தினை மெல்லணை யூன்றிய கங்கை முடிக்களிப்போன்
இழத்திய வென்னுயிர் காவல னீடினுங் காவலனே. (ருசஎ)

கவினழிவுரைத்துக் காதலியுயங்கல்

வேந்தரி னல்விடுக் கப்படு வாரை விரசுநரும்
தாந்தழு வாமை விளக்குவ போற்றணந் தாரெனவென்
மாந்தளிர் மேனி வனப்புமென் றோளின் வரிவளையும்
போந்தன போயிற் றவர்புற நெஞ்சும் புறக்கணித்தே. (ருசஅ)

போற்றுவரின்னே யாற்றேனக்கிளத்தல்

கரைந்தது காகங் கலைகள்வல் லாரின்று காண்பரென
வரைந்தனர் வாம்பரித் தேர்வரை வோடும் வருகின்றதே
விரைந்தது பால்கதி ருச்சியி னோடைகல் வீழ்பதத்தோ
இரைந்தது மேகங்கொ லாமென வார்ப்பொடு மெய்துவரே. ()

சொல்லியநாளிற் புல்லுவதின்மையின்
மெல்லியற்றலைவி யல்லன்மிக்கழிதல்

வாடுவ தேதொழி லாக்கி யெனக்கு வருவரெனப்
பாடுவ தேதொழி லாக்கி நினக்குப்பைந் தோகையன்னாய்
நீடுவ தேதொழி லாக்கித் தமக்கு நினைகலரைக்
கூடுவ தேதொழி லாவது முண்டுகொல் குன்றகத்தே. (ருருO)

வரைவிடைப்பிரிவிற்கு வாடுவதென்னென
விரைகுழற்பாங்கி தணிவுறக்கிளத்தல்

நறுமாந் தளிரன்ன மேனிநல் லாயவர் நாகத்துநாம்
இறுமாந் திருப்பதற் கேசுரம் போதலெய்த் தேயிருந்தும்
சிறுமாந் தர்களலர் தீட்டவல் லாக்குஞ் செயனினக்கே
உறுமாந் தளிமதுச் சோலையஞ் சார லுயர்வரைக்கே. (ருருக)

வன்புறையேதிரழிந்து துன்போடுகிளத்தல்

அல்லா வெனப்பொரு ளார வொருவர்க் களித்திடினும்
எல்லா வதுசெய் தழிவதுண் டோவென்னி னுற்றுவது
செல்லா மையினழி கின்றேன் கனவுஞ் செறிநிறையை
நில்லா தழிப்பதென் செய்கோவிவ் வாறு நிகழ்வினைக்கே. ()

கூடுநர்ப்பெறினவர் நீடுவதின்றெனப்
பொற்புறுதலைவியை வற்புறுத்துரைத்தல்

ஆயத் தவர்புரி யோரையெய் தாண்மனு வாங்கயர்த்த
காயத் தவரிற் கலங்குகின் றாளென்று கைதொழுது
தாயத் தவரறி யாமையிந் நோய்தலை வர்க்குரைக்கும்
மாயத் தவர்ப்பெறி னின்னே யிடும்பையை மண்ணுதுமே. ()

நீங்கினுமவருள நீங்கலரிவணென
அயிர்ப்புறுதலைவிக் கியற்படமொழிதல்

செங்கதிர் மேரு வலம்புகு மாயினுந் தேம்பிலொளி
இங்கழன் மாட்டவிர் விப்பதன் றேயிறை யோனுடங்கு
தங்கல னாயினுந் தன்னுளஞ் சாரலுந் தாழ்பொழிலும்
அங்கலுழ் மேனிநின் னாக்கையு மாக வமைப்பவனே. (ருருச)

குறிப்பிற்குறிப்பு நெறிப்படத்தோற்றிக்
கயற்புரைகண்ணிக் கியற்படமொழிதல்

விழியே யுளமிரு வீர்க்குந் தெரிப்பவிள் ளாதவன்பின்
வழியே கலந்தனிர் முன்னரந் நீர்மை மருவியநின்
உழியேய் வருத்த முறுதோ வவர்க்கு மொளிநகையாய்
அழியேல் வருத்தந் தமக்கெவ ராக வவாவுநரே. (௫௫௫)

வரைந்தநாண்முன் விரைந்தனரறிகெனத்
தாழ்குழற்றலைவிக்குத் தோழிகிளத்தல்

தாரணி தாங்குநர் தெய்வம்ப ராய்ப்பயிர் தான்வளர்ப்பக்
காரணி வாய்ப்பப் பருவமென் றேமுன் கலங்கினமால்
வாரணி பூண்முலை யாய்சொற்ற நாள்வரு முன்னரிதோ
தேரணி நாமணி யார்க்கின்ற தண்மினர் சென்றவரே. (௫௫௬)

மற்றொருமாதை வரையுமோவென்ன
அயிர்த்ததாய்க்கு நயப்புறக்கிளத்தல்

முயங்கிய மாதை முயன்றன தோண்மும்மை வையகத்தும்
மயங்கியும் வேறொரு மாதினைத் தோயுங்கொல் வாட்கணன்னாய்
தயங்கிய மாமையுண் மூழ்கிய வன்பர் தடங்கண்மலர்
உயங்கியும் வேற்றவர் மாமையுண் மூழ்குங்கொ லோர்ந்திடினே.

வாய்மைகூறி வற்புறுத்தல்

தேனுங் கிழங்குந் தினைநறு மாவுநெய் தேக்கியட்ட
ஊனுங் கழியப் பெறுகதி லம்ம வுடங்குறைவு
தானுங் கருதிவந் தானயில் வேலன் றனைச்சிதைப்ப
வானுங் கருதினு மாவதுண் டோவினி வாணுதலே. (௫௫௮)

கடியோடுவருதல் காணுதும்வம்மெனப்
பிடிநடைத்தலைவிக்குப் பெய்வளைகிளத்தல்

நெருநற் கடிமலர்ச் சூழலி னந்துயர் நீத்துச்சென்றோன்
வருநற் கடியொடு காணவம் மோமதி வாணுதலாய்
வெருநக் கடிப்பொருள் வேழமுந் தேரும் விரசிநல்லோர்
பொருநக் கடிதடஞ் சாரலி னூடுமுன் போந்தனவே. (௫௫௯)

பொருளிறைவிடுத்தமை தெரியிழைக்குணர்த்தல்

உருட்டித் திசைதிசை யோராழி வையம் புரப்பவர்நின்
பொருட்டித் திருவரை வாழ்நரெல் லாமகிழ் பூப்பமின்னே
சிருட்டித் துறுத்தின ரோவறி யேஞ்செம்பொன் மேருகிரி
மருட்டித் தயங்கிய மாசறு செம்பொன் மலையிதுவே. (ருசூo)

குன்றவரறிவு நன்றியினின்றென
நகுமுகத்திறைவிக் கிகுவளகிளத்தல்

காட்டத் தளவைக் கியையக் கனலி கதிப்பதுபோல்
ஈட்டத் தளவைக் கியைய வவாமிக் கெழுவதன்றே
வாட்டத் தளவைக் கியையு மருந்திலர் வஞ்சியன்னாய்
கூட்டத் தளவைக் கியைவது பொன்னெனுங் குன்றவரே. ()

விலையிடன்மாதர் முலைதனக்கின்மையி
னில்லவர்விழைவுக் கெல்லையின்றென்றல்

அண்டத் திடைவெளி யின்றிச் செழும்பொ னடைச்சியிது
கொண்டத் திருவைக் கொடுக்கவென் றாலுங் குறையுளதே
மண்டத் திசைதொறும் வண்புக ழீட்டும் வரதவிருட்
கண்டத் தவரைக் கருதா தவரினங் கானவர்க்கே. (ருசூஉ)

கண்ணியதழிய அண்ணனெஞ்சழிதல்

இன்னும் பொருள்சென் றிறுத்தன மேனு மிவர்விழைவு
மன்னும் பெருகுவ தன்றே யதனான் வருவதென்னே
கொன்னும் பரமனை வீராட்ட காசத்தெங் கொற்றவனை
உன்னும் புரவறி யாரினெஞ் சேயின் றுயங்குதுமே. (ருசூங)

தளர்வுகண்ட விளிமொழித்தோழி
யுடன்கொடுபோதுங் கடன்மதித்துரைத்தல்

மன்றலை வேட்டு வருந்திய பாவை வதுவைவினை
நின்றது கேட்டனு நெட்டுயிர்த் தாளங் நிலையின்மன்னா
இன்றவ ராகத் தணந்தில மென்றெனைப் பார்த்துமுன்போற்
சென்றன ளாயநல் லார்வண்ட லாடுஞ் செயலிடத்தே. (ருசூச)

அளித்தோடைமார்பற்கு வெளிப்படக்கிளத்தல்

முறுவலுங் காதன் மொழியுங் கிளரமுன் வந்திடரின்
கறுவலுங் காவலர் தம்பணி யேற்றுக் கடனறிந்து
நிறுவலுங் காணுநிற் காண்க விரைய வெனநிகழ்த்தி
மறுவலுங் காதலி புல்லிக்கொண் டாளென்னை மன்னவனே. ()

கல்லதர்க்கானஞ் செல்லரிதென்றல்

கனிச்சந் தனமுங் கமழ்பூஞ் சுனையுங் களனும்வெற்பின்
பனிச்சந் திரமுகத் தாய்பசு நீழல் பயின்றிருப்பாட்
கினிச்சந்த வாரழன் மேயும்வெங் கானத் தியவையென்னோ
டனிச்சந் தனையஞ்சுஞ் சீறடி பாவ லருங்குரைத்தே. (ருசுசு)

கான்றழலாமைக்குக் காரணங்கிளந்திட்
டேன்றிகழ்வேலவண யுடன்படுவித்தல்

சீதப் புனலும்வெண் டிங்களுந் தென்றலுந் தீயினுநீ
போதப் புலம்பிய ஞான்றடு மேலுடன் போக்கின்மன்னு
ஏதப் பரலடுத் தோங்கத ரத்தமு மீர்ந்தடமென்
றோதப் படுவதன் றேமெய்ம்மை யாகநம் மொண்டொடிக்கே.

பின்னேனநிவணயல யின்னினிநடவென
வணிதிகழ்வேலற்குத் துணிவுறக்கிளத்தல்

அருக்கனு மாரழற் றேவனு நின்னயில் வேணினையில்
பொருக்கென வாடுவர் போலு மவர்பொங்கு கானகநீ
உருக்கிளர் மாதொடுஞ் சென்றுற் றணிந்தொழி யாமையுண்டோ
வெருக்கொள வேதின்மை கூறுவ தென்னோ விளம்பையனே.

தேக்கமிழ்துரையவள் போக்குத்துணியக்
கற்பிதுவென்ன வற்புறக்கிளத்தல்

பூணினை யோம்புந ரில்லை யுடல்கெடிற் போர்ச்சிலையின்
ஏணினை யோம்புந ரில்லை புகழ்கெடி னீர்ங்குழன்மெய்ம்
மாணினை யோம்புந ரில்லைபொல் லாங்கு வரினுரிய
நாணினை யோம்புந ரில்லைகற் போடி நலிவுறினே. (ருகூசு)

போக்குத்துணிந்தனர் பூங்கழற்காலரேன்
றேக்குலக்கண்ணிக் கினிதேடுத்தியம்பல்

நீக்கங் கருதின ரிவ்வரைச் சூழனின் மாமையெழிற்
காக்கங் கருதின ராயத் தவரன்னே மார்க்குனனி
ஏக்கங் கருதின ரீர்ங்குழ லாயென் னேயர்திணிதோட்
கூக்கங் கருதின ருக்கத்து ளூக்கங்கொ ளுத்தமரே. (ருஎ0)

செல்லுறுமேதுச் சோல்லேனக்கவறல்

ஏற்றுக் கொடியனே வீராட்ட காசத் திறையையெண் ணூர்
கூற்றுக் கிரையெனக் காலரி னேகுங் கொடுநெறிநேர்
ஆற்றுக் கடுஞ்சுரஞ் செல்வதற் கேதுவென் னுரணங்கே
பாற்றுக் கிளைபட ருங்கதிர் வேல்கொண்ட பார்த்திபனே. ()

ஏதுவிதுவேன மாதர்க்கியம்பல்

மறையினே நாட்டியு மேதத்தி னீக்கியு மன்றல்புரி
முறையினே நாட்டின மன்றே முலேவிலே முற்றுலகும்
குறையினே நாட்டுவ தாகக் கொழுங்கயற் கண்ணியின்ப
நிறையினே நாட்ட நெடுஞ்சுரம் போக்கு நினைந்தனரே. (ருஎஉ)

கற்புமிக்கவள் வேற்பனோடு துணிதல்

பட்டாங் குரைத்தும் பணிமொழி யாய்படர் வெஞ்சிலேக்கைத்
தொட்டாங் கடுத்தவன் றேயெமைக் காத்தவத் தோன்றல்வழி
விட்டாங் கருத்தினே மேதகு நாணும் விளியினுமென்
நட்டாங் கிருப்பினு மென்னவற் றுவன நாடிலமே. (ருஎங)

கோற்றேடிதுணிவின் வீற்றினைக்கிளத்தல்

தடையா கியமலம் வீராட்ட காசன் றவிர்ப்பவுயிர்
விடையா வருண்முன் துறுவது போன்மின் னரிசிதறிப்
படையாள் விழியின ளெம்மவர் காவலேப் பாற்றுதலும்
உடையாய் நினக்குமுன் செல்லநின் றுளுடல் வெஞ்சுரமே. ()

புல்குறிப்போழுதே சேல்குறிப்போழுதேனல்

கச்சிப் பதிகயி லாயந் திருத்தில்லே காழிமறை
உச்சிப் பதியுங்கொள் வீராட்ட காசத் தொருமுதலே
நச்சிப் பரவு நகுபூண் மருமத்து நண்பநறு
நொச்சிப் புதுமலர் வீங்கிருள் வீழ்வன நோக்குதுமே. (ருஎரு)

தேம்பிடைத்தலைவியை யோம்படுத்துரைத்தல்

இருள்குடி கொண்டமெல் லோதியர் சீறினு மீன்றவளை
மருள்குடி கொண்டவக் காலம் விடாது மரீஇயழுவார்
தெருள்குடி கொண்டவிக் காலமெல் லாஞ்செல்வ சீறினுமெய்
அருள்குடி கொண்டதம் மன்பரை யன்றி யறிகலரே. (௫எசு)

போதரத்துணிந்தோன் மாதர்மெல்லியலும்
வெள்ளிடைச்சுரமு முள்ளினன்கவறல்

புரியுடைந் தாலென வாளர வங்கள் புரண்டுசெல்லும்
கரியுடைந் தோடிக் கயத்திடைச் சேற்றினுட் காலழுத்தும்
எரியுடைந் தார்க்கு மியவையிம் மாதொடு மேகுவதோ
பரியுடைந் தாவது மில்லையன் னேயென்ன பாதகமே. (௫எஎ)

குறிவயிற்கூட்டி நெறிவயிற்செலுத்தல்

ஒருமா தடிந்துய ருந்தணி காசலத் தும்பனென
வருமா தடிந்தவள் ளானனி வாழிய வானவர்தம்
பெருமான் மகளென வெம்முயிர் மாதினைப் பேணியிந்தக்
கருமா விருள்கழி யாமுன்ன ரிவ்வரை கையகன்றே. (௫எஅ)

நீங்குறுதலைவிக்குப் பாங்கிகிளத்தல்

ஒற்றைப் பொலஞ்சகட் டேர்திவெய் யோனுதிக் கும்பொழுதே
கற்றைப் புரிகுழ லாய்களவை யாக்குநர் வாயடையா
இற்றைப் பொழுதிங் கிருந்திமை யாரிறைஞ் சுந்தணிகை
மற்றைப் பொழுதுநிற் காணுவன் சென்றுமுன் வாழியவே. ()

வெறிமலர்த்தாரோ னெறிவயினுய்த்தல்

செம்பஞ் சிரும்பகை யென்றணி யாதசெஞ் சீறடியும்
வம்பஞ் சியமுலைக் கேபகை யான மருங்குலுங்கூர்
அம்பஞ் சியபர லாரத ருடழி யாதுபையக்
கொம்பஞ் சியவெழிற் கோமள மேகொண்டு செல்லியரே. ()

முன்னமறிந்து மன்னவன்கிளத்தல்

சுயவர் களுலும்வெங் கானகத் தேகடித் தொண்டகநல்
இயவர் தொடர்வதற் கேதுமஞ் சேனஞ்ச லேந்திழையாய்
வியவ ரெனத்தொடர் வுற்றுவிண் ணோரும் விரசுவரேல்
வயவ ரெனவெவ ரேயென்கை வேன்முன் வருகுநரே. (௫அக)

இயவையினைத்தேன் றயர்வுநீக்கல்

வல்லத் தொருபுடை வைகுறும் மோங்கன் மறைந்ததினிச்
செல்லத் தொடங்கிற் செறிபிணி யாளருஞ் சென்றுவல்லே
புல்லத் தொடர்ச்சி புணர்தணி காசலம் பூவையன்னாய்
மெல்லத் தொடரினும் வேலைவெய் யோன்பட மேவுதுமே. ()

திகழ்வரைகாட்டி மகிழ்சிறப்பித்தல்

இக்குன்று காண்கடி காசல மீங்கெதி ரேவிளங்கும்
அக்குன்று காண்டணி காசல மிந்த வணிநதியம்
மைக்குன்றின் பாங்கர்ப் படர்வது காணைப்பின் மாட்சிகுன்றி
எக்குன்றுங் குன்றெனும் பேர்பெற வோங்கு மிளமுலையே. ()

கண்டோரயிர்த்தல்

செம்மைப் பதமலர் வின்மணி மோலி செறிதழும்பால்
மும்மைப் புவனத் தலைவனென் றோது முதல்வனைமா
தம்மைப் பிறப்பினு மித்தகு கானறி யாதவளே
இம்மைப் பிறப்பினென் னோபடர் கின்றன ரிச்சுரமே. (ருஅச)

மண்டியவன்பினைக் கண்டோர்கிளத்தல்

ஆவியுங் கண்ணுத லண்ணலுஞ் சுத்த வவத்தையிடை
மேவியங் கங்கு விராவுதல் காட்டும் வியப்பினதே
தேவியங் கண்ணல்பின் னேபல காற்செல்லுஞ் செல்வனுமக்
காவியங் கண்ணிபின் னேபல காற்செல்லுங் காதலித்தே. ()

கடும்பகலடுப்பக் கண்டவர்விலக்கல்

நெருப்பா னியன்றது நீணெறி யுச்சியி னீள்கதிரோன்
உருப்பா னியன்மெல் லியதிவட் கேகலொண் ணாதிவணத்
தருப்பா லியன்ற குரம்பையல் லாற்றங்க வேறிடமில்
விருப்பா னிருந்துபின் னேகுதிர் வம்மின்கள் வெய்யவரே. ()

இளமரக்காவு மளிமலர்ப்பொய்கையும்
வளவியசூழலின் மாதினையிருத்தல்

அடுத்தனஞ் சீபரி பூரண வோங்க லணிமையுற
விடுத்தன மாரழற் கானெமி யாய்த்தமி மேவலின்றுப்
படுத்தனம் பாய்மணி மேகலை யல்குல்பன் மாமலர்கள்
தொடுத்தனஞ்சூழ்ந்துசெல்வாம்வைகுவாமிந்தச்சூழ்பொழிலே.

நடையயர்வுயிர்த்தபி னம்பிவேவளம்
படையயர்வுயிர்க்கும் பான்மைகட்டுரைத்தல்

கண்ணேப் பரிவு கடிந்தது காத்தன பின்னதன்பின்
மண்ணேய் மணநுகர் நாசிய தன்பின்னர் வார்திணிதோள்
பண்ணேய் மொழிபரி வேதும் பரிந்தன்று நாவவைதாம்
எண்ணேய் விழியி னயர்வுயிர்த் தோங்க வினியருளே. (ருஅஅ)

இரந்து பாங்கியைத் தன்னருளேவலி னிறுவிப்
பரந்த பல்வகை யொழுக்கெலாம் பயிற்றிய பின்னர்
அரந்தை தீர்த்துடன் போந்தவ னணங்கொடிவ் வாறு
கரந்த தன்னியல் காட்டுவா னிருந்தனன் காவில். (ருஅசு)

கவவலத்தோழியைச் செவிலிவினுதல்

பொருந்தவந் தாமரைப் போதுக ணேற்பப் பொருப்பிடையாம்
பெருந்தவந் தாங்கிப் பெறுதுபெற் றேந்திய பிள்ளையெங்கே
திருந்தவந் தாண்டருள் வீராட்ட காசனேச் சேரலர்போல்
வருந்தவந் தாவினே வாடினே யென்னே மயிலியலே. (ருகூo)

ஆங்கெதிர்செவிலிக் கறத்தோடுநிற்றல்

அருவித் தடம்புன லாடின நீர்கொண் டவட்கரப்பத்
துருவித் தடம்புனற் றேற்றின னங்கொரு தோன்றல்வந்திங்
குருவித் தடம்புயத் தானுருத் தோய்ந்தமைக் கொத்தபண்பால்
தருவித் தருமழை தாரணி காத்த றனக்களிதே. (ருகூக)

கற்புக்கேட்ட கழ்மகிழ்கிளர
அற்புச்செவிலி யகன்றமைக்கழுங்கல்

வண்டலம் பாவை வரிமணற் றைத்து வளர்ப்பயினும்
பண்டலங் காரநம் பாவைதன் பாவைக் கெனவடுத்துக்
கண்டலம் போது கொளக்கொடுத் தார்க்குக்கைம் மாறுதவல்
விண்டலம் பாற்றவற் றேவினி யென்னே விளம்புவதே. (ருகூஉ)

மின்னிவலநிவன இ யின்னலிற்றுளைதல்

பன்னு ளயன்மை பயின்றே யிருந்ததும் பண்புமிகச்
சின்னு ளணிமை திகழ்ந்தே யிருந்ததுந் தீவினேயேன்
முன்னு மதித்தறிந் தாற்றணி காசல முன்னலர்போல்
இன்னு நெறியு மியங்குங்கொ லோவிட் டிடைக்கிளியே. (ருகூங)

மெல்லியனிவை இயல்லலிற்படிதல்

பூவிற் பயிற்றிப் புதுமலர் வார்தளிர் போதவுகும்
காவிற் பயிற்றி வளர்த்தநம் பாவைமென் கான்மலர்கள்
நாவிற் பயிற்றினு முள்ளமும் வேஞ்சுர நண்ணுபவோ
ஏவிற் பயிற்றிய தோளா ரொருவற் கிசைவுகொண்டே. (ருகூச)

அஞ்சுதனிவை இ நெஞ்சுடைந்தழுங்கல்

பார்வைப் புலியும்வன் சீயமு மற்றும் பதைப்பவெனச்
சீர்வைப் பிடத்திற் செறியா தகற்றினஞ் செல்வியந்தோ
நீர்வைப் பிடநனி நேடி யுயங்கிய நீள்சுரத்து
வார்வைப் பிறையெயிற் றேனங்கள் காணினு மாழ்குவளே. ()

பேதமைநிவை இப் பேதுற்றழுங்கல்

குரைக்கு மருவிமத் துத்தடந் தாழி கொழுஞ்சுனைநெய்
நுரைக்கு நுரையென் றிதுகடை வாரை நுவறியெனும்
விரைக்கு நறுமலர்க் கூந்தலம் பேதைவிற் காளையென
உரைக்கு மொருவன்குற் றேவலி னெவ்வா றொழுகுவளே. ()

பெற்றாட்கசுற்சி யுற்றாள்கிளத்தல்

இளையனுந் தானிணை யில்லா முதியனுந் தானெனவாம்
விளையருள் வேற்கை விசாகனிற் றோழி விராவுநம்பால்
தளையவிழ் பூங்குழ லாளிளை யாடமி யாக்கிழமைக்
கிளையழ நீங்கு முதியா ளடுத்த கிழவனுக்கே. (ருகூள)

உற்றாளுரைப்பப் பெற்றாளழுங்கல்

பிள்ளைப் பருவங் கழிந்ததின் றேமுற்றும் பேதையெனும்
தொள்ளைப் பருவந் தொடங்குவ தானது தூங்கழற்கான்
உள்ளைப் பிறன்பிணித் தேகொடு போதுமென் றேதினிந்தக்
கொள்ளைப் பெருமொழி யாங்குள தின்னுங் குவலயத்தே. ()

மைவந்தகண்ணிக்குத் தெய்வம்பராவல்

முருங்கோ மெனநின்ற தானவர் மூவரை மொய்யமரில்
மருங்கோ டறுத்தவஞ் ஞான்றுவிண் ணோர்வரு பூதர்படை
ஒருங்கோ டியத்தணித் தோய்வா ரணமுய்ப்ப லொள்ளழற்கான்
இருங்கோற் றொடிக்குந் தழலா திருப்ப விரங்குகவே. (ருகூகூ)

கிள்ளைகுழைய வுள்ளங்குழைதல்

அவ்வையர் வாடின ரன்னைபின் ஞெளொடு மாயநல்லார்
தவ்வைய ளாவிய வானனத் தார்தடஞ் சாரலிவ்வூர்க்
கௌவையர் வீறினர் காணில மன்னையை யென்றுகனிக்
கொவ்வைய வாய்க்கிளி கூவியென் னுள்ளங் குழைவிப்பதே. ()

நாடேறுசேவிலி நற்றாய்க்குரைத்தல்

சந்திர னுணுங் தனிக்குடை வேற்கரத் தான்றொடர
இந்திர ஞால விரதமுற் றேறெனெ று மூரற்சுலவும்
மந்திர ஞால மறிகடல் பாதலம் வானமற்றும்
முந்திர வாமுன்னர் நாடுவ ரேழிநம் மொய்குழலே. (சூ0க)

தமித்துவழிச்செல்வோ ணிமித்தநாடல்

கடப்பா ரலர்சுரங் காணுத லுண்டெனிற் கைதொழுவல்
இடப்பா லிருந்த விளங்கருங் காக்கை யெழுந்துவலம்
நடப்பா யதுபுரி யாயேனன் றுகக் கரைதிகண்டாய்
தொடப்பா லனவைக ரேறு நினக்குத் தொகுக்குதமே.(சூ0உ)

காதலிகூடச் சோதிடநாடல்

விண்ணும் வழுத்திய வீராட்ட காசன் விளங்கருளால்
எண்ணும் மெழுத்து மெனவிரு கண்ணு மினிதுடையீர்
கண்ணு மெனக்குக் கருமணிப் பாவையு மானகன்னிக்
கொண்ணு மினுமிங் குறைவெனின் வல்லையி ஞேதுமினே. ()

கவலைநெறியிற் சுவடுகாண்டல்

கடமறி யுங்கவுட் குஞ்சரம் வென்றவக் காளையொடு
படமறி யுங்கவின் மாதுசென் றுளென்று பன்னுவதே
தொடமறி யுந்தளி ரன்னமென் காலிற் சுவடுவலம்
இடமறி யுந்தடங் காற்சுவ டுங்கொண் டியவைபிதே. (சூ0ச)

சுவடுகண்டவ ளவலமிக்கழுங்கல்

பாகலை சொல்லி பரிபுரச் சீறடி பாவியந்தோ
மேகலை யல்குன் மிதிப்பக் கொடேன்வெவ் வழற்கதித்துப்
போகலை நீரிற் றுளும்பும்வெண் டேரைப் புகன்றுபுகன்
றுகலை யோடுஞ் சுரத்தினுங் கண்டுள தாவியின்றே. (சூ0ரு)

வேற்றிகண்டு தேற்றெனமகிழ்தல்

இவ்வாய் மடந்தையஞ் சாதிலை யாக்கி யினிதெதிர்ந்து
செவ்வான்கிடந்தொளிர்வெண்முகில்போலச்செந்நீர்புடைசூழ்ந்
துவ்வாய் மடங்கல் கிடப்ப வுரத்தூ டயின்மடுத்தோன்
அவ்வாய் மடங்கன் முகற்படுத் தோம்பு மறுமுகனே. (சுoசு)

பூம்பொழினோக்கித் தேம்பினள்கிளத்தல்

மரவம் பொழின்மலர்ப் பாடலங் கோங்கம்வண் பாலைதுற்றும்
குரவம் பொழில்சிறி தேநும்மிற் கண்டாங் குளிர்நிழறேன்
விரவம் புதுமலர் நல்கி விளையாட் டயரச்செயா
தரவம் படுகழ லாரொடு போக்கே யமர்ந்தனிரே. (சுoஎ)

மலர்கோய்யெயின மாதோடுவினுதல்

மிண்டுளி போழ்ந்த விரிகற் சுனைதொறு மென்புனற்கு
மண்டுளி யங்கள் வழங்கிச் சுரஞ்செலெம் மாதினைத்தேன்
நுண்டுளி மாமலர் நோக்கிய நோக்கினை நோக்கினையே
கண்டுளி யேகற காதென்றி யேசொல் கருங்குயிலே. (சுoஅ)

கள்ளிவர்குருந்திற் புள்ளொடுபுலம்பல்

கல்விரை தேரினும் வீழ்துணை நீங்கிற் கபோதகநோய்
அல்விரை யோத மனையது பார்ப்பை யயல்விடுத்தல்
வல்விரை நோவ வழக்குமுண் டோவன்பன் மாதைவிடச்
சொல்விர வாமை துணிந்தனி ரென்று சுரக்குயிலே. (சுoகு)

மாவிரதியரை மேவினள்வினுதல்

வெள்ளிப் பொருப்பரு வித்திர ளென்னவெள் ளென்புபொடி
அள்ளிப் பொதிந்த மருமத் தனிரய லான்றுணையே
உள்ளிப் பணைப்பெருந் தோளிசென் றுளுயங் குங்கலைகள்
துள்ளிப் பெயருஞ் சுரங்கண்ட துண்டெனிற் சொல்லுகவே. ()

துறவியரடுப்ப வுறுபவள்வினுதல்

உரகத்து நாடு தபுத்துவெய் யோன்கிர ணத்தொழுங்கும்
நரகத்து நாட விடர்கொளு நாமவெங் கானமங்கைக்
கரகத்து நீர்கரப் பத்தண்டு கீறக் கடத்திரர
கரகத்து நூபுரப் பாவையொ டண்ணலைக் கண்டனிரே. (சுகக)

நீத்தாருலகி னிகழ்ச்சிகூறல்

சேயிடைக் கண்டனஞ் செல்வியைச் செல்வனைத் தேமொழியாய்
போயிடைக் கண்டு பெயர்வரி தாகும் புணரியெனும்
தாயிடைக் கண்டசெந் தாமரை மாது தனைவிசும்பின்
ஆயிடைக் கண்டனர் மாதவத் தாரந்த மாயனொடே. (சுகஉ)

இருவர்வரவி னேசறவெய்தி
விரிமனச்சேவிலி வேசறவெய்தல்

உருமின மார்த்துத் திசைதிசை பாயு மொளிப்பிழம்பாய்
வருமினல் காட்டு மழைகண்டு வேட்ட மயில்விளர்ப்பப்
பொருமின வாறு புணர்ந்தெதிர் வாரைப் புணர்ந்துசென்றோர்
திருமின ராலென்றென் றெண்ணியல் லாந்ததென் சிந்தனையே.

தெருள்கிலள்வினவ விருவருங்கிளத்தல்

செந்திரு வேசெங்கண் மாயவ னேநும்மிற் சேர்ந்தபண்பின்
முந்திரு வோர்செலக் கண்டனி ரேமொய்ம்பு ளாரையிவர்
அந்திலே வேல்வலத் தாரென்று காட்டின ரன்னைமின்னை
இந்திர னார்மக ளாமென்று காட்டின ளீங்கிவளே. (சுகச)

கண்டவேல்வல கடாவக்கூறல்

வருந்தினண் மாதென மாழ்கும்வள் ளாலின்று மாறிலின்பம்
பொருந்தினம் யாமெனும் பூங்குயி லேயெங்கு போதக்கண்டீர்
பருந்தின மார்சுர நீந்தித் தணிகைப் பறம்பணிக்கண்
திருந்திய காட்சியர்க் கண்டா மினியங்குச் சேர்ந்தவரே. ()

கவலைச்சேவிலியைக் கண்டவர்தெருட்டல்

நன்னீர் நறும்பழ னத்திடைப் பூத்த நளினமெனத்
தொன்னீர் மையிற்றிரி யாண்முகஞ் சீர்த்துத் துணைவனொடு
முன்னீர் மிகுந்தணி கைப்பதிக் கேகுறு மொய்குழற்கே
இந்நீர் மையினன்னை வாடுவ தெண்ண மிலாரெனவே. (சுகரு)

ஒண்டொடிச்சேவிலியைக் கண்டவர்மீட்டல்

ஊளைப் பெருநரி வௌவிய வூனை யுறவெறிந்து
வீளைப் பருந்துணும் வெஞ்சுர நண்பகன் மேவினன்னாய்
பூளைப் பழமலர் தீயினிட் டாங்கடி பொன்றுமவர்
வாளைப் பழனஞ்சென் றோர்பய னில்லை வருந்தினுமே. (சுகஎ)

வேட்டவுள்ள மீட்டவண்மீட்டல்

சிவனத்த னீன்றருள் சேயையுன் றூரென்னத் தேம்புளமே
புவனத்தின் யாப்பெவ ரேதடுப் பார்நம் புனக்கிளியை
அவனத்த நீந்தி யழகார் தணிகை யடுத்துவிட்டான்
பவனத்தின் வேகங்கொண் டேபடர்ந் தாலும் பயனில்லையே.

சேணிடையகற்சி செவிலிதாய்க்குணர்த்தல்

மணிகா சலமரு மல்குனல் லாய்நின் வளர்முலைகட்
கணிகா சலமத னம்புகள் பாறவென் றூதரவின்
கணிகா சலமெனக் கற்றவர் வைகுங் கவினடுத்த
தணிகா சலங்கொண்டு சார்ந்தனன் றேழிநந் தையலையே. ()

வற்றுவிழைவி னற்றுய்கிளத்தல்

இணங்குவ தின்றி வளர்முலை யாளெழில் காணவென்கண்
அணங்குவ தாயிழை மென்மொழி கேட்ப வகஞ்செவிகள்
பிணங்குவ பேதையை யாரத் தழுவிப் பெயர்த்தெடுப்ப
உணங்குவ தோளினி யென்செய லாவ தொளிநுதலே. (சுஉ0)

தாயு மாயமுந் தளர்வுறத் தளர்ந்தழுஞ் செவிலி
காயும் வெஞ்சுர நேடினள் காணலண் மீள
ஆயு ளத்தெழு மல்லலை யறிந்துதன் னையர்கள்
ஏயி ருப்பதே யெழுகநம் மினமெலா மென்றார். (சுஉக)

வில்லெ டுத்தனர் வாளிக டெரிந்தனர் வீரச்
சொல்லெ டுத்தன ரினமெலாந் துவன்றினர் சூழக்
கல்லெ டுத்ததங் குடியுளார் பெயர்தெரி கானம்
பல்லெ டுத்தபேய் தொடர்தரப் பரந்தனர் படர்ந்தார். (சுஉஉ)

குவட்டுத் தாரையுங் குன்றிடை முடுக்கருங் கரிந்த
கவட்டுச் சோலைய கானமுங் கைபரந் தெழுவோர்
சுவட்டுத் தாரியிற் றொடர்ந்தனர் சூழ்பொழி லமிழ்தம்
சுவட்டுத் தேமொழி தனைத்தனிக் காளைபாற் கண்டார். (சுஉங)

பொங்கு மாகடல் வளைந்தெனப் புறக்கொடை யொழிய
எங்கும் வாங்கினர் வாங்கின ரிடம்படு வார்வில்
புங்க வார்கணை பூட்டினர் காளைமேற் பொழிந்தார்
அங்கண் மாதரா ளஞ்சின ளழுங்கினள் வெயர்த்தாள். (சுஉச)

ஆன்ற லைப்பொடித் தெழுமருப் பஞ்சுமே வேங்கை
கான்ற லைப்பொடித் தெழுங்குழல் கவலல்கா ணென்னுத்
தேன்ற லைப்பொடித் தொழுகிய தீம்பொழிற் கள்வன்
ஊன்ற லைப்பொடித் தொளிர்குரு குறவுளம் வைத்தான். ()

முறஞ்செ விப்பெரு வாரணத் திளையவன் முன்னர்ப்
புறஞ்சி றைச்சிறு வாரணப் புள்ளெழுந் தார்ப்ப
அறஞ்செ யப்பெரும் பாவங்க ளழிந்தென வாங்கே
மறஞ்செ யப்புகுந் தாரெலா மறிந்துவீழ்ந் துலந்தார். (சுஉசு)

புள்ள டுத்தது மார்த்ததும் புளிஞர்க ளாவி
விள்ள டுத்ததும் விம்மிதம் விளைப்பமெல் லியலாள்
உள்ள டுத்தபே ரோகைய ளொளிமுக மலர்ந்தாள்
தெள்ள டுத்திலள் கணவனூர் திருவிளை யாட்டில். (சுஉஎ)

களித்த மாதராள் கதிர்முக நோக்கியக் கள்வன்
சுளித்து மேல்வருந் தொடுகழல் வேடர்தம் மாவி
விளித்து வீழ்த்தின மேவுதுந் தணிகையங் குன்று
தளித்த தேந்தொடைத் தாழ்குழா லெனவுட னெழுந்தாள். ()

ஆய வேலையி லன்றவ ளழுகெலாந் தெரித்துத்
தூய சீபரி பூரணத் தொல்வரை நோற்றல்
மேய நாரத மெய்த்தவன் விளைவெலா மோர்ந்து
மாய வேட்டுவக் குமரன்முன் வல்விரைந் தடுத்தான். (சுஉகூ)

வலம்பு ரிந்தனன் வணங்கினன் வழுத்தின னின்றுன்
புலம்பு ரிந்தருள் புள்ளுவன் புன்னகை முகிழ்த்தான்
நலம்பு ரிந்தவேட் டுவக்குல நங்கையுண் மருண்டாள்
நிலம்பு ரிந்தமா தவமனை யவட்கவ னிகழ்த்தும். (சுஙo)

தணிகை நாயகன் முரணி நாயக னவுணர்த்
துணிகை நாயகன் றொருகுவரை நாயகன் றாயோர்
பணியு நாயகன் பணிவிசும் பிறைமகட் கலங்கல்
அணியு நாயக னமரர்க ளாயக னமலன். (சுநக)

பங்க யற்கருஞ் சிறைபணித் தருளிய பாலன்
செங்க ணற்கடற் றிகிரியு மளித்தருள் செல்வன்
அங்க ணற்கொரு மொழிப்பொரு ளருளிய வறிவன்
இங்க ணற்கரு வேடனென் றெளிவருந் தலைவன். (சுநஉ)

பண்டு நீபுரி பெருந்தவப் பயத்தினு லன்னை
அண்டர் நாயகன் பற்பல வாடன்முன் காட்டிக்
கொண்டு நீங்கின னென்றுகை கூப்பினன் பழிச்சி
மண்டி மாய்ந்தவ ருயிர்பெற வள்ளலை யிரந்தான். (சுநந)

எழுக வென்றுதன் னியலுருத் தோற்றின னிறைவன்
தொழுது நாயக தொன்றெலா முஞற்றிய பிழைகள்
முழுது நின்பணி யாக்கென மொய்குழன் மகிழ்ந்தாள்
பழுது தீர்ந்தெழு வேடரும் பணிந்தனர் மொழிவார். (சுநச)

காக்கும் வேலியே பயிரினை மேய்வது கருதின்
ஆக்க வேறொரு காப்புமுண் டேஙின தருளால்
தேக்கும் வண்புகழ்ச் சிறுகுடி மரபினை நீயே
தாக்கும் புன்மொழி வளர்ப்பது தக்கதோ வன்றே. (சுநரு)

அருள தாய்விடி னடியரேஞ் செய்வதெ னினியோர்
கருமம் வேண்டுவ துளததுவென்னெனிற் கமலத்
திருவின் மேலவ டன்னையாஞ் செழும்புனல் வாக்கித்
தருத லெம்பிரான் றனிமணம் புரிவதென் றிசைத்தார். (சுநசு)

களவிற் பின்வரு மன்றலுங் காட்டுது மென்றே
களவிற் பல்வகை யொழுக்கெலாங் காட்டிய கள்வன்
அளவிற் கெல்லையி லானஃ தவர்க்கியைந் தான்போல்
வளைவிற் குன்றவர் மகிழ்கொளக் குறுநகை வழங்கி. (சுநஎ)

இம்பர் முற்றினி ரெனைவிரு மிவள்வள ரோங்கல்
அம்பர் முற்றின ரனைவரும் வம்மின்கள் விசும்பின்
உம்பர் முற்றிய தவத்தின ரனைவரு மொருங்க
உம்பர் முற்றிகழ் தணிகையிற் புரிதுமென் றுரைத்து. (௬௩௮)

வள்ளி நாயகி யுடன்வர மயூரமேல் கொண்டு
துள்ளி வாளைக டுதைதலிற் றாங்குதெங் கிளநீர்
அள்ளி வார்திரை நித்தில மடைதரச் சிந்தும்
பள்ளி நீர்ப்பணை யுடுத்தவப் பருப்பதஞ் சார்ந்தான். (௬௩௯)

இலக்கத் தொன்பதின் மர்களெனு மிளையரு மிகலை
இலக்கத் தெண்ணுறு வெறுழ்ப்படைத் தலைவரும் பகைஞர்
விலக்கத் தண்முறு விறற்கணப் படைஞரு மெவரும்
நலக்கத் துன்றினர் நாயகன் கழலிணை தாழ்ந்தார். (௬௪௦)

அருட்க டைக்கணு லவரவர்க் கமைவர நோக்கி
உருக்கி ளர்ந்தகோ புரமணி வாய்தலுட் புக்குத்
திருக்கி ளர்ந்தபொற் கோயிலுட் சென்றனன் செல்வன்
வெருக்கி ளர்ந்தமான் விழிபொரும் விழியவ ளோடும். (௬௪௧)

வேங்கை யானதும் விருத்தனுய்த் தொடர்ந்ததும் வேழம்
ஆங்க ழைத்தது மாகிய விம்மித மெல்லாம்
பூங்க ணுயிவட் போதர வன்றுகொ லென்னு
ஓங்க ணுயக னளவளா யுடங்குவீற் றிருந்தான். (௬௪௨)

அரண மாகிய பிரணவப் பொருணக ரடுக்கல்
முரண வாவிய முரிசிலை வேடர்தங் கொடியை
இரண வேலினுன் களவுகொண் டெய்திய துரைத்தாம்
கரண மோடவன் கடியயர்ந் தமையினிக் கரைவாம். (௬௪௩)

களவுப்படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — ௨௱௭௰௩.

## வள்ளிநாயகி திருமணப்படலம்.

காக்குங் கடவுள் கரந்து சிலம்பனுய்
வாக்குங் கரக மணிநீர் கரத்தேற்றுப்
பூக்கும் பொலங்கொம் பனையாட் கருளின்பம்
தேக்குந் தணிகைச் சிலம்பற் றெழுப்பெற்றேன்
சீந்தும் வினையுஞ் செருக்கும் விடைகொண்ட
ஏந்த லறிவி னெனதறிவு மாய்ந்ததே. (க)

திருவிளங்குந் தணிகைவரை வீற்றிருக்குஞ்
சேயிலைவேற் செவ்வேள் சென்று
மருவிளங்கு மணிக்கூந்தற் கானவர்தங்
குலக்கொடியை வௌவி மீண்ட
துருவிளங்குங் கயிலாய்த் திறையவனுர்
மதித்தருளி யுமையா ளோடும்
குருவிளங்குங் குமாரலிங்கத் திடைநின்று
மாங்குவெளிக் கொண்டா ரன்றே. (உ)

பூதகணம் புடைசூழப் பொழிகதிர்ப்பன்
மணித்தவிசிற் பூவை யோடும்
சோதிமணி மண்டபத்திற் றந்தையார்
வீற்றிருப்பச் சுடர்வே னம்பி
காதலின்வல் விரைந்தடுத்துக் கழல்பணிய
வணைத்திருவிக் கருணை கூர்ந்து
சீதமதி நகைமுகிழ்த்துத் திருமணங்கா
ணுதற்கிங்குச் சென்று மென்றார். (ந)

உருகியசிந் தையினேடும் பெருங்கருணைத்
திறநோக்கி யுரையா டாது
பருகுகளி வண்டெனப்பன் னிருபுயத்தோ
னிருந்திடலும் பணிந்து போற்றி
அருகிருந்த வீணைநரம் புளர்கரத்தோ
னடியேங்க ளுய்யு மாற்றல்
பெருகுமகிழ்ச் சியின்மன்றல் கடனன்றோ
பிஞ்ஞகற்குப் பிறக்க வென்றான். (ச)

நிகழ்கின்ற விம்மாசித் திங்கள்வரு
　　பூசத்தி னிகழ மன்றல்
திகழ்கின்ற பலவினையு முயறியெனத்
　　தினைப்புனத்துச் செல்வி முன்மண்
அகழ்கின்ற நெட்டுயிர்ப்புத் துளக்கைமுழு
　　மாவென்ன வடுத்தெல் லோரும்
புகழ்கின்ற மகனுரை வியங்கொண்டா
　　ரருள்சுரந்து பூத நாதர். (ரு)

தரைகுழிக்கும் புழைத்தடைக்கைத் தலைமைந்த
　　னருள்கொண்டு சார்ந்தோர் பாங்கர்
வரைகிழிக்கும் படையானை முகநோக்கிக்
　　கந்தகிரி வரைப்பின் வைகும்
விரைகொழிக்கு மலர்க்கூந்தன் மெல்லியலை
　　வருத்தியென விளம்பித் தெய்வ
உரைகொழிக்கு முடங்கரச திசையினுஞ்சென்
　　றறக்கணத்தை யுறுத்துப் பின்னர். (சு)

கடியயர்மண் டபநிருமித் திடுதியெனக்
　　கடவுளர்தச் சனைக்கூஉ யேவிக்
கொடிதுவன்று நகரறியக் குணின்முரசி
　　னெருக்கிமணங் கூறு கென்னுத்
தொடிபொலிந்த மணித்தடக்கை வள்ளுவனை
　　வியவரினுற் றாண்டி விண்ணோர்
முடிதுளக்க வவரவர்க்குத் தக்கபணி
　　விடைமுறையி னிறுவி னுனல். (எ)

மூத்தவ னருளிய மொழியுட் கண்டுகல்
சீத்தவை வேலினன் றெய்வ யானையைப்
போத்தனுங் கிவ்வரைப் போந்து தம்மென
ஏத்துயர் வீரனை யேவி வைகினன். (அ)

கடவிய விபமுகன் கருணை தாங்குபு
தடவிய கடவுளர் தச்சன் மாமயில்
நடவிய நாயக னல்வி னைக்குறும்
இடவிய மண்டப மிழைக்க முன்னினன். (கூ)

ஐம்பெரும் பூதமு மடைவி னின்றெனப்
பைம்பொனின் வச்சிரம் பதித்து மேலிடும்
செம்பவ ளத்தின்மேற் செறித்த நீன்மணி
உம்பர்வெண் பளிங்கொளிர் குறடு ளேற்றினன். (க0)

ஆயிரந் தூண்வயி ரேரி யத்தமைத்
தேயகோ மேதகத் திணக்கிப் போதிகை
பாயவுத் திரங்கள்புட் பராகத் தாக்குபு
மீயுயர் முகடுமா ணிக்கம் வேய்ந்தனன். (கக)

மரகதக் கொடுங்கைசுற் றமைய வைத்தனன்
தரளமக் கொடுங்கையிற் றூழ நாற்றினன்
இரசத யாளிபாங் கிருவித் தேங்கொளி
பரவுபன் மணியசோ பானம் பாய்த்தினன். (கஉ)

பாற்கடற் பரப்பெலாம் பைம்பொற் றாமரைப்
பூக்களு விற்றெனப் பொற்ப நாப்பணே
தேக்கொளித் தவிசுவேற் செம்மற் கிட்டயல்
ஆக்கினன் றவிசவ ரவர்கட் கேற்பவே. (கங)

கண்ணடி யெனத்திகழ் காமர் வேதிகை
ஒண்ணிறம் பலதொகுத் தொளிரு மண்டிலம்
வண்ணமே கலைபுறம் வயங்கு குண்டமும்
எண்ணின னியற்றின னிறைவ னான்முறை. (கச)

இந்துகாந் தக்கலி னிழைத்துப் பித்திகை
அந்தவார் சுவர்த்தல மடங்க வோவியப்
பந்திமா மணிகளிற் பயிற்றிப் பாவைகள்
வந்துலாய்ப் பெயர்தர வயின்றொ றாக்கினன். (கரு)

உண்டுகொ லில்லைகொ லென்ன வும்பரும்
நுண்டொழி லுருப்பல நோக்குந் தூண்டொறும்
வெண்டுகில் வாருறை வீக்கிக் கம்பலம்
வண்டல மருத்துகண் மாற விட்டனன். (கசா)

விடுகதிர்ப் பன்மணி வேறு கோத்தகாழ்
படுகவின் முறைமையிற் பரந்த வுள்ளெலாம்
நெடுகவும் விலங்கவு நிரைத்துப் பல்கனி
கடிமலர் கவரிகண் ணடியுந் தூக்கினன். (கஎ)

பாங்கெலாம் பசுநெடும் பந்த ரிட்டதின்
ஓங்கிய தூண்டொறு மொலிந்த பூகதம்
தூங்குதாற் றரம்பைகள் சுவைக்க ரும்புவிண்
தாங்குமைந் தருக்களுந் ததைய யாத்தனன். (கஅ)

தேசிகப் பட்டினுற் செம்பொற் றூரினால்
யோசனை கமழ்கடி யுயிர்க்கும் போதினால்
வாசமென் கொழுந்தினன் மருத்த வேரினால்
வீசொளி மணிகளால் விதானித் தானரோ. (கக)

வித்துரு மத்தினல் விதான முற்றுறீஇ
நித்தில வெண்மண னிரந்த ரிப்பியாப்
பைத்தநீ ரருவிமேற் பாய்த்திப் போக்குபு
தொத்துயிர் மலர்களும் விரையுந் தூவினன். (உ0)

பனியென நறும்புனல் பந்திற் றூவுவ
நனிவளி விசிறியி னடந்து வீசுவ
கனிமுத லுதவுவ காமர் பாவைகள்
அனிதம்விண் ணவர்களு மயிர்ப்ப வாக்கினன். (உக)

பந்தர்பைங் காரெனப் பசும்பொற் றூர்கணன்
றந்தினின் றசைவன வலங்கு மின்னெனக்
கொந்தொளிப் பன்மணிக் கோவைத் தோரணம்
இந்திர வில்லென விலங்க யாத்தனன். (உஉ)

உற்பல வோடைக ளுளுற்றும் பந்தர்பால்
பற்பல விம்மிதம் பயிற்றி யாக்கினன்
கற்பகச் சோலையுங் காமர் வல்லியும்
பொற்புற வவற்றயல் பூப்ப வாக்கினன். (உங)

சலமென நிலனிடைச் சார்ந்து நாணவும்
நிலனெனப் புனலினை நேர்ந்து நாணவும்
சிலையென விவர்ந்தவல் சேர்ந்து நாணவும்
பலபல் விம்மிதம் பாங்க ரீட்டினான். (உச)

மாலைவெள் ளருவிகண் மண்ணிற் றாழ்வன
கோலவிண் ணத்துராய்க் குளத்திற் றேங்கவும்
சாலவெள் ளருவியாய்த் தாழ்வ ரைச்சுனை
ஏலுநீர் வரைமுகட் டெழலு மாக்கினான். (உரு)

எவரெவ ரெவ்வுழி யாது முன்னினார்
அவரவர்க் கவ்வுழி யதுப யப்படச்
சவிமணி யிருநிதி தருவுந் தேனுவும்
நவமுற வயின்றொறு நலக்க நல்கினான். (உசா)

பஞ்சியின் மிதித்தொறும் பனிக்கு மாதரார்
அஞ்சிலம் படித்துணை யலரி டுந்தொறும்
விஞ்சிய வாகையின் விரைத்த பூவென
எஞ்சலின் றெறும்வரை யிளக வைத்தனன். (உஎ)

காலையின் மாலையைக் கலக்க வேண்டினும்
மாலையிற் காலையை மணப்ப வேண்டினும்
கோலவே றிருதுவைக் கூட வேண்டினும்
மேலென வின்றியே விளைய வாக்கினான். (உஅ)

விருத்தர்கள் பாலராய் மேவ வெஃகினும்
உரைத்தமூப் பினையவ ருறுதல் வெஃகினும்
புரைத்தவ ரும்பராய்ப் புலவர் மக்களாய்ச்
சரித்திடல் வெஃகினுஞ் சமையச் செய்தனன். (உகூ)

சிறக்குமண் ணவர்க்கெலாந் தெய்வ லோகமாய்த்
துறக்கமுள் ளவர்க்குமேற் றுறக்க நாடதாய்ப்
பிறக்கமுற் றிடப்பெரு வளத்த தாக்கினான்
அறக்குணத் தவர்பயி லடுக்கன் முற்றுமே. (௩0)

நீடிய பெருங்கவி னேர்கண் டாரெனின்
இடெனற் படுவது வேண்டற் பாலதோ
பீடுறு பெருந்தவத் தார்க்கு மிங்கெனக்
கோடுயர் வரையெலாங் கோடித் தானரோ. (கூக)

வியவர்கள் விரைந்து சென்று விமலனு ரருளீ தென்ன
இயவருட் டலைமை பூண்டோ னினியன நுகர்ந்து பூசிப்
புயனுமிழ் மின்னு வீசும் பொலங்கல னணிந்து போற்றி
நயனுறு கருவி யெல்லா நயத்தக வமைத்துக் கொண்டு. (கூஉ)

அருவிழும் மதத்த வேழத் தரசினை மண்ணுச் செய்து
குருமணி தகர்த்த ரைத்துக் குழைத்தசெஞ் சேற்றின் வார்கை
உருகெழு கோலந்தீட்டி யோடைவண் ணுதற்கண் வீக்கித்
திருமலி கவரிக் கற்றை சிறுதுளைக் காதிற் றாக்கி. (கூகூ)

ஏற்றுரிப் போர்வை வள்வா ரிணைமுர செருத்தி னேற்றித்
தோற்றிய வுலக மெல்லாந் துயர்கெட வினிது வாழி
நாற்றிசை வணங்கு மிந்த நகர்நனி சிறந்து வாழி
வீற்றுவீற் றறங்க ளெல்லா மறன்கடை விளிய வாழி. (கூச)

கம்பமால் களிநல் வேழக் கடாங்கவிழ் முகத்து முக்கண்
எம்பிரா னருளிச் செய்த தியாவருங் கேண்மின் கேண்மின்
தம்பிவேட் டுவர்தஞ் சார்பிற் றங்கிய வமிழ்தன் னாளை
உம்பரார் துவன்ற மன்ற லுளுற்றுவ திவண தாமே. (கூரு)

வெற்படை லழித்த வெள்வேல் விண்ணவர் கோமா னேவக்
கற்பகஞ் சுரபி சிந்தா மணிநிதி கலனூண் மற்றும்
அற்பகந் தழைய நல்கு மவையினி தேற்ற ணிந்து
பொற்பவுண் டார்வ முற்றப் பொருந்துபு மகிழ்ச்சி கொண்மின்.

விளக்கொடு தூப மார்த்தி விதானித்து வீதி தோறும்
துளக்கமி னிறைநீர்க் கும்பம் பாலிகை தொகுமின் வார்ந்த
வளக்கமு கரம்பை வேழம் வயின்றொறு நடுமின் செய்மின்
உளக்குலந் தணத்த றேற்று வோவியம் பித்தி தோறும். (கூஎ)

விரைமலர்ப் பந்தர் வீதி யிடுமின்றோ ரணங்கள் யாமின்
பரவைவிண் ணகடு தூர்ப்பப் பலகொடி யெடுமி னென்று
இரவியிற் பிறைபல் காற்சென் றெறிந்தெனக் குணில்கை யோச்சி
உரவுரு முரற்றிற் றென்ன வொலிமுர சுரப்பி னுனல். (ந௲அ)

முரச மார்த்தலு மூரி நகர்த்தலை
அரச வீதியு மாவண முந்தலை
விரசு ளெள்ளலும் வேறிடம் யாங்கணும்
பரசி யாரும் பணிசெய முன்னினர். (ந௲௯)

பழைய மாடமும் பைம்பொற் பதணமும்
மழைதுழ் மாயெழும் வண்மணிப் பந்தரும்
தழையு மோவியச் சாலையுஞ் சீத்தொரீஇ
விழைய வேறுவிண் ணோங்க விழைத்தனர். (ச0)

செப்பு நேர்முலை யார்முன்னர்ச் சிந்திய
ஒப்பி ரூம மொளிர்மணிச் சாந்தெனும்
குப்பை வாரவிற் கொண்டதம் மெய்யணி
குப்பை யாகலிற் குப்பைக ளாக்கிலார். (சக)

வீற்றுப் பந்தின் விரைப்புனன் மின்னனார்
ஏற்றுத் தூயினி தாடிய சேதகம்
பாற்றப் புக்குப் பசுந்தொடைத் தாதுதேன்
தூற்றிச் சேதகம் வேறுந் தொகுத்தனர். (சஉ)

ஓதி தாழுந டங்கியொண் கொம்பனார்
சோதி நித்திலத் தோரணம் யாத்தொறும்
வீதி வாய்ப்பிழைத் துக்கமின் கால்புயல்
சீத வாலிகள் சிந்தின போன்றவே. (சங)

வகைசெ யோவியப் பித்திகை மாசுறுத்
தகைசெ யாடியி னுறிய சாயையும்
நகைசெய் தாமங்க ளுற்றுநர் தம்மையும்
தொகைசெய் தியாவருந் தோல்வியிற் றங்கினர். (சச)

கருப்பு ரப்புனல் குங்குமக் காமர்நீர்
மருத்த மாமத மற்றும்வெவ் வேறுறத்
துருத்தி வாங்கித் துவற்றினர் வானவில்
திருத்தி ஞலென வீதிகள் சீர்த்தவே. (சரு)

இந்தி ரச்சிலை வாணுதற் கெஞ்சிமண்
வந்து வீழ மரீஇயபைங் காரினம்
அந்தில் வெளவ வடுத்தது போன்மெனப்
பந்தர் வீதிதொ றும்பயில் வித்தனர். (சசா)

அடுத்த காரக லாமைபி ருங்கனம்
தொடுத்தி ருத்துதல் போன்மெனத் தூக்கினர்
மடுத்த தேத்தொடை வண்கனி யாடிவில்
விடுத்த பன்மணித் தொத்தும் விராவியே. (சஎ)

விழுத்துக ளுண்டமே னிலங்க ழீஇவிடச்
செழுப்புனல் சுருங்கையிற் செறிந்து வீழ்வன
குழுப்புன லருவியாக் குன்றம் போன்றன
வழுத்திய பன்மணி யவிர்பொன் மாடமே. (சஅ)

சாந்திழுக் கியபதந் தைய லாரின்வீழ்
தேந்தொடை யூற்றுகட் டேற விற்கழீஇப்
பூந்துகட் குப்பையிற் புலர்த்தப் போந்தொளி
ஏந்துபல் கொடியெடுத் தார்க ளெங்கணும். (சகூ)

கவானெழில் கவர்ந்தபூங் கதலி வண்களக்
குவாலெழில் கவர்குளிர் கமுகு தோட்டுணைத்
தவாவெழில் கவர்ந்ததன் கரும்பும் யாத்தனர்
உவாவெழில் வாய்தலி னெழுகு தூண்டொறும். (ருO)

வடிவினும் போதினும் வார்க வான்குழ
லொடுபொரல் பொறுத்தவ ருரைபொ ருங்கனிக்
கடுவது புரிந்தன ரம்ம வோவெனப்
படுகனிக் கதலிகள் பலவும் வீட்டினர். (ருக)

மெத்திய புகையொளி விதான வேதியில்
வைத்தனர் பூரண கும்பம் வைத்தவர்
முத்தணி முலைக்குழன் முனிவில் கண்ணிணைக்
கித்தகைத் தறிகென வெவரு மாற்றவே. (ருஉ)

வண்ணக் கனகஞ் சிதர்செய் தினிய மருவூட்டும்
சுண்ணத் திரளுஞ் சுடர்பன் மணியுஞ் சொரிபைந்தேம்
கண்ணித் திரளுங் கலையின் றிரளுங் கலவித்தான்
விண்ணத் தமர்பல் லுலகுங் கவல விளங்கின்றே. (ருங)

தோடுங் குழையுஞ் சுடரப் புழுகின் மெழுக்கிட்ட
பாடுங் குவளைக் கமலந் தொடரிப் பலநாற்றும்
மாடுந் துவள்சிற் றிடையார் மலர்மென் குழலூடும்
ஆடுங் களிவண் டணவுஞ் சுலவு மகலாவால். (ருச)

தவளத் தரளத் திரளுந் தவழ்வெள் வளையுஞ்செம்
பவளத் திரளும் பலவுங் கவரப் பனிமுந்நீர்
அவன்மிக் குடைய தணிசெய் தவைநிச் சமும்வீழ்த்தத்
தவவிட் புலனீண் டகல்வுற் றஃதத் தடவெற்பு. (ருரு)

வளக்குன் றுவமம் பெறுமா நகர மின்றென்று
விளக்குற் றனபோன் மெனவுங் கடிவீழ் விண்ணோர்கள்
உளக்கொண் டெழுசோ டையைமெச் சினபோன் மெனவுந்தாம்
துளக்குற் றனவாற் றுகில்வார் கொடிகள் சுடர்சென்னி. (ருசு)

சந்தக் களிமென் பனிநீர் மலர்வெண் டரளத்தொண்
கொந்துங் கனலிக் குளிர்கூ திரின்மிக் குறுவிப்ப
அந்திற் புகையுஞ் சுடரும் பனவோ ரமைதீயும்
சிந்தித் திகழ்வித் தனதே வரும்வீ ழிளவேனில். (ருஎ)

இழுக்கிப் படுசாந் திணையா மணிவீ திகளில்லை
ஒழுக்கிப் புனல்பொன் னுதவாத் தலைவாய் தல்களில்லை
முழுக்கட் டொடைதா ளிடரு வகன்முன் றில்களில்லை
வழுக்கித் தமியை யெமியாய் நுகரா மனையில்லை. (ருஅ)

உழாலிற் பொலிவண் டிவர்பூந் தொடைநான் றொளிர்பந்தர்
எழாலிற் பொலிமெல் லிசையுங் குரலு மெறிசெங்கை
முழாலிற் பொலிவண் முழவும் பரத முறையோடும்
தழாலிற் பொலிநா டகவெள் ளமிழ்துந் தழைவுற்ற. (ருசு)

மணிது ளக்கியு மணியரிச் சென்னவஞ் சிலம்பின்
இணிது ளக்கியும் யாழ்நரம் புளர்ந்துவே றியைத்தும்
கணிது ளக்கிய சுணங்கிள முலையவள் களவின்
அணிது ளக்கினர் பாடின ரனிதகோ டியரே. (சுO)

அற்றை ஞான்றவ ரவர்திரு நகரணி படுத்த
தெற்றை ஞான்றும்விண் ணவரிருந் தியம்பினு முடியா
துற்ற ஞான்றவ ரவருறு மகிழ்ச்சியை யுன்னின்
கொற்ற வேலவன் முதலியோர்க் கல்லது கூடா. (சுக)

இயவு ளாகிய வெரிதவழ்ந் திலங்குவே லிறைவன்
வியவ னாகிய வீரவா குப்பெயர் விமலன்
புயல்வல் லேற்றுவண் கொடியினுன் புதல்வியை யண்மிச்
சயவென் றேத்தினன் றாழ்ந்தன னருளிய துரைத்தான். (சுஉ)

உவகை பொங்கினள் போதுமென் றுத்தமி யெழலும்
உவரி பொங்கியாங் கொலித்தன குணில்பொரு முரசம்
கவரி துள்ளின வசைந்தன காமர்சாந் தாற்றி
கவிகை யோங்கின துவன்றின காடெனத் துவசம். (சுங)

வணங்கி முன்கையின் மடிவிரித் தடுத்தனர் சில்லோர்
இணங்கு பாதுகை திருவடி யிணக்கினர் சில்லோர்
கணங்கொண் டாடினர் பாடினர் களித்தனர் சில்லோர்
பிணங்கு பேரொலிப் பெருஞ்சனம் விலக்கினர் சில்லோர். (சுச)

குவளை யுண்கணர் பற்பலா யிரர்குழீஇச் சூழ்ந்தார்
தவளை மென்குரற் கிண்கிணி தாட்கவைஇ யரற்ற
உவள கத்தினின் றொளிர்மணி வாய்தலை யண்மித்
திவண்ம ணிப்பெரு விமானமேல் கொண்டுசென் றடுத்தாள். ()

மாயி ரும்புவி மகண்முலே யிடைக்கிடந் தொளிரும்
காயி ரும்பொனிற் கதிர்மணி யழுத்துபூ ணணிய
மீயு யர்ந்தவிர் வெற்பினை நோக்கியுண் மகிழ்ந்தாள்
கோயின் முன்பெருங் கோபுர நேர்குறு குற்றாள். (சுசு)

விண்ணி றுத்திழி விமானநின் றிழிந்தனள் கோயில்
உண்ண டந்தன ளுத்தனைப் பணிந்தன ளுவகைக்
கண்ணி றைந்தநீர் கவிழ்ந்தனள் கருணைநோக் களித்தங்
கண்ண றன்னிடத் திருத்தின னளவளா யிருந்தாள். (சுஎ)

மங்கல முடங்கல்வர வேற்றுமறை ஞானிப்
புங்கவன் மகம்பொடி படுத்தபுகழ் வீரன்
துங்கமத யானைதுனை யக்கடவு சாத்தன்
இங்கிவர்க ணம்பலவு மீண்டவடை குற்றார். (சுஅ)

பாதல வுருத்திரர்கண் மூவர்பது மத்தோற்
காதியரு ளவரிரு மூவரவ ரீன்றோர்
ஆதவர்ம ருத்துவர்வ சுக்களென வான்றோர்
ஓதுபதி னெண்கணமு மாதவரு முற்றார். (சுகூ)

தத்தமனை மாதர்புடை சாரமல ரோனும்
மைத்தவுரு வத்தனும் வலாரிமுத லோரும்
பைத்தநதி குன்றுபல காலமுதல் யாவும்
எத்திசையி னேருமெழில் கொண்டணவி னால். (எ0)

சேந்தெரி தும்மு வைவேற் சேவக னருளப் பெற்ற
காந்தெரி கணைவில் வேடர் கதழ்ந்துதம் மடுக்க லண்மி
ஏந்தக லல்குற் குற்ற திற்றென விளம்ப லோடும்
பூந்துண ரலங்கற் றிண்டோட் புள்ளுவர் தலைவன் கேளா. (எக)

கழிமகிழ் சிறந்து சொல்வான் கைதொழு திறைஞ்சிப் போற்றி
வழிபடு கடவு ளாவா மருகனுந் தலைமை பெற்றும்
பிழிமகிழ்ந் தினிய வுண்டு பேரணி யணிவா யென்னைப்
பொழிவிழி மனையை யாற்றி யாரையும் புலம்பிற் றீர்த்தான்.

கடவுளர் சிறையைச் சீத்தோன் கன்னியை மணப்பா ணங்கண்
உடன்வரு வீர்க ளென்று வொலிகெழு பறையின் வைகும்
நெடுநகர்க் கறைந்து சாற்றி நிகழ்பொருள் கொணர்தி ரென்னத்
தடவரைக் காவ லோர்க்குச் சாற்றினன் முடங்க லுய்ப்பான்.

கன்றினைக் கவரி யூட்டிக் கழிந்தபாற் கலுழி நீத்தம்
மென்றினை விளைக்கும் வள்ளி வெற்புறை குறவர் கோமான்
என்றுல கெடுத்துக் கூறு மியல்பினே னியம்பு மாற்றம்
குன்றென நில்வுஞ் சீர்த்திக் குன்றவர் யாருங் காண்க. (எச)

முடங்குகி ரடக்கித் தோற்றுந் தோற்றுதி மூரி வேங்கை
கடங்கவிழ் முகத்து வேழங் கண்ணகன் புவியுண் டார்க்கும்
மடங்கலும் வேட்டை யாடி வதைத்தத ளணியுங் கொண்ட
அடங்கருஞ் சீர்த்தி வெள்ளி யடுக்கல்வீற் றிருந்த வேடன். (எரு)

தரைக்குயர் வரைகட் கெல்லாந் தலைமைசா லிமய வெற்பன்
விரைக்குழற் புதல்வி தன்னை வேட்டன னளித்த காளை
திரைக்கட லுலகங் கோட்டிற் சேர்த்தமா வேட்டை யாடி
வரைக்கெலா முரிமை பூண்ட மானவேல் வேட னம்மா. (எசு)

விலங்கமர் பொருத கோட்டு வில்லுமிழ் குழையுந் தோடும்
அலங்குகொக் கிறகு மக்கு மதளுநம் மரபோ டேற்றங்
கலங்கிய தாதை போலா னேனுமா யிரத்தெட் டண்டம்
கலங்கும்வல் வேழச் சிங்க வேட்டையிற் கடவு ளொத்தான். ()

அத்தகு வேடற் காற்று மருந்தவப் பயத்தாற் பெற்ற
மைத்தகன் றுளிர்ந்த வாட்கண் வள்ளிநா யகியை மாதோ
இத்தகு மாசித் திங்க ளிடைவரு பூச நாளால்
வித்தகத் தணிகை வெற்பின் விதியுளி கொடுப்ப நேர்ந்தேன்.

செம்மலை மணத்திற் காணத் தேவரும் யாரும் போந்தார்
கைம்மலை யுலம்பச் சிங்கக் கணஞ்செவி யோர்ந்து செல்லும்
அம்மலை வருக வென்று வடைவினில் வரைந்து விட்டான்
விம்மலை யுடைய வோங்கல் விழுப்பொருள் சிலத ருய்த்தார்.

கோழரை யகிலின் குறடுசந் தனவண்
குறடுகுங் கிலியங்கப் பூரம்
கேழில வங்கங் குங்கும மேலங்
கிளர்மணப் பச்சிலை மஞ்சள்
வாழிகத் தூரி புழுகுதேன் வேரன்
மணிவரை யகழ்ந்துகொள் வயிரம்
வேழவேண் மருப்பு மருப்புகு முத்தம்
வேங்கையி னுகிர்மயிற் பீலி. (அ0)

சாமரை வெதிர்நெல் லைவனங் குற்ற
தவளமெல் லரிசிசெந் தினைபல்
காமரு கனிகள் கிழங்குபல் பூகங்
கவரிகத் தூரிமா புழுகு
மாமத வேழம் பிடிகள பங்கண்
மயில்கிளி பூவைமென் புறுக்கள்
ஆமவை பிறவுங் கண்டனன் மகிழ்ந்தா
னவையெலாங் கொடுபுறப் பட்டான். (அக)

பாங்கியர் பாங்கி செவிலிநற் றாயும்
பரிவுறு தன்னையர் பலரும்
ஓங்கிய நகரும் பரிசனத் தவரு
முவாக்கட லெனப்புடை சூழ
வீங்கொலி வள்வார்த் தொண்டகந் துவைப்ப
வெள்வளை வயிர்பல நரலத்
தூங்குசெந் நாவின் ஞாளியின் றொடரத்
தொடுகழ லொடும்படர்ந் தடுத்தார். (அஉ)

முடங்கல்சென் றறிந்த குன்றவர் யாரு
முகிழ்பெரு மகிழ்ச்சியி னடைந்தார்
இடங்கெட விறுத்த வுருத்திரர் முதலோர்
யாவரு மேகநா யகனைக்
குடங்கையின் மலர்தூய் வணங்கினர் கருணை
கொண்டபின் றத்தமி லுயர்ந்தோர்க்
கடங்கினர் வழிபட் டஞ்சலி யளித்தங்
களவளா யிருந்தன ராக. (அங)

ஊற்றிய மதத்து முகப்பெருங் கடவு
ளும்பர்கோன் முகத்தினை நோக்கிப்
போற்றியிங் குள்ளார் யாவரே யாக
வவர்க்கெலாம் பொலிந்தவான் றருக்கள்
தோற்றுமெல் லணியுந் தேனுவி னமுதுஞ்
சுடர்தரு மணிதரும் பொருளும்
ஆற்றநின் றளித்த லென்றன னென்றுங்
கவனவற் றினைவியங் கொண்டான். (அச)

இன்றுகொல் யாம்பிறந் திட்ட நாளென
ஒன்றிய வோகையி னொளிர்ந்த தாருவும்
வென்றிகொ ளேனவும் வீதி மாமனை
மன்றகம் புறநகர் வளங்கள் கான்றவே. (அரு)

எங்கணு மணிவன வெங்கு முண்பன
எங்கணு மனத்தினுக் கினிய மெத்தலும்
எங்கணும் யாவரு முகந்து கொண்டனர்
எங்கணு மின்னணு மில்லை யென்னவே. (அசு)

பழையன தணந்தகன் பாரு ளார்தரு
இழையணிந் தின்னமு தயின்று சித்திரம்
தழைமணி மாடங்க டவிர்தன் மேயினர்
விழைதகு தேவரின் வேறு தோற்றிலார். (அஎ)

அருந்திற லரசன தருளி னல்லது
பொருந்திய விசும்பினும் புக்குக் கொள்ளருந்
திருந்திய விழைகளுந் தெய்வ வுண்டியும்
பெருந்தகை யமரரும் பெட்டு நொண்டனர். (அஅ)

இரப்பதுங் கொடுப்பது மின்மை யாலவண்
இரப்பவர் கொடுப்பவ ரிவரென் பாரிலை
நரைப்புமூப் புறுபிணி நசித்த லாற்றரை
வரைப்பென விசும்பென வழக்க மற்றதே. (அகூ)

தெய்வத வுணவினு லணியின் சீரினல்
மெய்வளம் வேற்றுமை தெரிப்ப வீழ்துணை
மைவளர் கண்ணியர் மருண்டு மோதிரக்
கைவிரல் காட்டலுங் கலத்தன் மேயினர். (௩0)

மானிடர் குழுவினை நோக்கி வானவர்
வானவர் குழுவென மருண்டங் கண்மினர்
வானவர் குழுவினை நோக்கி மானிடர்
மானிடர் குழுவென மருண்டங் கண்மினர். (௩௧)

ஈட்டலு மடுத்தலு மின்மை யால்வரைத்
தோட்டுணை மைந்தருந் தொடிக்கை மாதரும்
கூட்டுணு மிழையணிந் தகற்றிக் கோலமெய்
மீட்டுமீட் டணிதலே வினைய தாக்கினர். (௩௨)

ஆடினர் பலரரங் கேறி யாழ்தழீஇப்
பாடினர் பலர்களம் பயின்று பாரிடை
நீடுவார் குழலியர் நிகர வேண்டிவிண்
கூடுவா ரிளமுலைக் கோலக் கொம்பனர். (௩௩)

கார்விளை யாடிய காமர் மின்னனர்
தார்விளை யாடுதோட் டலைவர் தம்மொடு
நீர்விளை யாடிநீள் பொழிலி னுடியுள்
ஞர்விளை யாடியு முவப்பு மிக்கனர். (௩௪)

வந்தவ ரகமனை வதிய வைகுநர்
வந்தவர் போற்புறம் வதிதன் மேயினர்
அந்திலுள் புறமென வறைவ தல்லதை
எந்திட முஞ்சிறப் பொப்ப வேய்ந்தவே. (௩௫)

கண்ணிணை யெழுதினர் கவிழ்த்த வஞ்சனம்
தண்ணிய முலையணிந் துகுத்த சாந்தமும்
வண்ணமென் மலரடி யிழுக்கன் மாண்புதேர்
விண்ணவர் மண்ணடி மிதித்த னீவினர். (௩௬)

கொன்மணி நகரமு மாதர் கோலமும்
மென்மெலப் பழகிய விழிகள் கண்டன
அன்மலி மின்னொளி யழுந்தி நின்றெனப்
புன்மையின் மிக்கன புதுமைக் கண்களே. (சுஎ)

வரைகளும் வரைப்பெருங் குவடு மாமலர்
விரைசெலும் பொழில்களுங் கழித்து வீசிய
புரையொளி யிழைகொடு பொலிந்த தாங்களும்
கரைமணங் காணிய கவின்கொண் டாலென. (சுஅ)

பாறயி ரிழுதுதேன் பசுங்க ழைப்புனல்
ஆறென வொழுகநன் முடிப் பூசுபு
நாறுமென் களபநல் லணிக டாங்குபு
வீறுய ருணவெலா மிசைந்த வீதியே. (சுசு)

குங்குமக் களிவிராய்க் குருமணித்திரள்
எங்கணு ஞெமிர்ந்தொளி யிணர்த்த வீதிகள்
பொங்குபொற் றகட்டிடைப் பொருத்திப் பன்மணி
அங்குறப் படுத்ததோ ரழகு காட்டுமே. (க00)

சிந்துபொற் சுண்ணமென் றென்ற லுந்துபு
கந்தரக் கணமெலாந் தூர்த்த வோதையின்
வெந்திறன் மிருகங்கள் வெரீஇப்பெயர்ந்தன
வந்துமீட் டுருவகை வாய டைத்தென. (க0க)

பொன்மலை யரதனப் பொருப்பு நீண்மணித்
தென்மலை யெனவொரு சிறப்புப் பேர்பெறும்
நன்மலைக் குலமெலா நாணப் பொன்னுமிழ்
பன்மணிச் சிலம்பெனப் பறம்பு நின்றதே. (க0உ)

உக்கதே வர்கண்முடி யொளிர்பன் மாமணி
மக்கடாட் படவொளி மழுங்க வன்னவர்
தொக்கதா ருகுமதுத் துவர வாரிப்போய்
மைக்கடற் படுத்தது மரீஇய கேண்மையான். (க0ங)

இவரிழைக் குப்பைகுன் றிழுது பாறயிர்
தவழ்வகா ணுறுகு சாந்து சேதகம்
அவிர்மணிச் சுண்ணமெல் லயிர்ப்பி றக்கமாய்
நவமணி வீதிநா ணிலமுங் காட்டுமே. (க0ச)

பொன்னினு மணியினும் பொற்பச் செய்தணிந்
தின்னகை மாந்தரா ரிகந்த தாமரை
மின்னகு குவளையுஞ் சாந்தும் வேரியும்
துன்னிய மறுகுக ளோடை தோற்றுமே. (க0ரு)

அரத்தகச் சுவடுமிக் கார்ந்து குங்குமம்
பரத்தலின் வச்சிரம் பதித்த மேனிலம்
வரத்தின ரூற்றினை மாழ்கித் தன்னுருக்
கரத்தல்செய் மணிப்படாம் போர்த்த காட்சித்தே. (க சூ)

வேற்றுரு வாயவண் விரவெண் வேலையும்
ஆற்றுமேழ் மேகமு மழகு கண்டெனச்
சாற்றரு மோகையிற் றழங்கினு லெனத்
தோற்றும்பன் மறைகளின் றுதிகண் மிக்கவே. (க0எ)

நேமிவண் கிரிமுத னெடிய குன்றெலாம்
தாமிவர் களிப்பினுற் றருக்கி னுலெனப்
போமிடந் தொறுந்தொழில் புரியு மீளுறும்
காமரு விமானமுங் கணிப்பி றேருமே. (க0அ)

நிறுத்திய நிலைநெடுந் தேர்க ளெண்ணில
கறுத்தொரு வரைதுளை கண்ட வண்ணலை
உறுத்துளக் குகையிடை யோகு ழந்துமன்
மறுத்தப நின்றநல் வரைகள் போன்றவே. (க0கூ)

பிலிற்றுதண் மதுப்பொழிற் பொருப்பின் சேணெலாம்
இலிற்றுமும் மதக்களி றெண்ணி லாதன
வெளிற்றறி வினர்பொறி விழையச் செல்லுமால்
குளிற்றுவண் முரசினர் குழாம்வி லங்கவே. (கக0)

கலஞ்சிதர்ந் திரும்புவேய் காலி டுந்தொறும்
நிலஞ்செதி ளொடுத்தவாய் நிரப்ப மாமணிக்
குலஞ்செறிந் தைங்கதிக் கோணஞ் செல்லுமால்
பொலஞ்செய்பூ ணினர்மிகாப் புலன்க ணாடியே. (௧௧௧)

இன்னண மணச்சிறப் பியன்ற பாணியில்
பொன்னலர்த் தவிசினான் புரையின் மாதவர்
பன்னிய சமிதைபைந் தருப்பை யாதியின்
துன்னுற மன்றல்செய் சூழ னண்ணினான். (௧௧௨)

வேயின தோளியோர் பாக மேவுறக்
காயிலைச் சூற்படைக் கடவு ளையகன்
பாயின வுருத்திரர் பாங்கர்ச் சூழ்தர
ஆயிடைப் புகுந்தகன் றவிசின் வைகினான். (௧௧௩)

இந்திரனு மறுவிகந்த விமையவரு
மேவல்வினை யியற்றா நிற்பக்
கொந்தொளிய கவுத்துவநின் றழகெறிக்கும்
வரைமார்பன் குமரற் றாழாச்
சுந்தரப்பன் மணிகுயின்ற மண்டபத்திற்
றுளும்புமொளித் தவிசி னேற்றி
அந்தரகங் கையைமுதலாப் பலவுமனுப்
புகன்றுமுறை யாட்டி னானால். (௧௧௪)

செழுந்துபடு மரதனச்செம் மணிமலையிற்
செறிந்தபைங்கார் சென்று சாலப்
பொழிந்தபின்றை மஞ்சுதவழ்ந் தாலெனவெண்
டுசொடு புலர்த்திப் போக்கி
எழுந்தொளிருங் கிரணமணி யரைநாணுங்
கோவணமு மிலகு பட்டும்
தழுந்தரத்த வணிந்துநறுஞ் சந்தனச்செஞ்
சேறுருவிற் றயங்கச் சாத்தி. (௧௧௫)

தாவில்பல மறைகளுஞ்சுப் பிரமணிய
னெனவெடுத்துச் சாற்று மாறு
மூவுலகும் பெறலரிய முரஞ்சொளிய
விம்மணியாற் போலு மென்னத்
தேவர்களு மருட்கைகொடு நோக்கநவ
மணியிமைக்குந் தெய்வ மோலி
பூவமலு நறுங்குஞ்சி கைசெய்த
திருமுடியிற் பொற்பச் சூட்டி. (கககூ)

பாண்டரங்க னுதற்கிளைத்த பரவையொளி
விழித்தழற்பல் புலிங்கம் போலாம்
ஈண்டிலங்கு மணியுருவா யெழுந்துலகந்
தழன்மகனென் றியம்பப் பட்ட
ஆண்டகைமைக் கங்கிவிழி மிகையாமென்
றணியாத நுதலின் மாதோ
காண்டகுமக் கனல்விழிபோற் கதிர்க்குமர
தனவோடை கவின வீக்கி. (ககஎ)

காமவேண் மணிக்கவிகை மருங்கடுத்த
கொடிமகரங் கடுத்துங் கஞ்சப்
பூமரீஇப் புறங்கிடந்த மகரமொடு
மலைத்துமெழில் பூப்ப முன்னர்
நாமநீர் நறும்பொய்கை யிருந்ததற்கோ
ரடையாள நண்ணிற் றென்ன
ஏமவா னுலகேத்து மணிமகரக்
குழைசெவியி னிலங்கத் தூக்கி. (ககஅ)

மண்டியதன் பெருங்கீர்த்தி வயங்குமதி
யெனவண்ட வகுப்பு முற்றும்
கொண்டொளிர்வ தாகரமற் றிவனேயென்
றுலகமெலாங் குறிப்ப மும்மைப்
புண்டரமென் றவிர்நுதலிற் செங்கதிரென்
றண்டமெலாம் புகர்கால் சீக்கும்
மிண்டுபிர தாபமுமவ் வாறடுத்தா
லெனத்திலக மிளிரத் தைத்து. (கககூ)

சேந்துமதர்த் தரிபரந்து குழைகிழிக்கு
மிருமாதர் செழுங்கண் வாய்வைத்
தேந்துநலன் முழுதுமினி துண்ணவரை
தலினேனை மாத ரங்குப்
போந்தவர்கண் புகுந்துழக்கி மிச்சில்படுத்
தாவரணம் போலத் தோளில்
காந்துமணி யங்கதமும் வரைமார்பிற்
பலகலனுங் களுலப் பூட்டி. (கஉ0)

தன்னுருவிற் றெழிற்கும்வினை முதறுனே
யெனுந்தன்மை சகங்க டெள்ளத்
தன்னுருவிற் றெழிற்கருவி தானகு
மணிக்கடகந் தடங்கை யேற்றித்
தன்னுருவி னிளையனுமாய் முதுக்குறைவிற்
பெரியனுமாந் தனையே யொக்கும்
தன்னுருவிற் சிறத்துவிலை வரம்பிகந்த
மணியாழி தகையக் கோத்து. (கஉக)

அரிக்குரற்கிண் கிணிசிலம்புந் தண்டையுஞ்சே
வடியணிந்து பணிந்தான் கீர்த்தி
விரிக்குமறு முகவனெழுந் தியமியம்பக்
கொடிதுவன்ற வீங்கு மல்லைப்
பொரிக்குமதிக் குடைநிழற்ற வரம்பையர்சா
மரையிரட்டப் புலவர் சூழப்
பரிக்குமணிக் கலனிவுளி யிவர்ந்தூர்ந்து
நகர்வீதி படர்ந்து சென்றான். (கஉஉ)

கொங்குலாம் வீதியி னகருளார் பணிசெயக் கொடுசெலும்
எங்களு யகனெதிர் முனிவரர் யாவரு மினிதமை
பொங்கொளிக் கரகநீர் தூவியா சிகள்புகன் றேத்தினர்
மங்கைய ரெண்வகை மங்கலங் கொண்டெதிர் வாழ்த்தினர். ()

பஞ்சுநெய் நாவியும் பளிதமு நீவிய தீஞ்சுடர்
விஞ்சுபொற் படலிகை யேந்திவிண் மாதரார் மென்மெல
அஞ்சிலம் படிபெயர்த் திடுகிடை துவளமுன் னண்மினார்
மஞ்சனை மரபுளி காட்டினா ரீட்டினர் மாதவம். (கஉச)

வாம்பரி நின்றிழிந் தெம்பிரான் மன்றல்செய் மண்டபத்
தோம்புமுன் வாய்தலிற் சேறலும் வேடர்கோ னுரிமையாள்
தீம்பயத் தாட்டினள் சேவடி மாமலர் சூட்டினள்
எம்பலுற் றயினிநீர்ச் செஞ்சுடர் சுற்றியிட் டாளரோ. (கஉரு)

அகவயிற் சென்றன னம்மையோ டப்பரைத் தாழ்ந்தனன்
நகுமுகத் திருமுது குரவர்த மேவலி னவமணித்
தகுபொலந் தவிசிடை வைகினன் முன்னரே சார்ங்கனல்
திகழ்மலர் மாதராள் வள்ளியைச் சேர்ந்திது செய்தனள். ()

விசும்பு மகளிர் முனிவர் மகளிர் விரசிப் பரசித் தொடர
அசும்பு நறிய மதுமென் கோதை யளகத் திருவண் களபம்
இசும்புண் முலையிற் றிவளு மறுவை யிளக விறைஞ்சி யெழுந்து
தசும்பு நிகரு முலைமெல் லியன்முன் றரிதத கோலந் தணத்தாள்.

நாமா மகளுஞ் சசியு மேவ னயந்து புரிய நறுமென்
பூமாண் டயில மள்ளி வளைகள் புலம்ப வோதி யுரைத்துத்
தீமா ணெல்லிக் கனியுண் சாந்து திமிர்ந்து விரையுந் துவரும்
ஓமா லிகையு முரிஞ்சி யுடல மொளிர மண்ணுச் செய்தாள். ()

ஈரம் வறல நுழைநூற் கலிங்க மேந்தி முழுது முளர்ந்து
நீரி னனைந்த தூசு களைந்து நிகரில் செம்பட் டுடுத்துத்
தாரு மணியின் வடமு நான்ற தலனிற் றவிசி னிருவி
ஒரு மியத்தின் மருப்புச் சீப்பி னோதி வாரி முடித்தாள். (கஉகூ)

முழுதுலகுங் கமழ்நானக் கலவைவிரைப்
புகையூட்டி முறையி னீவிக்
குழலளகம் வகுத்தமைத்துக் கொண்டையெறு
ழேற்றிமில்சீர் குறைய வாக்கி
நிழலுமிழ்நீன் மணிப்பனிச்சை பஞ்சையிணை
விரித்தியற்றி நிகரி லைம்பால்
அழகெறிப்ப நித்திலமா லிகைநான்ற
மணிமகர மமையச் சேர்த்தாள். (கஙo)

தூநறுங் குவளைப் போது தொடிக்கையி னெரித்து வாங்கித்
தேனறு வேங்கை நாறுந் தீங்குழற் செருகி முல்லைப்
பூநறுந் தொடையன் முச்சிப் புறங்குலா யீழப் பைந்தார்
கானறுங் கதுப்புச் சுற்றிற் காருமிழ் மின்னிற் சூழ்ந்தாள். ()

முழுதெழிற் றிறத்தா னேற்றமுதன்மையாற் றன்னைத் தாழ்த்த
பழுதிலாள் சென்னித் தன்போற் பயிற்றிய தெய்வ வுத்தி
வழுவிய பிறையுஞ் சூட்டாண் மயில்வலம் புரியுந் தாழ்த்தாள்
ஒழுகொளிப் பிறைமா மஞ்ஞை யுறுத்தின ளுறுவ தோர்ந்தே.

காரெனக் கிளத்தற் கேற்பக் கண்ணுதல் சடில வாழ்க்கைச்
சீரிய பிறையுங் கானஞ் செப்புதற் கேற்பச் செவ்வேள் [தாள்
போரியல் கொடியின்வாழ்க்கைப்பொறிமயிற்போத்துஞ் சேர்த்
வாரியன் மணிப்பொற் சுட்டி தாழமண் ணுறுத்தா ளன்றே.

இளமழை யூடு போந்தங் கிலங்குமோ ரரவ நக்கும்
பிளவியன் மதியே போலும் பிறங்கொளிச் சுட்டி தாழா
உளர்நறு நுதலி னோடே வுருகுபொற் பட்டம் யாத்து
வளவிய நாகங் கான்ற மணியெனத் திலக மிட்டாள். (௧௩௪)

பாட்டளித் துளவத் தாரான் பயத்தலி னவன்போன் மைத்தும்
சேட்டிளம் பிணைமா னீன்ற செய்தியா லதன்க ணொத்தும்
வேட்டுவர் குலத்துச் சார்பா லவர்கைவெஞ் சரத்தின் வைத்தும்
காட்டிய விழிக்கு மாதோ கரியமை யெழுதி யிட்டாள். (௧௩௫)

நலம்புரிந் தருள வேண்டி நறுமுகை முல்லை யூரற்
குலம்புரி பவளக் கோயிற் கொழுமணி வாயில் காவல்
வலம்புரி யொருமுத் தண்மி வதிந்தென வார்ந்த நாசி
வலம்புரி முத்த நான்ற வயங்குபொற் றொடரைக் கோத்தாள்.

பங்கய மலரை வென்ற பாயரி மதர்க்க ணோக்கிச்
செங்கய லீது மாந்தித் தேக்கலா மென்று போந்து
தங்கிய மகர மென்னத் தரித்தனள் குழைவார் காதில்
அங்கது வெகுண்டு தாக்கி யலைப்பபின் றலையு மன்றே. (௧௩௭)

வானர மகளிர்க் கெல்லாம் வதுவைசூட் டிடவோ ரங்கை
தானமைத் தருளு மையன் றரிக்குமங் கலநாண் டாங்கும்
நானவண் களத்துக் கட்டு வடநகை மணிக்காழ் சூழ்ந்தாள்
ஆனவொண் ணிதிகள் பாங்க ரருங்கல னுமிழ்ந்த வேபோல். ()

தனையடுத் தவரைத் தன்போற் றகைநலத் துறுத்து வான்போற்
கனைகதிர் மணிபொற் காழுங் கடிமலர்த் தொங்கன் மற்றும்
புனைவன தாங்கி வல்லாப் புணர்முலைக் கணிசெய் தோங்கும்
வனைபுகழ்ப் பணைமென் றோளை வயிரவங் கதம்பூண் பித்தாள்.

புரிமுறுக் கவிழுங் கஞ்சப் பூவினை வாட்டு மங்கை
விரிமலர்க் கஞ்ச நண்பன் வெய்தடுத் திரந்து நின்றுங்
கெரிமணிக் கடக முன்கை யினவளை செறித்துப் பூட்டித்
தெரிமணி யாழி கோத்துச் செறித்தனள் விரல்க டோறும். ()

குளிர்பனி நீரிற் சேர்த்துக் குங்குமக் கலவை கொட்டி
ஒளிமணி தகர்த்த சுண்ண முறுபுகை யப்பி யூட்டித்
துளிமதுத் தொங்கல் பொற்றூர் சுடர்மணி மதாணி மற்றும்
தெளிகதிர் முத்த மாலைத் திரளொடு கவினப் பூண்டாள். ()

முகநிதிக் கமல மீன்ற முத்தமோ களச்சங் கீன்ற
புகரினித் திலமோ மென்றோட் புனக்கழை சொரிந்த வோகற்
றகர்முலைக் களிற்றுக் கோட்டுத் தரளமோ வென்னு மாரம்
திகழ்நகை மணியைத் தாழச் செவ்விபார்த் திருப்ப போந்தே.

கச்சப வடிவிற் றாகிக் கடலெனப் பரந்து தோன்றி
வெச்செனத் தாக்கும் வேழ வேந்தின்மத் தகத்தைச் சீறி
முச்சகம் வணக்கு மாரன் மூரிமான் றேரைத் தாழ்க்கும்
அச்செழு நிதம்பஞ் சேர்த்தா ளம்பெயர் பூண்ட காழும். (கசங)

மேருவு மேருச் சென்னித் துருவனும் வெளியு மாங்குச்
சாருடுத் திரளுந் தூநீர்த் தடத்திடை நிழற்றிற் றென்ன
வாருறு முலையும் வார்ந்த மயிர்மணி யொழுக்கு நள்ளாய்ச்
சேருநுண் ணுசுப்பு மல்குற் செறித்தபல் காழுந் தோன்றும். ()

கிம்புரி வடிவின் மின்னுங் கிளர்மணிச் செறிகை பற்றிக்
கம்பமால் களிநல் யானைப் பிணர்படு காமர் கையும்
உம்பர்வா ளேக்கும் வாழை யுருவமும் வறிய வாக்கிச்
செம்பொன்வார் கலையிற் பட்டிற் றிகழ்குறங் கணிதல்செய்தாள்.

சில்லரிச் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாத சாலம்
புல்லிய பரடு கவ்விப் புலம்புற வணிந்து வார்ந்த
நல்லெழில் விரன்ம ணுவி னகைமின்னுச் செறியு ளாக்கி
வில்லுமிழ் பட்டின் றேக்கை மேதக விரீஇயி னாளே. (கசுஅ)

அலத்தக மெழுதக் கைக்கொண் டம்மல ரடிக ணேக்கி
நலத்தகு தளிர்க்கை நோக்கி யவற்றொளிர் நகமு நோக்கிக்
குலத்தகு பவள வாயுங் கூர்மணி நாவு நோக்கி
நிலத்திடை யிட்டா ளூட்டா நிறத்தொடு நேரா தென்றே. ()

பிறர்க்கணி படுக்கு மாற்று லணியெனும் பெயர வெல்லாம்
சிறக்குமின் னனையாண் மெய்யிற் சேர்ந்தணி பெற்று முன்னர்
உறுத்தவப் பெயரி னீங்கா வாயின வொருவர் தம்பால்
துறுத்திடப் படார்கொ லொண்மை துறுத்தவ ரெவர்க்கு மொண்மை

செந்திரு நமக்குச் சேமஞ் செய்தவவ் வணிக ளன்றே
இந்தமான் பிணைக்கொப் பித்தா மீதென்ன மருட்கைத் தம்மா
முந்தறி யாத காமர் முதிர்ந்தவென் றயிர்த்து நொந்தாள்
அந்தின்மற் றிருந்தோர் தாமு மயிர்த்தன ருயிர்த்து நின்றார்.

ஆடவர் திலக னான வமரருக் கமரன் வார்வில்
வேடர்தங் காளை யாகி வேங்கையாய் நிழற்றிச் சால
வாடின னடியில் வீழ்ந்த மரபெலாந் தகவே யன்றோ
ஈடரு மயிலின் சாய லிவள்கடைக் கணித்தற் கென்றார். (கரு0)

பெண்மையாற் பெண்க ளெல்லாம் பெருந்தவ மாற்றி யாண்மை
வண்மையாற் கோடு மென்ன மதிநனி யுடற்றுங் கற்பின்
திண்மையா ளன்னை யான செய்தியா லெவர்க்கு மாண்மை
உண்மையா னஃதன் றாயி னுரையொடுங் கெடுவ தென்றார். ()

நாரணன் மார னேனோர் நலத்தகு தன்மு னீங்கின்
சீரணி யழக ராகுஞ் செறிவனப் புடைய நம்பி
வாரணி முலையாட் கொத்தான் மங்கையர் யாருந் தன்முன்
ஏரணி யில்லா ராகு மிவளவற் கொத்தா ளென்றார். (கருஉ)

அழகினி னிளமைக் காழ்ப்பி னழிவிலா யுதத்திற் காப்பின்
விழைவருள் கவிகை மாண்பின் வீரத்திற் கல்விச் சால்பின்
முழுவலி யிருள்கால் சீக்கு முதன்மையி னிகரில் லானைத்
தொழுமண வாள னுக்குஞ் சுந்தரி தவம்யா தென்னை. (கருங)

சிந்தா மணியே தெய்வத் தருவே
கொந்தார் தருவிற் குலவுங் கொடியே
அந்தா மரைசங் கெனுமா நிதியே
நந்தா வொளியே நறையே யமுதே. (கருச)

மாவின் குயிலே மருதின் கிளியே
காவின் மயிலே கானப் புறவே
பூவின் னனமே புறவின் பிணையென்
றேவின் விழியா ரினிதேத் தினரால். (கருரு)

பூமருவு பந்தர்ப் பொலந்தவிசி
னின்றெழுந்து பூங்கொம் பொன்று
காமரணி யணிந்து காவணத்தி
னூடுநடை கற்று லென்னத்
தேமருவு கோதைத் திலகத்
திருநுதலா டிரள்சங் கார்ப்பப்
பாமருவு பாடல் பயிலமட
வார்சூழப் பையச் சென்றாள். (கருசு)

கம்மப் பலகலனும் வில்லுமிழ
நூபுரமே கலைக ளார்ப்பப்
பொம்மற் குவிமுலை யோபாரம்
பொறைபரிது போலு மென்ன

அம்மெல் லிடைவருந்த வங்கை
வளைதெளிர்ப்ப வான்றோ ரொன்றுஞ்
செம்மற் கடிவினைசெய் தெய்வமணி
மண்டபமுன் சேர்ந்துள் புக்காள். (கருள)

செம்பொன் மணிப்பீடத் தும்பர்பிரான்
சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்து
பைம்பொன் னிழைசுமந்து பாங்கிருந்தாள்
பாதம் பணிந்தன் னோர்தம்
வம்பில் கருணைமழைக் குத்தழைத்
தரும்பி மலர்ந்த கற்பக்
கொம்பிற் கொளவொசிந்து தம்பெருமான்
பால்குறுகி வைகி னளால். (கருஅ)

நம்பியென் றியற்பேர் பூண்ட நற்றவ வேட னண்மிப்
பம்பிய பரமா னந்தன் பயந்தவிர் சதாசி வன்றன்
வெம்பழல் விழிக்கட் டந்த வேலவற் கென்பால் வந்த
கொம்பினைக் கொடுத்தே னென்று தன்வழிப் பெயருங் கூறி.

மங்கலத் துழனி பொங்க வாசநீர் மணிவி நீட்டச்
செங்கையேற் றுகுத்து நல்கத் தேவர்க தேவ னேற்றான்
பங்கய னுமாம கேசர் பாதபூ சனைசெய் தேத்தி
அங்குரந் தெளித்து முன்கைக் கங்கண மார்த்தல் செய்தான்.

மூத்தநூல் வழியா நாந்தி முகமெனுஞ் சிராத்த மோம்பிப்
பாத்திய முதல மூன்றும் பாங்குற வமைத்துக் கொண்டு
தீத்தகு குண்டந் தூய்மை செய்தத னகத்தி ரேகை
தூத்தகு வடசார் கீழ்சா ரந்திப்பத் தொடங்கி வார்த்தான். ()

இழைத்துவிட் டரத்தை நாப்ப ணிருத்திப்பூத் திருநீர் தோய்ந்த
தழைத்தபா சொளியின் மேனித் தயங்கிழைச் சத்தி யோடு
மழைத்தட நாற்கை முக்கண் வயங்குசெவ் வுருவி னானை
உழைத்தவி சளித்து றுத்தி யுவப்புறப் பூசை செய்தான். ()

அரணியின் ஞெலிந்த வங்கி யரதனக் கலத்தி லாக்கி
இரணவல் லரக்கர் சாய வெடுத்ததில் வறிது போக்கி
வரமுறப் பார்த்து விந்து வயங்கமிழ் தெடுத்து வைத்துப்
பரவுறப் படுத்து முக்காற் பாணியிற் கொட்டிச் சூழ்ந்தான். ()

மாசறு மங்கி செங்கை மறித்தனன் வளைத்துப் பற்றி
நாசியிற் பூர கத்தா னடத்திவிந் துவினுங் குள்ள
தேசொளி யோடுங் கும்பித் துந்தியிற் செலுத்தி யங்கண்
வீசொளி விராய்வி டுத்து விளங்கவுற் பவமுள் வைத்தான். ()

அருச்சனை நிரப்பித் தெய்வ வான்முலை யமிழ்தம் பாய்த்தித்
திருத்தக வளைத்துக் காவல் செய்துமீட் டருச்சித் தங்கி
கரத்தினி தேந்தி முக்காற் காமரு குண்டஞ் சுற்றி
இருத்துபு முழந்தாள் பூமி யெதிருற வகத்தி னிட்டான். (௧௬௫)

வடகிழக் கெல்லை சென்னி வைத்தனன் பள்ளி கொண்ட
கடவுளாற் சத்தி குக்கிக் கதிர்த்தவீ ரியமாய்ப் புக்குச்
சுடரெரி கருப்பங் கொள்ளத் தொடங்குபு கருப்பா தானம்
நடுவன முறையி னாற்றி நாமமு நல்க விட்டான். (௧௬௬)

வளர்சிவ வங்கி யீன்ற வரதரை யலர்க டேய்த்தன்
உளமலர்க் கமலத் தாக்கி யருக்கிய வுதகந் தூவித்
தளைசெய்மே கலைநாற் பாலுந் தருப்பைகள் பரப்பிக் கஞ்சன்
துளவின னரன னந்தற் றேற்றினன் கீழ்சா ராதி. (௧௬௭)

பரிதியங் குறுத்தி மேலாற் பண்ணவர்க் கிறைமுன் னேரை
விரவுறு தத்தந் திக்கின் மேதக விருத்தி செய்தூங்
கருவியை யிழுதைத் தூய்மை கண்டழ விதயப் போதில்
பரமனைப் பயிற்றிப் போற்றி யாகுதி பல்ல செய்தான். (௧௬௮)

அங்கியின் மேல்பா லிட்ட வாதனத் திருத்தித் தூசு
கொங்கலர் மனுவி னல்கி யிடையிடை குறித்த வோமப்
பொங்கெரி வளர்ப்ப நம்பி பூவைத னிதயந் தொட்டான்
சங்கர னுமையென் றுன்னித் தகுமது வருக்க மேற்றான். (௧௬௯)

தீஞ்சுவைச் சொன்றி யுப்பத் திருவிழிப் பார்வை நல்கிக்
காஞ்சனக் கலத்தி னீட்டுங் கடவுளா சமனம் வாங்கிப்
பூஞ்சுரைக் காம தேனுக் கன்றொடும் போத நோக்கித்
தாஞ்சிகை யழற்கு வாமந் தன்னிலே மூடிபிட் டானல். (கஎ௦)

அச்சுதன் முன்ன ரீன்ற வரிவைதன் னிடத்து மூவா
அச்சுதந் தரனர் நெற்றி யங்கியிற் கதித்துப் போந்த
அச்சுதன் வலக்கை பற்றி முறையினே மூடியிட் டண்மி
அச்சுதந் தெளித்து வல்லி யடியெடுத் தம்மி யிட்டான். (கஎக)

பொரிபெரி மனைவி யட்ட வுடனின்று போந்து முன்போல்
எரிமணித் தவிசின் வைகி யிலங்குமங் கலநாண் வாங்கித்
தெரிவைதன் மிடற்றிற் றேவ துந்துமி முழங்க யாத்தான்
பிரமனு முற்ற வங்கி வினையினைப் பிறக்கி யிட்டான். (கஎஉ)

ஆர்த்தன பணில மாதி யாடின கணங்க டுள்ளித்
தூர்த்தனர் சுரர்பூ மாரி சுரந்தன துதியின் சும்மை
போர்த்தனன் புளகம் வேடன் பொடித்தன வுவகை யார்க்கும்
தீர்த்தனுங் கருணை கூர்ந்தான் றேவியு மகிழ்ச்சி பூத்தாள். ()

வேடர்கோ னீரி னல்க வேலவ னேற்ற லோடும்
ஆடில விமைக ணீழ லளித்தில துருவ மாலை
வாடில குழலின் வண்டு மருவில நுதலின் வேர்வை
கூடில மாசு தூசு கொண்டில மாத ராட்கே. (கஎச)

பொறிமயிற் புனத்தை யோம்பிப் பூவையைக் கவர்வான் போந்த
நெறிவயிற் கரந்து நின்ற நிமலனே போலத் தானும்
கறிவளர் சார னம்மூர்க் கரந்தனள் வளர்ந்தாள் கொல்லோ
முறியியன் மேனி யென்று முழுதுள மகிழ்ந்தார் வேடர். ()

எத்துணை யறங்கள் சால வீட்டினன் வேடர் கோமான்
பத்தியிற் பலநாட் டாழ்ந்தென் பாவையை யளிப்ப வேற்ற
உத்தமன் றனே யண்மி யொளியில ஞகித் தாழ்ந்து
புத்திரி செங்கை பற்ற வென்றனன் புலவர் கோமான். (கஎசு)

மாதவ னெனும்பே ரல்லான் மாதவ மீங்கொன் றில்லை
மாதவன் புலவர் கோமான் மற்றவன் றன்னிற் சால
மாதவன் புளினர் கோமான் வளர்த்தரு டெய்வக் கற்பின்
மாதவள் பாங்கி னின்று ளென்றனன் மதுவை யட்டோன். ()

இந்திரன் மனைவி முன்ன ரீட்டினள் சீர்த்தி யெல்லாம்
வெந்திறல் வேட னில்லும் விளைத்தன ளின்று சால
எந்தரத் தென்னே தெய்வ மேதுமின் றுக்கிற் றென்றாள்
செந்திரு மானை யுன்னித் திருவுளேம் யாமு மென்றாள். (கஎஅ)

வல்லிநற் றுயைப் புல்லிக் கொண்டனள் வலாரி யில்லாள்
வெல்லுநாற் கோட்டு வேழம் வியந்தது செவிலித் தாயைப்
புல்லினர் பாங்கி தன்னைப் புலோமசை மகளைச் சூழ்ந்த
பல்லிணர்க் கோதைக் கூந்தற் பாங்கியர் பலரு மன்னே. (கஎகூ)

ஒருக்கிய வுளத்த ராகி யுயர்தவ மாற்றி னோர்கள்
தரைத்தலை யிழிந்த சார்பிற் றவிரினுந் தவத்தி னுற்றிற்
பொருத்துழியெவர்க்குமேலாய்ப்பொலிவதுவாய்மையென்னுத்
திருக்கிளர் தெய்வ மாதர் விம்மிதந் திகழ நின்றார். (கஅ0)

அருந்தவப் பயனு ளார்கட் கடுத்தவெவ் வுழியு மாவா
திருந்திய போக வைப்பாய்த் திகழ்வது திண்ணம் போலாம்
மருந்தம ருலகு நேரா வளத்தொடு வள்ளி மன்றற்
கிருந்ததிவ் வோங்க லென்னு மாந்தர்க ளேமுற் றுரே. (கஅக)

தரையுரங் கிழித்த கோடு மார்பிடைத் தயங்க வேணி
விரையுரங் கிழித்த கொன்றை மிலைத்தவித் தகனை வேலைத்
திரையுரங் கிழித்த சேற்க ணன்னையைத் தேவி யோடும்
வரையுரங் கிழித்த வைவேல் வள்ளல்சென் றிறைஞ்சி னுனல்.

பொழிந்தனர்கருணைவெள்ளம்பொலிகவென்றெடுத்துத்தைவந்
திழிந்தனர் தவிசி னின்று மிலங்குதங் கோயில் புக்கார்
அழிந்தன மலங்கண் மூன்று மகமெலாந் தேக்கியோகை
வழிந்தன வெவர்க்கு மென்றுன் மன்றலார் வருக்க வல்லார்.

மாய ஞதியர் வார்கழற் ருழ்ந்தினி
மேய யாவரும் வீதியிற் காணிய
போயு லாவரல் புந்திகொ ளாயென
ஆய ஞனவர்க் கவ்வர மீந்தனன். (கஅச)

பன்னி றப்பக டுண்டுகொ லோவென
எந்நி றக்கல னுங்கதிர்த் தேர்தரும்
துன்ன ருந்திறற் றாங்குகை வாரணம்
முன்ன ருப்த்தனர் முன்னவ னேறினன். (கஅரு)

பரந்து மாதர்பல் லாண்டுப யின்றுளம்
சுரந்த வோகைய ராய்ப்புறஞ் சூழ்தர
வரந்த ழைத்தசி விகையின் வையகத்
தரந்தை தீர்க்கும ணங்கிவர்ந் தாளரோ. (கஅசு)

ஒற்றை யங்கலை யூர்புன னீண்முடி
பற்றி வேய்ந்தப ரன்குரு வாதலான்
முற்றும் வான்மதி யேமுடி வைத்தெனக்
கற்ற சோமன்க விகைக வித்தனன். (கஅஎ)

எம்மை யீன்றவ னேயிவ னென்பபோற்
செம்மல் பாலண வித்திரு மார்பனும்
மும்மை வையக முந்தரு மூர்த்தியும்
கைம்ம லர்க்கட் கவரித ளக்கினர். (கஅஅ)

வளியெ ழூஉங்கரு வித்திரண் மானுற
வளியி னூட்டயர் வார்கொடி யெண்ணில
வளித னக்கிறை யோடுகை வெளவினர்
வளியின் வைப்பமர் வாழ்க்கையர் யாவரும். (கஅக)

ஆன நெய்பளி தத்தின விரொளி
கான றும்புகை யுங்கன லோடவன்
மாந கர்க்கணு ளார்கள்வ யக்கினர்
மான நாகர்ம ணிவிளக் கேந்தினர். (ககூ0)

விரைது மூழ்கிய மென்பனி நீர்புனல்
அரைய னண்ணன்மெய் தூவவ மைந்தனன்
வரையி ழூக்கச்சி விறியின் வாங்கினர்
புரையி லாவவன் பொன்னகர் வாழ்நரே. (கசுக)

மாலை யாத்தக விகைவ ருக்கமும்
ஆல வட்டமு மார்ந்தசாந் தாற்றியும்
கோல வெள்ளையுங் கொண்டனர் பானுவும்
சாலு ஞாயிற்று லகவர் தாமுமே. (கசுஉ)

சோதி நாரதத் தூமுனி பாலராய்
ஆதி யாழ்முதல் யாவும மைத்துளர்
கோதி லாதகு ணந்தகும் யாழினோர்
மாத ராரொடும் வண்புகழ் பாடினர். (கசுங)

குளிர்ப்பக் கண்டகொ ழுங்கணு நெஞ்சமும்
மிளிர்ப்பக் காமரு மின்னினு டங்குபு
தெளிர்ப்பக் கைவள்ளி தெய்வத மாதரார்
தளிர்ப்பத் தீஞ்சுவை பாடலிற் றங்கினர். (கசுச)

மாண்ட சோதிம ணிமுடி வானவர்
காண்ட கக்கதித் தாடுநர் பாற்றழூஉம்
பாண்டி லுங்குழ லுங்குரற் பாடலும்
தீண்டு கைம்முழ வுந்திசை தேக்கின. (கசுரு)

பானு கம்பன்ப ணிலமு ரன்றன
மான வாணன்கு டமுழா மல்கிய
தான பீலிவ யிர்பணை யாதிய
ஈன மில்கண நாதரி யம்பினர். (கசுசு)

இலக்கர் வீரர்கை யேந்துப டையொடும்
கொலைக்க ளிற்றைக்கு லாயினர் வீரருள்
தலைக்க ணின்றவன் றுங்குகை வேத்திரத்
தலக்கண் சிந்தவ டார்சனந் தாக்கினன். (கசுஎ)

வடகி ழக்குத்தி சைப்புற வாழ்க்கையங்
கடவு ளேற்றிமிற் கண்ணுதற் புண்ணியன்
தொடலை மார்பந் துணைக்கையிற் பின்னுபு
முடிவி லாதவி ருதுமு ழக்கினன். (கசுஅ)

சோம திக்கினன் றுன்னிவ லம்புறம்
காமர் பாகடை கைத்தல நீட்டினன்
வாம பாகம ரீஇப்பொற்ப டியகம்
நாம வேற்றரு மன்னனு குற்றனன். (கசுசு)

மாகர் போற்றிய மண்டமர் ஞாட்பிடைத்
தோகை மாமயி லாகிய தோன்றலுன்
ஏக நாயக னேவலி னங்குசப்
பாக னாகிப்ப கடுந டத்தினன். (உ00)

வரையு மாடமு மேடையு மண்டப மாலையும்
விரைய சோலையும் வாயிலும் வீதியு மாந்தர்கள்
நிரைய விண்ணவர் விண்ணிட மெங்குநி றைந்தனர்
அரைய ரூர்களி றவ்வயி னவ்வயி னின்றவே (உ0க)

புலவர் சிந்திய பொன்னரி மாலையும் பூக்களும்
பலவ ரைக்குலம் பம்பிய தென்னப்ப யின்றன
நிலனி றைந்தவர் தாட்பட நீறுபட் டொய்யெனக்
குலவு தம்பதி கொண்டென விண்ணினி வந்தவே. (உ0உ)

கருப்பு ரங்கமழ் குங்கிலி யங்கன லூட்டிய
மருப்பெ ரும்புகை வானுல கெங்கும்வ ளாவிய
தருப்பு மென்முலை யாரொடு மண்டர்த ணந்தவவ்
விருப்பு றங்கியி ளைப்பற வல்லிரு ளேய்ந்தென. (உ0ங)

உரத்தி னப்பிய மான்மத மூட்டிய சாந்தரோ
வெரித்த லைக்கண்வி ராவவெ ரிந்தலை யோர்கொள
வரித்த சந்தன மார்பிடை யப்பிம யங்கின
திரித்து வல்வினை தத்தமி யற்கைதி ரிந்தென. (உ0ச)

வடவை முற்றுந் திரட்டி யிடமலை யோடுபின்
படர வோலிடு பவ்வங்க ளொத்தன பல்லியம்
அடிக ளின்றறி வாமெனுஞ் சோடையி னார்த்துராய்த்
தொடர்வ போன்றன பின்னர் முழக்குஞ் சுருதிகள். ()

முருக னேமணி மார்பனே மலர்க்கணை
முனைவனே விசும்பாளும்
திருவ னேயென வவரலார் தமைப்புனைந்
துரைப்பவர் திருமார்பத்
தொருவ னேமுத லனைவருந் தவ்வென
வொலிவனப் புடையானை
முருக னேயிவன் முருகனே யிவனென
மொழிந்தன ரென்செய்வார். (௨0௬)

தண்ண றும்புன றசும்பி னேந்திப்போய்
அண்ணன் மாகளிற் றடியின் வாக்குபு
கண்ணி யுங்கமழ் கலவை யுஞ்செழுஞ்
சுண்ண முஞ்சிலர் சொரிந்து போற்றினர். (௨0௭)

சுரக்குந் தம்முகச் சுடர்க வர்ந்துவிண்
கரக்கு மாதவற் கரைத்துக் சாட்டியாங்
கரக்கு நீர்க்கல னங்கை யிற்சுலாய்ப்
பரக்க மண்ணிடைப் பாய்த்தி னார்சிலர். (௨0௮)

குவவுக் கோணுதல் குறித்துத் தேய்தரும்
உவவுத் திங்களை யுறப்ப கைத்தகைத்
தவவுக் கோளினார்க் கறிவித் தாங்குத்தூய்க்
கவவுக் கைப்பொரி களுற்றி னார்சிலர். (௨0௯)

புனித மென்மொழி பொருவ நின்றெழுந்
துனியி னாற்சிலர் சுளித்தொ ழித்தெனக்
கனிவ ருக்கமுங் கருப்புத் துண்டமும்
இனிய கட்டியு மீண்ட வீசினார். (௨௧0)

பரித்தன் முற்றுமோ பார நீக்கெனத்
தரித்த வொள்ளிறைத் தருணக் கண்ணியைத்
தெரித்த பட்டினைச் செம்பொற் குப்பையை
உரித்தென் றேகைபி னுதவி னார்சிலர். (உகக)

பாடி னார்சிலர் பணிந்து தட்டமிட்
டாடி னார்சில ராட லோடுமுன்
ஓடி னார்சில ருருவ நோக்கியே
நீடி னார்சிலர் பலர்நெ ருக்கவே. (உகஉ)

முருக்கு மண்ணன்முன் முகுந்தன் மேலெனத்
திருக்கு மால்கொடு செப்பி னேன்பொர
ஒருக்கி மேலெழு முகளக் கைசனம்
நெருக்க நாற்றிலர் நின்று ளார்சிலர். (உகங)

வண்ட லாட்டயர் பேதையர் வரிப்புனை பந்து
விண்டு தாங்கிய வம்மனை வீற்றுவீற் றொழிய
மண்டு சீறடிக் கிண்கிணி வண்சிலம் பொலிப்பச்
செண்டு தாங்கிய களிற்றெதிர் மேனிலைச் சென்றார். (உகச)

வேழம் வாசவற் கென்பர்க ளவன்கொலோ வென்றார்
வேழ மூர்பவ னேயவ னெனவெதிர் விரித்தார்
வேழ மோம்பிய விண்டுகொ லென்றன ரவனே
வேழ வாமத்துச் சாமரை வீசுவா னென்றார். (உகரு)

பொருத ஞாட்பிடை யிந்திர னெடுபுரண் டமைதான்
கருதி மாதவம் புரிந்துறுங் களிறுகைக் கொண்ட
முருக னேவென வினையினர் முழுவியவ் வாயை
உருவ வாளரித் தடங்கணி னுரைத்தவே ளென்றார். (உகசு)

இருவர் கன்னிய ரிருந்தவ மாற்றின ரிவன்றோள்
மருவி நின்றன ரென்மரான் மாதவம் புரியின்
கருணை வள்ளலார் நம்மையுங் கடிபயர் வார்கொல்
உரைமி னென்றுதந் தோழிய ரொடுமுசாய்த் தொழுதார். ()

கள்ளம் வெள்விழிக் கின்மையுங் காமத்துக் காதல்
உள்ள மின்மையு மொண்முலை யின்மையே காட்டும்
பிள்ளை மைப்பெரும் பேதைமை தீர்பெதும் பையர்கால்
தள்ள மென்புயத் தானைவீழ்ந் தோடிமுன் சார்ந்தார். (உகஅ)

வளருங் கொங்கையெவ் வளவையவ் வளவையின் மலர்க்கண்
வளருங் கள்ளமு மனத்தகக் காதலு மருட்டத்
தளிர ரும்புமெல் லிளங்கொடி தலைநிறீஇ யென்ன
உளம ருங்கெலாந் தலைநிறீஇ நின்றுராய்த் தொழுதார். (உகக)

தமது மாணெழில் விளக்குவான் றனிவனப் புடைய
குமரன் மாணுரு மறைக்குந ரேகுடை கவரி
நிமிரு நீள்கொடி விசிறியு நிரைநிரை யெடுத்த
அமரர் வாழியென் றகங்கனன் றெரிசிந்துநோக் குற்றூர். (உஉ0)

திங்க ளுங்குளிர் முத்தமுஞ் சிறிதுளம் வெதுப்பும்
அங்க ணண்ணலார்த் தணப்புறி னண்ணுறின் வதனப்
பங்க யங்களும் பரேரெறுழ்த் தோள்களும் பலவும்
கொங்கு தங்கிய தொங்கலுங் குளிர்ப்பன வென்றூர். (உஉக)

மாழை வாண்முக நோக்கினர் மாதவ ராகப்
பீழை வாட்டிய பெருந்தகு தெய்வம்வே றுளதோ
ஆழி சூழுல கத்தென வடிமைபூண் டுவக்கும்
வீழி வாய்க்கவின் மங்கையர் விறந்தனர் மாடம். (உஉஉ)

தங்கள் வாண்முகச் சந்திர னெதிர்குவிந் தெனக்கைப்
பங்க யங்களைக் கூப்பினர் பண்ணவர் பெருமான்
துங்க வாண்முகப் பரிதிகண் டலர்ந்தெனத் தொழுத
அங்கை மாமலர் விரித்திரந் தாரரு வரங்கள். (உஉரு)

சேந்த பங்கயந் திருமுக மென்றனர் சிலைவேள்
ஏந்து பங்கய மெய்தன னிணர்த்தமாந் தளிரோ
காந்த சோகத்துத் தளிர்கொலோ கவினுரு வென்றூர்
ஆய்ந்து மாரனு மக்கணை யிரண்டும்பின் றொடுத்தான். (உஉச)

கொற்ற வேலவன் வனப்பெனுங் குளிர்மழை பொழிய
வெற்ற காமவித் துளமெலாம் வேருற வூன்றி
முற்ற வாக்கையிற் பசலையாய்ப் படர்ந்துமூ துயரப்
பொற்ற போதுகொண் டலர்ந்தது பூவையர்க் கம்மா. (உஉரு)

பெண்ண வாயுருப் பசந்தனர் பேதைமா யவனும்
விண்ண மாளியும் பொற்கென விளங்கினன் வேதன்
தண்ணென் மாமதி விளர்த்தது விழிதுயில் சாரார்
எண்ணின் மாதரா ரென்படா ரிவனெழிற் கென்றார். (உஉசு)

குண்ட லங்கதிர் விலங்கமென் றோளிடைக் குனிப்ப
வண்ட லம்புவார் குழல்சரிந் தொருபுற மலியத்
தண்ட ளிர்ச்சர ணூபுர மேகலை தழங்கப்
பெண்டி ராணவா மடந்தையர் பெயர்ந்துபோ யிடைந்தார்.

மெழுகு குங்கும முலைகளான் மெலிந்திடை வருந்தத்
தழுவி நின்றுமா தரைத்தொழுந் தையனல் லார்கள்
ஒழுகு தண்ணறு மலர்த்தளிர்ப் பொறைமிக வொசிந்து
கொழுகொம் பூன்றிநின் றொளிர்பசுங் கொடித்திர ளொத்தார்.

நிறைநெ கிழ்ந்தமை நெகிழ்ந்துவார் குழல்புற நிகழ்த்தப்
பொறைநெ கிழ்ந்தமை யுளங்குழைந் திடையயல் புகல
அறைபொ லங்கழற் றளிஞ னழகெனுங் கடலில்
துறைக ழிந்துசெஃ றுரும்பென வுளஞ்சுலா வினரால். (உஉக)

செய்ய பங்கயத் திருவொடு மலைத்தயாஞ் சென்றிங்
கைய நின்கழல் பணிதலு மவணலங் கிளைக்கும்
வைய முண்டவன் வடிவொடு பெயர்கொடு கின்றும்
கையில் வெள்வளை யாழியுங் கண்டில மென்றார். (உகூ0)

கிடைசெய் முல்லையுங் கொலைபுரி நீலமுங் கெழுமித்
தொடைசெய் வெய்யவே டொழிலிடை யாம்புகு தாமைக்
தடைசெய் மூரன்முல் லையுந்தொடை நீலமுந் தாங்கிக்
கடைசெய் கின்றசெவ் வேட்பெய ரடுத்ததே யென்றார். (உகூக)

இருகை யாற்கல வித்தொழி லியற்றலாற் றூமை
வருட நீவவண் குறிசெயத் தழுவவார் கலையை
ஒருவி யோச்சவொண் கரணங்க ளுஞற்றமுந் நாற்கை
பொருநி னேய்புலம் பறிதியெப் புரமதி யென்றார். (௨௫௨)

அரிவை குந்தமு மதிப்புறு வருந்தவ ருளமும்
அரிவை வன்படைத் தோற்றமா யன்மொழித் தொகையாம்
அரிவை யென்னுமப் பெயர்தழீஇ யனங்கன்வாழ் வுயர்த்தும்
அரிவை குந்தடங் கண்ணிய ரளவிலர் தொக்கார். (௨௫௩)

ஆட வர்க்குமிக் கணங்குசெய் கொல்லிமால் வரையில்
பீட மைந்தவப் பாவைபோற் பெண்பிறப் பினர்க்கு
நீட ணங்குசெய் பாவைகொல் லோநெடுங் களிற்றில்
பாட மைந்தொளி ருருவெனப் படரெழக் கண்டார். (௨௫௪)

மலர்ந்த பன்னிரு விழிகளும் வதனமும் வாயும்
அலர்ந்த கைகளு முந்தியு மடியுங்கண் டமர்வார்
பொலிந்த பங்கயக் காடுகண் டதனிடைப் புகவீழ்
ஒலிந்த வோகைபி னேதிமத் திரள்களே யொத்தார். (௨௫௫)

மகர வாய்க்குழை நிலத்திடை மாறுபு நக்கத்
தகர வார்குழல் பிறழமுன் றெரிவையர் தாழ்ந்தார்
இகலும் வேள்கணை படமறிந் திறைஞ்சினு ரொத்தார்
பகவ னுரருண் மழைக்குவீழ் பசுங்கொம்பு மானார். (௨௫௬)

தாழ்ந்த மங்கைய ருள்ளகம் விருப்பெனுஞ் சரங்கள்
போழ்ந்து டற்றலி னெகிழுடை போற்றுவார் தாழ்ந்தாங்
காழ்ந்த நெஞ்சமோ டிருந்தன ரறுமுகக் கடவுள்
வீழ்ந்த தோடரி னலதெழா விரதங்கொண் டார்போல். ()

விண்ணிடந் துவன்றி நின்ற மெல்லியன் மாத ரெல்லாம்
வண்ணமென் புருவ வார்வில் வளைத்துவேள் சரங்க ளென்னும்
தண்ணகை முல்லைப் போதுந் தறுகண்மா நீலப் பூவும்
அண்ணலங் கிலக்க மாக வெய்தன ரவச முற்றார். (௨௫௮)

சிலைமதன் கணைக ளேண்டச் செயப்படு பொருளாய் நின்றே
கொலைபுரி யிறைவன் வாட்கட் குருஉச்சுட ரிவன்கண் வாளி
மலையுறழ் புயத்தி னெய்தே மலிபெருங் காமர் வெற்பின்
உலையவின் றருளிற் றின்னாற் குறுவது போலு மென்றார். ()

ஐயமேற் றழலுந் தந்தைக் கருந்தவர்க் குரிய மாதர்
வையமேற் கலைபிட் டாரேன் மகன்மண வாள னாகி
உய்யவீண் டுலாவுங் காலை யுடைவளை தோலார் யாரே
நையுநா விடையா ரென்ன நலனொடு கலனுந் தோற்றார். ()

எனுவியங் கென்னை செய்தா யெனுவனும் பாங்க ருள்ளான்
கலைநிறை தோற்றா யென்று கழறினோர் தாமு மூழான்
நிலைதடு மாறு வார்போ னிறையொடு கலையுந் தோற்றங்
கலைநெடுங் கொடியின் வாங்கி யணிவளர் தூசு சூழ்ந்தார். ()

அங்கியங் கண்ணிற் றோன்று மங்கியே யிவன்மெய் யென்ப
திங்கனு பவத்திற் கண்டா மிளகிய சாந்தந் தியப்
பொங்கொளி முத்த மாலை பொரியமெய்ம் மாமை நீறத்
தங்கிய வுளத்தொ டாவி தழற்றிய தாவா வென்றார். (௨௪௨)

அரம்பைய ரல்குற் றீர்ந்த வவிர்கலை வரத்துக் கேந்தும்
கரம்பட நோக்கித் தூசு கழிந்ததம் மல்கு னோக்கி
நிரம்பிய கருணை நீரா னின்மல னருளிற் றென்னா
வரம்பிலின் புற்றா ரொத்தார் மண்ணவ ரணிந்து தாழ்ந்தார்.

முயங்குத லெய்தா மேனு முலைக்குறி வயக்கா மேனும்
மயங்கிமெய் யவச மாகுங் கரணத்தின் மலையா மேனும்
தயங்கொளி யுருவ நோக்கித் தளிர்த்துளே முயங்கக்கொண்டிங்
கியங்குவ தோடை யானை யென்செய்வா மென்று நைவார். ()

உருவெளி யருகு தோன்ற வுற்றன னிறைவ னென்னாப்
பெருகிய காத லன்பிற் பிணையன்னார் தழுவிக் காணார்
பொருவரு முத்தி யென்று புல்லிய கதியை நாடி
மருவிய மதத்தர் போன்று மறுகிய வுளத்த ரானார். (௨௪௫)

எங்கணு முடிகள் கண்க ளெங்கணும் வதனம் வாய்கள்
எங்கணுஞ் செவிக ணாசி யெங்கணுந் தோள்க டாள்கள்
எங்கணு முருவ மின்னாற் கெனமறை யியம்பி யாங்கே
எங்கணுங் கண்டா மன்றற் கெய்திய தவத்தா னென்றார். ()

அடிகளா ருருவங் காட்டி யலங்கிய தெனுமார் வத்தால்
கடிதழல் சுடுவ தெண்ணார் கதுமெனத் தழுவி மோந்தார்
விடுசுடர்ப் பந்தர் மாலை வித்துரு மத்தைப் பற்றி
இடுகிடை குழைய மார்பத் திறுகுற வணைத்து மோந்தார். ()

கடம்பவிர் தார்க ளாகக் கற்சுனைக் குவளை யாகத்
தடம்பொழின் மலர்க ளாகச் சாரலிற் சாந்த மாக
இடம்படப் பிறந்தே மில்லை யெற்றுக்குப் பெண்க ளாக
உடம்பெடுத் துழிதந் தேமென் றுற்பவ மொறுத்து நின்றார்.

தேம்பிய மருங்கு றேய்ப்பச் சீதளக் கலவை யாடப்
பூம்பசுந் தொடலை சூடப் பொழிகதிர்க் கலன்க டாங்கத்
தாம்பெரி தோங்கிற் றல்லாற் சண்முகற் றேய்தற் கோவென்
றோங்கிய முலைகள் காவா ருருவத்தோட் டுணையுங் காவார். ()

உறுப்பினுட் சிறந்த கண்கா ளுத்தமற் காட்டி யுள்ளம்
இறுப்பது புரிந்து நின்றீ ரெழிலுரு மீட்டு நோக்கிப்
பொறுப்பது வலித்து மேனும் பொழிமழைத் தாரை கொண்டீர்
கறுப்பொடு வெளிறி னீரோ காரிய முடிப்பீ ரென்றார். (௨௫௦)

நுந்தைபோ னுனது மார்புங் குறியுள தாமே ளேக்கும்
பைந்தொடி யெங்கள் வாட்கண் பார்த்தற்கு மிசையாய் போலும்
அந்தர ரிடும்பை யோம்பி யருளினை யலக்க ளேப்பி
எந்தரத் தருளல் போலு மியைவுறா திறைவற் கென்றார். ()

திருவுரு வனப்பை வெளவுஞ் செங்கயல் விழியு முள்ளும்
தெருளுறு முயிரும் பேராச் சிறையகத் தாக்கிக் கூப்பும்
இருகையும் வணக்கங் கொண்ட விடையும்வண் சிறையி னீங்க
அருளினை புரவு ளாய்க்கிவ் வடுப்பன வழகோ வென்றார். ()

பெண்ணெனப் பட்டு நின்றார் பெருமதர் மழைக்க ணேடிக்
கண்ணென வளைத்து நல்கக் கடவுளர்க் கிறைவன் றன்னை
உண்ணமிழ் தென்னத் துய்த்தா ரோரிரு மகளி ரேயாம்
பெண்ணழி பதடி யானும் பேருல கத்தி லென்றார். (உ௫௩)

பல்வகைச் சிறப்புங் கொண்டு பாவையர் மனமுங் கொண்டு
வில்வளர் வீதி தோறும் விழாவணி விஞ்சப் போந்திட்
டெல்வளர் மணிப்பொற் காந்தி யிமைப்புறு ரிமைக்குங் கோயில்
சொல்வளர் சாமி நாதன் றும்பிநின் றிழிந்து புக்கான். (உ௫௪)

நித்திலத் தாம நான்ற நிழன்மணி விதான வேதிப்
பைத்தபொன் னணையின் மேலாற் பாவையோ டிருந்தெல் லோ
மெத்திய வரிசை பெற்று வீற்றுவீற் றுங்காங் கெய்தி [ரும்
ஒத்தவா றிருப்ப வேவி யுற்றனன் படுக்கைச் சூழல். (உ௫௫)

சாந்துபெய் செப்பும் பூந்தார்த் தமனியச் செப்பும் வாசம்
ஏந்திய செப்பும் வெவ்வே றிருத்திய வணியின் செப்பும்
காந்திகொ ளாடி மற்றுங் கஞற்றினர் நாப்ப ணிட்ட
தேந்தவழ் சயனத் தேறித் தேவியோ டிருந்தா னன்றே. (உ௫௬)

விதித்தருண் மறையி னீதி மேதினி வழக்க மாக
மதித்தனன் சோம னாகி வனமுலை திளைத்தான் பின்னாள்
கதிர்த்தகந் தருவ னாகிக் கலந்தனன் மூன்று நாளில்
கொதித்தெழு மங்கி யாகிக் குமரவேள் கூடி னானல். (உ௫௭)

வழிவரு நாலா நாளின் மஞ்சன விழாக்கொண் டாடிக்
கழியிடை யிரண்டு நாளுங் காலையு மாலைப் போதும்
செழுமறை மனுவி னோம்புந் தீயிடைக் குறைகண் முற்றிப்
பொழிகதிர் விதான வேதிப் பூவணைத் தவிசி னுற்றான். ()

கனிவகை மாசை தூசு கலனணி நிலன்க டேயம்
தனிவரங் கதிகண் ஞானந் தயங்கிய வீடு பேறென்
றினியன வெல்லா மெத்த விரப்பவர் மறைவ லாளர்
முனிவரர் தேவர் யாரு முகப்புறத் தான முய்த்தான். (உ௫௯)

இற்றைநாள் காறு மாத ரெதிருற நோக்கப் பட்டாம்
முற்றுநா நோக்கப் பட்டு முதன்மையின் வைகற் கிந்தப்
பொற்றொடி மாதை நோக்கிப் பொலிவுறல் வேண்டு மென்னு
உற்றருந் ததிநேர் கண்டா ளொண்ணுதல் பார்வை யீந்தாள்.()

தேவர்கண் முதலோர் நீங்கச் சிலதிய ரேவ லாற்ற
ஆவயி னகன்று பள்ளி யறையடுத் தமளி வைகி
மூவிரு முகமு முந்நாற் கரங்களும் விழியு மாக
மேவுதன் னுருவா லின்பம் விளைத்துவீற் றிருந்தா னன்றே. ()

சென்றமுந் நாளும் வெவ்வே றுருக்கொடு திளைத்தா யென்னே
என்றமா துவப்ப வண்ண விறுக்குமம் மூவர் மாட்டும்
ஒன்றுவித் துலகோர் மாதை யுறுவது முறையால் யாமே
மன்றலங் குழலா யன்னார் வடிவெடுத் தமர்ந்தா மென்றான். ()

திருமணம் புரிந்து வைவேற் சேவக னுலகுக் கெல்லாம்
பெருகுமங் கலங்கள் செய்த பெற்றியிற் றன்னஞ் சொற்றும்
உருகிய மழுவ லன்பி னுறுவர்கா ளமரர்ப் போக்கிக்
கருணையங் கடவுண் மாதர் கடாவிடை நடாவல் செய்வாம். ()

வள்ளிநாயகி திருமணப்படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — ௩௦௩௬.

## விடையருள் படலம்

தாமரை குவளை கயிரவ முல்லை
சண்பகங் காந்தளுல் வகையின்
பூமலர்ந் தொளிரும் பன்மணி கான்று
பொன்னொளி தழைத்தெழுந் தெய்வக்
காமரு கொடியோ ரிரண்டொடு தழைத்த
கற்பகத் தருவென மணந்த
தேமரு குழலா ருடனமர் வரதன்
சேக்கையா யொழிந்ததென் னுளமே. (க)

பொன்னணி பூண்முலை வல்லி யோடு
பூவமல் சேக்கையி னுட்ட யர்ந்த
மின்னவில் வேல்வலத் தெந்தை யன்றை
விடியலெ ழுந்துபல் லோர்து வன்றத்
தன்னிகர் மன்றல்செய் கோயி னீவித்
தானர சாளுமுன் கோயி லண்மி
மன்னிய தன்னிரு பாலு மாதர்
வைகமென் பூவணை வீற்றி ருந்தான். (உ)

போதுநெ கிழ்ந்தவிழ் தீர்த்த மாடிப்
பூதிய ணிந்துகைப் போது தாங்கி
மாதவர் வானவர் வேதன் மாயன்
மற்றவர் மேற்படுந் தேவ ரேனோர்
ஏதமி றத்தமி ருக்கை யண்ண
வெண்ணுமு ளத்தொடி றைஞ்சி யேத்த
மேதக வாரரு ணல்கி யார்த்தி
வேட்டவ ரங்களும் போத விட்டான். (ங)

பன்மலை வாழ்நர்ப ரந்து சூழப்
பாங்கிபல் லாயங்கைத் தாய்நற் றாயும்
சொன்மலி தன்முன்வந் தோரும் பம்பத்
தோகைதன் றாதைமுன் போந்த டுத்து
வின்மலி பாதந்தன் சென்னி தீட்டி
விம்மிதத் தோடெதிர் நின்று போற்றிப்
பொன்மலி யிவ்வரை யென்றும் யாங்கள்
போந்துமைக் காணவி ருத்தி ரென்றான். (ச)

மாமன்மொ ழிக்கெதிர் நாம வேலான்
வாமம ணிநகை கொண்டு சொல்வான்
ஏமநெ டும்புவிக் கின்ப நல்க
வென்றுமிவ் வெற்பையி ருக்கை கொண்டாம்
மாமது சேர்ந்துமுப் போது நிச்ச
மாகண்ட லன்மலர் நீலம் பூப்பக்
காமரு கற்சுனை யாக்கி யிட்டான்
காண்மதி யத்தையென் றீதும் விண்டான். (ரு)

மூச்சக முந்தொழு தேத்த வள்ளி
யூரிவி லங்கலஞ் சாரல் வைகி
நிச்சமு மில்லற மோம்பி வாழ்தி
நீடிய வாயுளந் தித்த காலைப்
பொச்சமி லெம்முல கெய்தி மீளாப்
போகந்தி ளைத்தருள் சேர்தி யென்று
கச்சமில் பேரரு ணல்கி விட்டான்
கானவன் கைதொழு தேகு கின்றான். (சு)

முந்துற விந்திரன் மாம களார்
முன்னர டுத்துவ ணங்கிப் போற்றிச்
சுந்தர வல்லியை யண்மி நீடத்
தொழுதுநின் றேவப்பெ யர்ந்து போந்தான்
பைந்தொடித் தாயரு மேனை யோரும்
பாங்குற மூவர்க்குந் தாழ்ந்து கூறிக்
கொந்தொளி மாமணி யிட்டுப் போதுங்
கோளர விற்கருத் திட்டுப் போந்தார். (எ)

யாவருந் திருவரு ளெய்திப் போதலும்
மூவரும் வழிபடு முதல்வ னேக்கினல்
பூவரு மடந்தையைப் புற்கென் ருக்கிய
மேவரு மாதராண் மேவித் தாழ்ந்தனள். (அ)

தழுவின ளெடுத்துட றைவந் தெங்கைநீ
விழுமிய துணையென மேவி னையெனக்
கெழுவிய காதலிற் கிளந்து விண்ணவர்
தொழுகுல யானைதன் றுணைவற் ருழ்ந்தரோ. (கூ)

யாரிவள் வேடர்தஞ் சார்பி லெய்துறுங்
காரணம் யாதிவட் கரைதி யென்னலும்
வாரணம் வளர்த்தவள் வதன நோக்குபு
வாரண முயர்த்தவன் மகிழ்ந்து கூறுவான். (க0)

மருமலர்த் துளவினுன் மகளி ராகமுன்
இருவருந் தோற்றினி ரெம்மை மன்றலிற்
பொருநிய சரவணப் பொய்கை மேவியங்
கொருவரும் பெருந்தவ முழந்து வைகினீர். (கக)

ஆவயி னும்மையா மடுத்து விண்ணவர்
காவலன் மகளெனக் கான வேட்டுவன்
மேவரு மகளென மேக வென்றனம்
மேவியாங் கிருவிரு மெய்தி வைகினீர். (கஉ)

திருப்பரங் குன்றிடைச் செல்வி நின்னுளக்
கருத்தினை முடித்தனங் களவி னீங்கிவள்
அருப்பிளம் பூண்முலை யணைந்து மன்றலிப்
பொருப்பிடை யாற்றினும் புலவர் போற்றவே. (கஙு)

நீயொரு குழவியாத் தவழ்ந்து நேர்செலக்
காயிலை வயிரவேற் கடவு ளையகன்
பாயிருங் கடம்பொழி பகட்டை யேவலும்
ஆயிடை யதுநினை வளர்த்த தாயிழாய். (கச)

ஈங்கிவள் சென்றது மெய்துந் தோற்றமும்
ஆங்கவன் வளர்த்தது மறியக் கூறுகேன்
பாங்குறக் கேளெனப் பட்டி மைக்குவட்
டோங்கலைத் துளைத்தவ னுரைத்தன் மேயினான். (௧௫)

பிள்ளை மதியு மரவும் பிணைசடில
வள்ளல் கழற்கான் மறவா வழிபாட்டின்
கள்ளப் புலன்வென்ற கண்ணுவ மாமுனிவன்
ஒள்ளிய வைகுந்தத் துற்றா னொருவைகல். (௧௬)

புள்ளே றுயர்த்த புயல்வண்ணன் றன்னோடு
தள்ளாத வார்வத் துரையாடச் சார்குற்ற
விள்ளாத சீர்த்தி விரதத் தவன்கோயில்
உள்ளா லவனிருந்த வோங்கு சபையடுத்தான். (௧௭)

ஓங்குதன் கூற்றான் முச்சக மளந்த
வுபேந்திரன் முதலியோர் சூழப்
பாங்குறு நளினப் பணிமலர்ப் பீடப்
பாவையோ டிருந்தபொன் னுடையோன்
ஆங்கெதி ரடுத்த முனிவனை நோக்கா
னையென விருக்கைநின் றெழான்மற்
றீங்கனை கென்ன மொழிகளும் பயிற்றா
னிருக்கையு மளித்திடா திருந்தான். (௧௮)

நன்றிவ னகந்தை யெனமுனி வெகுண்டு
நசிக்குமித் திருக்கொடு தருக்கிப்
பொன்றுநல் லறிவை மூகைபோன் றிருந்த
புயல்வணா பொருகடற் கதித்த
வென்றியங் கடுவை மிடற்றகத் தடக்கும்
விகிர்தனார் வேடமெய்ப் படுத்த
என்றனை யிகந்தாய் மூகைமைப் பிறவி
யெண்ணில வுறுகெனச் சபித்தான். (௧௯)

காணகத் துழலு மிருகமொத் திருந்த
கமலநாண் மலரணைக் கிழத்தி
தானுநெட் டிருங்கண் மான்வடி வனந்தஞ்
சார்ந்திடப் படுகவென் றுறுத்தி
ஊனமுற் றிரியத் தெள்ளிய வறிவி
னுபேந்திரன் முதலியோர்ப் பாரா
ஈனமுற் றடுக்கும் வேட்டுவப் பிறவி
யெண்ணில வெடுமினென் றிறுத்தான். (உo)

ஒருவருஞ் சாப முறுத்திய முனிவ
னையெனப் பெயர்ந்துதன் னிருக்கை
மருவினன் மாயன் முதலியோர் வெருவி
மழைமிடற் றிவைனை முறையான்
இருவினர் வழிபட் டேத்தநின் மலனு
மெதிரெழுந் தருளியஞ் சலிரென்
றருளியம் முனியை விளித்திவர் சாப
மனுக்கொரு பவத்தினென் றறுத்தான். (உக)

சோத்தமெம் பெருமான் றிருமுழுத்தையேன் வாக்காற்
சொல்லுதல் வேண்டுங்கொன் முழுதும்
காத்தரு ளிறைவ வடியவர் மாட்டுக்
கருணையை விளக்கினை சாபம்
வீத்தொரு பவத்தி னிவரெலா முன்போன்
மேகவென் றுரைத்தடி யிறைஞ்சி
ஏத்தினன் விடைபெற் றேகினன் முனிவ
னெம்பிரா னருள்செய்து மறைந்தான். (உஉ)

ஊனேறும் வேற்கண்ணு யுறுசாபந் தொடக்குதலும்
கானேறு மலர்ச்சோலை கமழ்வல்லத் தணிமைக்கண்
மீனேறு சுனைப்பொதும்பர் மேற்பாடி வரைச்சாரல்
தேனேறு துளவினன் சிவமுனியாய்த் தவமுழந்தான். (உங)

அவ்வரைசூழ் நெடுங்கானத் தடுக்கிதழ்ச்செம் மலர்வாழ்க்கைக்
கொவ்வைநறுங் கனியிதழ்வாய்க் கோற்றொடிக்கைத் திருமாது
மூவ்வுலகு மதிசயிப்ப முழுக்கனக வொளிதுளும்ப
நவ்வியுரு வெடுத்தன்னே நவ்வியினத் தொடுமுழன்றாள். (உச)

சுற்றமெலாஞ் சிலைவேடர் தொகையாக வெக்கலையும்
கற்றுணர்ந்த வுபேந்திரனுங் கானவர்க்கோ ரிறைமகனைப்
பொற்றவளந் திகழ்குறிச்சிப் புளினரிறை பாலுதித்தான்
மற்றவன்பல் கிளைதுவன்ற வரையரசு புரிகின்றான். (உரு)

மைந்தர்பலர் தமையின்று மகளின்றி வருந்தினன்
முந்தையருந் தவப்பேற்றான் முனியெதிரப் பிணையடுப்ப
அந்தில்விழிக் கலவிமுனி யாற்றினு னஃதோடி
நொந்துயிர்த்து வேற்றுருவ நோக்கியகன் றதையன்றே. (உசு)

பரிவகலச் சிலைவேடன் படர்ந்தெடுத்து வளர்த்திட்டான்
அரிமதர்க்க ணிளமுறுவ லந்நலா யறிகென்றான்
தெரியிழையாண் மகிழ்சிறந்து சேட்பட்டுக் கிடந்தேமை
உரிமையுற வுடன்வைத்தா யுத்தமவென் றடிதொழுதாள். ()

இற்றைநாள் பயன்பெற்ற நாளன்றே வெமக்கென்று
கற்றைவார் நறுங்கூந்தற் கானவர்தங் குலமகளைப்
பொற்றொடிக்கை யரலண்மிப் புல்லினுள் பூரித்து
மற்றவளுய்ந் தேனென்று மறுவலுஞ்சி றடிபணிந்தாள். (உஅ)

ஆனந்தந் தலைசிறப்ப வளவளா வியபின்றைக்
கானந்து மலர்க்கூந்தற் கானவர்தங் குலமாது
தேனந்து மலர்க்கடப்பந் தெரியலான் கழல்வணங்கி
வானந்து மித்தணிகை வரைவாய்மை யருளென்றாள். (உகூ)

வாடிய தேவர்கள் வன்சிறை
சாடிய வேற்படைச் சண்முகன்
ஓடரி மாமழை யுண்கணாய்
பாடுதுங் கேளெனப் பன்னுவான். (௫௦)

வளமலி காஞ்சிதன் வைப்பிடை
அளவலி னிந்தவ டுக்கலை
நளிவள மாநக ரேழுளும்
ஒளியொடு சீர்த்துயர் வுற்றதே. (௫௧)

விலங்கலுள் வெள்ளி விலங்கல்பாய்
பலங்கலி ஞர்க்குரித் தாங்கெமக்
கிலங்குப லோங்கலு ளிவ்வரை
பொலங்கொடி யார்வம் புணர்ப்பதே. (௫௨)

விரைமல ருள்விரி கஞ்சமும்
திரைநதி யுட்டிகழ் கங்கையும்
புரைதப வோங்கிய போன்மென
வரைகளி னிவ்வரை மாண்பதே. (௫௩)

உருத்தெதிர் தானவ ருள்ளுயிர்
வருத்துபு மீண்டிவண் வந்துநாம்
செருத்தணி வெய்தலிற் சீர்ப்பெயர்
செருத்தணி யென்று சிறந்ததே. (௫௪)

அஞ்சன மேனி யவுணர்போர்
விஞ்சலு ருப்படை விண்ணவர்
எஞ்சலி லாதெய்து மாண்பினும்
வஞ்சியன் னையது வாய்வதே. (௫௫)

எப்பகை யுந்தரு மீண்டிருள்
துப்புடைத் தொல்செருத் துன்னினர்
வைப்பிடைத் தாழ்த்தும் வனப்பினும்
அப்பெய ரிப்பதிக் காயதே. (௫௬)

என்று மிங்குநாம்
மன்ற வைகுதல்
நின்று நீலமே
நன்றுணர்த்துமே. (௩௭)

காலை காய்பகல்
மாலை மாமலர்
நீல நேரவிங்
காலவ மர்கின்றும். (௩௮)

ஐந்து நாளசைந்
தெந்த மிணையடி
வந்து வணங்கினோர்
பந்தம் பாற்றுவார். (௩௯)

வீடா வினைமிக் குடைய ரேனும்
நாடா விவணண் ணினவ ரேமெய்
வாடா தவர்வா னவரின் மேலாம்
பீடா யினர்மெய் வளைக்கை நல்லாய். (௪0)

அறந்தாம் பலவாற் றுநர்க ளேனும்
சிறந்தா ரெனச்செப் புநர்க ளேனும்
பிறந்தா ரலர்பெட் டிவணு றுரேல்
மறந்தாங் கியவாள் பொருது கண்ணாய். (௪௧)

பழிதீர் குறும்பல் லியமி யம்பிக்
குழலூ தியுங்கோ டுகளி சைத்தும்
எழுவான் றகர்மஞ் ஞையிவை யூர்ந்தும்
விழைவால் விளையாட் டயர்து மீண்டே. (௪௨)

என்றே யிவையா தியுற வெல்லாம்
நன்றே தெரிவித் தருளு நம்பி
குன்று வருள்கொண் டனமென் றன்பின்
முன்றூழ்ந்து மொய்பூங் குழன்ம கிழ்ந்தாள். (சங)

படைவேல் வலம்பற் றுகும ரேசன்
விடைமே வரவீ சியது சொற்றும்
நடைமே தகுநா ரதன டுத்துத்
தொடையான் விடைசூழ்ந் தமைகி ளப்பாம். (சச)

விடையருள்படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — ௩0அ0.

## நாரதனருள்பெறு படலம்

போர வாய்ப்புர ளுஞ்சின வேற்கணார்
வார மாய்மறு கும்மயர் மாக்கடல்
தீர வான்கரை சேர்க்கும் புணையரோ
நார தீச்சுர ளுண்மலர்ப் பாதமே. (க)

மன்றல்கம ழுங்குவளை மென்மலர்வி ரிந்தசுனை
மல்குகயி லைக்க ணொருநாள்
கொன்றைபுனை செஞ்சடில மன்றியபெ ரும்புனல்
குறுந்துளியெ னக்க துவுற
வென்றருளு மங்கணன ணங்கொடும டங்கலணை
மீமிசையி ருப்ப வெவரும்
துன்றினர்ந ரம்புளர ருந்தவனு மங்கணெதிர்
துன்றுபுப ணிந்து தொழுதான். (உ)

வாரியும்வ டித்துகனி யுந்தியுமு றழ்ந்துமணி
யாழினிசை பாடி முனிவன்
ஒருமருள் பெற்றவனெ ழிந்துபெயர் கின்றவ
னுளத்திடை யயிர்த்தஃ துதான்
தீரவொரு தாதைபயில் வானுலக மண்மியெதிர்
சென்றடிவ ணங்கி யிறைவ
வாரமொடி யான்வினவ நீயருள நின்றதொரு
வாய்மையிது வென்று மொழிவான். (௩)

இலிற்றுமழை மும்மதவெ றுழ்க்களிறு வெம்பரி
யெழிற்சிவிகை தேர்முத லொரீஇப்
பிலிற்றுமது நுண்டுகண றுங்கடிய கொன்றைபிறை
வேணிமுடி வைத்த பெருமான்
வெளிற்றுவிடை யூர்திகொள லென்னைவிரை யார்பொருள்
வேண்டியவி ருப்ப வணியா [கள்
தொளிற்றுருவ நீறணித லென்னெனவிவ் வாறுபல
வுங்கடவி னன்க டவனும். (௪)

நோற்றலின்மி குத்தவற வோயிவையெ மக்கெளிய
வல்லநுத னோக்கின் மதவேள்
ஆற்றலுட லம்பொடிப டுத்தவிறை யேயறியு
மாங்கவனு தற்க ணருளும்
வேற்றலைவ னேயறியு மன்றியறி வாரிலை
விசாகனைய டுப்பி னவனே
தேற்றுவன தற்குரிய தேயமுய ருந்தணிகை
சேறியென வோதி னனயன். (௫)

கந்தவரை யாதிபல வுங்கடவு ளார்சிறை
கடிந்தமுரு கன்வ திவுற
எந்தைதணி கைக்கிரியு ரித்தெனமி குத்துரை
யியைத்திதணி கைப்பெ ருமையைச்
சிந்தையின்ம யக்கறவு ணர்த்துதியெ னப்பணிதல்
செய்தன னெழுந்து முனிவன்
கந்தைகும ரன்கழனி னைந்துதணி கைப்பெருமை
சாற்றுதல் வலித்த னனரோ. (௬)

அரம்புரி யாணவம ருட்டவறி வற்றிரு
ளகன்றவறி வேகி லயமாய்
வரம்பிலரு ளீசனுரு வுங்கொடுபி றர்க்கருள்
வழங்குமொரு வாய்மை யறியா
துரம்பயில்வி லாதவிளை யானெனவ ணங்கில
னொழிந்துபடை வேல வனையான்
நிரம்பியபெ ருங்கருணை யாளனைவ ணங்கிநெறி
யாற்பெயர்வு கொண்டி யறலும். (எ)

வேதமுத லோதுபொருள் யாதெனவி னுயெனை
விதும்புறவ துக்கி நெடுநாள்
காதுசிறை வைத்திரச தக்கிரிக மூன்றுகவி
னுன்றவட வேங்க டமுறீஇத்
தீதறவு யிர்த்தொகுதி நல்கியிறை யேவவிடு
திண்சிறையெ னக்கொ ருவுவித்
தாதிவின வச்சுருதி யாதிமொழி யின்பொரு
ளறைந்தவரை யந்த வரைகாண். (அ)

ஆருயிர ளிக்கும்வர மெய்தமல யத்தணிமை
யின்கணவிர் மூன்று சிகரத்
தேருமொரு வெற்படியி ருந்துதவ மாற்றியிறை
யோனடிப ணிந்து பரவ
வாரணிச டைப்பரம னேவலின டுத்தருளி
லிங்கம்வழி பட்ட ணவியான்
சாரரிய மாதவமு ழப்பவுல காக்குமரு
டந்தவரை யந்த வரைகாண். (கூ)

இலைப்புரைகி ளைத்துநெடு மாலுமறி யாதவிறை
யோனருளி னுல ணவியெக்
கலைப்பொலிவு முற்றுமரு ணந்திதவ மாற்றவெதிர்
காமர்மயி லூர்தி வெளிநின்
றலைப்புனலி னுந்தியைய ழைத்ததின மூத்தியருண்
ஞானமும ளித்தி ரவியிற்
றலைப்படுமொ ளிக்கனென வின்பநிறை விற்புணர்வு
தந்தவரை யந்த வரைகாண். (கo)

கும்பமுனி யண்மிநனி யார்த்துநட மிட்டவருள்
கூர்பரன டிக்க ணறுநீர்
வம்பலர்சொ ரிந்தயல்வ ராகபுரம் வைகியொளி
வாய்ந்தசிவ லிங்க மிருவி
நம்புசிக ரத்திடையி வர்ந்துதவ மாற்றநவை
தீர்தமிழ்வி ரிக்கு முதன்மை
பம்புசிவ ஞானமொடு பன்னிருகை யாரியன்
பணித்தவரை யந்த வரைகாண். (கக)

இந்திரனு யிர்த்தமக னோடமரர் தங்களை
யிருஞ்சிறைப டுத்த வவுணர்
வெந்திறனெ டும்படைய னைத்தையு முடித்துவிறல்
வாகைமுடி சூடி யவுணர்
முந்துகவர் மாயன்முத லோர்திருவெ னைத்தையு
முகந்துகொடு போந்தி ருவுபு
பிந்தணவி யாங்கடவ மாற்றியிறை நல்கவவை
பெற்றவரை யந்த வரைகாண். (கஉ)

முன்னரொரு காலமற வோய்தணிகை நாதனடி
முன்னிநெடு மண்ணி னுறுநீ
அன்னநடை யன்னநடை மின்னிடைம ருங்குலமிழ்
தன்னமொழி மஞ்ஞை யியலின்
கன்னிகவி னின்னதென வன்னவன டந்துகளா
வாற்றியுட னுய்த்தெ வர்களும்
துன்னவது வைத்தொழின்மு டித்துவிளை யாடல்புரி
தொல்லைவரை யந்த வரைகாண். (கங)

மேதகவி ளங்குமதன் மான்மியம னந்தமுள
வேற்கடவு ளேய றியுமால்
ஆதலின னுக்கிரகம் யாவுமவ னேயுடைய
னவ்வருள்வ ழங்கு மிடமும்
ஓதியது வேநனிதெ ரித்தியெந வோதிம
முயர்த்தவன சத்த விசின்மேல்
வேதியனு ரைப்பமகிழ் வுற்றடிப ணிந்துவிடை
பெற்றனனல் வீணை முனிவன். (கச)

விண்ணெறி நீந்திவி ளங்கிய நாரத மெய்ம்முனி வாரிதிசூழ்
மண்ணிடை வந்துவ ளந்தணி கைப்பதி வைப்பின்வயங்கிலைவேல்
அண்ணன்ம லைக்குவ டாதுகு டக்கி னலைத்தகி லுந்திவரும்
தண்ணிய நந்திந திக்குவ டாது தயங்கிய வெற்பணவி. (கரு)

வானதி சென்னிமி லைத்தபி ரானடி வந்தனை செய்பவிது
தானமெ னக்கரு தித்தவழ் நந்தித டம்புன லாறுபடிந்
தீனம லத்தையி ரிக்கும்வி பூதியி லங்கிய கண்மணியும்
மேனிய ணிந்துப திட்டைபு ரிந்துவி திப்படி பூசைசெய்தான்.

பட்டினி விட்டொரு திங்கணி றைந்தப ராபரன் வந்தனையின்
கட்டிய செஞ்சடை நாரத மாமுனி காதலின் வைகுதலும்
மட்டும துக்கமழ் கொன்றைம லைத்தழ லாடிய வெம்பெருமான்
உட்டிக ழுங்கரு ணைக்கடல் பொங்கவு வந்தெதிர் தோற்றினனால்.

கண்டும கிழ்ந்துவ ணங்கிதி மிர்ந்துக ரஞ்சிரம் வைத்தெனையாள்
அண்டப ராபர வென்பர வங்கள தட்குல நீறணியாக்
கொண்டவ வெள்விடை யூர்குழ காவொளிர் கொக்கிற கீரமதித்
துண்டமு டிச்செரு குந்தலை வாசர ணென்றுது தித்தனனே.

புகழ்ந்தவ னிற்பவு ளத்தினி னைந்தபு ணர்ப்பறி யும்பெருமான்
நெகிழ்ந்தவு ளத்தவ நின்குறை வல்லைதி ரப்புவ மூற்சுடர்வேல்
திகழ்ந்தக ரத்தவ னென்றரு ளிச்சிவ லிங்கம றைந்தனனவ்
வுகந்தவ ருட்குறி நாரத லிங்கமெ னப்பெய ருற்றதரோ. (கசு)

அத்தகு நாரத லிங்கம்வ ணங்குநர் வாழ்த்துந ரார்வமெலாம்
மெத்திய செல்வர்க ளாய்வினை முற்றும்வி ளித்துயர் வீடுறுவார்
நித்தன ருட்கிட ளுகிய மாமுனி நீடும கிழ்ச்சியனாய்ப்
பைத்தந திப்புன லாடியு யர்ந்தப ருப்பத மெஃகல்செய்வான்.

குணுதுதி சைக்கண ணைந்துப ணிந்துகு ழைந்தவு ளத்தினெடும்
பிணவைய வுக்கரி யேறிரை நாடுபி றங்கல்வ லம்புரியூ
அணுவுநெ டுங்கொடி மேகமொ டாட்டய ராலய முற்றடிதாழ்ந்
துணுவிர விற்றுயி லின்றிவி சாகனை யுன்னியி ருந்தனனே. ()

அற்றைப்பிராப் புலர்காலை யைதுவெண் ணீறுதரித்துப்
பற்றியயோ கமுழந்து பணிந்துபிரா னைப்புறம்போந்
தற்றவிதிப் படிகோறின் றுமிழ்ந்துகறும் புனரூேய்ந்து
முற்றுறநாட் கடனாற்றி முதல்வனையண் மிப்பணிந்தான். (உஉ)

பாம்பணர்ந்தன்ன பைங்கோட்டுப் பன்மணிமா டகத்தள்ளற்
றாம்புறைஞென் டின்கணன்ன தூரப்பமையா ணித்திவவின்
ஓம்பியபச் சையினல்யா ழொண்கைபிடத் துத்தழுவித்
தேம்பயிறந் திரிதொட்டுத் தேக்கினன்பண் ணுரமிழ்தம். (உங)

மிதுனம்பயில் கின்னரங்கண் மெய்சோர்ந்தவனி யின்வீழக்
கதுமெனவற் றன்மரங்கள் காமருமென் றளிரீன
முதுவரைநெக் குண்ணெகிழ முன்னின்றுபா டியபின்றைச்
செதுமறுமா முனிகோயிற் றிருமாளிகை வலஞ்செய்தான். ()

வலம்புரிகா லைதிருதி மாதிரத்தண் மையிற்றேன்றும்
அலம்புபுனற் சுனைநோக்கி யார்வமொடங் கணடைந்து
சிலம்பரசன் முருகேசன் சேவடிசிந் தையிருத்தி
நலம்புரியோ கினிருந்தா னுளமந்நீர்ச் சுனைதோய்ந்து. (உரு)

பன்னெடுநாள் கழிவெய்தப் பாரிடம்வின் ணவர்சூழப்
பின்னர்நெடு குங்கலாவப் பிணிமுகமூர்ந் தெனையாளும்
கொன்னவில்வேற் படைவள்ளல் குறுகினன்வல் லையெழுந்து
பொன்னவில்பா தமிறைஞ்சிப் போற்றினனு ரதன்மாதோ. ()

தடவரை மணியொளிர் தணிகையங் கிரியினை
கடவுளர் சிறைதபு கருணையங் கடலினை
கடவுளர் சிறைதபு கருணையை யாதலின்
இடர்தப வெளியமு மிணையடி பரவுதும். (உஎ)

மகளிர்க ளிருவரின் வதிதரு மெழிலினை
துகளறு துறவியர் துறவியென் றிலகினை
துகளறு துறவியர் துறவியை யாதலின்
இகலற வெளியமு மிணையடி பரவுதும். (உஅ)

அரியய னமரரு மடிதொழு மமரனை
எரிசடை யிறைபணி யிறைமையி னிலவினை
எரிசடை யிறைபணி யிறைமையை யாதலின்
உரைபெற வெளியமு முனகழல் பரவுதும். (உகூ)

என்று தோத்திர மியம்பிய பெருந்த வனெழுந்
தொன்று செங்கைமுடி வைகவுரை தள்ள வுடலில்
துன்று மென்மயிர்பொ டிப்பவிழி நீர்து தையநேர்
நின்ற னன்வரநி கழ்த்தென நிகழ்த்த லுறுவான். (௩0)

கடுத்த யான்றெளிய வோதலெதிர் காட்சி யிறைநீ
கொடுத்த வைகலிது கன்னிமதி கூர்த லையுவா
அடுத்த வத்தமிதி லாடியிதி னிற்ப ணிருவோர்
விடுத்து வல்வினைவி ழைந்தபெற நல்க லெனலும். (௩க)

தந்த னம்வரமெ னத்தவனு டங்கு படரக்
கொந்தொ ளிக்கதிர்செய் கோயிலினு ழைந்த ணையிருந்
தந்த ணுவுளம யிர்த்ததெவ னோது தியெனு
எந்தை யுய்ந்தனனெ னத்தொழுதி றைஞ்சி மொழிவான். (௩உ)

கேழி லாதகிளர் பேரொளிய னாதி யிறைவன்
பாழி மாலிருள்ப டிப்பவுறு தூய வுருவன்
ஊழி னல்வறுமை யுற்றுமதி கெட்ட வர்கள்போல்
வேழ மாதிகள்வி டுத்துவிடை யூர்ந்த தெவனே. (௩௩)

நாறு சாந்தநறு நீர்புழுகு நல்ல வொருவி
நீறு நாளுநிமிர் மேனிதிமிர் கின்ற தெவனே
ஏறு மாமணியி ருப்பவிழி வென்பு தலைநஞ்
சூறு பாம்பிறகெள் ளோடுலவை கொண்ட தெவனே. (௩ச)

ஆடை தீரவதள் கொண்டதெவ னங்கி மழுமா
னோடு நீர்மதிசு மந்ததெவ னூறு சுவையின்
நீடு வானமிழ்த நீக்கிவிட முண்ட தெவன்மெய்
வேடம் வேறுறவெவ் வேறுருவெ டுத்த தெவனே. (௩ரு)

திருத்த குங்கடவு ளார்திரளி ருப்ப வகடு
பெருத்த பாரிடர்ம ருங்கமைவு பெற்ற தேவனே
வருத்த முற்றுகலுழ் தற்பொருள்வ ழங்கி வருமவ்
வுருத்தி ரப்பெயரு கப்பொடுத ரித்த தேவனே. (௩௬)

கடிஞை கொண்டுபயிக் கம்புகுவ தென்னை கனல்சேர்
சுடலை யாடுதொழி லென்னையுறு தூர்த்தர் விழைய
விடைவி டாதுவரை மாதொடுமி ருப்ப தேவனே
உடனி ருந்தவுமை காணநட மாட லெவனே. (௩௭)

வீணை மாமுனிவ னின்னணம்வி னவ மகிழாக்
கோணை வேல்வபவன் கும்பமுனி வன்ப ணியமுன்
ஒண ஞர்க்கரிய வுத்தமனு ரைத்த னனிவை
மாண மற்றினிவ குப்பலென வாய்ம லருமால். (௩௮)

ஆயிரத் திரட்டிச் சதுருக மொருநா
ளயற்கது முப்பது திங்கள்
ஆயவத் திங்கள் பன்னிரண் டாண்டவ்
வாண்டுநா ளுயுளவ் வாண்டு
மாயவற் கொருநா ளம்முறை நூறு
வருடமு மீஇப்பெயர் காலை
மாயவன் முதலா முலகெலாம் பரந்து
வயங்குசெந் தீக்கரந் துணுமால். (௩௯)

அத்தகு முடிவொன் றெய்தலு முலக
மழிவுநோக் கியவறக் கடவுள்
இத்தகு முடிவிங் கெய்துமே நமக்கு
மென்றுளம் விரும்பியேற் றுருக்கொண்
டுத்தமற் பணிய வுரன்முத லருளி
யூர்தியாக் கினன்விறன் மாலும்
வித்தகன் புரங்கொன் ஞான்றருள் பெறுவான்
விடையெனத் தாங்கின னறிதி. (௪௦)

குறையெரி சவட்டப் பொன்றிய வமரர்
கோழுட னீறிய நீறு
நரைநகு தலையு மங்கமுந் தனது
நல்லுரு நித்தியத் தியல்பும்
புரைபடு மேனோ ரநித்தியச் செயனும்
புகர்தபத் தெரிந்தொரு முதல்வன்
பரையிடங் கொண்டோ னெனவுயிர்த் தொகுதி
படர்ந்துவீ டுறும்பொருட் டணிந்தான். (சுக)

மாயனை யயனை யெரித்துநீ றங்கம்
வண்டலை யணிந்திடு மொருகால்
தூயவன் னவரைச் சூலவாய் மடுத்துத்
தோளணி யாக்கிடு மொருகால்
ஆயவப் பொழுதின் முடிச்சிகை வாங்கி
யகலத்து நாலென வயக்கும்
நாயகன் செயற்கை தெரிக்குநர் யாரே
நன்றவர் புரிதவப் பேற்றுன். (சுஉ)

மறைகவ ரவுணற் செகுத்துமீட் டுலக
மறுகுற வுடற்றிய மீனை
முறைபுரிந் திடந்த விழியினை மீட்டு
மூரிமா றருக்குறு வண்ணம்
இறையவ னணிந்தா னெஞ்சபூ வொன்றற்
கெதிர்மலர்ப் பங்கய விழியொன்
றறைகழற் பதத்து மற்றொரு காலத்
தணிந்தன னுழிவேட் டரியே. (சுா)

தாய்க்கலாம் விளைத்த மாற்றவ ளுயிர்த்த
தனயரென் றிகல்கொடு கருடன்
ஊக்கமிக் கலைப்ப வுளைத்தராத் தொகுதி
யுற்றடிப் பூசனை யுஞற்ற
நீக்கமி லணிக ளாக்கின னிமல
னீடுதா ருகவனத் தவர்வேட்
டாக்கிமே லுகைத்த வாளரா வினமு
மணியெனத் தாங்கின னறவோய். (சுச)

தொக்கபே ராற்றன் மிகும்விராட் புருடன்
றெல்லுடன் மயிர்தொறுந் தூங்குந்
தக்கபே ரண்ட மனைத்துந்தன் னகட்டுட்
சார்த்துவான் சார்ந்தனன் றொடங்கும்
கொக்கின்மா னுருவிற் றானவற் செகுத்துக்
கோலவெள் ளிறகினை யவன்போல்
மிக்கபே ராற்ற லுடையவர் தருக்கா
வினைகொள முடித்தனன் விமலன். (சரு)

மீன்முகப் பரவை கடைந்தஞான் றாழ்ந்த
விலங்கலைக் கமடமாய்த் தாங்கும்
தேன்முகத் துளவோன் செருக்கினுற் றருக்கித்
திரைகட லிறுதிநாட் போல
வான்முகத் துலகு மலைப்பகின் றலைப்ப
வல்விரைந் தோட்டினைப் பறித்துக்
கான்முகக் கடுக்கைச் சிவபிரா னீறு
கதிர்த்தமார் பத்திடை யணிந்தான். (சசு)

தமனியத் தடங்கட் டானவன் புடவி
தன்னகத் தடக்கினன் பெயர
நிமிர்பெரு வரைபோ லேனமாய்த் தொடர்ந்து
நேர்ந்துயிர் குடித்தனன் மீட்ட
குமரியந் திகிரிப் படையினுன் றருக்கக்
குறுகியோ ருலவையைப் புயந்து
திமிரவல் விடநின் றெளிர்மணி கண்ட
னோட்டொடுஞ் செறிதர வணிந்தான். (சஎ)

உடங்குல கனைத்துந் தாட்படுத் தோங்கு
மிரணிய னுயிர்குடித் தெழுந்த
மடங்கலந் துளவன் மலியுயிர் குமைப்ப
வண்சிறைச் சிம்புளாய்த் தாக்கி
அடங்கவுட் செருக்குச் சிரத்தினைச் சிரமே
லயன்சிர மீச்சுமாய்ப் பரித்துத்
தடங்கிளர் தோளி னுத்தரா சங்க
மாக்கினன் றயங்கிய வுரியை. (சஅ)

காதியெவ் வுலகுங் கடவுளர் முதலோர்
கரந்துறை காசிமா நகரும்
மோதவங் கடுத்த கயாசுர னெதிரே
மொய்த்தபே ரொளியுருத் தாங்கி
மேதக நின்று கிழித்தெடுத் தமர்த்த
வியனுரு நோக்க லாற்றது
மாதவர் முதலோர் வருந்தவவ் வொளியை
மறைத்தனன் படாமெனப் போர்த்து. (௪௯)

உயிர்க்குயி ராய்நின் றுறுவினைப் பயன்க
ளூட்டுநம் மிறைவனை யின்றி
இயக்கும்வண் கருமத் துயர்கதி யடைவா
னெண்ணின ரிருந்தவ முழக்கும்
செயிர்க்குணத் தாரு வனத்தினர் திருக்கைத்
திருக்கவெற் றரையொடுந் தானோர்
பயிக்கனுய் நெடுமால் சுந்தர மகளாய்ப்
பாங்குறப் படர்ந்தனன் வனத்து. (௫௦)

தவம்புரி சூழ லரிவைபோய் மருட்டத்
தகையெழிற் பனத்தியர் சேரிச்
சிவந்தகைத் தலத்துச் சிறுபறை கறங்கச்
சென்றுலாய்ப் பலியிட வணந்தோர்
நிவந்தவெங் காமக் கனலுளங் கொளுந்த
நிறையொடு கலைவளை மாமை
கவர்ந்தனன் றெரிந்து கடவுளை முடிப்பான்
கண்ணிவேட் டனரருந் தவத்தோர். (௫௧)

கொடுமகத் தழலி னிடிக்குரற் பேழ்வாய்க்
குயவரி வேங்கையொன் றெழத்தாழ்ந்
தடுதியென் றுகைத்தா ரயிலுகிர்க் கீறி
யரைக்குடை யாக்கினன் பின்னர்
விடுசுடர் மழுமான் வியாளம்பா ரிடம்வெண்
டலைவர விடுத்துமந் திரத்தைக்
கடவிவேட் டெழுந்த முயலகன் மகவெங்
கனலையு முடன்குற விடுத்தார். (௫௨)

மழுப்படை யாக்கி மறிதுடி யெனச்சென்
மந்திரஞ் செவிகளிற் றழங்கத்
தழிக் ரத் துயர்த்துத் தலைதலை பணிந்து
தழலொரு கரத்துறீஇப் பூதர்
குழுப்புடை பெயரா விழுப்படை யாக்கிக்
கொழுவலி முயலகன் வெரிந்தாள்
அழுத்திநின் ருடி யயருல குய்ய
வடுத்துமை காணநோக் களித்தான். (ருரு)

விடைபொடி விழியென் பழிதலை யராவெள்
ளிறகுமா லோடுகோ டதடைப்
படைமழு மறிவெம் பாரிட மியைந்த
பரிசுமை யம்புகு பரிசும்
உடையவ னடன முமையவள் காணு
முண்மையு முரைத்தன முமைகாண்
நடைபிணி மகவுக் கறமருந் தன்னை
நாடியுண் டாற்றுதல் போலாம். (ருசு)

வயிரவ னெனுந்தங் கூற்றினு மையம்
வையகத் தேற்றன னதுவும்
பயிலுமற் றனவுந் தெரிக்குதுந் தெரிதி
பழவினைப் பற்றறு தவத்தோய்
அயனரி மேரு வரையிடை யொருஞான்
றமர்ந்துடங் கிருந்தனர் தேவர்
நயனுறு முனிவர் நண்ணின ரேக
நாயகன் யார்நவில் கென்றார். (ருரு)

மம்மரின் முழுகு மலரவன் யானே
யென்றனன் மாயவன் யானே
செம்மலெண் குணத்துப் பிரமமென் றுரைத்தான்
செருக்கினு லின்னணங் கலாய்ப்ப
மும்மறை குடிலை வேறுவே றணுகி
முக்கணெம் பிரான்பரம் பிரமம்
அம்மவென் றுரைத்துந் தெளிகில ராக
வமலனு ரெதிருற வடுத்தார். (ருசா)

நாரணன் றெருண்டு வணங்கியோட் டந்தா
ஞன்முக னுச்சியின் முகத்தாற்
பூரணர் தம்மை யிகழ்ந்தனன் ஞாளிப்
புனிதனைத் தோற்றிமான் றிகழும்
ஆரணன் முதலோர் தருக்கெலாங் களையென்
றருளிவிண் மறைதலும் வடுகன்
கூரணி யுகிராற் கொவ்வைபங் கனிபோற்
கொய்தன னுச்சிவான் றலையை. (ருஎ)

விழுந்தயர் பிரமற் குயிரளித் தெழுப்பி
மேதினி வரைப்பெலாஞ் சுலாவிக்
கொழுந்தவத் தினர்தங் குறும்பறுத் தும்பர்க்
குலாயிமை யாரரட் டடக்கி
எழுந்துவை குந்த மடுத்தெதிர் விடுவச்
சேனனை யேற்றுவண் சூலம்
தழுந்தளி யன்பின் மானுதல் வாக்குந்
தாரைநெய்த் தோர்கல னேற்றான். (ருஅ)

மறிந்துவீழ் மாய னுயிரளித் தேகி
வயங்குமேற் புவனங்க ளனைத்தும்
செறிந்தவல் லரம்பு காற்றிய பின்றைத்
தேவர்மா தவர்க்கெலா மரணைப்
பிறங்கிய வண்ட முகட்டின்வீற் றிருந்தான்
பிஞ்ஞக னருளினன் முடிவின்
உறங்கவெவ் வுலகும் பொடித்துள மகிழ்வி
னுலாவுமச் சுடுவனத் தன்றே. (ருகூ)

சுடுவனத் தாடி யெனப்பரம் பொருளைச்
சொற்றதச் சுடுவனங் காண்டி
வடுகனங் கிருந்தோன் மாவலி கொடுப்ப
மண்ணளந் துலகெலா மலைத்த
நெடுகிய மாலைத் தருக்கறத் தாக்கி
நீள்வெரி நெலும்புகைக் கொண்டு
படுமுட னுரிவை கஞ்சுக மாக்கிப்
பல்லுயி ரோம்பினன் முனியே. (சுO)

உமையாள்விழி மூடவி ருட்படலத்
துலகங்கவ லக்கனல் வாள்விழியால்
அமையாவரு ளுதனி ரித்தொளிமிக்
கருளக்கிளர் வேர்விர ரேறுமெழ
இமையாவிழி மாதுவி திர்ப்பவவை
யெங்கும்பெரு வெள்ளமெ னப்பெருகக்
குமையாதரு ளென்றெவ ரும்பரவக்
கூவிச்சடி லங்குடி யேற்றினனே. (௬௧)

பிற்றைப்பொழு திந்திரன் வேதனரி
பெரிதேத்தியக் கங்கைத னிற்சிறிது
பற்றித்தர வுய்த்தனர் தம்பதியிற்
பயில்வித்தனர் தாழ்ந்தப கீரதனுக்
கற்றந்தவிர் வேதன கர்க்கதுவு
மக்கங்கையை யேவவெ குண்டிழிய
முற்றுஞ்சடை யேற்றத னிற்சிறிது
முந்நீர்புக மண்முக முய்த்தனனே. (௬௨)

இருபத்தெழு மாதரை யீன்றுகடி
யினிதாற்றியெல் லாருழி யுஞ்சமனுய்
மருவித்திகழ் கென்றரு டக்கன்மொழி
வழுவிப்படு சாபம ரீஇத்திவளும்
உருவிற்கலை தேய்ந்தொரு வான்கலையோ
டுற்றுப்பணி யக்கலை யேறிமுறை
பெருகக்கதிர் வேணிம லைத்தெவரும்
பிறைசூடியெ னும்பெயர் பூண்டனனே. (௬௩)

சுரர்தானவர் போர்புரிந் தெண்ணிலர்க
டொலையத்தொலை யாதம ராடவுசாய்
அரிநான்முக னோடருள் பெற்றிலரா
யழுந்தார்கவி யைக்கடை யக்கடுவெந்
தெரிசீதமெ னக்கன லக்கடுகி
யெவருஞ்சர ணென்றுவி ழுந்தயர
வரநீடிய வெந்தைமி டற்றிருவி
மனைமாதர்மி டற்றணி காத்தனனே. (௬௪)

அல்வேறுப டுக்குமு ழூச்சுடர்போ
லடராணவ நீக்கரு ளோங்தொழில்கட்
கொல்வேறுரு வம்பல கொண்டருளு
முவையன்றியு மெண்ணிலு யிர்த்தொகையும்
பல்வேறியல் புள்ளன வேயதனாற்
பயிலும்பரி பாகம தற்கியையச்
சொல்வேறுரு வுந்தொழி லும்பெயருந்
தொலையாவரு ளெந்தைதொ டங்கினனே. (சுரு)

பாவக்கட னின்றும ருட்கரையிற்
பலவாருயி ரும்படர் வித்திடலான்
மேவுற்றது ருத்திர நாமமிது
விமலன்வடி வெய்தின ரும்பெறுவார்
ஆவித்தழு தானழ லோனதனு
லவற்காயவு ருத்திர நாமமிடர்
மூவுற்றவ ழற்கல தேனையர்பான்
முற்றுந்தழு காரண மும்புகல்வாம். (சுசு)

ஒருஞான்றவு ணர்த்தெற வானவர்செல்
லுழிமாசிதி யம்பெற முற்றுமழற்
பெருமானுளி வைத்தம ராலவுணர்
புறங்கண்டபின் மீண்டவர் நல்குகெனத்
தருமாறில னாகியு டற்றுதலுந்
தளர்வுற்றழு தான்றனி மாதவனே
பொருளாற்புல வோருங்க லாய்ப்பரெனிற்
புவியோர்கள்க லாய்ப்பது மற்புதமோ. (சுஎ)

கனகப்பது மத்தவி சானொருவன்
கடைநாளொழி காற்பவ மாய்வளர்நாள்
சனகன்முத லல்வரை யுந்தரவத்
தனையோர்தவ மாற்றியி ருந்தனர்பின்
இனமல்குயி ராக்கமு யன்றதுவந்
தெய்தாமையி னின்னலு ழந்தரியை
அனகன்படைப் பெய்துவ ரந்தருகென்
றறவோரொடு சென்றுவ ணங்கினனே. (சுஅ)

என்னுன்முடி யாதிது வென்றவரோ
டேகிக்கழ ரூழ்ந்தரி யோதவிறை
அந்நான்முனி வோரயன் மாலைவிழித்
தவிர்நுண்பொடி யாக்கியி டத்திணிதோட்
டென்னுருரு ளேயுமை யாய்வருமா
திருநோக்கரு ளிப்புடை வைத்தவடன்
பொன்னுர்முலை புல்கிவி ளித்தவரைப்
பூத்தைம்படை யாற்கிது பேசினனுல். (சுகூ)

அருளாகிய மாதிட மொன்றுதலா
னலரோன்செயன் முற்றுமி னிப்பெயர்கென்
றருளாலருள் செய்யவ ணங்கியவ
ரகல்வுற்றன ராரணி யெம்பெருமான்
ஒருவாதுமை மாதொடி ருத்தலினு
லுறுகாதலி ளுெடு பெண்கள்பிணைந்
திருநீர்ப்புவி யாதிய வெவ்வுலகு
மின்புற்றுயி ரீண்டிய தான்முனியே. (எo)

தனக்கென்றெது வும்புண ராவியல்பிற்
றனிஞானமு தற்பொரு ளானபிரான்
அனைத்துங்கரி சான்றவு யிர்த்தொகுதிக்
கருளுங்கரு ணைத்திற மென்றறிதி
இனிக்கும்புக ழானடி யார்க்கருளு
மியல்புந்தன மாண்பும்வ ரம்பிலுரு
முனைக்கும்பட ருள்ளம வித்தருளின்
முழுகித்திளை மோகம்வி டுந்தவனே. (எக)

என்றேமதின் மூன்றுமொ ருங்கவிய
வெரிமூரலி னுனெழு வித்தருளும்
குன்றுதபெ ருந்தலை மைப்பகவன்
கோலத்தின யிர்த்தவ யிர்ப்பொழிய
நன்றேதின னுமவ யிற்படையா
னவைதீர்ந்துயர் நாரத மாமுனிவன்
அன்றூர்தரு மோகைகி ளப்பவரா
ரடிதாழ்ந்தன னன்பொடு வாழ்த்தினனுல். (எஉ)

மறையோ லிடுந்தணிகை வள்ள லருளுருவம் வாழி வாழி
பிறையேர் நுதல்முகத்துப் பேரமைத்தோண் மாதரார் வாழி வாழி
பேரமைத்தோண் மாதர்ப் பிணைந்துலவும் பேர ருட்கண்
வாரமிலேன் மாட்டும் வழங்கு மவன்கருணை வாழி வாழி. (எங)

நாரதப்பெயர் முனிவரன் விடைகொடு நடந்தான்
ஆரணம்பயி லகோரனென் றந்தணன் மலநோய்
தீர வெண்ணின னடுத்தனன் றீர்த்தங்க ளாடி
ஆர வந்தனை புரிந்தரு ளான்முத்தி யடைந்தான். (எச)

விண்டு தீர்த்தம்வெய் யவன்றினம் வெண்மதி வாரத்
தண்ட ராட்டருச் சிவகங்கை யலைநதி யிரண்டும்
தொண்டர் போற்றிய நாரதன் சுனையொடு நாகம்
கண்ட தீர்த்தமுங் கண்ணகன் புவிமகன் வாரம். (எரு)

பிரம தீர்த்தத்துப் புதன்றினம் பிலிற்றுதேங் காவி
விரவு தீர்த்தத்து வியாழத்தின் கிழமைவெள் ளியினுள்
பரவு சீர்ப்பெருங் குமாரதீர்த் தம்பகர் சனிநாள்
உரவு நீர்க்குறு முனிசுனை யுற்றவன் படிந்தான். (எசா)

அருளி னல்வர மவரவர் பூண்டவந் நாளும்
வருவ தோர்ந்துபுக் காடினன் வயங்குமேழ் சுனையும்
பரிதி வாரமுன் னுகவொவ் வொன்றுநப் படிந்தான்
பொருவி லந்தணி ருய்பவ ரிம்முறை போற்றல். (எஎ)

விதித்த நாளிடை மிகுபயன் விளைப்பவென் றுள்ளம்
மதித்தி டைரெந்த வாரத்தெப் புனல்படிந் தேனும்
கொதித்த வேல்வலக் குமரனைக் கும்பிடுந் தவத்தோர்
கதித்த தீவினை கடந்துபே றனைத்தையும் பெறுவார். (எஅ)

என்று சூதமா முனிவர னியம்பினன் வணங்கி
அன்று கேட்டமா தவரனை வோர்களும் வேள்வி
நன்று முற்றிய பின்னர்நற் றணிகையை நண்ணி
வென்றி வேலவற் றொழுதின்ப விளைவினை விளைத்தார். (எகூ)

பூமேவு நான்முகத்தோன் முதற்றெழிலு
மணிமார்பன் புரப்புந் தெய்வத்
தேமேவு நறுங்கடுக்கை யரன்பணியு
மீசரவர் செயலுந் தூயோர்
நாமேவு செழுமறையா கமமனைத்து
நவின்றவர்நல் லருளு மெல்லாம்
தாமேயென் றவரவராய்ப் புரிந்தருளு
மொருமுதல்வன் சரணஞ் சார்வாம். (அ0)

தொழும்பினரை யுடையவர்க ளாள்வதுறு
கடனென்னுந் தொல்லை மாற்றம்
செழும்பவள விதழ்மடவார் திறத்தழுந்து
மெனதுளத்தைத் திருப்பித் தன்சீர்க்
கொழும்புகழி னினிதழுத்திப் புதுக்கியரு
டணிகைவரைக் குமரன் பாதம்
தழும்புபடப் பலகாலுஞ் சாற்றுவதல்
லாற்பிறர்சீர் சாற்றே னென்னே. (அக)

நாரதனருள்பெறு படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — ருடகசுக.



திருச்சிற்றம்பலம்

வேலு மயிலுந் துணை

மெய்கண்ட தேவன் திருவடி வாழ்க

## தணிகைப் புராணம்



# சிதம்பரம் ஈசானியமடம்

# ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்

தம் கைப்பட எழுதிவைத்த

# குறிப்புரை

## விநாயகர் காப்பு

க. கலிகெறனல் - கறுத்து விளங் கலைக் காட்டுங் குறிப்பு மொழி. (தொல். மொழிமரபு - எ)

உ. ஊற்றிருக்கும் - ஊற்றிடை விடாத. (சிந்தா. நாமக - சஉஙு) தோரணம் - தலைவாய்தலின் வாயில்.

## கடவுள் வாழ்த்து

### சிவபெருமான்

க. விலகுதல் - தளைதல், எறிதல்.

### திருநந்திதேவர்

கூ. தளித்தல் - துளித்தல்; சேக்குதல் - தங்குதல்; (புராண வரலாறு. செய். உகூ - பார்க்க.)

### சமயகுரவர்

அ. பொன்றி - பொன்றுவித்து.

### சண்டேசுரர்

கூ. இச்செய்யுளின் கருத்தை 'அரனடிக் கன்பர்' என்னும் சித்தியார். உ-சூ. உகூ-ம் செய்யுளில் நோக்குக.

## திருநாட்டுப் படலம்

க. அட்டு - சமைத்து.

உ. துலங்கல் (துளங்கல்) - தளர்தல். அலங்கல் - அசைதல்.

௪. 'வருபுனல்....பல்லுறுப்பிற்றாகி' என்பது, 'இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும், வல்லரணு நாட்டிற் குறுப்பு' என்னும் குறளைப் பற்றியது.

'பொங்கிய செல்வ...விளைவு நன் கணிந்து' என்பது, 'பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம், அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.' என்னும் குறளை யுட்கொண்டது.

'தாழ்வில் திருவினர்........ செறிந்தது' என்பது, 'தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச், செல்வமுஞ் சேர்வது நாடு.' என்னும் குறளை விளக்கியது.

ரு. 'மலிபெரும் பொருளாற் பெட்கும் வண்மையும்' என்பது, 'பெரும்பொருளாற் பெட்டக்கதாகி' என்னும் குறளடியை மேற்கொண்டது.

'நாடாதியாதும் மெலிவுக உதவும் வாய்ப்பும்' என்பது, 'நாடென்ப நாடா வளத்தன' என்னும் குறளடியை யொட்டியது.

'மெலிகலார் மெலிந்தகாலு நலிதரா வளனும்' என்பது, 'கேடறியாக் கெட்ட விடத்தும் வளங் குன்று நாடு' என்னும் குறளடியை ஒட்டியது.

'எல்லா நலிவுநீத் தாற்ற வீண்டும் ஒலிகெழு விளையுளோடும்' என்பதனை, 'அருங்கேட்டால் ஆற்ற விளைவது நாடு' என்னும் குறளடியோடும், 'மிக்கபெய லோடு பெய லின்மையெலி விட்டில்கிளி யக்கணர சண்மையோ டாறு' என்னும் அதன் மேற்கோட் செய்யுளோடும் ஒப்பிடுக. இவற்றை வடநூலார் ஈதிகள் என்பர்.

கூ. 'பல்குழு வேந்த லைக்கும் படர்கொலைக் குறும்பு தீய பல்குமுட்பகை' என்பது, 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும், கொல்குறும்பு மில்லது நாடு' என்னுங் குறளின் பொருளைக் குறித்தது.

'உடற்றும்பகையுறுபசிதீராநோய் புல்குறி தானும் இன்றி' என்பது, 'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையுஞ், சேரா தியல்வது நாடு' என்னும் குறளை யொட்டியது.

'பொறையொருங் குறுகாற் றுங்கி நல்கிறை வேந்தர்க் குய்க்கு நலத்தது' என்பது, 'பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற், கிறையொருங்கு நேர்வது நாடு' என்னும் குறளை உணர்த்திற்று. புல்குறிதானும் - அணுகுமளவுதானும்.

அ. மையாப்ப - மயங்க.

கக. தோற்றி - தோற்றுவித்து.

கச. தேத்தடை - தேனடை; இதனை, 'ஒற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே.' (தொல். புள்ளி மயங் - சகூ.) என்பதனு லறிக. 'செழுங் கிரிதனைக் கரியடுத்தென (வெண்ணிற முகிற்குழாம் - கங.) சிலம்பெலாம் இறுத்தது' என்க.

கரு. வயக்கம் - விளக்கம்.

கசு. வெம்மைதான் உடைந்து காந்தன்று என இயையும். போர்பெட்டல் யாவரும் கண்ணுக் குருகு முன்கையார் - போர் புரிதலை ஒருவரும் விரும்பாத மகளிர் என்க. கண்ணு - கருதாத. குருகு முன்கையார் - வளையலணிந்த முன்கையையுடைய மகளிர்.

ககூ. தவிர்ந்து - தங்கி.

உ0. கெண்டி - கிண்டி.

உக. தெவ்வி-எடுத்து; 'தெவுக் கொளற் பொருட்டே' (தொல். உரியியல் - சகூ.)

உஉ. முளி - இறுகிய. மாற்றி - நீக்கி; விற்று. உராய் - உலாவி; பெயர்ந்து; (புறம்-ச; சிந். நாம-எ.) குளவி - மலைப் பச்சை.

உச. தூ - சுத்தம்; தசை.

உரு. கட்டு - களைந்து.

உஅ. இரக்கம் - ஒலி; கிருபை.

உகூ. மெத்தி - மிகுந்து; மிகுவித்து.

நட. குகன் - உயிர்களின் இதயமாகிய குகைகளில் வதிபவன்.

நச. நொடித்தல் - அழித்தல். துடி - ஏலம்.

நரு. சுள்ளி-ஆச்சாமரம். சுரை-அம்புத்தலை. பள்ளி - அறை.

நஎ. கஞற்றல் - நிறைவித்தல்; பொலிவித்தல். தோரை - மூங்கிலரிசி. இச்செய்யுளை, 'நுண்பொறி மான்செவி போல' எனவரும் குறிஞ்சிக்கலி எ - ம் பாட்டின் அடிகளோடு ஒப்பிடுக.

நஅ. மணி - மரகதமணி.

நகூ. இளகு - தழைத்த. 'இளகு காடு.' (சிந்தா. கனகமா - உஉஉ.) வளகு - வளகு என்னும் புல். 'புணர்நிலை வளகின் குளகமர்ந் துண்ட' (கலி. குறிஞ்சி - எ.) குளகு - இலையுணும் விலங்குணவு. அளகு-கூகையின் பெண். பாட்டு- ஓசை.

௪௧. ஊழ்த்தினை - முதிர்தினை. பொதிர்த்தல் - காயப்படுத்தல். அகைதல் - எழுதல்; அறுத்து விடுதல். ஊழ்த்தல் - சொரிதல்.

௪௨. கனவல் - கனாக்காண்டல். இச்செய்யுளை, 'கொடுவரி தாக்கி' (கலி. குறிஞ்சி - ௧௩) என்னும் கலிப்பாட்டோடு ஒப்பிடுக. வகுத்தல் - பகுத்தல்.

௪௩. இப்பாட்டின் கருத்தை, 'கடமா தொலைச்சிய கானுறை வேங்கை' (நாலடி. மானம் - ௧௦.) என்னும் செய்யுளில் காண்க.

௪௪. ஒப்புதல் - ஓட்டுதல். இச் செய்யுளின் முதல் இரண்டடிகளைக் குறிஞ்சிக்கலி ௫-ம் பாட்டு, 'நெடுவரை யாசினி பணவை யேறிக், கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்' முதலிய அடிகளோடு ஒப்பிடுக.

௪௫. அலகு - பலகறை. தகையும் - தகைமைப்படும்.

௪௬. விடை - ஆட்டுக்கடா. பலிக்குறை - சில்பலி. பிரப்பு - பல்லுணவும் பரப்பியகலம். 'பல்பிரப்பிரீஇ' (திருமுரு - ௨௩௪.)

௪௮. வாய்ப்பொய் - வாய்மையின்பாற்படும் பொய்.

௫௦. துடி - பாலைநிலப் பறை. இறுப்பது - தங்குவது. முரப்பு (முரம்பு) - பரலடுத்த நிலம்.

௫௨. கழுமுதல் - இணைதல்.

௫௩. இணைய - ஒப்ப. வீழ்வன - ஒப்பன.

௫௫. துணையும் - ஒக்கும்.

௫௭. அழுங்குமா - தடைப்படும் படி; அஞ்சும்படி.

௬௧. துணர்த்தல் - துணர் கொள்ளல்.

௬௪. தோற்றும் - தோற்றுவிக்கும்.

௬௬. எழும் - எழுவிக்கும்.

௬௭. உழலை - வாயில்கடத்தற்குரியதாகப் பதிக்குமரம். கழல் (கழலல்) - விலகல்.

௬௮. வெல்லும் - மேம்படும். உணப்பயன் - உணவாகிய பயன்.

௬௯. இனமூன்று - பசு, எருமை, ஆடு என்பன.

௭௦. அளறும் - அலறும்.

௭௪. தெவ்விய - பகைத்த. கற்பம் - கற்பகவிருட்சம்.

௭௫. நொச்சி வளை - அரணுகிய கங்கணம்.

௭௬. வஞ்சி-பகைவர்மேற் செல்வார்க்குரிய மாலை. ஆம் சிறை-நீர்க்கரை. அவை - பைத்தூர். அதன் தொழில் - அடுதற் செயல்கள். காஞ்சி - படை முன் எதிருன்றும் சேவகர்க்குரிய மாலை.

௭௭. கலித்து - தோன்றி. வேழம் - நாணல்.

௭௮. பீலி - சிறுசின்னம்.

௭௯. இந்திரன் யாகத்தை மேற்கொண்ட முனிவரெழுவர்தாமியற்றும் சிவபூசை நியதி தவறினமையான் அவ்வியாகத்துதித்த அசுரர் எழுவர் தம்மைத் தின்பானெழுடங்க அதனன் அம்முனிவர் இடர்ப்பட்ட சரிதையை உபதேச காண்டம் அரிபிரமாதியர் பூசனைச் சருக்கத்துக் காண்க.

௮௦. குறி - அடையாளம், அது தாமரைமலர் போன்றது. இதனைச் சிவஞான சித்தியார் இரண்டாஞ் சூத்திரத்துள் பஞ்சபூதங்கட்கும் அடையாளங்கூறுமிடத்து, 'குறிகள் வச்சிரத்திறேடு கோகனதம்' என்னும் செய்யுளிற் காண்க.

௮௧. ஒரு கோள் என்றது சுக்கிரனை. இவனை விழுங்கியது காரிப்புத்தேள் என்க. உளம் - அகம்.

அங. கலித்த - வெளிப்படுத்திய. வன்மீன் - முதலை. தொழுதி - கூட்டம்.

அச. அளிக்கிய - அளிக்க. வளி வழக்கு அழுங்க - வளி யுலவல் தடைபட.

அஅ. நாகவல்லி - வெற்றிலைக் கொடி.

அகூ. வெள்ளம் - ஒரெண். உரை தரு - உரைக்கத்தக்க; விளாவுதல் - கலத்தல்.

கூ0. மறுவலும்-இரண்டா முறையும். 'மறுவலும் புல்லி' (சிந்தா. குண - உஉஉ.)

கூக. சிறைத்து - சிறை செய்து. விறத்தல் - மிகுதல். (இப்படலம் கஙகூ, கச0 - செ. நோக்குக.)

கூஉ. பறித்து மோதி அலைத்து முடிசெய்த நாறு என இயையும். பெய்து - பெய்யப்பட்டு.

கூங. வெறுத்த - செறிந்த; 'விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே' (தொல். உரி - சகூ.)

கூரு. போதர்வார் - கொண்டு போவார். (போதரல் - கொடு போதல்; பிங்கலம்; வீராட்ட. சுஅ - செ. நோக்குக.)

கூஎ. அமன்று - பொருந்தி.

க00. கட்ப - களைய.

க0ங. ஞெரிதல் - நெரிதல். அகைதல் - ஓங்கல். அனுங்கல் - குன்றல். முடிக்கப்படுவன, மோக்கப்படுவன, உண்ணப்படுவன ஆயின என்க.

க0ரு. அலர்......போல் - அலர்களை வீதலின் நீக்கி நிலைபெறுத்துதற்கு ஏதுவாகிய அவ்வுபாயத்தைத் தெளிந்தனபோல.

க0அ. கமல மாதிய அவயவ வடிவமாக மெய்யின்கணல்லது தளையின்கணில்லை என்பது.

கக0. செதுவது - களையப்படுவது. (வீராட்ட. சச, அகத்தியன் ருகூ, நோக்குக.) ஈரொளி-கீர்த்தி, பிரதாபம்.

ககக. தோடு - கூட்டம். ஆய - ஆவர்.

ககஉ. பாறினோர் - ஓடினோர். செற்றல் - செறிதல்.

ககச. மாய்ப்ப - மறைக்க. 'களிறுமாய்கதிர்' (சிந்தா. கன - சுக.)

ககரு. முரஞ்சல் - முதிர்வு; 'முரஞ்சல் முதிர்வே' (தொல். உரி - ஙஎ.)

ககசு. பொதிர்த்தல்-துளைத்தல்.

ககஎ. தடவு - வளைவு; பெருமையுமாம். 'தடவுங் கயவு நளியும் பெருமை' (தொல். உரி - உச.)

ககஅ. இதனை, 'சிவஞானச் செயலுடையோர்' என்னும் சித்தியார் அ-ம் சூ. உசு-ம் செய்யுளிற் காண்க.

கஉஉ. உறந்து-முற்றக் கவர்ந்து. இக - அழிய.

கஉரு. எழுகால் இருந்தார் நிகரும்; தலை தாழ்தருகாற் சிலைபோலிருந்து துயில்வார் சிவனும்; தடிவுற்றிடலும் அலையாப் படைகொண்டவரொத்தது (அப்பயிர்) என்க. அலையாப் படை - அசையா நித்திரை.

கஉஎ. விண்ணறுத்து - விண்ணைக் கடந்து.

கஙஉ. குலைத்த - குலைப்பட்ட.

கஙச. கலாம் - கலகம்.

கசக. ஞாழல் - புலிநகக்கொன்றை.

கசங. முன்னுவித்தல் - சேர்ப்பித்தல்.

கசசு. பப்பு (பம்பு) - பரப்பு.

கசஎ. விலங்கித் தாம் திரை - மோதித் தாவுகின்ற கடல்.

கசகூ. காரி - காக்கை.

கரு0. இச் செய்யுளை, 'நேர்ந்த நெடுங் காதலர் நேமி நெடுந் திண்டேர் ஊர்ந்தவழி சிதைய வூர்கின்ற வோதமே' (சிலப். கானல் வரி-நஉ.) என்பதனோடு ஒப்பிடுக.

கருச. புரைத்தது - உயர்ந்தது. புகல் - விருப்பம்.

கருகூ. பொதியில் - குழாத்தில்.

கருஎ. சினைஇ - சினந்து. வறங்கூர - வறுமை மிக.

ககூஉ. இமிர்தல் - மொய்த்தல்.

ககூச. கூர்ப்பு - உவர்ப்பு.

ககூகூ. குரும்பி - புற்றுஞ் சோறு. முதையல் - பெருங்காடு. வரம்பில்லாதவராய்த் தேவர் சரிக்கும் முறையைத் தெரிவிக்கும் இடம் என்க. இதனை, 'தேவரனையர் கயவர்' என்னும் குறளிற் காண்க.

ககூஎ. அவை பெயர்த்து என இயையும்.

ககூஅ. பாக்கம் - நெய்தனிலத் தூர். வாரம் - கரை.

ககூகூ. வழி - குலம்.

## திருநகரப் படலம்

உ. புகன்றிடான் - விரும்பான்.

ரு. ஆற்றுவென்று - பொறை போதா வென்று.

க0. புலவிநீட்டமுடையமாதரை ஆடவர் மயக்கிக் காத்து என இயையும்.

கந. பாம்புரி - அகழியிற் கீழே புறப்படப் படுத்தது. (சிந்தா. பதுமை - அரு.)

கச. வென்ற - மேம்பட்ட. ஒக்கம் - உயர்ச்சி.

ககூ. பொதும்பு-சோலை. துளக்கல்-அழித்தல். தட்கல்-தடுத்தல்.

ககூ. வெறுத்தல் - செறிதல்.

உக. விண்டவர் நகரிக்கு விரும்பி எவுதற்கும் நன்கு உழுதற்கும் பழக்கப்படுவது என்க. ஒழுங்கு ஒத்துள என இயையும்.

உந. வற்கம் - குதிரை வாய் வார்.

உச. கல்லூரி - கல்விபயிலிடம்.

உஎ. பனித்து - துளித்து.

ந0. கண் - கண்ணோட்டம். அடுங்கடன் வலா - வெல்லுமுறையடையாத. மேவா அரசு என்க. தளைத்து - தளையப்பெற்ற.

நக. மந்திரம் - குதிரைப் பந்தி.

நஉ. கடகம் - யானைக்கூட்டம். கடகம் - ஓரிராசி.

நஎ. பொற்கெனல் - பொன்னிறம் உடைத்தாதல். தேன் விரைஇ - தேன் பெருக் கெடுத்து; தேன்மணம் வீசியுமாம்.

நகூ. நெஞ்சமும் ஊர்ந்து அலைக்கப்படும் என்பதை ஊசல் ஒத்தது என்க.

ச0. அமன்ற - நெருங்கிய.

சரு. முன்னும் - முற்செல்லும். உட்குதல் - வெட்குதல்.

சகூ. விரைஇ - கலந்து; மணம் வீசியுமாம்.

சஅ. கோடு - கிளை.

ருந. உகப்பு - உயர்ச்சி, 'உகப்பேயுயர்தல்' (தொல். உரி - கூ.)

ருரு. மதலை - பற்றுக்கோடு. அற்கா (அல்கா) - நிலைபெறு.

ருகூ. உறுவர்-மிக்கோர். அகழி உறுவர்மானப் பூத்த தென்ப என இயைக்க.

கூ0. துயவுறினும் - அறிவின் திரிபுற்றாலும். 'துயவென்கிளவி

அறிவின்றிரிபே' (தொல். உரி-எஉ.) அல்லாத்தல் - துன்புறல்.

சஉ. தளிக்கும் - துளிக்கும்.

சங. விழைய - ஒக்க. மதில் தழற்பிழம்புரு விழையக் கங்கை துளும்பும் என்க. ஒசனித்தல் - பறவை சிறகடித்தல்.

சரு. ஒளி - அக்கினி. மதில் அக்கினிக்கு உவமை.

சஎ. கேதனத்திரள்களினிடையிருத்தல், சீர்காழியிலுள்ள மூங்கில் வனத்திலிருத்த லொக்கும். வஞ்சம் - மூங்கில்; இது வம்சம் என்னும் வடசொல்லின் திரிபு.

சஅ. கோடு - அகழியின்கரை. தெண்ணீர் மத்தியவா னொக்கும்; சோலை உடுத்தமைந்த வானைக்கும்.

சகூ. மேருவைச் சூழ்ந்த வரை நான்கு: கிழக்கு மந்தரம்; தெற்கு கந்தமாதனம்; மேற்கு விபுலம்; வடக்கு சுபாரிசம். உகத்தல்-உயர்தல். கோபுரங்கள் வரை நான்கும் உயர்ந்திருந்த போலும்; ஆங்குள்ள கொடிகள் மரங்கள் போலும்; கிடங்கு ஆறு போலும்.

எக. தெற்றென - தெளிய.

எஉ. ஆன்-அவ்விடம். ஐயென-விரைய.

எசு. நற்கு வலித்தல் விகாரம். அற்கு (அல்கு) - நிலைபெற்ற.

எஎ. ஒருக்கல் - ஒருப்படுத்தல்.

அங. ஈங்கு இவர்களோடு இன்பம் நுகரப் பக்குவம் வருமளவும் மனைவிமாரோடு நலனுகர்ந்து பழகுகின்றனர் என்க.

அரு. உத்தலை இறப்பார் - அவ்விடத்திற் சஞ்சரிப்பார்.

கூ0. சோமதிக்கினன் - குபேரன். (சோமம் - வடக்கு.)

கூச. செச்சை - செஞ்சாந்தின் குழம்பு. நம்பி - ஆசைபெருகி. நல்குதல் - விற்றல். பாற-ஓட. உயிர்ப்பினலுண்டாகும் சண்பக மணத்தால் அளி பாற என்க.

கூரு. தாமரைக் கணையின் துன்பத்தை உண்டாக்கும் என்க; எனவே நினைப்புக்கள் தோன்றும் மென்பது போதரும். 'நினைக்கும் அரவிந்தம்' என்பதனல் தாமரைக்கு அக்குணமுண்மை யறிக. படர்கண் - துன்பம்; உறுகண் என்பது போல.

கூகூ. புகன்று-விரும்பி; (களவுப் படலம் - ந௩அ0, ந௩அரு, சு0ரு காண்க.)

க00. கோளகன் - கைம்பெண் பெற்ற மகன். குண்டகன் - தலைவனைப் பிழைத்தீன்ற சோரபுத்திரன். விராத்தியன் - பிரதிலோமத் தந்தைக்கும் அநுலோமத் தாய்க்கும் பிறந்தவன். அந்தராளன் - அனுலோமத் தந்தைக்கும் பிரதிலோமத் தாய்க்கும் பிறந்தவன். பிரதிலோமன் - இழிகுல ஆணுக்கும் உயர்குலப் பெண்ணுக்கும் பிறந்தவன். அனுலோமன் - உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்தவன்.

க0உ. பிறர்பால் மறை வழங்காமையாவது, உடையது விளம்பாமை முதலியன.

க0சு. கவி - நாற்கவிகளையும் பாடுவோன். கமகன் - அரும் பொருளைச் செம்பொருணடையிற் காட்டிப் பாடுவோன். வாக்கி - வரகவி. வாதி - காரணமும் மேற்கோளும் காட்டிப் பிறர்மதம் மறுத்துத் தன் மதம் நிறுவிப்பாடுவோன் என்க. எஃகு - மதிநுட்பம்.

க0எ. அபுத்திபூர்வ புண்ணியம், புத்தி பூர்வ புண்ணியம் எனப் புண்ணியம் இருதிறம். உண்மை நெறி-

ஞானநெறி. நான்கென்றது ஈண்டு ஞானத்திற் சரியை முதலிய நான்கையுமாம்.

கo௮. மிளிர்த்தல் - அழித்தல்; (நைமிச. உக, புராண. உ,காண்க.) உண்மை ஞானம் ஈரைந்து; அவை: தத்துவரூபம், தத்துவதரிசனம். தத்துவசுத்தி, ஆத்மரூபம், ஆத்ம தரிசனம், ஆத்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவ போகம் என்பனவாம்.

ககக. வான்சிலை வழி - பாலம். தொடர் - சங்கிலி.

ககச. செல்லிய - செல்ல. தெய்ய - இடைச்சொல். காலதர் - பலகணி.

கக௮. இறை - இறுத்தல்.

கஉக. நிரந்தரித்தல் - நிறைதல்; பரம்பல்.

கஉஉ. மான்-மகரராசி. இடபம்- இடபராசி. பரியேறு - அச்சுவனி.

கஉ௩. செவியினர் - மகளிர். கலப்போர் - கணவர். கணவர் சிறக்க மதனனை வென்று என்க. எற்பக்கு (எல்பக்கு) - ஒளியிழந்து.

கஉச. செண்ணம் - வடிவு.

கஉ௮. வெறுத்த - செறித்த.

கஉகூ. நீவி யிறுக்கும் அரைப் பட்டம் - ஆடைமேல் உடுக்கும் அரைப் பட்டிகை; மேலாடையுமாம். இடைக்குவடு - மத்தியிலுள்ள இருமலை. வாலம் - இளமை.

க௩o. மால்பு - கண்ணேணி.

க௩உ. அடை - அடுப்பது.

க௩௩. நந்தி நந்தினி-நந்தியின் மகளாகிய நதி.

க௩ச. கைதுவாது - இடைவிடாது.

க௩௮. மூடை - பொதிகள்.

கசo. என்னும் - யாதும். கொன்னும் - பெருமையுறும்.

## நைமிசப் படலம்

க. தா - தாவுதல்; தாண்டிச் சேறல்.

உ. பறப்பை - பறவை. பறவை கூர்மமாதியாவன: கங்கசயனம், கருடசயனம், கூர்மசயனம், சேஷசயனம் என்பன. (சயனம்-கட்டும் வேதியின் வகைகள்.) கோணம் - குதிரை.

ச. முன்னுவார்கட்கு அவருள்ளத்தை ஆற்றலழிக்கும் என்க.

ரு. பறைத்தல் - அழித்தல்.

சு. ஆய்த வன்னம் - ஆய்த எழுத்து.

கo, கக, கஉ. இச்செய்யுள்கள் முனிவர் பெயர்கள் கூறுவன.

க௮. அறுத்தி - அறுத்தாய். வியம் - ஏவல்; (குமரேசம் - சகூ.)

ககூ. கிளந்தமை நிறுத்தலும் அளித்தலு மன்றி உளத்தமையா விழைவாகுமோ என்க. விழைவு-அவா. அது, கேட்டது போதும் என்னும் அமைதியி னிறுத்தாது மேன்மேலுங் கேட்கும் விருப்பம்.

உக. மிளிர்த்தல் - அழித்தல். மொழிந்து வந்த வழி - புராண வரலாறு.

## புராணவரலாற்றுப் படலம்

உ. மிளிர்ப்ப - அழிக்க.

௩. காட்சி - தோற்றம். ஊன்றல் - தாங்கல். கவிழ்தராத் தோற்றம் தான் தாங்கி நிற்றலின் என்க.

ச. தவிர்தல் - தங்கல்.

ரு. துயக்கம் - சோர்வு.

௮. மலக்குறும்பு - மலவலி. ‘அரவுக்குறும் பெறிந்த சிறுகட் டீர்வை.’ (மலைபடுகடாம் - ருoச.)

கூ. அசும்பு தோய் இசும்பு-கசிவு தோய்ந்த ஏற்றத்தாழ்வான இடம்.

கக. உளர்த்தல் - சுழற்றல்.

கஉ. உடற்றல் - அழித்தல்.

கஙட. மலர்க்குலமும் தவழ்வளையும் பதுமநிதி சங்கநிதிகட்குக் கொடை நல்குவன என்க.

கரு. பிழம்பிய - திரண்ட.

கசு. மயங்கல் - கலத்தல்.

உ0. விண்ணவர் பெண்ணுருப் பெற்றுழி எழுதலும் செயலறுதலு முடையராக என்க.

உங. நிகழ்த்தும் - நடப்பிக்கும். சத்தியையன்றி ஞானமுதிராவாக லின் அச்சத்தியோடு தம்மை வணங்கி என்க.

உச. துறுத்த - அடைவிக்க.

உசு. குடந்தம்பட்டு - வழிபட்டு; வணங்கியுமாம். (திருமுரு. உஉகூ.)

உஎ. தழும்பல் - முதிர்ந்து திரளல்.

ங0. எஃகு - மதிநுட்பம்; ஆயுதமுமாம்.

ஙகூ. அருங்குரைத்தின்றி-அரிதின்றி; குரை - அசை.

ச0 - ம் பாட்டு முதல் ருசு வரை (சிவதலம் சுச, குமாரதலம் சுச, ஆக) கஉஅ தலங்களின் பெயர்கள்.

சக. தொழித்தல் - முழங்கல். உதீசி - வடக்கு.

சங. தெகிழ்தல் - விரிதல். பொருந்தம் - பொருநை.

சச. விரிதல் - மலர்தல்.

சரு. விபினம் - காடு.

சசு. தேனித்தல் - இனித்தல்.

சஅ. அரி - கூர்மை.

ருகூ. அல்லகாத்திரி - செங்காவி மலை. (அல்லகம் - செங்காவி; அத்திரி - மலை.)

சுச. கோட்டு மண் கொளல் - குத்திப் பாய்தல்; (வீராட்ட. சுஉ - காண்க.) அயன் வழிபடும் என இயையும்.

சுகூ. கொறுகொறுத்தல் - சினக் குறிப்பு; (குமரேசம். ச0-காண்க.)

எங. சிங்க நோக்கென மனம் படர என இயையும்.

எச. கவர்க்கும்-கவரச் செய்யும்.

எரு. நைகரம் - குறைதல்; வருந்தலுமாம்.

எஅ. கேட்பத் தவமிருந்தவா என்னென்று என்க.

அசு. தெவ்வாது - கொள்ளாது.

## வீராட்டகாசப் படலம்

க. பொன் - சூரியன். சலம் - மாறுபாடு.

ங. மங்கல வெள்ளை வழித்து - சந்தனத்தாலே மெழுகி (சிந்தா - கேமசரி. சுசு.) அட்டி-நிறைத்து.

கூ. காட்டு - காண்பிப்பது.

கஉ. விடைதல் - பிரிதல்.

கசு. ஆன் - அவ்விடம்.

உ0. உந்தன் - மேம்பட்டவன்.

உக. வை - கூர்மை.

உங. எட்டை - துன்பம்.

உச. அண்டகோடிகளைப் பிரம விட்டுணுக்களோடு அக்கினிக்கு இரையாக்கி என்க. மறலல் - பகை கொள்ளல்.

உசு. கொம்மை கொட்டல் - தட்டியழைத்தல். ‘கூற்றத்தைக் கொம்மை கொட்டி’ (சிந்தா - குண. உருகூ.)

உஎ. கடவல் - செலுத்தல்.

உஅ. மைந்தன் - தக்கன். தந்தை - சிவன். தந்தை - பிரமன். மைந்தன் - குமரன். இகந்து - இகத்தலால்.

௩௪. தனிது - தனிமை.

௩௯. இழைத்துக் கோடி - இழைத்துக் கொள்வாய். முன் துஞ்சினாய்கொலோ - முன் செய்து கொள்ளாது தூங்கினையோ.

௪0. இரும் - அசைச் சொல்; தாழும் எனலுமாம்.

௪௨. வழங்கு - கூறுவாய். மாற்றம் நீ செத்து - மறுமொழி நீ இழந்து; செத்தல் - மெலிதல், ஈண்டு இழத்தல் மேற்று.

௪௩. வாலறிவு எய்தார் - வாலறிவு யாதும் அடையார்.

௪௪. செது - சிதைவு; (அகத்தியப்படலம் - ௫௯.) ஒளிமழுங்கல்; (புறம் - ௨௬௧.) நொதுப்பு - இளக்கம்; ஈண்டுத் தணிவு.

௪௯. எருக்கி-தாக்கி, நெருக்கி; அடித்து எனலுமாம். (பெரும்பாண் - ௧௧௨.)

௪௭. தந்தை தாயரால் கடியப்பட்ட மழவுபோலத் துணையின்றி ஆழ்ந்தான் என்க.

௪௯. தவிர்ந்த - தங்கிய. ஒப்பனையாள் - கலைமகள்.

௫0. விரகு - உச்சாகம். மேவரின் - மேவின். வெதிர்ப்பு - நடுக்கம்; கலக்கமுமாம். அவதி - எல்லை.

௫௨. ஆவ - வியப்பிடைச் சொல். விலாவித்தல் - அழுதல்; (சிந்தா. குணமாலை - ௨௪௨.)

௫௪. மிகுந்துழியும் பிழைப்பது தகாது இதுவந்து முடிந்தமையால் என்பது.

௫௫. தவ்வென - பொலிவிழந்திருக்க.

௫அ. முற்றுமல் - சூழாமல். செற்றல் - செறித்தல்.

௫௯. பரிவார் - சேதிப்பார்.

௬௧. சீர் அணங்கிய - சீர் விரும்பிய.

௬௩. அமல் - பொருந்திய. அதிங்கம் - அதிமதுரம்.

௬௪. இமில் - எருத்தின் முரிப்பு. தோற்றுதி-நகப்பை; துதி - துளை. குலைப்ப - நடுங்க. படர் - கருத்து.

௬௫. துவர்தல் - வற்றுதல்.

௬௬. வெடித்தல் - புடைத்தல்.

௬௭. வாரித்தல் - மிக்ககிருத்தல்; தடுத்தல். பூரித்த - நிறைவித்த.

௬அ. ஆண் - ஒருமரம். ஓம்பல் - விரும்பல்.

௬௯. ஒழுகிய-சென்ற. புள்ளுவர் சென்ற மலையெங்கும் விழுந்து கிடக்கும் அவற்றைக் கிளப்பிக் கொண்டு எழுவார் என்க.

௭௧. வாய் அணரி-வாய்திறந்து.

௭௨. நெல் - மூங்கிலின் நெல்.

௭௩. சுழித்து - குடைந்தெடுத்து. அவ்வயிரங்களைக் கரையென நீள்வித்து என இயைக்க. வார்த்தல் - நீள்வித்தல்.

௭௫. நிறை - நீர்ச்சால்; துலாத் தட்டுமாம். பறைதல் - வெளிப்படுத்தல்.

௭௬. குவடு - மத்தகம், பிறை - தோட்டி, அருவி - கை, அறை - புளகம், கவட்டணி - கொடிநிரை, கதலி நெட்டிலை - செவி என அமைத்துக் கொள்க. அறை - பாறை. புளகம் - கண்ணாடி.

௭௯. வல்லான் - மாட்டான்.

அ௧. எங்கும் நின்ற குணம்-வியாபக குணம். நண் குணத்தவர் - நண்ணிய குணத்தவர் மூவர். கோள் - சிருட்டியாதி தொழில்.

அ௨. மறுத்து - இழந்து.

அரு. முற்றும் - புரியும். எஃகு- கூர்மை.

அஎ. சவலை - மெலிவு. சவலை யீர் அஞ்சல் என முடிக்க.

அக. ஆன் - அவ்விடம், ஈன் - இவ்விடம். 'மன்னும் சின்னும் ஆனும் ஈனும்' (தொல். புள்ளி - ருஅ.)

கூஅ. புகுதக - புகுக; (சிந்தா. மண்மகள் - உO.)

கூகூ. மேக - மேவுக.

கOஉ. வருதல் - வருக. தெள் ளும் - தெளியும்.

கOரு. அகைதல் - சொரிதல்.

கOடு. இச்செய்யுளை, 'பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென் றுணர்க, நோதக்க நட்டார் செயின்;' 'கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க நீங்காமை வேண்டு பவர்' என்னும் குறள்க ளோடு ஒப்பிடுக.

கOகூ. அன்றினர் - பகைவர்.

ககரு. இந்துவின் இமிழ் - சந் திரனால் உமிழப்படுகின்ற. புரி - கட்டு; 'வெள்ளிப் புரிபுரிக்கும்' (சிதம்பரச் செய்யுட். ககூ.)

கககூ. தளர்க்கும் - தளர்விக்கும். வீராட்டகாசம் - வீரப் பெருநகை.

கஉக. படர்ந்து - சிந்தித்து.

கஉஉ. பறம்பு - மலை.

கஉஅ. சட்டம் - திருத்தம்.

## குமரேசப் படலம்

கூ. விழைந்தது - ஒத்தது.

கO. விழையும் - ஒக்கும்.

கடு. மறுவில் மாயை - சுத்த மாயை. பூத்திட்டான்-பூத்திடுவித் தான்; உண்டாக்கினான் என்பது.

ககூ. அலக்கண் அந்திதவர் - துன்பத்தைக் கடந்தவர்.

உக. தொடரி - தொடர்வித்து; கட்டி.

உஉ. படலிகை - கைமணி; கொடியகம் - பூந்தட்டு.

உரு. 'பாறயிர்...சாறங்கைந்து' என்பதனை, 'சர்க்கரைதேன் பால் நெய் ததிஎன்ற வோரைந்தும் அற் புதனுக் காட்டுமமிர் தம்' (சிவரா. கற்ப-உச.) என்பதனுன் உணர்க.

உகூ. விழிக் கதித்த - விழியிற் றோன்றிய.

உஅ. ஆன் இருக்கை கொள - அவண் அமர்தல் கொள்ள; (அகத் தியப் - கூஉ.)

உகூ. பிணி-மலநோய். நிறை - நீர்ச்சால்.

ருO. கருவிகளும் கேவலமும் ஒருவி எழும் ஞானத்தால் தபத் தோற்றும் பொருள் என்க. தப - கெடுக்க.

ருச. வெளியாகி அப்புறமாய் விளங்கு திருவுரு என்க.

ருஎ. திலகம் - திலம்; எள்.

ருஅ. பூசு புனல்-கழுவும் புனல். வட்டித்து - வட்டமாகச் சுழற்றி.

ருகூ. வாளாங்கு - வாளா.

## பிரமன் சிருட்டிபெறு படலம்

க. விருத்த புரி யென்பதனை இப்படலத்துள் டுகூ ஆம் செய்யு ளானும் உணர்க.

ரு. காராகிருகம் - சிறைச்சாலை.

ச. இது அந்தோ - இது ஆச் சரியம். எந்தோ - யாதோ; இது திசைச்சொல்.

டு. உலமந்த - அஞ்சுதற்கு ஏது வாகிய; துன்புற்ற (கலி. நெய்-உO.)

கஉ. துற்றுவ-உண்பன. தேன்-வண்டு.

கங. நொண்டல் - முகத்தல்.

கச. புரைகிளைத்தல் - தேடல்; (சிந்தா. கனக - கஅ௫).

க௫. பயம்பு - யானைபடுகுழி.

க௬. வியங்கோளுறீஇ நிற்பது அமர - ஏவல் கோடலுற்று நிற்பது போன்று. தப-நீங்க.

கஅ. விழுமம் - சிறப்பு.

க௯. அரம்பு - துன்பம்; (நாரதனருள் - எ.)

உ0. போதும் கலன்களும் கைசெய்தென விளங்கும் என்க.

உஉ. முத்தலை பூத்தது அக்குன்றம் என்றது திரிகூடாசலத்தை; கூடம் - மலையினுச்சி.

உங. பொச்சம் - குற்றம்.

உ௫. துணிப்ப - துணிவிப்ப.

ஙச. உடல் - உடலுகின்ற.

ங௫. மகமியற்ற இகலி வீரன்றனைச் சடையிற் றேற்றுவித்தவரே என்க.

ங௬. வெந்தீ யுமிழ் என இயையும். இரி - இரித்த.

ஙஎ. முன்னி - முற்பட்டு.

ஙஅ. தந்தாய் - தந்தையே; தந்தத்தையுடையாய் எனவுமாம்.

சக. செத்து - ஒத்து. பொன்றிய - பொன்றுவித்த.

சச. துணை - ஒப்பு. இவற்றுத் தொழில் - விருப்பச் செயல்; அது ஈண்டுச் சிருட்டியின் மேற்று. தில் - விழைவுப் பொருளது.

ச௬. இறை - சொல்லல்.

ச௯. துளக்குறுத்தல் - ஒளிர்வித்தல். அவ் - சுட்டு.

௫உ. கண்ண - கருதியமாத்திரத்தே.

௫ச. பிறக்கிடல் - பின்கழியச் சேறல்.

௫அ. நுதுபுலம் - அவித்தபுலம். நுதுத்தல் - அவித்தல்; இதனை 'நெய்யா லெரிநுதுப்பேம்' என்னும் திருக்குறளானும் உணர்க.

௬க. நைகரம் - வருத்தம்.

௬உ. அட்டும் - சொரியும் அஞ்சித்தல் - வணக்கல்.

௬ச. நன்று - பெரிது.

௬௫. ஒப்பல் - துரத்தல்.

௬௬. தண்டாமை - நீங்காமை.

எஉ. மையாக்கும் - மயங்குதற்கு ஏதுவாகிய.

எஎ. பொருவிய - ஒத்த.

எஅ. சவி - ஒளி. தவிர் - தங்கிய. இலம்பகம்-நுதலணிமாலை. சிவன்-திலகம், விதானம் - பட்டம், இலம்பகம், தோரணம் என்றபடி. ஈட்ட - தொகுக்க.

அ0. செவிகள் மணி வடங்களெனக் காட்டக் கதிர்க் கொழுந்துகள் கொடிகளெனக் காட்ட என இயையும்.

அங. மெய் யிழுகு வெள்ளம் - வியர்வைநீர். இழுகுதல்-ஒழுகுதல்.

௯க. வழிகள் - ஈண்டுப் பயன் மேலன. குழி - குழீஇ யெனவும், தழி - தழீஇ எனவும் பொருள்பட நின்றன. பழியற்று - பழியற.

௯ங. தகை - தகைதல்.

௯௬. அஞ்ஞை - தாய்; (களவுப்படலம் - சசஎ.)

௯அ. உறந்து-செறிந்து; 'விறப்பும் உறப்பும் வெறுப்புஞ் செறிவே' (தொல். உரி - ௫க.)

க00. உப்புடை - புறம்

நந்தியுபதேசப் படலம்

௯. முழுவல்-விடாது தொடர்ந்த அன்பு.

௧௦. ஏர்தல் - ஒத்தல்.

௧௩. புரைத்த - உயர்ச்சிபெற்ற.

௧௭. கொய்தல் - ஆய்தல்.

௨௦, ௨௧, ௨௨ ஆம் செய்யுட்கள் சிவதலங்களின் பெயர்கள்.

௨௫. வயிரம் மேற்கூறிய வரைப்புகளில் தயங்குவ என்க. இறை - சிறை.

௨௮. அளை-மலைக்குகை. பூழை-துவாரம். இருளும் பரிதிச் சாயையிற்றோன்றிய வொளியால் இரித்திடப்பட்டுத் தெரிப்பன என்க.

௨௯. வலந்து - வளைத்து. பூவைகள் தாரகனைப் போலத் தோன்றுவ கண்டான் என்க. அவுணப் புதகன் - தாரகன்.

௩௦. மயிர்க்குட்டி - கம்பளிப் பூச்சி.

௩௧. பழு - பழுக்கின்ற; 'மாணிடம் பழுத்தன கிலுத்தம்' (சிந்தா. விம-௧௨) இதில் கிலுத்தம் குரவம் முதலிய மரங்களின் இயல்புகள் காண்க. நேருவ - ஈவன.

௩௫. விலங்கித்தல் - கடத்தல். கண்மலர்த்து - கண்விழித்து.

௩௯. வெட்பாலைக்காய்-சிலம்பு; கோங்கங்காய்-சால்; இல்வங்காய் - வாலறுபட்ட அணில் போல்வன என்க.

௩௯. தணிதல் - வணங்கல். மலைத்தல் - சூடல்.

௪௧. இமிழ்கொண்டு - பிணித்தல் கொண்டு.

௪௩. ஞெமிர்தல் - பரத்தல்.

௪௪. உயரிய - உயர்ச்சிபெற்ற.

௪௫. மறவி - மறந்து. வியவி - ஏவல்கொண்டு. தட்கும்-தடுக்கும்.

௪௭. ஆரூடம் - வாகனம்.

௪௯. தடவிய - கோடிய; 'தடவென் கிளவி கோட்டமுஞ் செய்யும்' (தொல். உரி-௨௫.) சேக்காதங்காத. மடவிய-மடமை வாய்ந்த.

௫௩. சிறை - கரை. பறைதல் - அழிந்தொழிதல்.

௫௫. வன்றி - பன்றி.

௫௭. வரண்டி - அரித்து.

௭௩. இஃது இரு பொருட் சிலேடை:

(௧) நந்தினி நதி — காத்தலை மருவல் - (உயிர்களைக்) காக்குந் தொழிலை யடைதல். கடி தடம் தோற்றல் - சிறந்த மலையிடத்துப் பிறத்தல். அலை பூத்து மலைதல் - அலைகள் எழுந்து ஒன்றோடொன்று மலைதல். போகமும் புணர்த்தல்- (தானே உணவாவது மன்றிப்) பைங்கூழ்களின் விளைவையும் ஆக்குதல். விண்ணவரும் தாழ இன்னிசை எழுப்பல் - தேவரும் படிய சிறந்த கீர்த்தியை உண்டாக்கல். கூடு தொடு இயறல் - பூமியை அகழ்ந்து செல்லும் செலவு.

(௨) கூத்தியர் — காத்தலை மருவல் - (பொழில் விளையாட்டு விருப்பால்) சோலையிடைச் சேர்தல். கடி தடம் தோற்றல் - (நீர் விளையாட்டு விருப்பால்) சிறந்த பொய்கைகளில் பொருந்தித் தோன்றல். பூ தலை மலைதல் - பூவைத் தலையிற் சூடுதல். போகமும் புணர்த்தல் - போக சுகத்தையும் நல்குதல். விண்ணவரும் தாழ இன்னிசை எழுப்பல் - கந்தருவரும் நாண இனிய கானத்தைச் செய்தல். கூத்தொடும் இயறல் - நடனத் தொழிலோடும் அமைதல்.

எச. இது முப்பொருட்சிலேடை:

(க) நந்தினிநதி — கொக்கு இனம் இறுத்தல் - கொக்கின் குழாங்கள் தங்குதல். தோலொடு குலவல் - யானைகளை உருட்டிச் செல்லுதல். அ கரை வளைத்தல் - அதன் கரைகளை கோடுமாறு சிதைத்தல். ஆடுறும் அரவம் - நீராடும் முழக்கம்.

(உ) முக்கணெம் பெருமான்— கொக்கு இனம் இறுத்தல் - குரண்டாசுரனையும் அவன் இனத்தையும் அழித்தல். தோலொடு குலவல் - யானைத் தோலோடு விளங்கல். அக்கு அரை வளைத்தல் - சங்கு மணியை அரையில் சுற்றிக்கோடல். ஆடுறும் அரவம் - ஆடும் இயல்பினையுடைய பாம்பை யணிதல்.

(ங) செவ் வேல் முருகன் — கொக்கு இனம் இறுத்தல் - மாமர வடிவு கொண்ட சூரனை அவனினத்தோடு அழித்தல். தோலொடு குலவல் - அழகோடு விளங்கல். அக்கரை வளைத்தல் - எலும்பணியையுடைய சிவபிரானை வணங்கச் செய்தல். ஆடுறும் மரவம் - அசைகின்ற கடப்பம் பூமாலையைத் தாங்குதல்.

எரு. இது நாற்பொருட் சிலேடை:

(க) நந்தினிநதி—தானம் கைக்கோடல் - இடங்களைக் கைக்கொள்ளுதல். தருவரை அடக்கல் - தருதியாகிய கரைகளால் அடக்கப் பெறுதல். கானம் கொள் தரு இல் மாதர் களி தழைப்பித்தல் - காட்டிலுள்ள தருக்களுக்கும் வீட்டிலுள்ள மகளிர்க்கும் மகிழ்ச்சியைப் பெருகச் செய்தல்.

(உ) வானங்கொள் இறை (இந்திரன்)—தானம் கைக் கோடல் - தெய்வலோகத்தைத் தன் வசமாக்கிக் கொள்ளுதல். தரு வரை அடக்கல் - தகுதியுடையனவாகிய மலைகளை (சிறை யரிந்து) அடக்குதல். கானம் கொள் தருவின் மாதர் களி தழைப்பித்தல்-வாசனை கொண்ட ஐந்தருவின் கீழ்வாழும் தெய்வ மகளிர்க்கு மகிழ்ச்சியை விளைத்தல்.

(ங) மால் (திருமால்) : தானம் கைக்கோடல் - மாவலி யளித்த தானத்தைக் கைக் கொள்ளுதல். தருவரை அடக்கல் - அசுரரை ஒடுக்குதல். கானம் கொள் தருவின் மாதர் களி தழைப்பித்தல் - மணம் பொருந்திய பாரிஜாதத் தருவினால் சத்தியபாமையை மகிழச் செய்தல்.

(ச) வேழம் (யானை) - தானம் கைக் கோடல் - மதநீரைக் கையிற் கொள்ளுதல். தரு வரை யடக்கல்- தகுதியுள்ள மூங்கிலாகிய தோட்டியால் அடக்கப் பெறுதல். கானம் கொள் தருவின் மாதர் களி தழைப்பித்தல் - காடுமண்டிய தருக்களில் அவாவையும் மதத்தையும் மிகுவித்தல்.

எசு. இஃது ஐம்பொருட் சிலேடை:

(க) நந்தினிநதி-கடம்படு தோற்றம் - சுரநெறியை அழிக்குந் தோற்றம். கடலகம் புகுதல் - கடலிற் புகுதல். இடம்படு கோடு - பரந்த கரைகள். இபம் உகல் நேர்தல் - மரக்கிளைகள் முறிதலைச் செய்தல்.

(உ) தடம்படு துளைக்கைச் செம்மல் (விநாயகர்) - கடம்படு தோற்றம்-மதநீர் பெருகுங் காட்சி. கடல் அகம் புகுதல்-கடல்நீர் தம்முள்ளே புகுதல், (கடல்நீரை உண்டமை.) இடம் படு கோடு - இடப்புறத்தே தங்கிய மருப்பு. இபமுகன் நேர்தல் - கயமுகாசுரனை அடர்த்தல்.

(ங) சண்முகன் — கடம்பு அடு தோற்றம் - கடப்பம்பூ மாலை யடுத்துள்ள காட்சி. கடல் அகம் புகு

தல் - கடல் நடுவிலுள்ள மகேந்திரத்திற்குச் செல்லல். இடம் படு கோடு - தனக்கு இடமாகக் கொண்ட மலை. இபமுகம் நேர்தல்- தாரகாசுரனை எதிர்ந்து கோறல்.

(ச) பொதியத் தோன்றல் (அகத்தியன்)--கடம்படு தோற்றம்-குடத்திற் பிறத்தல். கடல் அகம்புகுதல்- கடல் நீர் தனக்குள்ளே புகுதல். இடம்படு கோடு - இடமகன்ற பொதியமலை. இபமுகன் நேர்தல் - யானை முகக் கடவுளை (கரகநீரைக் கவிழ்த்தலால்) எதிர்த்தல்.

(ரு) குடம்படு மால் (திருமால்) — கடம்படு தோற்றம் - முல்லை நிலத்திற்குத் தெய்வமாகத் தோன்றுதல். கடலகம் புகுதல் - பாற்கடலிற் புக்கிருத்தல். இடம்படு கோடு - இடக்கையிற் கொண்ட பாஞ்சசந்நியம் என்னும் சங்கம். இபம் உகல் நேர்தல் - குவலயாபீடம் எனும் யானையை அழித்தல்.

எஎ. இஃது அறு பொருட் சிலேடை.

(க) நந்தினிநதி — கலை வளங் கோடல் - விலங்கின் ஏற்றினங்களையும் வளங்களையும் தன்கட் கொண்டு செல்லுதல். கரம் அலையிறுத்தல் - தனக்குக் கைகளாக அலைகள் தங்குதல். நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பு - உலகம் நிலையுறுவதற்கு ஏற்ற தோற்றம் உளதாகும் இயைபு.

(உ) ஈசன் (சிவன்)—கலை வளங் கோடல் - ஒரு கலையளவாய்த் தேய்ந்துநின்ற மதி தன்னிடத்துச் சரண்புக்குச் சிறப்புறுதல். கரம் மலையிறுத்தல் - விடத்தினல் உண்டாகும் மாறுபாட்டை ஒழித்தல். நிலன் இலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பு - உலகம் அழிவெய்தற்கு ஏற்ற காட்சி தன்கண் எய்தும் இயைபு.

(ந) மாயோன் — கலை வளம் கோடல்-சிறந்த பொன்னுடையை உடுத்தல். கரம் மலை இறுத்தல்- கையில் மலை குடையாகத் தாங்குதல். நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பு - உலகம் நிலையாவதற்கு ஏற்ற பல அவதாரங்களுள்ள இயைபு.

(ச) அகத்தியன் — கலை வளங் கோடல் - பலவாய நூல்களும் வளம் பெறுதல். கரம் அலை இறுத்தல் - கரத்தால் கடலை வற்றுவித்தல். நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பு - உலகம் சம நிலையாகும் காட்சி கொள்ளும் இயைபு.

(ரு) மாதர் — கலை வளம் கோடல்-சிறந்த மேகலையை அணிதல். கரமலை இறுத்தல் - யானை மத்தகம் போலுந் தனங்கள் தம்பால் உண்மை. நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பு - உலகம் நிலைத்தற்குக் காரணமாகிய பிறப்பு உண்டாகும் இயைபு.

(சு) வெற்பு—கல் ஐவளம் கோடல் - மாணிக்கமுதலிய கற்களையும் ஐவகை மலைபடு பொருள்களையும் கொள்ளுதல். கரமலை இறுத்தல் - யானைகள் தன்னிடத்துத் தங்குதல். நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பு - நிலத்தின் கண்ணே அசைவற்ற காட்சி நிகழும் இயைபு.

அ௦. நந்தினி - நந்தியோடை.

கசரு. 'முழுதுமிது.....பண்ணுமையும் பலிக்கும்' என்பதனை, பற்றியது கழியுமிது விலையா லேற்கும், பான்மையுமாம். பண்ணுது பலிக்கு முன்னம்' (சிவப்பிரகாசம் உ-ம் சூ. கரு. ஆம்) செய்யுளோடு ஒப்பிடுக.

கசச. புய்க்கல் - பெயர்க்கல்.

## அகத்தியனருள்பெறு படலம்

உ. அருக்கிய - அருமையாகக் கொண்ட.

ரு. தழும் - தழுவும்; பெறும் தன்மையுண்டு என்றபடி.

கூ. தெவ் - கவரத்தக்க; தெவ்வுதல் - கவர்தல்.

கஎ. படர் - துன்பம்.

கக. பறப்பை - பறவை. விலங்காதியவாக விளங்கியவைகள், தம் உடலில் அத்தீர்த்தம் படியப் பெறின் என்க.

உங. ஒலித்தலைச் செய்யுமாறு அயனுக்கருளிய கங்கையே இப்பாகீரதியாகும் என்க.

ஙங. முகிழ்க்க - உதிக்க.

சச. ஆனும் - ஆயினும். ஆப - ஆவர்.

சரு. அல்லகாத்திரி - கழுநீர் மலை. காத்திரம் - யானைமுன்கால்.

சஅ. குணங்கர் - பிசாசர். ஆரல் - கார்த்திகை நாள்.

ருக. பறைதல் - அழிதல்.

ருஉ. மேவியுய்ப்பவர் - விரும்பிக் கொடுப்பவர்.

ருகூ. செதுவது - அழிப்பது. முதுவது - பழமையது. இயற்றின் பயத்தினும் அதிகரிக்கும் என்க.

கூங. ஞானசத்திதரனை நண்ணுவோர் திருமாலாதியரையும் படைப்பர் எனல்.

கூச. வேல் மூன்று இலையாய்க் கிளைத்தது எனல். அச்சான ஆழி- அஞ்ஞான சாகரம். இதுமுதல் சோடச மூர்த்தம் வருதல் காண்க.

எரு. பிரமசாத்தன் - பிரமனைத் தண்டிப்பவன்.

எகூ. தீத்தும்மும் - தீயைப்புறப்படவிடும்; ‘தீத்தும்மு வேலான்’ (சிந்த. பூமகள் - உஉ.)

அஅ. ஒன்றாக - ஒன்றேனும்.

கூக. அரங்கும் - அழியும்.

கூஉ. புதல் - புல். மூங்கா-கீரி.

கூரு. நெற்றி - நுதல், இடறி. தோடு - பூவிதழ்; கூட்டம்.

க0க. கலாய் - கலந்து.

க0ரு. இனைதல் - துன்பம்.

க0அ. அன்ன கோட்டகம் ஒக்கும் என்பது.

ககஅ. சண்ணித்து - பூசி.

கஙரு. நைகரம் - வருத்தும்.

கஙஅ. பூட்கை - வலி.

கசஉ. அந்தித்தல் - இறத்தல்.

கசகூ. அறமாய் விளைப்பதாய் நெறியதாய்ப் பயிலும் ஆதரவு என்க.

கரு0. பயன் - போகமோட்சங்கள்.

கருக. பொறி - கருவி கரணங்கள்.

கருங. காணிய - பெற.

கருகூ. இம்மும் - இனிமை பெற்ற.

கசுக. பிற - கருமோபதேசங்கள்.

கசுஉ. எண்முழத்தினுன்கின் - எட்டு முழத்திலேனும் நான்கு முழத்திலேனும். தாளத்தூண் - தாளங்கள் அழுத்திய தூண்.

கசுங. கால் - முளைப்பாலிகை. வார்த்தல் - நீள்வித்தல்.

கசுரு. குந்துருக்கமும் குக்குலுவும் வெவ்வேறு என்பது. பஞ்சவித தூபம் — குந்துருக்கம், பச்சைக்

கர்ப்பூரம், காரகில், வெண்சந்தனம், குக்குலு.

கசுஅ. காலும் - காலத்தும்.

கஎ0. நல்க - முழங்க.

கஎக. ஈத்து-கொடுத்து (உக0, உ௩அ ஆம் செய்யுள் நோக்குக.)

கஎஉ. நல்கும் - பொழியும்.

கஎஅ. சோறும் - சொல்லுதும்.

கஅ0. மந்திரித்தல் - மந்திரங்களைச் செபித்தல்.

கஅஉ. கழிப்பி - கழித்து.

ககூஉ. பா - பாவம். திரம்-அதினெடுத்து நிலைபெறுவித்தல்; ஆகவே, கரிசறுத்துக் கதியினுய்ப்பவர் பாத்திரமாவார் என்றபடி.

ககூகூ. நம்பு-விருப்பு. (சிவதரு. ச ஆம் இயல். செ - கக.) அடுத்த-பிச்சைக்கு வந்த.

ககூஎ. கொண்டு - சந்தையிற் கொண்டு. என்றவற்று - என்ற இவற்றோடு. நீரரிசிக்கண் - நீரெடுத்தலிலும் அரிசிகுற்றலிலும்.

உ0உ. அவமதிக்கினும் அழுங்குவர்; அப்படிப்பட்ட பாவ மிகுதவானும் தகுதியல்லன செய்யற்க என்க. அவற்றினும் என்புழி உம்மை இறந்தது தழீஇயது.

உ0சு. வறுமையுற்றுழியும் இவ்வெழுவகையால் பயன் கொள்வர் நல்லோர் என்க.

உ0அ. காதலே பத்தி, அதனுற் கொள்வதே சிரத்தை; இவ்விரண்டாலும் செய்யும் இனியன விதியும் வழிபாடாதிகளும் என்பது.

உக0. ஈண்டு உரைத்தனம்; இயற்றல் முன்னே யுரைத்தாம்; ஈண்டை உரைத்துப் போந்த பூசை தொகுத்தாமேனும் சிறப்பினும் அறைவாம் என்க.

உகக. தீமை உடல் தவம் - தீமையைச் சினக்குந் தவம்.

உகஉ. மிளிர்த்தல் - அழித்தல்.

உக௩. குய்யகவுலகம் - பைசாசவுலகம்.

உஉ௩. இலக்கம் - குறிப்பு.

உ௩0. துனிவு - வெறுப்பு.

உ௩ச. பறைதல்-சொல்லுதல்.

உ௩எ. பறைதரல் - அழிதல்.

உச0. பதி - அரசர். பசுவை, தருவை, தருக்களைத் தனக்கெனக் கோறலென இயையும். நால்வகை வருணத்தருள் வேளாளரென்னும் மொழி விடுபட்டுளது.

உசரு. கூபத்தடம் - கூபத்தையும் தடாகத்தையும்.

உசஎ. நெரிதல் - சாய்ந்துறல்.

உசஅ. தெளித்த - தெளியக் கொண்ட.

உரு௩. இதை - மரக்கலப்பாய். வெறுத்தன - மிக்கன.

உருச. அவ்வ - அவ்வவற்றிற்கு உரிய.

உருசு. உறீஇ - உறுவித்து.

உசு0. பிணி பல வெனினும் முந்நூற்றெட்டு என்பது. (சிவதரு. எ ஆம் இயல்-உசு.) அவையெலாந் தமக்குப் பின்னும் என்பது. பசியல்லாத பிறவேட்கையை நீக்கும் பொருளாதிய யாவும் அன்னந் தெண்ணீர்க்குத் தாழ்ந்தனவேயன்றி ஒத்தனவாகாவாம் என்க.

உசுச. அல்லாந்து - துன்புற்று. உழலை - உழலல்.

உசுஅ. அங்கம் நான்கு - அங்க முதலிய நான்கு.

உஎரு. நரகம் இருபத்தெட்டு :

(க) கோரம் (உ) அதிகோரம்
(௩) கோரதரம் (௪) கோரரூபம்
(௫) தரளதரம் (௬) பயாநகம் (எ)
காளராத்திரி (அ) பயோற்கடம்
(௯) சண்டம் (க0) மகாசண்டம்
(கக) சண்ட கோலாலம் (கஉ)சண்
டதரம் (க௩) சரோருகம் (க௪) சல
சவதி (க௫) வீமம் (க௬) வீமவீட
ணம் (கஎ) கரளம் (கஅ) விகராளம்
(க௯) குலிசம் (உ0) முக்கோணம்
(உக) ஐங்கோணம் (உஉ) தீர்க்க
தரம் (உ௩) பரிவர்த்துளம் (உ௪)
அப்பா லெழு நிலம். (உ௫) அப்
பால் எண்ணிலம் (உ௬) அப்பாற்
றீர்க்க வொளி (உஎ) அப்பால்
மாயை. (உஅ) ரௌரவம். இவை
யொன்றன்கீழ் ஒன்ருக இருக்கும்.
இவற்றுள் ஒவ்வொன்றற்கு ஐவ்
வைந்தாக நூற்று நாற்பது நரகம்
நிலைபெறும். எனவே, தொகை
யால் இருபத்தெட்டும், வகையால்
நூற்று நாற்பதும், விரியால் இரு
பத்தெட்டுக் கோடியும் ஆம். வகை
யின் பெயர்களைச் சிவதருமோத்
தரம் சுவர்க்கநரகவியல் க0௫-ஆம்
செய்யுள் முதலியவற்றிற் காண்க.

உஎ௬. முசல மெழுவித்தல் -
உலக்கையால் குத்தல்.

உஎஎ. தொழித்தல்-கோபித்தல்.

உஎஅ. விதலை - நடுக்கம். கால
தூர் - பலகணி.

உஎ௯. அரம் - ஆயுதம்.

உஅஅ. காலமும் அள்ளலும்
பாதியாக எனக் கூட்டுக; எனவே
காலம் அயனூர் பகலில் எட்டில்
ஒரு கூறும்; அள்ளல் மூன்றரைக்
கோடியும் கொள்ளக் கிடந்தன.
இவற்றின் என்றது உபபாதகங்களை

உ௯0. பறப்பை - பறவை.

உ௯௬. இனைவோரும் இமை
யாரும் மனிதராதிய மற்றையுயிர்
களும் பிறத்தலிறத்தலாதிய கிளத்
தும் அறிதி யென்றபடி.



உ௯எ. இமைக்கும் பாணி -
இமைப்பொழுது.

உ௯௯. பருவ மடைதல்-உதராக்
கினியால் வெந்து பாகமாதல்; சீர
ணித்தற்குரிய காலமுமாம். வளி
யும் தீயும் இரு கூருகப் பகுத்த
லும் என்க. இகத்தரும் - இகத்த
லரிய; இகத்தல் - கடத்தல்.

௩0௬. மிளிர்த்தல்-தலைகீழாக்கல்.

௩0எ. முந்திய புண்ணிய பாவங்
கள் போலவே பின் பயன்றரத்
தக்க புண்ணியபாவங்களை மேலும்
ஈட்டிக்கொண்டு என்க. வளாவல்-
ஈண்டு ஈட்டல். பயனை யருந்தி
யென இயையும்.

௩0அ. மிடற்றுக் கபம் நாளுழி
யுரி என்க. தொடி - பலம்.

௩க0. தமனியம் (தபனியம்),
இஃது எதுகை நோக்கி வந்தது.
இமிழ்தரல் - இனிதாதல்.

௩கக. கருத்து வேற்றுமையா
வது — மயலுறுதலும் மயலொழி
தலுமாம். பயத்தின் வேற்றுமை
யாவது—பாலூட்டலும் விழைந்து
கலவியின்ப மளித்தலுமாம்.

௩கஉ. வன்றி - பன்றி.

௩க௩. தபுதல் - தங்குதல்.

௩உஉ. உடலுற்றன்றி-வருத்தி
யல்லது.

௩உ௬. மருந்து ஓமம் மனு
அன்னமாதி யுதவல் இத்திறனுல்
ஒன்று இடைவிடும் என்க.

௩௩௩. பயவாமை - பயன்ற
ராமை. பறம்பல் (பரம்பல்)-நிறை
தல்.

௩௩அ. சூல் - கருப்பம்.

௩௩௯. பொழில் தடிந்தோர்
ஆதியோர் கேழலாவர் என்க. தழி
யினர் என்பது அளபெடாமை
காண்க.

நசo. தம்மாசிரியரையேயன்றிப் பிறஆசிரியரையும் இழித்தோர் பங்கும் குருடும் ஆவர் என்க.

நசக. ஆரியனை நொய்யனெனச்சிந்தித்தவன் கிருமியாதலன்றி மறுபிறப்பில் புண்ணுறு குறியும் அடைவன் என்க.

நசஉ. நெஞ்சினடர் வெந்நோய்- இதனைக் களரோகம் என்பர். கரந்து - திருடி. கரந்தான் - மறைவாகக் கூறினன். அரலை - கழலை.

நசஅ. இடம் நல்கான் பாரியை யிழப்பன் என்க.

நருச. உறங்கல் - ஒடுங்கல்.

நகூஉ. உடலை உயிரென்பார் உலோகாயதர்; அகங்கார தத்துவமாகிய அந்தக்கரணத்தை உயிரென்பார் பௌத்தர்; பொறியை உயிரென்பார் அருகர் என்க. (சிவதருமோ. கo-ஆம் இயல். கஅ.)

நகூங. உயிர் அணுவென்பார் நையாயிகனும் பாஞ்சராத்திரியும்; உடலினேகதேசமென்பார் கர்மயோகிகள்; உரு முழுதும் நிற்குமென்பார் சமணர்; பூரணமென்பார் மாயாவாதிகள். (சிவதருமோ. கo-ஆம் இயல். உக.)

நகூச. ஆன்ம சத்தியின்பால் மலசத்தியு மல்லாமல் மாயையும் மாயை காரியங்களுங்கூட ஒடுங்குமென்பது. அதனிடை - அவ்வான்மசத்தியிடை.

நகூக. தீர் - தீர்க்கின்ற.

நஎங. வல்லார் - மாட்டாதார்; வன்மையருமாம்.

நஎரு. உராய் - உலாவி.

நஅஉ. சிறைத்தல் - சிறைசெய்தல்.

நஅகூ. அரத்தொடை - சர்ப்பமாலை.

நஅக. கொறுகொறுத்தல் - கோபித்தல்; (சிங். சுரமஞ் - சகூ.) உறழ்தல் - மாறுபடுதல்.

நகூo. மற்றையரென்றதுவானப்பிரஸ்த சந்நியாசிகளை. இவர்க்குப் பரிகாரமின்றெனினும் பவுதிகனுக்குக் கூறியது வானப்பிரத்தனுக்கும், நைட்டிகனுக்குக் கூறியது சந்நியாசிக்குங் கோடலும் உண்டு. பரிகாரஞ் செய்தற்கு அசத்தரேல் ஆசிரியராலேனும் அவர் புத்திரராலேனும் இருமடங்கு புரியிற் குற்றமகலும். (சிவதரு. கக ஆம் இயல். உ-ஆம் செய். உரை.)

நகூக. எண்ணுதான் இருமடங்கு தியானஞ் செய்க. இங்ஙனஞ் செய்யா தொழியின் இக் குற்றம் அகல மூலமந்திரத்தை இருநூறு உருச்செபிக்க. நீறுதரியாது புறம் போந்தான் இருநூறும், பார்த்தோன் நூறும் அகோரஞ்செபிக்க. கழிப்பினும் திசை பிழைக்கினும் பஞ்சப்பிரம மந்திரம் நூறு உருச் செபிக்க. சுடலையினும் நகரினும் ஈரியக்கம் புரியின் ஈசானம் ஐஞ்ஞூறு செபிக்க. (சிவதரு. கக ஆம் இயல் - ரு.)

நகூஉ. உடையின்றி யாடின் அகோரம் நூற்றெட்டு உணவின்றிச் செபிக்க; பதிதரைப் பரிசிக்கினும் மூழ்கிச் செபிக்க.

நகூங. வைசியருக்குப் பதினைந்து நாள் என்று ஒட்டுக; (சிவதரு. கக-ஆம் இயல். கூ.)

நகூஅ. கனவின் அணங்கு-கனவின் தோஷம். பகலில் மாதரை நினைந்துவீரியமிறக்கின் வாமத்தை நானூறு உருச் செபிக்க. (சிவதரு. கக-ஆம் இயல். கஎ.)

நகூகூ. கிருச்சிரத்தின் - கிருச்சிரத்தோடு; ஒரு விரத விசேடம். (சிவதரு. கக ஆம் இயல். உக.)

சா0க. முப்பகலுணவும் முப்பகல் அயாசகமாக வந்தது புசித்தலும் முப்பகல் நிசியுணவும் முப்பகல் வாயுவுணவுங் கொளல் பிரசாபத்திய மென்பது. (சிவதருமோ. கக ஆம் இயல். உச.)

சா0உ. முப்பலப் பாலருந்துவது அதிதபனம் என்பது. (சிவதரு. கக ஆம் இயல். உரு) மூவைந்தாறு- இருபத்தொன்று. ஒரு திங்கள் - ஒரு தினம்.

சா0ங. ஊட்டுநாள் - விருந்திற்குரிய நாள். சிராத்தம் - ஈண்டு ஏகோதிட்டம். அப்பால் என்றது வருடந்தோறும் செய்யும் திவசம் முதலியவை.

சா0சா. கௌசிகம் - பட்டாடை. அரிட்டம் - மோர்.

சா0ரு. சாமரைக்குப் பதில் தருப்பை கூறுவது; (சிவதரு. கக ஆம் இயல்-ஙங.)

சா0அ. ஓம்பி வருடம் தவறின் நூறுயிரமும், ஒரு மதி தவறின் ஈரயுதமும் அகோரஞ் செபிக்க.

சாக0. தாழ்ந்த புனல் - ஆழ்ந்த நீர்; மடு முதலியன. ஆளுயர்வு- புருடப் பிரமாணம்.

சாகக. இருதூணி உயர்வென்பதும், ஐயுழக்கு அதம மென்பதும்; (சிவதரு. கக ஆம் இயல். சாஉ) தீக்கையிலா மறையோர் ஆதியர் என்பது;(சிவதரு. கக ஆம் இயல்-சாங)

சாகஉ. நாய்க்கடுவோன் - சண்டாளன் பிராமணியுடனேகூட அவர்க்குப் பிறந்தவன்; (சிவதரு. கக-ஆம் இயல். சாங) அருக்கிய பாத்திரம் வீழினும் உருளினும் உருச்சிதையினும் என்க.

சாகங. ஞானம் - ஞானசாத்திரம். உரு - விக்கிரகம்.

சாகசா. குரு பதிட்டை செயின் உபவசியாயிருந்து ஈரிலக்கம் உருக்கணிக்க.

சாகரு. போதகன் - சிவாகமங்களைப் போதிப்பவன். சோதகன் - அவற்றை இதுவிது என்று தெரிசிப்பிப்பவன். முத்திதன் - முத்தி கொடுப்பவன். அன்னவர் - ஆசிரியர். உறல் - உறுக. அறிவிற்கலந்தவர் - சாதகர் முதலியோர்.

சாகசு. வாய் - வாய்மை.

சாகஎ. மண்டலம்-தேனுமண்டலம். நீறு-திருநீறு. மதுவுண்டான் சிவாலயத்தில் தற்புருடம் இலக்கம் எண்ணுக. பராகம் நிறுவுதல்- பராகமென்னும் கிருச்சரம் இயற்றுக. வாய் - அவர் வாயில்.

சாஉ0. பல வினையும் ஓவுவதாயின் சொல்லத் தக்கது யாது; யாவும் நீங்கும் என்பது கருத்து.

சாஉக. சண்ணித்தல் - பூசுதல்.

சாஉஎ. பால் ஐந்து பலம் கொள்க என்பது (சிவதரு. ககஆம் இயல். எஎ.) இரு குன்றிகொண்டது ஓர் உளுந்து; உளுந்து பத்துக் கொண்டது ஒரு கழஞ்சு; கழஞ்சு எட்டுக் கொண்டது ஒரு பலம்.

சாஉகூ. தேசடுத்தங் கேறுகலம்- தேசோவற்பாத்திரம்.

சாங0. நலிம் - நலியும்.

சாஙக. ஐந்தினும் இருதய மந்திரத்தை யுச்சரித்தலுமாம்.

சாஙரு. தவசிலே பதுமாதனத்திலே வீற்றிருக்குஞ் சதாசிவதேவர் என்க. திகழும் அடிகள் என இயையும்.

சாஙகூ. படர்தல் - நினைத்தல்.

சாசாங. கெவியூதி - அரைக்காதம். குரோசம்-கூப்பிடு தூரம். யோசனை - நான்கு குரோசம்.

சாசாசா. அராகமுதல் காலம்வரை சதமடங்கு என்பதைக் கூட்டிக் கொள்க.

சசரு. ஈசுரம் சாதாக்கியம் விந்துநாதம் வரை சுத்தவித்தைக் குச் சொல்லிய அளவே கொள்க.

சசகூ. நீர்ந்த வோரிலக்கத்தின் கோடி-ஓரிலக்கங் குறைந்த கோடி யோசனை என்க.

சரு0. கராளம் - தீக்குணம். முழுப்ப - முழுதும்.

சருங. ஆடகேசர் கோயில் ஆயிரம் யோசனை என்க.

சகூ0. முனது - முந்தியதாக. ஆயுகம் - வயது.

சகூங. இருசக்கனி - எலுமிச் சம் பழம்.

சஎஅ. அம்பர் - அவ்விடம்.

சஎகூ. ஞெமிர்தல் - பரத்தல்.

சஅச. தடவு - வளைவு.

சஅஅ. கெண்டைத் தலன் - மணியிடம். கண்டு - காலிலுள்ள கழலைக் கட்டி ; குளம்பின் மேலிட முமாம்.

ரு0ங. கழல் - செருப்பு.

ரு0ச. தகல் - தகுதல்.

ரு0கூ. பாளிதம் - பாற் சொன்றி. விடை பத்தொடு ஆயிரம் பசுக் களைப் பாதிகருப்பம் வெளிப்படுந் தருணத்தில் சிவபெருமானுக்கு ஈந்தவர் என்பது.

## சீபரிபூரணநாமப் படலம்

க௨. சூறையாட்டு - கொள்ளை யிடல்.

ககூ. ஒப்புதல்-ஓட்டுதல். தருகு - தருவேன்.

௨௨. இலம்பகம் - நுதலணி மாலை ; அஃது ஈண்டு நுதலின் மேற்று.

௨ங. அசைதல் - தங்கல்.

௨ரு. செற்று - செற்றிய; செறிந்த என்பது.

ஙங. விண்டு - விள்வித்து.

ச0. மனோவேகம் வாய்ந்த இத் திண்ணிய தேர்க்கு உருள் ஆதற்கு வலிமையில்லேம் எனக் குடை யாகியது போல என்க.

சரு. கைக்கால் - கையில். வடி- குதிரைக்கயிறு. ஐயெனல் - விரை வுக்குறிப்பு.

சஎ. தபுமார் - தபுவிக்கும்படி.

ரு0. இயவை - வழி.

ருக. இளை - பிரதான காவல்.

கூ0. கழுமல் - நிறைதல்.

கூக. உழிஞை - பகைவரரண் பிடிப்பார்க்கு மாலை. வல்லைப் புரிசை - காட்டரண்.

கூங. நாட்கொளல் ஆவது, பிறன் கேடு கருதித் தான் புறப் படுங்கால் உடன் புறப்படற் கமை யாவழி குடை வாளாதிய முக்கிய சின்னங்களை நல்ல வேளையில் முன்னே செல்லவிடுதல். (தொல். புறத்திணையியல் - கங)

கூகூ. எய்த்து - அறிந்து.

கூஎ. என்னாய் முடியாதென்பது பலர்க்கு மிடராய் முடியுமென்னும் பொருட்டு.

கூஅ. நொச்சி-மதிற்காவல்; மாற் றார்க்கு எதிரூன்றித் தம் மதில் காப்போர்க்கு உரிய மாலையுமாம். (தொல். புறத்திணை-கங.)

எ௨. இருதிறச் சேனையும் அகழி யின் இருகரையும்பற்றி நீரிடைப் படர்ந்த நீர்ப்பாசி போன்று நீங்கா மல் அக்கிடங்கின்கட் பொருது நிற்றலின், 'ஊரகப்பாசி' என்றார். (தொல். புறத்திணை - கங.)

அரு. பிறனில் கூட்டம் வென்ற- வஞ்சித்தலில் பிறனில் கூட்டத்தி னும் மேம்பட்ட.

அஅ. விரைசெல - விரைந்து செல்ல.

கூ0. நெடுமொழி - தன் மேம் பாட்டுரை. இடுகெல் - ஒடுங்கல்.

க0உ. எக்கழுத்தம் - தலையெ டுப்பு; இறுமாப்பின் மேற்று. நும் மார் - நும்மவர்.

க0ரு. தழக்கம்-தழங்குவித்தல்.

கக0. கலாய் - கலவி; கூடி யென்னும் பொருட்டு.

ககஉ. உராவல் - உலாவல். மாயை வலான் - மாயையில் வல் லுநனல்லன்.

ககச. பேம் - பயம்.

ககரு. ஞெகிழி - தீப்பொறி. இங்கன் - இந்தப்படி யென்னும் பொருட்டு.

ககஎ. குடுமி - வெற்றி.

கஉக. காவன்மூவர் - திருமால் பிரமன் இந்திரன்.

கஉஉ. அசைதல் - தங்கல்.

கஉச. பகைவனைக் கொன்று அவன் முடிக்கலம் முதலியன கொண்டு பட்டவேந்தன் பெய ரானே முடிபுனைந்து நீராட்டு மங்க லம். வாளை நீராட்டு மங்கலம். (தொல் - புறத்திணை - கரு)

கஙக. தவ்வென-பொலிவிழந்தன வாக. தெவ்விய - பகைகொண்ட.

கஙரு. அலத்தல் - அங்கலாய்த் தல். வல்லுதலில்லவர் - வலிமை யில்லாதவர்.

கசக. புகுந்தென - புகுதலால்.

கசஉ. இன்னினி-இப்பொழுதே.

கசரு. உடல் - பகைக்கின்ற. *வட்டின்-கால்வைத்த இடத்தில்.

கருச. இடங்கழி - வாள்.

ககூக. கேட்டொறும் - கேட்குந் தோறும்.

ககூஉ. நுதுத்தல் - அழித்தல். பதுக்கை - சிறுதூறு.

ககூச. முள்காத்தல் - மௌன மாயிருத்தல்.

கஎஉ. ஓயேல் - தளரேல்.

ககூஉ. வார் - அரிகயிறு; ஓர் ஆயுதம்.

ககூகூ. இடங்கழி - நெருங்கல்; எதிர்த்தன் மேற்று.

ககூஎ. தவிர்ந்த - தங்கிய; தங்கு தலாலுண்டாகிய.

ககூஅ. உண - உணவு; அஃது ஈண்டுக் கடல்.

ககூகூ. வேய்த்தல் - ஒற்றித்தறி தல்.

உ0ச. அமலை - ஒலி.

உ0கூ. வாசி - உயர்ச்சி, அளவு, குதிரை என முறையே கொள்க.

உகக. புயக்கல் - பறித்தல். (கூஎஉ ஆம் செய்யுள் காண்க.)

உககூ. சினைஇ - சினந்து.

உகஎ. பலி - திருநீறு.

உககூ. எங்கு - யாதின்பொ ருட்டு.

உஉச. திறந்தென - திறக்க.

உஉரு. காற்றொழில் - வாயுவின் றொழில் (ஓடல்)

உஙரு. வரித்தல் - மொய்ப்பித் தல்.

உசஅ. வீரவாகு தம்மேல்விடுத்த வாளிகளை யறுத்து அவனைச் சூழ் விக்க அவன் அவற்றை யறுத்து விட்டு வீரவாகுவின் இரதத்தை யழிக்க அவர் அவனிரதமும் சிலை யும் தகர்த்தனர் என்பது.

உருகூ. நம்மார் - நம்மவர்.

உகூ0. வேறு - வெல்வேன்.

உகூக. புகன்று - விரும்பி.

உகூ௪. உற்பனம் - தோற்றம்.

உஎக. தனை நுகர் ஒருவன்-ஆதி சேடன்; தனையென்றது வாயுவை.

உஎகூ. பாழி - தேவர் கோயில்.

உஅரு. பாடு - கிடக்கை.

உஅஅ. பொன்றினன்-பொன்று வித்தனன்.

உகூங. அதுக்கல் - அடித்தல்.

உகூஎ. கண்படுப்பியது - கண் உறங்கச் செய்தது.

உகூகூ. தப - தபுவிக்க.

௩0கூ. எண்மர் - கணக்கினர்.

௩0அ. அட்டும் - சொரியும்.

௩கங. சாகம்-அம்பறாத்தூணி.

௩௩அ. அருங்குரைத்து-அரிது; குரை - அசை.

௩௩கூ. முடிவில் வெல்லினும் இப்பொழுது நேர்ந்த இப்பழி தொலைந்து இசையாம் என்க.

௩௪0. கோடு - கொள்வேன்.

௩௪உ. செச்சை - செஞ்சாந் தின் குழம்பு.

௩௪௩. முன்னுதல் - அடைதல்.

௩௪அ. விறத்தல் - மிகுதல். வெறுத்தல் - மிகுத்தல்.

௩ரு௪. நொதுத்தல் - அவித்தல்.

௩கூ௩. எய்த்துறாது-அறியாது.

௩எரு. கேழ் - ஒப்பு.

௩எகூ. சிதர்தல் - சிந்துதல்.

௩அ0. தபுதனன் - அழித்தான்.

௩அக. எருக்கல் - அழித்தல்.

௩கூ0. பொத்திரம் - அம்பு.

௩கூக. ஓம்பல் - ஒழித்தல்.

௩கூஎ. உன்னுடைய தம்பியாகிய இரணியனுக்குத் தம்பியாகிய வச்சிரவாகுவுக்கு நீ தம்பியாகவும் உனது தமையனாகிய பானுகோபன் உனக்குத் தம்பியாகவும் மடிவிப்பேன் என்பது.

௪0௪. தாள் - முயற்சி.

௪0கூ. நம்பி - விரும்பி.

௪க௪. முன்னுதல் - சேறல்.

௪கரு. ஒரும் என்பது அசை.

௪உரு. கதியது - ஊடுருவியது.

௪௩ரு. வில், வீரவாகு தேவருடையது. நுதற்கதியது - நுதலிற் புக்கது.

௪௪௩. நம்பியினது கைச்சிலை துணித்துப் பெயர்ந்தனன் என்க.

௪௪கூ. தொடுக்கிய - தொடுக்க.

௪௪கூ. ஆகல் - ஆகுக.

௪ருஉ. புகறி - விரும்புவாய்.

௪ருரு. விலாவம் - புலம்பல். தமரிப்பு - ஆர்ப்பு.

௪ருகூ. மன், நிலையாமை கூறியிரங்குதலின், கழிவுப் பொருளது; (தொல். புறத்-உ௪.) வெள்ளணி - பிறந்தநாளி லொப்பனை. (சிந்தா. காந்த-உஉ.)

௪கூக. இகுதல் - அழிதல், புறங்காட்டல், வருந்தல்.

௪கூஉ. இடங்கழிப்பல் - (பகைவரை) இவ்விடம்விட்டு ஓடச்செய்வேன்.

௪கூஎ. முடியுறுப்பு ஐந்து: தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி. உய்வகையுறக்கம்- உய்வகை நழுவல்.

௪எக. கானுரம்-மணமிக்கமார்பு.

௪எகூ. எருக்கல் - தாக்கல்.

௪அ0. காலா லுந்தப்பட்டு மேற் போய்மீள்வான் மிதித்தான்.

௪அக. கைதுவாமை-கையொழியாமல்.

சஅச. தொடரிய - கட்டிய.

சஅரு. உற்பனம் - தோற்றம். கோடல் - காந்தள்.

சஅஎ. இதுவிட - இதுதவிர; இதனினும் என்னும் பொருட்டு.

சகூரு. கடைவா - கடைதலாக.

சகூச. நுதலியாங்கு - குறித்தாங்கு. பொருள் - உண்மை.

ருOO. அதுக்கல் - அடித்தல். ஆடல் - பொருதல்.

ருOரு. கந்தன் எற்றிடுவனேல் ஈம்படை உறுதியி னிலைபெறுவாதலால். காழ்ப்பு - உறுதி.

ருOச. முன்னல் - செல்லல்.

ருகரு. தவிர்தர - தங்க.

ருகரு. எழ் கணை தொடுத்துக் கரத்தைச் சேதிக்க அக்காம் பின்னரும் முளைக்க அக்கரத்தானே கதையெடுத்து வீசினன் என்பது.

ருகஎ. எற்றம் - எற்றுதல்.

ருஉO. நூற்றுப் பதி னெட்டு முறை தடிந்தனர் என்பது கந்தபுராணம்.

ருஉக. பரிமா, பேய், அரிமா; இவை வகைக்கு எழுபதினாயிரம் என்பது.

ருநஉ. மானதம் - மனத்துக்கு அடுத்தது.

ருநகூ. ஒட்டறுதல் - ஓடல்.

ருசO. செப்பு - விடை.

ருசக. நெற்றி - படைவகுப்பு.

ருருஎ. தலையற்றனர் என்பதில் தலை உபசர்க்கம்.

ருகூக. அஞ்ஞை, அன்னை யென்பதன் மரூஉ.

ருகூஉ. முன்னுதல் - அணுகல்.

ருகூரு. எமியை - எம்மையுடையாய். தமி - தனி. தில்-விழைவுப் பொருட்டு.

ருகூச. திமி-திமிங்கலம் என்னு மீன்; அதை விழுங்குமீன் திமிங்கிலகிலம் என்பது. இமிர்தல்- மொய்த்தல்.

ருஎக. கனவி - கனக்கண்டு.

ருஎஎ. தன் கொடி யென்றது இடிக்கொடியை.

ருஅச. துனித்தல் - துன்புறல்.

கூOச. புலவர் என்றது இந்திரனேயும் அக்கினியையும். பறப்பை - பறவை.

கூகக. கோட்டு மண் கொளல் என்பது குத்தல். (சிங். மண்ம - ககரு.)

## பிரமனருள்பெறு படலம்

உ. ஆய்தம் - ஆயுதம் என்பதன் மரூஉ.

ச. கூசலன் - கூக்குரலுடையனவாகிய சங்கு.

ரு. ஒருக்கு-ஒருங்கு (வலித்தல்)

எ. வைக - கழிய.

கஉ. விம்மல் - கலக்கம்.

கஅ. சரசு - மானதவாவி.

## நாரணனருள்பெறு படலம்

கO. வைகறை - விடியல் முதற்பத்து நாழிகையளவு காலம்.

கக. வலைதல் - பின்னுதல்.

கச. மலைத்தல் - ஒத்தல்.

## இந்திரனருள்பெறு படலம்

உ. அரம்பு - தீங்கு.

ச. உபசாரம் ஐந்தாவன: ஜலம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம்.

ரு. புகன்று - விரும்பி. ஒராத - ஒருவாத.

கூ. இலம்பகம் - மாலை.

கக. அச்சுதம் - அறுகும் வெள்ளரிசியும் கூட்டியது. கொடியகம் - தட்டு.

கரு. பாத்திரம்-பாவத்தினீங்கல்.

உக. இரந்தரம் - இரகசியம்.

உரு. மஞு - மணிப் பொது. ஏமன் - இரணியன்.

## நாகமருள்பெறு படலம்

ரு. விதும்பினர் - ஆசைப்பட்டோர்.

ரு. அசைந்தன்று - தங்கிற்று.

க0. உராய் - அடைந்தென்னும் பொருட்டு.

## இராமனருள்பெறு படலம்

ரு. உராய் - உலாவி.

கசு. நிறை - சால்.

உஅ. கிரிகன் - தொழிற்பாடிலி.

சரு. புக்கென - புக்கு.

## களவுப் படலம்

கசு. தளிப்பது - குளிர்விப்பது.

உ0. விழுமம் - சிறப்பு.

உஅ. நிரந்தரித்தன - நிறைந்தன.

ருச. அட்டுதல் - அப்புதல். கழை - கரும்பு.

ருரு. செவியில் அணியப்பட்ட குவளையாகிய அம்பைப் பக்கத்தே செறித்தது உடையது முகம்.

ருஎ. புல்லு - உள்வைரம் பற்றுதன; அவை — தெங்கு, கமுகு; மூங்கில் முதலியன. 'புறக்கா ழனவே புல்லென மொழிப' (தொல். பொருள். மரபியல்-அரு.)

ருஅ. பொடித்தல் - அரும்பல்.

சஉ. கவைதல்-கவிந்திருத்தல்.

சஅ. நுதலும் - கருதும்.

ருஎ. சீந்துதல் - கோபித்தல்; 'சீந்தாகின்ற தீமுக வேலான்' (சிந். குணமா - உ0ரு.)

ருஅ. விகுதி - விகாரம்; ஒன்றற்கிறுதியாவது.

ருக. தடைதல் - தடுத்தல்.

சு0. வியப்பு என்னுந் துறை திருகோவையாரிலுண்டு; செய்-ச. போறல் அரிது என இயையும்.

சுக. குறிப்பறிதல், இஃது உட்கோள் எனத் திருக்கோவையாரில் வருதல் காண்க. ஆடியுமிழ்ந்தாங்கு முகிழ்க்கப் பெற்றனள் என்க.

சுரு. முந்துறல் - முற்படல். புகுமுகம் புரிதல் - ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவழி ஒருவரை யொருவர் விரும்புந்தன்மை; (தொல். பொருள். மெய் - கரு.) தக - அமைய.

சுச. குழல் - ஐம்பாலினொன்று; அது சுருட்டி முடித்தது. காதிற் பெய்யும் ஒன்று என மாற்றுக.

சுசு. மெலிந்திலளாகி வலிந்து பொய்த் தொடுங்கல் 'இல்வலி யுறுத்தல்' (தொல். பொருள். மெய்ப்பா - கரு.)

சுஎ. எய்திய - எய்துக.

எ0. கேட்பதென் - கேட்கவேண்டுவது என். உறுப்பமைந்த இப்பெற்றிக்குத் தகவே இருக்கும் என்றபடி.

எஉ. தட்பு - தடுப்பு; தில் - விழைவுப் பொருளது.

எரு. அமையா - தெவிட்டாத.

எசு. சேக்குதல் - தங்குதல்.

எஎ. விடலி - கீழ்மக்கள். பெட்பேன் - விரும்புவேன்.

அஉ. செத்தல் - ஒத்தல்.

அச. அணர்தல் - மேனோக்கல்.

அரு. தகைவு - தடை; தளர்ச்சி.

அசு. காவியின் - காவிபோல.

அஎ. எய்தரிது - எய்துதலரிது.

அஅ. ஓம்பா - ஒழித்து.

கூக. மெய்தொட்டுப் பயிறல் - தலைவன் தலைவி மெய்யினைத் தீண்டி நெருங்கல்; குழலில் வண்டை ஓட்டுவதுபோல் நெருங்கி அதனை யோட்டுகையில் கைபட்டது போலத் தொடுதல்.

கூஉ. பொய்பாராட்டல் - தலைமகன் தலைமகள்மாட்டு உள்ளதும் இல்லதுங்கூட்டிக்கொண்டாடுதல்.

கூங. இடம்பெற்றுத்தழாஅல் - தலைவன் தழுவற்கு இயைந்த இடங் கண்டு தலைவியைத் தழுவ விரும்பிக் கூறல். தாராட்டு - பகைவர் படை வகுப்பை யலைத்த.

கூசு. ஏமம் - கலக்கம். சேமம் - இன்பம்.

கூஎ. சலம் - பொய்.

கூஅ. மருங்கணைதல் - ஒரு கையால் இறுமருங்குல் தாங்கியும் ஒரு கையால் அளிகுலம் விலக்கி அளகந் தொட்டும் சென்றணையா நிற்றல். அளி யென்பது ஒன்றொழி பொதுச் சொல்லாய் நிற்றலின் குறிப்பு என்றது.

க0உ. புகுதக-புகுதுக; 'தேமலர் கலங்கட் டிருவே புகுதக' (சிந்தா. மண்ம-உ0.) என்பதனுணர்க.

க0ச. கையறு - செயலறுதற்றுன்பம்.

க0எ. உட்கு நாண் - அஞ்சும் நாண்.

ககச. ஏவம் - குற்றம்.

ககஅ. பைம்மயில்-பசுமைமயில்.

கஉங. மிளை - காவற்காடு.

கஉச. உராவிய - உலாவிய.

கஉகூ. 'நம்வரைக் குமரியாட' என்பதை, 'சிந்தைநலி கின்றதிரு நீர்க்குமரி யாட' (சிந்தா. சுரமஞ். உகூ.) என்பதனோடும் ஒப்பிடுக.

கங0. பதுக்கை - பாறை.

கஙங. தள்ளல் - தவறல்.

கஙஎ. துளும்பல் - அலைதல். உவளகம் - அந்தப்புரம்.

கஙஅ. அல்ல விச்சு - தீயவற்றினுக்கு வித்து; அல்ல - தீயன.

கசக. மேதை - அறிஞன்.

கசஎ. தள்ள - தவற. வெதிர்த்தல் - நடுங்குதல்.

கருஉ. கொன்னே - பயனின்மையாக; எனவே, விளையாட்டாக என்றபடி.

கருச. நின் ஆற்றலை மாற்றி அஞர் செய்தலால், பூங்கொடி, நாதன் நட்ட துரும்புதானோ! அல்லாக்கால், இங்ஙனம் செய்ய முடியாது என்பது.

கருசு. கருமை - பெருமை.

கருஎ. கருங்கண்ணி அவயவத்தால் என்வன்மையைப் பருகுதற்கு முன் தொடலினை யாய்ந்து விடலினை உன்போலவே மிக்கறிவேன்; அவள் பருகிவிட்டாளாகலின், இப்போது அறியேனாயினேன் என்பது. தொடல் விடல் - விதி விலக்குகள்.

கருக. சொல்லியபடி யாம் செல்லுதல் தவறுதலடையின்; வற்புறுத்தியும் நாளும்மணந்தும் உன்னி யுன்னிக் கணத்தில் நெடுங்காலம் கழிவன போலும் தேமொழிக்கு என்க.

ககூங. மற்று, உம் - அசைகள்.

ககூச. விம்மாந்து - கலங்கி. ஆசும் - ஆசுறுகின்ற. நிறுத்த வல்லா - நிறுத்தாத.

கசுடு. தனவ - தன்னுடையன. எனவ - என்னுடையன. (தொல். புணரியல் - கரு.)

கசுஅ. அறிவாய் - அறிதற்கண்; அல்லது அறிதல்.

கஅஉ. பிரிந்தாலனைய துன்பமும் சேர்ந்தாலனைய இன்பமும் உலகிலில்லையென்பது. பெயர்ந்து-மீட்டும்.

கஅடு. உறுதக - உறுக.

கஅகூ. பண்ணை - கூட்டம்.

ககூக. அடங்கிய - அமைய.

உ0டு. நாற்ற முதலிய எழுவகையின் ஐயமுற்றோர்தலை இது முதல் எழு செய்யுட்களில் முறையே காண்க. கலம்பகம் - நறுஞ்சாந்து. மழுகும் - மழுங்கும்.

உ0சு. தோற்றம் - கூட்டத்தாற் பிறந்ததோரழகு. உளை - உழை; இது எழிசையினொன்று. கொங்கை வீங்கிற்று என இயையும்.

உ0எ. ஒழுக்கம் - தெய்வந் தொழாமை முதலியன.

உ0அ. நோலை - அப்பவர்க்கம்; நோலை என்பது நொலையல் எனவும் பெயர் பெறும்.

உ0கூ. தன்னகம் - தன்கருத்து. விள்ளாமை - சொல்லாமை.

உக0. காழ்சிறைக்கால் - வலிய கரையோடுகூடிய கால். விழைய - நிகர்க்க. முன்பு படர்வாள் இப்பொழுது தங்குவள் என்பது.

உகஉ. சாயல் - நிறம்.

உகஅ. வாரித்தல் - ஆணையிடல்; தடுத்தல்.

உஉ0. மயிலடி பொறித்தல், உற்பலம் வரித்தல் இவை நகக்குறி; மணிகிடத்தல், மூடிகம் சேர்த்தல் இவை பற்குறி.

உஉங. மதி யுடம்படுத்தல் - புணர்ச்சியுண்மை அறிந்தாராய்ந்து பாங்கிதன் மதியை யுடன்படுத்தல். முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், இருவருமுள்வழி யவன்வர வுணர்தல் என்றுங்கு மூவகைத்தே பாங்கி மதியுடன்பாடு.

உஉசு. திருமால்தனக்குப் புதல்வியும் பெருமான்றனக்கு மருகியும் ஆதல்பற்றி இங்ஙனம் சிந்தியா நிற்பர் என்பது.

உஉஎ. குற்றியலுகரங்களுள்ளும் வன்றொடர்க் குற்றுகரம் வல்லொற்றினை முதலிலுடைய மொழியொடு புணருங்கால் அரை மாத்திரையினுங்குறுகும். (உ - ம்) செக்குக்கணை (தொல். மொழிமரபு-ச.)

உஉகூ. உலகுரைத்து - உலகியல்பு கூறி. மலைத்தல்-பொருதல்.

உஙச. யான்தபுக - யான்தபுதலையடைய; தபுதல் - அழிதல்.

உசஉ. அளைய வளாய்-கலத்தற் பொருட்டு வளைந்து.

உசங. இவற்று-ஆசைப்பெருக்கத்தையுடைய.

உசச. மூத்த மயிலுக்குக் கலாவம் உண்டெனல்.

உசஅ. துளும்பல் - அலைதல்.

உடுஉ. ஓரை - மகளிர் விளையாட்டு.

உடுஎ. தோரை - மூங்குலரிசி.

உசு0. பஞ்சாய்-கோரை. நெஞ்சு ஆயலை - மனமே ஆயாதே.

உசுசு. தோற்ற-தோற்றுவிக்க.

உசுஎ. வல்லின் - வலிமையுடையையாயின்.

உகூக. விளரிய - வெளுத்த. தளரிய - தளர்ந்த. வளரிய - வளர்ந்த.

௩0௧. ஆடுகம் - ஆடுவம்.

௩0௭. புகுதக - புகுக.

௩௧௪. நல்குகம் - நல்குவம்.

௩௧௯. சில் - முழக்கம்.

௩௨0. பரத்தரும்-பரவாநிற்கும்.

௩௨௧. அயர்த்தல் - வெறுத்தல். கைத்தவர்மாட்டும் க்ஷணநேரமே கறுப்பவர் என்பது.

௩௨௩. மருமம் - இரகசியம். படர்ந்தும் - சிந்தித்தும்.

௩௨௪. துயவு - அறிவின்றிரிபு.

௩௨௫. நிகழ்ந்தின்று - நிகழ்ந்தது இன்று.

௩௨௯. வரைவு கடாதல்-வரைவு கூறி வினுதல்.

௩௩௪. முன்னுவகை - முற்படாதபடி.

௩௩௮. பேம் - பயம்.

௩௪௯. பழுவக்கனல்-காட்டுத்தீ.

௩௪௭. நீவல் - நீங்குதல்.

௩௫௧. எமம் - காவல். பேநுரை. அடலை - நீறு.

௩௯௨. அயராதி - மறவற்க.

௩௯௩. வெற்றம் - சயம்.

௩௯௪. இணர்த்து - இணர் கொண்டு. தளித்தல் - துளித்தல்; தளி - துளி.

௩௭௪. நக்காப்பது என்பதில் ந சிறப்புப் பொருட்டு.

௩௭௯. வந்தென - வர.

௩௮0. புகன்று - விரும்பி. சோடை - ஆணிமுதலியவற்றின் தறிவு; தடை.

௩௮௨. 'அன்பர் வந்து அருணல்கும்' எனப் படர்க்கைப் பன்மையில் செய்யும் என் முற்றுச் சேறல்.

௩௯௨. பிளை - தலைக்காவல். இறும்பு - காடு; காட்டோடு கூடிய மலை யென்பது. இறுத்தல் - சேர்தல்.

௩௯௫. அட்டிய - சொரிந்த.

௩௯௭. என்னும் - யாதும்.

௪0௩. அயம் - நீர்.

௪0௯. எடுப்பிய - எழுப்பிய.

௪0௭. பருவரல் - பருவரலைச் செய்யற்க.

௪0௮. கடுகேல் - கடுகற்க.

௪௧௩. மாயினும் - மறையினும்.

௪௧௫. அல்லகுறி - புள்ளெழுப்பல், நீரிற் கல்லெறிதல், இளநீர் வீழ்த்தல் முதலியன.

௪௧௭. தலைவனை - தலைவனையுடையை.

௪௧௮. மாய - மறைய.

௪௧௯. துயவு - அறிவு வேறுபடுகை.

௪௨௧. காணன்மார் - காணுதலைச் செய்தாரில்லை.

௪௩0. எசறவு - துக்கம். நிணத்தல் - பூரித்தல்.

௪௩௯. பொதி - அம்பலம்.

௪௩௭. வம் - வா என்னும் முன்னிலை.

௪௩௯. புரை - களவு.

௪௪௭. அஞ்ஞை - தாய்.

௪௪௯. வாய் - சத்தியம்.

௪௫௧. நிணத்தல் - கொழுத்தல்.

௪௫௭. இருத்தல் - துடைத்தல்; புடைத்தல்.

௪௫௯. தூம்பு - இடுக்குவழி.

௪௯௭. முருகியம்-குறிஞ்சி நிலப் பறை.

சஅச. சொல் அரிப்பு - சொற் குற்றம். கட்டு - ஓர்வகைக் குறி; கட்டுபிடித்துப் பார்த்தல்.

சஅரு. பிரப்பு - கொள்கலத்திலே குறுணி ஒவ்வொன்றாக வைத்த பல்லுணக் கூடை.

சஅஅ. கழங்கு-வெறியாட்டாளனுடல். வெறிப்பு - ஆவேசமாதல்.

சகூங. குறுவல் - குமைப்பேன் என்னுந் தன்மையொருமை.

சகூச. வாரி - வழி. ஒக்குதல் - உயர்த்தல்.

சகூசு. அலதூஉம்-அல்லாமலும்.

சகூஅ. வருட்டல்-வற்புறுத்தல்.

ரு0ங. எலுவி-தோழி. வரித்து-எழுதி.

ரு0சு. இரீஇ - இரித்து.

ரு0எ. திவண்டல் - துவளல்.

ருகஎ. எட்டையின் தீர்-துன்பத்தினின்றும் நீங்குவாயாக.

ருச0. வன்புறை-வற்புறுத்தல்.

ருருக. அல்லாக்கும்-துக்கிக்கும்.

ருருஎ. மாமை - அழகு.

ருசுஅ. எதின்மை - பிரியவீனம்; வெறுமை.

ருஎ0. என்னையர் - தந்தையர்.

ருஎசு. ஓம்படுத்தல் - கையடை; அடைக்கலம்.

ருஎஅ. பேணி - பேணுவாய்.

ருஅக. தொண்டக நல் இயவர்-தொண்டகப் பறையினர்.

ருஅஎ. எமி - தனி.

ருகூக. அறத்தொடு நிற்றல் - முறையே வெளிப்படுத்தி நிற்றல். உருவி - அச்சமுற்று; உருவு - அச்சம்.

ருகூஎ. தமியாத - தனித்தகலாத.

சு0க. மந்திரம் - கடல்.

சு0ங. ஒண்ணுதல் - ஒன்றுதல்.

சு0கு. புகறல் - விருப்பம்.

சுகங. எசறவு - துக்கம்.

சுகஎ. வீளை - ஓசை.

சுஉங. தாரை - வழி. சவட்டல் - அழித்தல்.

சுச0. விலக்கம் - மாற்றல்.

## வள்ளிநாயகி திருமணப் படலம்

எ. எருக்கல் - தாக்கல்.

அ. போத்து (பொத்து)-தவறு.

ககூ. வண் தல மருத் துகள் - வண்மையுடைய பூமியில் வாசனைப் பொடிகள் என்னுந் துகள்.

கஅ. ஒலிந்த - ஒலிபெற்ற.

௨0. முற்றுறீஇ-முற்றுவித்து.

௨க. அனிதம் - அளவின்மை.

௨கூ. புரை - தாழ்வு.

ஙஉ. இயவர் - தோற்கருவியாளர்.

சங. யாத்தொறும் - யாக்குந்தொறும்.

சரு. துவற்றல் - துவலைவிடுதல்

ருச. தொடரி - மாலை.

ருகூ. உழால் - உழலல்.

சு0. செண்ணம் - வடிவு.

சுஉ. இயவுள் - கடவுள்; தலைவன்.

சுரு. கவைஇ - கவிந்து.

சுஎ. உத்தன் - உரியவன்.

எஎ. ஏற்றல் - இணங்கல்.

அஉ. தன்னையர் - தமக்கையர்.

அஅ. நொண்டல் - முகத்தல்.

க0சு. அரத்தகம் - செம்பஞ்சு.

க0எ. கண்டென - கண்டு.

கக0. இலிற்றல் - துளித்தல். குளிற்றல் - ஒலிப்பித்தல்.

கக்க. சிதர்தல் - சிந்துதல்.

ககரு. செழுந்து - செழுமை. மஞ்சு - ஈண்டு வெண்மேகம்.

ககசூ. சுப்பிரம்-ஒளி. முரஞ்சல்-முதிர்வு.

ககஅ. மலைத்தல் - ஒத்தல்.

ககக. தைத்தல் - எழுதுதல்; பொருத்தல்.

கஉஎ. இசும்பு-வழுக்கு. தணத்தாள் - தணப்பித்தாள்.

கஉஅ. ஓமாலிகை - முழுகுதற்குரிய நீரிலே இடப்படும் முப்பத்திரண்டு வாசனைப் பொருள்களாலாகிய சுகந்தப் பொடி.

கஙக. குலாய் - குலாவுவித்து.

கஙரு. மைத்தல் - கறுத்தல். வைத்தல் - கூரிதாதல்.

கசசூ. மஞ - மணிப் பொது. தோக்கை - முன்றானை. விரீஇயினள் - விரித்தாள்.

கசகூ. சேமம்-இன்பம். ஒப்பித்தல் - ஒப்பனை செய்தல்.

கருஎ. தெளிர்ப்ப - ஒலிப்ப.

ககூக. அந்தித்தல்-பொருந்தல்.

ககூஉ. விட்டரம் - ஆசனம்; ஒருபிடியளவான தருப்பை.

கஎக. அச்சுதம்-அறுகும் வெள்ளரிசியும் கூட்டி யணிவது.

ககூஉ. வெள்ளை - மேற்கட்டி.

ககூச. மிளிர்ப்ப - அழிய. தெளிர்ப்ப - ஒலிப்ப. கைவள்ளி - கைவளை.

ககூரு. பாண்டில் - கைத்தாளம்.

ககூசூ. பீலி - சிறுசின்னம்.

உ0ரு. சோடை - சந்தோஷம்.

உ0கூ. குவவு - பெருமை. அகைத்தல்-அறுத்தல்; முறித்தல். அவவு-அவா. கவவு-அகத்திடுதல்.

உககூ. முழுவி - முத்தமிட்டு; (கோவையார்-உஉஎ.)

உஙஉ. பொருநுதல் - உடன்படல்; பொருந்தல்.

உரு0. கறுப்பு - சினக்குறிப்பு. வெளிறு - அறிவின்மை.

உருச. இமைக்கும் - இமைக்கச் செய்யும்.

உகூங. முழுவல் - உழுவல்.

## விடையருள் படலம்

கூ. அந்தித்தல் - முடிதல்.

கக. பொருநிய - பொருந்திய.

கஉ. மேக - மேவுக.

ஙரு. விஞ்சல் - மிகுதல்.

## நாரதனருள்பெறு படலம்

எ. அரம்பு - செருக்கு.

அ. விதும்பு - நடுக்கம்.

க0. இலைப்புரை கிளைத்தல் - தேடுதல். 'ஈட்டமும் வேலு மாக விலைப்புரை கிளைத்திட் டோமே.' (சிந்தா. கனக - கஅரு)

கச. தெரித்தி - தெரிதலைச் செய்வாய்.

உ0. எஃகல் - ஏறுதல்.

உக. வயவு - சிங்கம்.

உங.அணத்தல்- தலையெடுத்தல். பச்சை - தோல்.

உச. செது - அழித்த.

உகூ. அமரனை - அமரனுந்தன்மையை.

ஙக. கடுத்த - ஐயங்கொண்ட.

சஎ. புயத்தல் - பெயர்த்தல்.

ருங. தழி - தழுவி. உறீஇ - உறுவித்து.

ருஎ. ஓட்டந்தான் - ஓட்டந்தந்தான்; ஓடினன்.

கூஎ. கலாய்த்தல் - கலகஞ்செய்தல்.



# சில செய்யுட்களுக்குப் பொழிப்பு

## நாடு

சக. உணவாதிகள் ஒழிந்து தவத்தால் வாடியவரே சகலவின் பழும் எய்தப் பெறுவர் என்பது எந்நூலினும் உளதாதற்றன்மை யால் இன்ப மெய்தக் கூடுவார்க்கு முன்னர்த்துயர்செய்தல் முறைமை யாதலைத் தெரித்தாற் போன்று இவ்வசோகமும் உணவாதிகள் ஒழியத் துயர்செய்வதாயிற்றென்ற படி. எனவே, கணவரைப் பிரிந் தார் முன்னெய்துந் துயர் உண வாதிகள் ஒழிதலேயாகலின் முத னிலத்திற்கு உரிமை பூண்ட தான் அத்துயரை விளைத்து இன்பவிருத் தியை நல்காநின்றது. தான் சோ கத்தை நிவர்த்தித்தலின் அசோக மெனப் பெயர் பெற்றிருத்தல் பற்றி யென்பது. ஆகவே உணவு ஒழிவும் கிடையும் பசப்பும் நினைந்து புலம்பலும் உயிரிழத்தலும்அசோக மாதியவற்றால் முறையே யெய்து மென்பது கருத்து.

## நகரம்

கூ௦. இவ்வணிகர் துலாத்தை யணிந்தவரென அவர் தம் மேன் மாளிகையில் துலாராசி ஊர்ந்து செல்லும். சோமதிக்குக் கதிபனு கிய குபேரன்பாற் றிகழும் அரும் பொருள்களெல்லாம் நிறைந்துள என்று சோமனும் அம்மேலிடங் களில் ஊர்ந்து செல்லும் இனம் பற்றி எ - று. துலாம் - தாரசும், அவ்விராசியும். சோமதிக்கு - வட திக்கு. இது சொல்லொப்புமை பற்றி வியந்தபடி. என என் பதைத் துலாமணிந்தவர் என்புழி யுங் கூட்டுக.

கஉஉ. வைப்பெங்கும் வளர்க் கப்படும் பெண்மானினத்தோடு சந்திரனிடத்துள்ள முயல் இன மென மருவும். பெண்குதிரை மேனியை இடபராசி புல்லும். விரும்பத்தக்க பிடியை அச்சுவினி நாள் ஊர்ந்து செல்லும். எ-று. எனவே, சந்திர மண்டலமாதியவற் றை அளாவப்பெற்ற அதியுன்னத மாளிகைமேல் மகளிர் விளையாட் டின் பொருட்டு இளம் பருவத் தனவாகிய பெண்மானுதிய வளர்க் கப்படுகின்றன வெனவும் அவற் றின்மேல் முயலாதிய ஊர்ந்து சேறல் மணந்து சேறல் போல்வ வெனவும் குறிப்பித்தபடி. சந்திர னிடத்துள்ள களங்கம் மானும் முய லும் மானுதலின் கலையினன் முய லினன் என வழங்குவர்.

கஉ௩. தம்பால் கற்பு வளர்தலு டைமையைக் காட்டுவான் தம்மு டைய கைகளால் வளர்க்கப்படும்

முல்லையின் மலரையணிந்த கூந்தலரும் கருங்குவளை மலரையணிந்த செவியினருமாகிய மகளிர் தங்கணவர் அகலாது தம்பால் திகழப் பெறுதலால் மதனை வென்று (அவனை நோக்கி) இம்முல்லை குவளைகளை நீ ஒளியிழந்து அம்பாக எவற்கவெனப் பறித்தணிந்துளார் ஒத்தார் என்றவாறு. மகளிர் கற்பை வளர்த்தலின் முல்லை கற்பெனப் பெயர் பெற்றதென்று தாமே யதனை வளர்த்து அம்மலரை யணிகின்றன ரென்பது. முல்லை குவளை மகளிர்க்கு உரித்தாதலை, * 'முல்லை யங்தொடை யருந்ததி' † 'பானலஞ் செவிமிசை யணிந்தனள்' என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுள்களானும் உணர்க. எல்பக்கு-ஒளியிழந்து; ஒளி - வெற்றியாற் பெற்ற பிரதாபம்.

## நைமிசம்

உ. வேதிகையைப் பருந்து படுத்து அக்கருடன்மீது குண்டம் அமைத்து அவ்வியாகத்தின் பொருட்டுச்சேதித்தற்குச்செறித்த ஆடும் பறப்பை யாதியவும் திக்கு விஜயத்தின் பொருட்டுச் செலுத்தற்குக் கொண்டு வரப்பட்டுள்ள குதிரையும் நெருங்கியன வகதலை நோக்கி இவற்றைப் போல நம்மையும் அழிப்பரென்று ஒளிப்பன போல விலங்கும் புள்ளும் ஊர்வனவும் நெடுந்தூரங் கடந்து செல்லும் என்றவாறு. யாகத்தீயின் வெம்மையும் புகையும் குழுமலால் வருந்தியோடும் விலங்காதியவற்றை இங்ஙனம் அஞ்சியோடுவனவாகக் கூறினர். ஆன் என்பது பசுப்பொதுமைப் பெயராய் ஈண்டு அசத்தைச் சுட்டி நின்றது. பறப்பை - யாக குண்டத்தின் கீழ் வேதிகை. அது கூர்மமாதிய இடக்கை போலக் கட்டப் படுதலின் கூர்மசயனம் கருடசயனம் கங்கசயனம் சேஷசயனம் என நான்கு வகைப் படுமாதலின், 'கூர்மமாதியும்' என்றார். விறத்தல்-நெருங்கல். கருடனாகிய பறவைபோலமைக்கப் படும் வேதிகையைப் பறப்பை யெனலைக் கந்தபுராணம் வேள்விப் படலம் கூ ஆவதினும், நெய்விடு பாத்திரத்தையும் பறப்பை யென வழங்கலை கூடி புராணம் சாலைசெய் படலம் உகூ ஆவதினும் காண்க.

## ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள்

### எழுதிய குறிப்புரை

### முற்றிற்று.



---

* பிரபுலிங். கைலாசகதி - உஎ.

† பிரபுலிங். மாயைபூசைகதி - கூ.

# நந்தியுபதேசப் படலத்துவரும்

## சிலேடைச் செய்யுட்களுக்கு

ஸ்ரீமான் பாலவநத்தம் ஜமீன்தார்

## பாண்டித்துரைத் தேவரவர்கள்

* எழுதி வெளியிட்ட உரை.



## இருபொருட் சிலேடை

'காத்தலை ... ... ... ... புரையும் வாரி.'

இதன்பொருள் : வாரி - நந்தி நந்தினி நதியானது, காத்தலை மருவலானும் — (உயிர்களை யெல்லாம்) காக்குந் தொழிலை யடைதலாலும், கடிதடம் தோற்றலானும் — சிறந்த மலையிடைப் பிறத்தலாலும், அலை பூத்து மலைதலானும் - (தன்கண்) அலைகளுண்டாகி யொன்றோடொன்று பொருதலாலும், போகமும் புணர்த்தலானும் — (தான் உணவாவது மன்றிப்) பைங்கூழ்களின் விளைவையும் ஆக்குதலாலும், ஏத்து விண்ணவரும் தாழ இன் இசை எழுப்பலானும் — புகழப்படும் தேவரும் வந்து தன்கட் படியுமாறு சிறந்த புகழை உண்டாக்கலாலும், கூடொடு இயறலானும் — பூமியை அகழ்ந்து செல்லும் செலவினாலும், கூத்தியர் புரையும் — நடனமாதரை நிகர்க்கும் என்றவாறு.

எவ்வாறெனில் — (அக்கூத்தியர்) காத்தலை மருவலானும் — (பொழில் விளையாட்டு விருப்பாற்) சோலையிடைச் சேர்தலாலும், கடிதடம் தோற்றலானும் — (புனல் விளையாட்டு விருப்பாற்) சிறந்த தடாகங்களிற் பொருந்தித் தோன்றலாலும், பூத் தலை மலைதலானும் - மலர்களைத் தலையிற் சூடுதலாலும், போகமும் புணர்த்தலானும் — போக சுகத்தையும் நல்குதலாலும், ஏத்து விண்ணவரும் தாழ இன் இசை எழுப்பலானும் — உயர்த்துக் கூறப்படும் கந்தருவரும் நாணுமாறு இனிய கானத்தைச் செய்தலாலும், கூத்தொடும் இயறலானும் - நடனத் தொழிலோடு அமைதலாலும் என்க. வாரி - ஆகுபெயர்.

---

* செந்தமிழ் - முதற்றொகுதி - பக்கம், சகரு.

## முப்பொருட் சிலேடை

**'கோக்கின மிறுத்த ... ... ... ... வாரி.'**

இதன்பொருள் : தொக்க பல் மணியும் சாந்தும் துறை துறைகளுற்றும் வாரி — பல தொகுதியாகிய மணிகளையும் சந்தனக் கட்டைகளையும் நீர்த்துறைகள் தோறும் செறியச் செய்யும் நந்தி நந்தினி நதியானது, கொக்கினம் இறுத்தலானும் — கொக்கின் குழாங்கள் (மீன் கவர் நசையாற் றன்னிடத்து வந்து) தங்குதலானும், தோலொடு குலவுலானும் — யானைகளையுருட்டிச் செல்லுதலாலும், அக் கரை வளைத்தலானும் — அதன் கரைகளைக் கோடுமாறு சிதைத்தலாலும், ஆடு உறும் அரவத்தானும் — (பலரும்) நீராடும் முழக்க முடைமையாலும், முக்கண் எம்பெருமான் செவ்வேல் முருகன் என்ற இருவர் போலும் — மூன்று கண்களையுடைய எமது பெருமானாகிய சிவபிரானும், செவ்விய வேலைத் தாங்கிய முருகக் கடவுளும் ஆகிய இவ் விருவரையும் ஒப்பாகும் என்றவாறு.

எவ்வாறெனில் — (அம்முக்கணெம்பெருமான்) கொக்கு இனம் இறுத்தலானும் — பகாசுரனையும் அவன் இனத்தையும் அழித்தலாலும், தோலொடு குலவலாலும் — தோலை உடையாகக் கொண்டு விளங்கலாலும், அக்கு அரை வளைத்தலானும்—சங்குமணியை அரையிற் சுற்றிக்கோடலாலும், ஆடு உறும் அரவத்தானும் — ஆடும் இயல்பினையுடைய பாம்பையணிதலாலும்; (அம் முருகக்கடவுள்) கொக்கு இனம் இறுத்தலானும் — மாமர வடிவு கொண்ட சூரனை அவனினத்தோடு சங்கரித்தலாலும், தோலொடு குலவலானும் — அழகோடு விளங்கலாலும், அக் கரை வளைத்தலானும் — எலும்பணியையுடைய சிவபிரானை வணங்கச் செய்தலாலும், ஆடுறும் மரவத்தானும் — அசைகின்ற கடப்பம் பூமாலையைத் தாங்கலாலும் என்க.

கொக்கினம் - நதிப்பொருளில் ஒன்றன் கூட்டத்து ஆறும் வேற்றுமைத் தொகை ; மற்றவற்றுள் உம்மைத் தொகை. மராவென் பதன் ஈறு குறுகி அம்முச் சாரியை பெற்றது. மரவம் கடம்பு ஆதல் சிலப்பதிகாரம் காடுகாண் காதை ௨0௭, 'குரவமுமரவமுங் கோங்கமும் வேங்கையும்' என்பதனாற் காண்க. என்ற என்னும் பெயரெச்சத்தின் ஈறு விகாரத்தாற்றொக்கது.

## நாற்பொருட் சிலேடை

**'தானங்கைக் ... ... ... ... வெள்ளம்.'**

இதன்பொருள் : பேனம் கொண்டு ஆர்த்துப் பைத்து பெரும் கடல் மடுக்கும் வெள்ளம் — நுரைகளைக்கொண்டு ஆரவாரித்து விரித்து

பெரிய கடலை நிறைக்கும் நந்தி நந்தினி நதியானது, தானம் கைக்கோட லானும்—(தான் செல்லும் நெறிக்கணுளவாம் பல) இடங்களையும் கைக் கொள்ளுதலாலும், தருவரை அடக்கலானும்—தருதியாகிய கரைகளால் அடக்கப்பெறலாலும், கானம் கொள் தரு இல் மாதர் களி தழைப்பித்த லானும் — காட்டிலுள்ள தருக்களுக்கும் வீட்டிலுள்ள மகளிர்க்கும் மகிழ்ச்சியைப் பெருகச் செய்தலாலும், வானம் கொள் இறை மால் வேழம் மூவரும் மானும் என்ப—விண்ணவர் (இறையெனக்) கொள்ளும் இந்திரனும், மாயவனும், யானையும் ஆகிய இம் மூவரையும் ஒக்கும் என்று சொல்லுவார் என்றவாறு.

எவ்வாறெனில் — (அவ்விந்திரன்) தானம் கைக்கோடலானும் — தெய்வலோகத்தைத் தன் வசமாக்கிக் கொள்ளலாலும், தருவரை அடக்க லானும் — தருதியுடையனவாய மலைகளைச் (சிறையரிந்து) அடக்குத லாலும், கானம் கொள் தருவின் மாதர் களி தழைப் பித்தலானும் — வாசனை கொண்ட ஐந்தருவின்கீழ் வாழும் தெய்வமகளிர்க்கு மகிழ்ச்சியை விளைத்தலாலும்; (அம்மாயோன்) தானம் கைக்கோடலானும் — (மாவலி யளித்த) தானத்தைக் கைக்கொள்ளுதலாலும், தருவரை அடக்க லானும் — அசுரரை ஒடுக்குதலாலும், கானம்கொள் தருவின் மாதர் களி தழைப்பித்தலானும்—மணம் பொருந்திய பாரிசாதத்தருவினால் (ருக்கு மிணி சத்தியபாமை என்னும்) மாதர்க்கு மகிழ்ச்சியை ஓங்கச் செய்த லாலும்; (அவ் யானை) தானம் கைக்கோடலானும் — மதநீரைக் கையின் கொள்ளுதலாலும், தரு வரை அடக்கலானும் — தருதியுள்ள மூங்கிலா கிய தோட்டியால் அடக்கப்பெறுதலாலும், கானங்கொள் தருவின் மாதர் களி தழைப்பித்தலானும்—காடு மண்டிய தருக்களில் அவாவையும் மதத்தையும் மிகுவித்தலாலும் என்க.

கொண்டு, ஆர்த்து, பைத்து என்னும் வினையெச்சங்கள் மடுக்கும் என்னும் பெயரெச்ச வினைகொண்டன. இறை மால் வேழம் என்னும் எண்ணுத் திணைவிரவுப்பெயர் மூவர் என உயர்திணை முடிபு பெற்றது. (தொல். சொல். கிள - ௫௧.) 'பலவயி னானு மெண் ணுத்திணை விரவுப்பெயர், அஃறிணை முடிபின செய்யுளுள்ளே' என்பதன் உரையுள், "பலவயினானும்" என்றமையாற் சில வயினானும் திணைவிராய் எண்ணி உயர்திணையான் முடிவனவுங் கொள்க. என்பது நச்சினார்க்கினியம். மூங்கில் வரைகளை யுடைமையால் வரையெனப் பட்டது. இதனைத் திருமுருகாற்றுப்படையில், 'மால் வரை நிவந்த சேணுயர் வெற்பில்' என்பதற்கு, நச்சினார்க்கினியர் கூறிய உரையுட் காண்க. அது ஆகு பெயராய்த் தோட்டியை யுணர்த்திற்று.

## ஐம்பொருட் சிலேடை

'கடம்படு ... ... ... ... நீர் வெள்ளம்.'

இதன்பொருள் : குரைநீர்வெள்ளம் — ஒலிக்கும் தன்மையை யுடைய நந்தி நந்தினி நதியானது, கடம் படு தோற்றத்தானும் — சுர நெறியை யழிக்கும் தோற்றத்தாலும், கடலகம் புகுதலானும்--கடலினுட் சென்று புகுதலாலும், இடம்படு கோட்டினனும் — பரந்த கரைகளை யுடைமையாலும், இபம் உகல் நேர்தலானும் — மரக்கிளைகள் முறிதலைச் செய்தலாலும், தடம்படு புழைக்கைச் செம்மல் சண்முகன் பொதியத் தோன்றல் குடம்படுமால் இந் நால்வர் போன்றது — வளைவு கொண்ட துளை பொருந்திய கையினையுடைய தலைவனாகிய விநாயகக் கடவுளும், ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளும், பொதிய வரைக்குத் தலைவ னாகிய அகத்திய முனியும், குடக்கூத்தில் விருப்புடைய நெடுமாலும் ஆகிய இந் நால்வரையும் ஒத்தது என்றவாறு.

எவ்வாறெனில் — (அவ் விநாயகக் கடவுள்) கடம்படு தோற்றத் தானும் — மதநீர் பெருகும் காட்சி யுடைமையாலும், கடல் அகம் புகுத லானும் — கடல் நீர் தம்முள்ளே புகுதலாலும், இடம்படு கோட்டின னும்—இடப்புறத்தே தங்கும் மருப்புடைமையாலும், இபம் முகன் நேர்த லானும் — கயமுகாசுரன்றன்னை யடர்த்தலாலும்; (அம்முருகக் கடவுள்) கடம்பு அடு தோற்றத்தானும் — கடப்பம்பூமாலை யடுத்துள்ள காட்சி யாலும், கடல் அகம் புகுதலானும் — (சூரசம்ஹாரத்தின் பொருட்டுக்) கடல் நடுவிலுள்ள மகேந்திரத்திற்குச் சென்றமையாலும், இடம்படு கோட்டினனும் — மலையை யிடமாகக் கொள்ளுதலாலும், இபமுகன் நேர்தலானும் — தாரகாசுரனை யெதிர்ந்து கோறலாலும்; (அவ்வகத்திய மாமுனி) கடம்படு தோற்றத்தானும் — குடத்திலே உற்பவித்தலாலும், கடல் அகம் புகுதலானும் — சமுத்திர ஜலம் (ஆசமிக்கப்பட்டுத்) தம் முள்ளே புகுதலாலும், இடம்படு கோட்டினனும்—இடமகன்ற பொதிய மலையை யுடைமையாலும், இபமுகன் நேர்தலானும் — யானை முகக் கடவுளைக் (கரகங்கவிழ்த்தலால்) எதிர்தலாலும்; (அந் நெடுமால்) கடம் படு தோற்றத்தானும் — முல்லை நிலத்துக்குத் தெய்வமாகத் தோன்றுத லாலும், கடல் அகம் புகுதலானும் — பாற்கடலிற் புக்கிருத்தலாலும், இடம்படு கோட்டினனும் — இடக்கரத்திற்றரித்த (பாஞ்சசன்னியம் என்னும்) சங்கமுடைமையாலும், இபம் உகல் நேர்தலானும் — குவலயா பீடம் என்னும் யானையை அழித்தலாலும் என்க. செம்மல் - ஆகு பெயர்.

## அறுபொருட் சிலேடை

'கலைவளம் ... ... ... ... நீத்தம்.'

இதன்பொருள்: பொருநீர் நீத்தம் — அலைகள் பொருகின்ற நீர்ப்பெருக்கினையுடைய நந்தி நந்தினி நதியானது, கலைவளம் கோடலானும் — விலங்கேற்றினங்களையும் வள்ளங்களையும் தன்கட்கொண்டு செல்லுதலாலும், (இனிக் கலை வளம் - தன்னுற் சிதைவுண்ட பலவள முடைப் பொருள்கள் எனினும் ஆம்.) கரம் அலை இறுத்தலானும்—அலைகள் தனக்குக் கைகளாகத் தங்குதலாலும், நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பினுனும் — உலகம் நிலையுறுவதற்கு ஏற்ற தோற்றம் உளதாகு மியைபினுலும், (தான் உலகம் நிலையுறத் தோன்றிய இயைபு என்றபடி.) அலர் புகழ் ஈசன் மாயோன் அகத்தியன் மாதர் வெற்பு என்று இலகும் இவ்வைவரோடும் இணைவது — விரிந்த புகழினையுடைய சிவபிரானும், கரியமாலும், அகத்தியமுனியும், மகளிரும், மலையும் என்று விளங்கும் இவ் வைவருடனும் ஒப்பாம் தன்மையுடையது என்றவாறு.

எவ்வாறெனில் — (அவ்வீசன்) கலைவளம் கோடலானும்—ஒருகலையளவாய்த் தேய்ந்து நின்றமதி (தன்னிடத்துச் சரண்புக்குச்) சிறப்புறுதலாலும், கரமலை இறுத்தலானும்—விடத்தினுலுண்டாகும் மாறுபாட்டையொழித்தலாலும், நிலன் இலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பினுனும்—உலகம் அழிவெய்தற்கு ஏற்றகாட்சி தன்கண் நிகழும் இயைபினுலும்; (அம்மாயவன்) கலைவளம் கோடலானும்—சிறந்த (பொன்) ஆடையை யுடுத்தலாலும், கர மலை இறுத்தலானும் — கையின்கட் கோவர்த்தனகிரி குடையாகத் தங்கினமையாலும், நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பினுனும்—உலகம் நிலையாவதற் கேற்ற (பல) அவதாரங்களுள்ள இயைபினுலும்; (அவ்வகத்தியமுனி) கலைவளம் கோடலானும் - (தன்னுல்) பலவாய நூல்களும் வளம் பெறுதலாலும், கரம் அலை இறுத்தலானும்—கரத்தாற் கடலை ஆசமித்து வற்றுவித்தலாலும் (அலை - ஆகுபெயர்), நிலன் நிலை ஆகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பினுனும்—உலகம் சமநிலையாகும் காட்சி கொள்ளும் இயைபுடைமையாலும்; (அம்மாதர்) கலைவளம் கோடலானும் — சிறந்த மேகலையை அணிதலாலும், கரமலையிறுத்தலானும்—யானை மத்தகம் போலும் தனங்கள் தம்பாலுண்மையாலும், (கரமலை - உவமையாகுபெயர்), நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பினுனும் — உலகம் நிலைத்தற்குக் காரணமாகிய பிறப்புண்டாகும் சம்பந்த முடைமையாலும்; (அம்மலை) கல் ஐவளம் கோடலானும் — மாணிக்க முதலிய கற்களையும் ஐவகை மலைபடு பொருள்களையும் கொள்ளுதலாலும், கரமலை இறுத்தலானும்—யானைகள் (தன்னிடத்துத்) தங்குதலானும், நிலன் நிலையாகும் தோற்றம் நிகழ்தரு புணர்ப்பினுனும் — நிலத்தின்கண்ணே அசைவற்ற காட்சி நிகழும் இயைபினுலும் என்க.

ஐவளமாவன் — கறி, கோட்டம், குங்குமம், காரகில், தக்கோலம் என்பன. (கறி - மிளகு.)

பி. பாண்டித்துரை.

# தணிகைப் புராணம்

## சுன்னுகம் - அ. குமாரசாமிப் பிள்ளையவர்கள்

எழுதி வெளியிட்ட

## * ஆராய்ச்சி.

### விநாயக வணக்கம்.

'மும்மதத்த ... ... ... ... பணிவாம்.'

தணிகைப் புராணமாவது, தணிகை யென்னுஞ் சுப்பிரமணிய ஸ்தல சம்பந்தமாய் முன்னிகழ்ந்த சரித்திரத்தை அறிவிக்கும் ஒருநூல். தணிகைக்குச் சீபூரணகிரி முதலிய வேறு பெயர்களும் உள. சுப்பிரமணியக் கடவுள் சூரன் முதலிய அசுரர்களோடு செய்த போரினின்றும் தணிந்துவந்து இருத்தலாலே தணிகை எனப்பட்டது.

புராணவரலாற்றுப் படலத்திலும், 'அமர் தணிதலிற் றணிகை' என்ருர். இது காஞ்சிபுரத்திற்கு வடக்கே இரண்டு யோசனை தூரத்தில் இருக்கின்றது. புராணம் — முன்னிகழ்ந்தது. இதனைத் தமிழ்ப் பாஷையிலே செய்யுள் வடிவமாகச் செய்தவர் திருவாவடுதுறை யாதீனத்துக் கச்சியப்பமுனிவர். இவர், 'சீவக சிந்தாமணியைப் பேரிலக்கியமாகக் கொண்டாடுதலைப் பார்த்துத் தமிழில் அவ்வித மாட்சிமை பொருந்திய இலக்கியம் பிறிதின்மையான் மனக்கவற்சியுடையராய், அக்குறையைத் தாமே முடித்தல் வேண்டுமென்று திருவுளத்தமைத்து இத்தணிகைப் புராணத்தை அருளிச் செய்தார்' என்பர்.

இப் புராணத்திலே இன்பம், உய்த்தலில்பொருண்மை முதலிய குணவலங்காரமும், தற்குறிப்பேற்றம் முதலிய பொருளலங்காரங்களும் பெரும்பாலும் காணப்படும். இன்பமாவது சொல்லின்கண்ணும் பொருளின்கண்ணும் சுவைதோன்றும்படி தொடுக்கப்படுவது. 'சொல்லினும் பொருளினுஞ் சுவைபட லின்பம்' என்பது தண்டியலங்காரம்.

உய்த்தலில் பொருண்மை யாவது, 'கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற் குரியசொல் லுடையது உய்த்தலில் பொருண்மை' என்பது தண்டியலங்காரம்.

---

* செந்தமிழ்: தொகுதி, க. பக்கம் - ௩௬௨.

தற்குறிப்பேற்ற மாவது ஒரு பிரகாரமாக நிகழ்வ தொன்றிலே கவிஞன் வேறொரு பிரகாரமாகத் தன்னுற் குறிக்கப்பட்டதனை ஏற்றிச் சொல்வது. இவ்வலங்காரம் இவரால் மிகச் சிறப்பாகப் பலவிடங்களில் அமைக்கப்பட்டிருக்கின்றது. நெய்தனில வருணனையிலே ஒரு கவியிலே கருவாடு கவர வரும் காகங்களை ஒப்புவாரிலே, பெரியோருடைய பலியை உண்ணுங் காகம் இழிவுடைய இம்மீனை உணலாகாதென்று ஒப்புவார் என்று தன்னுலே கருதப்பட்ட குறிப்பினை ஏற்றிக் கூறினர். அக்கவி இது.

'சீரியோர் ... ... ... ... கோங்கையார்.'

காரி - காகம். இவ்வலங்காரத்தோடு வருவன பல; அவற்றுட் சில பின்னர் வாய்ப்புழிக் காட்டுதும்.

இப்புராணத்திலே சொல்லப்பட்ட விடயங்களுள்ளே நந்தியுபதேசப்படலத்திலே காணப்படும் பதிபசுபாசவிடயங்கள் பெரும்பாலும் சிவப்பிரகாசம் என்னுஞ் சித்தாந்த சாத்திரத்தினை அனுசரித்தன.

அகத்தியன் அருள்பெறுபடலத்திலே அகத்திய முனிவருக்கு உபதேசிக்கப்பட்டனவாகக் காணப்படும் விஷயங்களெல்லாம் சிவதருமோத்திரத்திலுள்ளனவேயாம்.

சீபரிபூரண படத்திலே காணப்படும் சரித்திரங்களெல்லாம் கந்தபுராணத்துள்ளனவேயாம். அவற்றுள்ளே சூரன் முதலியோருடைய முற்செனன வரலாறு உபதேச காண்டத்திற் காணப்படுவது. இங்கே பிரயோகிக்கப்பட்ட சொற்களுள்ளும் சொற்றொடர்களுள்ளும், வருணனைகளுள்ளும் அரிதுணர்தற்பாலன பல, கல்லாடம் கலித்தொகை சிந்தாமணி சிலப்பதிகாரம் திருவள்ளுவர் புறநானூறு முதலிய புராதன இலக்கியங்களிலே வருவனவாம். அவை தற்காலத்திலே வழங்கப்படும் பாரதம், இராமாயணம் கந்தப்புராணம் முதலியவைகளிற் காணப்படமாட்டா. எத்தனையோ பல தொல்காப்பியச் சூத்திரங் கொண்டும், உரைகொண்டும் அறியத்தக்கன. முன்னர் அவற்றுள்ளே சில இங்கே காட்டப்படுகின்றன.

இங்கே விநாயக வணக்கத்திலே, 'கஃறெனுங் கானத்து' என்றார். கஃறெனும் என்பதன் பொருள் யாது? கஃறெனல் என்பது கறுத்து விளங்குதல் என்பதனைக் காட்டும் ஒரு குறிப்புமொழி. இது தொல்காப்பியத்து மொழிமரபிலே வரும் எ - ஆம் சூத்திரமாகிய, 'உருவினு மிசையினு மருகித் தோன்று, மொழிக்குறிப்பெல்லா மெழுத்தினியலா, வாய்த மஃகாக் காலை யான.' என்பதனுரையிலே நச்சினார்க்கினியர், 'கஃஃறென்னுங் கல்லதரத்தம், என நிறத்தின் கண்ணும்' என்றது கொண்டு அறியத்தக்கது.

திருநாட்டுப் படலத்திலே ௧௬-ல், 'தேத்தடைத்திரள் கிழிந்தசும் பருவரை' எனவும், ௧௯௭-ல், 'புன்னக வாழிதேத்தடை யருவிகள்' எனவும், களவுப்படலத்திலே ௨௭-ல், 'ததைவ தேத்தடை தண்வரைப்பா லெலாம்' எனவும் கூறினர். இங்கே பிரயோகிக்கப்பட்ட தேத்தடை என்பதன் பொருள் யாது? முடிபு யாது? தேத்தடை என்பது தேன் கூடு எனப் பொருள்படும். தேன் அடை என்பன தேத்தடை எனப் புணரும். இதனைப் புள்ளி மயங்கியலில் வரும் ௪௯ - ஆஞ் சூத்திரமாகிய, 'ஒற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே' என்பதும், உரையும் இனிது விளக்கும். உரையிலே நச்சினர்க்கினியர், 'தேத்தடை, தேத்தீ என வரும்' என்றதுங் காண்க. நந்தியுபதேசப் படலத்திலே ௩௧ - ல் 'தேத்திறல் சுமந்து நிமிர்வன' என்றார். தேன் இறல் தேத்திறல் என வந்ததற்கும் இதனையே விதியாகக் கொள்க.

நாட்டுப் படலத்திலே ௨௧ - ல் 'சிலையலங்கணிச்சி வெண்ணெய் தெவ்வி' என்றார். இங்கே, 'தெவ்வி' என்பதன் பொருள்யாது? 'தெவ்வி' என்பது கொண்டு எனப்பொருள்படும். உரிச்சொல்லியலிலே வரும் ௫௭-ம் சூத்திரமாகிய, 'தெவுக் கொளற் பொருட்டே' என்பது இதனை நன்குவிளக்கும்.

நாட்டுப் படலத்திலே ௯௩ - ல் 'வித்து நிலத்தின் வெறுத்த பயிர் விறப்பினீங்க' என்றார். வெறுத்த பயிர் என்பதன் பொருள் யாது? 'விறப்பு' என்பதன் பொருள்யாது? 'வெறுத்தபயிர்' என்பது செறிந்த பயிர் எனப் பொருள்படும். 'வெறுத்த' என்பது வெறுப்பு என்னும் உரிச்சொல்லினின்றும் பிறந்த பெயரெச்சம். வெறுப்பு என்பதும் விறப்பு என்பதும் செறிவு என்னும் பொருளை யுணர்த்தும். செறிவு - நெருக்கம். இப்பொருள் உரிச்சொல்லியலிலே வரும், ௪௯ - ஆஞ் சூத்திரமாகிய, 'விறப்பு முறப்பும் வெறுப்புஞ் செறிவே' என்பதனாற் பெறப்படும்.

(நாட்டுப் படலம் - ௯௫.)

'கோசலம் ... ... ... ... விடார்.'

என்றார். இங்கேவரும் ஆப்பி என்பதன் பொருள் யாது? முடிபு யாது? ஆப்பி என்பது பசுவின் சாணம். உயிர் மயங்கியலிலே வரும் ௩௪-ம் சூத்திரமாகிய, 'ஆன்முன் வரூஉ மீகார பகரந், தான்மிகத் தோன்றிக் குறுகலு முரித்தே' என்பது இதன்பொருளையும் முடிபினையும் இனிது விளக்கும்.

அன்றியும் போதர்வார் என்பதன் பொருள்யாது? போதர்வார் என்பது கொண்டு போவார் எனப் பொருள்படும். 'போதரல் — கொடு போதல்' என்பது பிங்கல நிகண்டு. ஆப்பியும் போதர்வார் என இயையும்; இதற்குப் பசுவின் சாணியையுங் கொண்டுபோவார் எனப் பொருள் கூறுக.

திருநகரப் படலத்திலே ருரு-ல், 'ஆடுகொடி மதிலுகப்பும்' என்றார். உகப்பு என்பதன் பொருள்யாது ? உகப்பு — உயர்ச்சி. உரிச் சொல்லியலிலே வரும் அ-ஆஞ் சூத்திரத்திலே, 'உகப்பே யுயர்தல்' என்பது இதனை விளக்கும்.

வீராட்டகாசப் படலத்திலே அகூ-ல், 'ஆன் வழிக்கொள்ளும் வேதனவன்றனைப் பற்றி வல்லே, யீன்வருகென்ன' என்றார். இங்கே வரும் 'ஆன்,' 'ஈன்' என்பவற்றின் பொருள்கள் யாவை? ஆன் - அவ்விடம், ஈன் - இவ்விடம்; புள்ளி மயங்கியலிலே வரும் ருஅ-ஆம் சூத்திரத்திலே, 'மன்னுஞ் சின்னுமானு மீனும்' என்பதும் உரையும் இப்பொருளை இனிது விளக்கும்.

நந்தியுபதேசப் படலத்திலே சகூ-ல், 'தடவிய வுளத்துச் சேக்காத் தற்பரானந்த போற்றி' என்றார். தடவிய வுளம் என்பதன் பொருள் யாது? தடவிய வுளம் - கோடியமனம்; தடவிய என்பது தடவு என்னும் உரிச்சொல்லினின்றும் பிறந்த பெயரெச்சம். உரிச்சொல் லியலிலே வரும் உரு-ஆஞ் சூத்திரமாகிய, 'தடவென்கிளவி கோட்ட முஞ் செய்யும்' என்பது இப்பொருளைப் புலப்படுத்தும்.

சிபரிபூரணநாமப் படலத்திலே கூரு - ல், 'குடைநாட்கொளல் வாணாட் கொளல் குறியா வரசவுணன்' எனவும் கூஅ-ல் 'நொச்சிப் படையினர்' எனவும், எஉ - ல், 'போரிரித்தனரின்னவாறு பொலிந்த வூரகப் பாசியே' எனவும், கஉச - ல் 'குடுமிகைக் கொண்ட மண்ணுமங் கலமுங் கூர்த்தவாண் மண்ணுமங்கலமும்' எனவுங் கூறினர்.

குடைநாட் கொளல் முதலியவற்றின் பொருளைப் புறத்திணையிய லிலே வரும் கரு-ஞ் சூத்திரமாகிய, 'குடையும் வாளு நாள் கோ ளன்றி, மடையமை யேணிமிசை மயக்கமுங் கடைஇச் சுற்றமரொழிய வென்று கைக்கொண்டு, முற்றிய முதிர்வு மன்றி முற்றிய, அகத்தோன் வீழ்ந்த நொச்சியு மற்றதன், புறத்தோன் வீழ்ந்த புதுமை யானு, நீர்ச்செரு வீழ்ந்த பாசியு மதாஅன், றூர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனு, மகமிசைக் கிவர்ந்தோன் பக்கமு மிகன்மதிற், குடுமி கொண்ட மண்ணு மங்கலமும், வென்ற வாளின் மண்ணோ டொன்ற, தொகைநிலை யென்னுந் துறை யொடு தொகைஇ, வகைநான் மூன்றே துறையென மொழிப' என்பதும் உரையும் இனிது விளக்கும். இங்கே புறத்திணையியற் சூத்திரங்கள் கொண்டு அறியத் தக்கன வேறுமுள.

(சிபரிபூரணநாமப் படலம் - சருகூ.)

'தேவர் சிறை செய்த ... ... ... தளவில்.'

இங்கே அடுத்தடுத்துப் பிரயோகிக்கப்பட்ட மன் என்பதன் பொருள்யாது ? இதன்பொருளைப் புறத்திணையியலிலே வரும் உசு-ஞ்

சூத்திரத்தில், 'இன்னவென் றிரங்கிய மன்னை யானும்' என்பதும் உரையும் இனிது விளக்கும். மேலும், 'வெள்ளணிநாள்' என்பதன் பொருள் யாது? வெள்ளணி நாள் — பிறந்த நாள். வெள்ளணி - பிறந்த நாளில் ஒப்பனை. சீவகசிந்தாமணியிலே காந்தருவதத்தையா ரிலம்பகத்திலே கஉஉ-ல் 'வெள்ளணியணிந்த ஞான்றே' என்புழி, நச்சினார்க்கினியர், 'வெள்ளணி — பிறந்த நாளில் ஒப்பனை' என்பதுங் காண்க.

களவுப்படலத்தில் ௩௭-ல், 'கந்தரக் கமுகென் றுரைத்திடும்புல்லுக் கடிமலர் பலமலர்ந் ததுகண், டேந்தெழில் வேயென் றுரைத்தகு புல்லும்' என்றார். இங்கே கமுகினையும் மூங்கிலையும் புல்லென்ற தென்னை? அவை புறத்துக் காழ்ப்புடைமையிற் புல்லெனப்பட்டன. மரபியலிலே அ௬-ஞ் சூத்திரத்திலே, 'புறக்கா ழனவே புல்லென மொழிப' என்பதும் உரையும் இதனை விளக்கும். உரையிலே நச்சினார்க்கினியர், பனையும் தெங்கும் கமுகும் முதலாயின புல்லெனப்படும் என்றதுங் காண்க.

(களவுப் படலம் - கூ௩, கூச, கூ௫.)

'காண்டன் முந்துறுத்த ... ... ... நின்றாள்.'
'மையவிர்ந் தோளிரும் ... ... ... நீராள்.'
'ஓதியு நுதலு ... ... ... நகையளானாள்.'

என்னும் மூன்று கவிகளிலும் பன்னிரண்டு மெய்ப்பாடுகளைக் கூறினார். அவை மெய்ப்பாட்டியலிலே வரும் க௩-ஆஞ் சூத்திரமாகிய, 'புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல், நகுநய மறைத்தல் சிதைவு பிறர்க் கின்மையொடு, தகுமுறை நான்கே யொன்றென மொழிப.' என்பதும். கச - ஆஞ் சூத்திரமாகிய, 'கூழை விரித்தல் காதொன்று களைதல், ஊழணி தைவர லுடைபெயர்த் துடுத்தலோ, டூழி நான்கே யிரண்டென மொழிப.' என்பதும், க௫ - ஆஞ் சூத்திரமாகிய, 'அல்குறைவர லணிந்தவை திருத்தல், இல்வலி யுறுத்த லிருகையு மெடுத்தலொடு, சொல்லிய நான்கே மூன்றென மொழிப.' என்பதும், உரைகளும் கொண்டறியத்தக்கன. 'ஓதியு நுதலு நீவி' என்பதில், 'உகுவன பெரிதுந் தாங்கி' என்பது, க௫-ஞ் சூத்திரத்திற் சொல்லப்பட்ட, 'அல்குறைவரல்' எனவும், 'கலைகால் யாத்து' என்பது, 'அணிந்தவை திருத்தல்' எனவும், 'வலிந்து பொய்த்தொடங்கி' என்பது இல்வலியுறுத்தல் எனவும், 'புல்லுந்தொறு மெழுநகைய ளானாள்' என்பது, 'இருகையு மெடுத்தல்' எனவும் கொள்ளப் படுதல் அதனுரையால் அறியப்படும்.

களவுப் படலத்திலே கசு௫ - ல் 'தனவ வெனவ வொக்கும்' என்றார். 'தனவவெனவ' என்பவற்றின் பொருள்கள்யாவை? தனவ— தன்னுடையன. எனவ — என்னுடையன. புணரியலிலே வரும் க௩-ஞ்

சூத்திரத்தில், 'இன்னவென் றிரங்கிய மன்னை யானும்' என்பதும் உரையும் இனிது விளக்கும். மேலும், 'வெள்ளணிநாள்' என்பதன் பொருள் யாது? வெள்ளணி நாள் — பிறந்த நாள். வெள்ளணி - பிறந்த நாளில் ஒப்பனை. சீவகசிந்தாமணியிலே காந்தருவதத்தையா ரிலம் பகத்திலே ௩௨௨-ல் 'வெள்ளணியணிந்த ஞான்றே' என்புழி, நச்சினார்க்கினியர், 'வெள்ளணி — பிறந்த நாளில் ஒப்பனை' என்பதுங் காண்க.

களவுப்படலத்தில் ௬௭-ல், 'கந்தரக் கமுகென் றுரைத்திடும்புல்லுக் கடிமலர் பலமலர்ந் ததுகண், டுந்தெழில் வேயென் றுரைத்தகு புல்லும்' என்றார். இங்கே கமுகினையும் மூங்கிலையும் புல்லென்ற தென்னை? அவை புறத்துக் காழ்ப்புடைமையிற் புல்லெனப்பட்டன. மரபியலிலே அ௬-ஞ் சூத்திரத்திலே, 'புறக்கா ழனவே புல்லென மொழிப' என்பதும் உரையும் இதனை விளக்கும். உரையிலே நச்சினார்க்கினியர், பனையும் தெங்கும் கமுகும் முதலாயின புல்லெனப்படும் என்றதுங் காண்க.

(களவுப் படலம் - ௬௩, ௬௪, ௬௫.)

'காண்டன் முந்துறுத்த ... ... ... நின்றாள்.'
'மையவிர்ந் தோளிரும் ... ... ... நீராள்.'
'ஓதியு நுதலு ... ... ... நகையளானாள்.'

என்னும் மூன்று கவிகளிலும் பன்னிரண்டு மெய்ப்பாடுகளைக் கூறினார். அவை மெய்ப்பாட்டியலிலே வரும் ௧௩-ஆஞ் சூத்திரமாகிய, 'புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல், நகுநய மறைத்தல் சிதைவு பிறர்க் கின்மையொடு, தகுமுறை நான்கே யொன்றென மொழிப.' என்பதும். ௧௪ - ஆஞ் சூத்திரமாகிய, 'கூழை விரித்தல் காதொன்று களைதல், ஊழணி தைவர லுடைபெயர்த் துடுத்தலோ, டூழி நான்கே யிரண்டென மொழிப.' என்பதும், ௧௫ - ஆஞ் சூத்திரமாகிய, 'அல்குறைவர லணிந்தவை திருத்தல், இல்வலி யுறுத்த லிருகையு மெடுத்தலொடு, சொல்லிய நான்கே மூன்றென மொழிப.' என்பதும், உரைகளும் கொண்டறியத்தக்கன. 'ஓதியு நுதலு நீவி' என்பதில், 'உகுவன பெரிதுந் தாங்கி' என்பது, ௧௫-ஞ் சூத்திரத்திற் சொல்லப்பட்ட, 'அல்குறைவரல்' எனவும், 'கலைகால் யாத்து' என்பது, 'அணிந்தவை திருத்தல்' எனவும், 'வலிந்து பொய்த்தொடுங்கி' என்பது இல்வலியுறுத்தல் எனவும், 'புல்லுந்தொறு மெழுநகைய ளானாள்' என்பது, 'இருகையு மெடுத்தல்' எனவும் கொள்ளப் படுதல் அதனுரையால் அறியப்படும்.

களவுப் படலத்திலே ௧௬௫ - ல் 'தனவ வெனவ வொக்கும்' என்றார். 'தனவவெனவ' என்பவற்றின் பொருள்கள்யாவை? தனவ— தன்னுடையன. எனவ — என்னுடையன. புணரியலிலே வரும் ௧௩-ஞ்

நாட்டுப் படலம். ககசு-ல் 'களிறு மாய்ப்பக் கதழ்ந்தெழு பூம்பயிர்.' என்றார். மாய்ப்ப — மறைக்க. கனகமாலையாரிலம் பகத்திலே கூக-ல், 'களிறு மாய்கதிர்' என்பதனுரை நோக்குக.

வீராட்டகாசப் படலத்திலே ௬-ல், 'மங்கல வெள்ளை வழித்து' என்றார். மங்கல வெள்ளை வழித்து — சந்தனத்தாலே மெழுகி. கேமசரியாரிலம்பகத்திலே கூகூ-ல் 'மங்கலவெள்ளை வழித்து' என்பதனுரை நோக்குக.

வீராட்டகாசப் படலம் உகூ-ல், 'தீவினையினைக் கொம்மை கொட்டினன்' என்றார். கொம்மை கொட்டல் — தட்டியழைத்தல். குணமாலையா ரிலம்பகத்திலே உ௫கூ-ல் 'கூற்றத்தைக் கொம்மை கொட்டி' என்பதனுரை பார்க்க.

நந்தியுபதேசப் படலத்திலே ௬க-ல் 'மானுடம் பழுகிலுத்தம்' என்றார். மானுடம் பழுகிலுத்தம் — மக்கள் வடிவாகப் பழுக்கின்ற கிலுத்தமென்னுமரம். விமலையா ரிலம்பகத்திலே கஉ-ல், 'மானுடம் பழுத்தன கிலுத்தம்' என்பதனுரை நோக்குக.

அகத்தியனருள்பெறு படலத்திலே எகூ-ல், 'தீத்தும்மும் பொருவேல்' என்றார். தீத்தும்மும் — தீயைப் புறப்பட விடும். பூமகளிலம்பகத்திலே உஉ-ல், 'தீத்தும்மு வேலோன்.' என்பதனுரை பார்க்க.

களவுப் படலத்திலே ௫எ-ல், 'சீந்தாவெமைப் பொருவான்' என்றார். சீந்தா — கோபித்து. குணமாலையா ரிலம்பகத்திலே உ௫-ல், 'சீந்தா நின்ற திருமுகவேலான்.' என்பதனுரை பார்க்க.

களவுப் படலம் க0உ-ல், 'மருங்கியலாயம் புகுதக.' என்றார். புகுதக — புகுதுக. மண்மக ளிலம்பகத்திலே உ0-ல், 'தேமலராங் கட்டிருவே புகுதக.' என்பதனுரை நோக்குக.

களவுப் படலம் கஉகூ-ல், 'திரைக்குமுடன் மூப்பிது சிதைந்திளமை சேர்நும், வரைக்குமரியாடவென வள்ளல்' என்றார். இது சுரமஞ்சரியா ரிலம்பகத்திலே உகூ-ல், 'வந்தவர வென்னையென வாட்கண்மட வாய்கேள், சிந்தைநலி கின்றதிரு நீர்க்குமரியாட' என்பதனுரை கொண்டு உணரத்தக்கது.

நாரத னருள்பெறுபடலத்திலே க0-ல், 'இலைப்புரை கிளைத்து நெடுமாலு மறியாத விறையோன்.' என்றார். இலைப்புரை கிளைத்தல் — தேடுதல். கனகமாலையா ரிலம்பகத்திலே க௮௫-ல், 'ஈட்டமும் வேறுமாக விலைப்புரை கிளைத்திட்டோமே.' என்பதனுரை பார்க்க.

கவித்தொகை முதலியவற்றுள்ள சொற்களையும் பொருள்களையும் பெற்று வருனவும் பல. அவற்றுள்ளுஞ் சில கூறுதும்:

நாட்டுப் படலத்திலே நகூ-ல், 'விழிக்கு டைந்தமான் செவிகண் மெல் லியனல்லார் தடிந்தவ், வுழிக்க ஞற்றியாங் குயர்பணே கண்பொதி பாளே கழிக்கும்' என்றூர். இது கலித்தொகையிலே குறிஞ்சியிலே வரும், 'நுண்பொறிமான் செவிபோல வெதிர் மூளேக் கண்பொதி பாளே கழன் றுகும் பண்பிற்றே' என்பதனே அநுசரித் தமைக்கப்பட்டு வந்தது.

நாட்டுப் படலத்தில் நகூ-ல், 'வளகு மேய்ந்து சேவகங் கொளு மான்மத மொழுக்கும், குளகு தேரிய வருடைமான் குப்புறு மடுக்கத்து.' என்றூர். இதுவும் கலித்தொகையிலே குறிஞ்சியிலே வரும், 'புணர் நிலேவளகின் குளகமர்ந்துண்ட, வருடைமான் குழவிய' என்பவைகளே அநுசரித்து அமைக்கப்பட்டு வந்தது.

நாட்டுப் படலத்திலே சஉ-ல், 'உருமி ஞர்த்துடன் றெதிரெறு ழுழுவையோ டும்பல், பொருத முற்றெழில் கனவவிற் பொருக்கென வெழுந்தங், கருகு நின்றவொள் வீயிணர் வேங்கையை யலேக்கு, மருவு வெஞ்சின மூண்டுழி வகுத்தறி யார்போல்' என்றூர். இதுவும் கலித் தொகையிலே குறிஞ்சியிலே வரும்.

'கோடுவரி தாக்கி வென்ற வருத்தமோடு
நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யாவண
நனவிற்றன் செய்தது மனத்த தாதலின்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
புதுவ தாக மலர்ந்த வேங்கையை
யதுவென வுணர்ந்தத னணிநல முருக்கிப்
பேஎ முன்பிற் றன்சினந் தணிந்தமா
காணும் பொழுதி னேக்கல் செல்லாது
நாணி யிறைஞ்சு நன்மலை நாட.'

என்பதனே அநுசரித்தமைக்கப்பட்டு வந்தது.

நாட்டுப் படலத்தில் சச - ல், 'குருவி யோப்புதங் கவண்கலாற் குலேந்திரு வினத்தோ, டுருவ வாசினி யுக்கன வசும்பின நிலத்து' என்றூர். இதுவும் கலித்தொகையிலே, குறிஞ்சியிலே வரும்,

'நெடுவரை யாசினிப் பணவை யேறிக்
கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலி
னிறுவரை வேங்கையி னேள்வீ சிதறி
யாசினி மென்பழ மழிந்தவை யுதிராத்
தேன்செ யிறு அ றுவளபடப் போகி.'

என்பதனே யநுசரித்து அமைக்கப்பட்டு வந்தது.

(நாட்டுப் படலம் ச - ம் கவி.)

'வருபுனல் வாய்ந்த ... ... தொண்டை நாடு.'

இது, திருவள்ளுவரிலே நாடு என்னும் அதிகாரத்திலே வரும் 'இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும், வல்லரணு நாட்டிற் குறுப்பு.' 'பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம, மணியென்ப நாட்டிற் கிவ் வைந்து' என்பவைகளை அநுசரித்தே அமைத்தது.

(நாட்டுப் படலம் ரு - ம் கவி.)

'மலிபெறும் பொருளால் ... ... ... தொண்டை நாடு.'

இது, மேற்படி யதிகாரத்திலே வரும், 'பெரும்பொருளாற் பெட்டக்கதாகி யருங்கேட்டா, லாற்ற விளைவது நாடு.' 'நாடென்ப நாடாவளத்தன நாடல்ல, நாட வளந்தரு நாடு.' என்பவைகளை அநு சரித்து அமைத்தது.

(நாட்டுப் படலம் சு - ம் கவி.)

'பல்குழுவேந் ... ... ... தொண்டை நாடு.'

இது, மேற்படி யதிகாரத்திலே வரும், 'பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்கும், கொல்குறும்பு மில்லது, நாடு' 'உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ், சேரா தியல்வது நாடு.' 'பொறை யொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற், கிறையொருங்கு நேர்வது நாடு.' என்பவைகளை அநுசரித்தமைத்தது. இப்புராணச் செய்யுள் களின் பொருள்களை இக்குறள்களுக்குப் பரிமேலழகர் செய்தவுரை இனிது விளக்கும்.

(நாட்டுப் படலம் உக - ம் கவி.)

'சிலையலங்கணிச்சி ... ... ... புறவத்தம்மா.'

இது, விட்டுணுவை யாற்றிற்கு உவமையாகக் கூறியது. ஆயினும் விட்டுணுவின் பத்தவதாரமுங் குறிக்கப்பட்டு இரத்திநாவலி என்னும் அலங்காரமும் பெற்று நிற்கின்றது. 'சிலையலங் கணிச்சி வெண்ணெய் தெவ்வி' என்பதனால் வில்லினைக்கொண்ட தசரதராமன், கலப்பையைக் கொண்ட பலராமன், மழுவினைக் கொண்ட பரசுராமன், வெண்ணெய் கவர்ந்த கிருஷ்ணன் என்னும் அவதாரங்களும், 'வானிமிர்ந்து' என்ப தனால் வாமனவதாரமும், 'வாரிநிலை புகுந்துழக்கி' என்பதனால் மச்சகூர் மாவதாரங்களும், 'நிலனெடுத் திருவி' என்பதனால் வராகாவதாரமும், 'அண்ட ருலைதர வெறிக்கொண் டெற்றி' என்பதனால் நரசிங்காவதார

மும், 'கலிமுடிவு தோற்றி' என்பதனால் கற்கியவதாரமும் ஆகப் பத்தவ தாரமுங் கூறியவாறு உணர்க. வாரி — கடல். வாரிநிலை — நீர்நிலை. இருவி — இருத்தி. கலி — கலகம்.

நாட்டுப் படலத்திலே — ருக-ல், 'கிரியினுங் கிரிபுறங் கெழீஇய கானினும், பெரிதுமாம் பாலையம் பிராட்டி யாயதே' என்றார். இது, சிலப்பதிகாரத்திலே காடுகாண் காதையிலே வரும், 'வேனிற் கிழவ னொடு வெங்கதிர் வேந்தன், றனலந் திருகத் தன்மையிற் குன்றி, முல்லை யுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்' என்பதனை அநுசரித்தது.

நாட்டுப் படலத்திலே கரு0-ல், 'நீங்குகாதலர் நீண்டதேர்வழி, பாங்கின் மாதரார் பார்த்தங் காற்றுத, றேங்கு நீர்க்கட றெறிந்து கட்பகை, தூங்கி நீருகத் தூர்க்க முன்னுமே.' என்றார். இது, சிலப் பதிகாரம் கானல் வரியிலே, 'நேர்ந்த நெடுங்காதலர் நேமிநெடுந் திண்டேர், றூர்ந்தவழி சிதைய வூர்கின்ற வோதமே' என்பதனை அநு சரித்தது.

நாட்டுப் படலத்திலே அச-ல், 'வளிவழக் கழுங்க மிடைந்து' என்றார். இது, புறநானூற்றில் ருகு-ல் வரும், 'வளியிடை வழங்கா' என்பதனை அநுசரித்தது.

கடவுள் வாழ்த்திலே, 'புண்ணியம் பாதக மாகப் போற்றிய வண்ண லந் தக்கனு ரகத்து நாணிய, புண்ணியம்பாதக மாகப் போற்றிய, வண்ண லந் தண்டித னடிகள் போற்றுவாம்.' என்றார். இது, 'அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறமதாகும், பரனடிக் கன்பிலாதார் புண்ணியம் பாவ மாகும், வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி, நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே.' என்னுஞ் சித்தியாரை அநு சரித்தது.

நாட்டுப் படலத்திலே அ0-ல், 'ஓம்புதன் குறியி னோடு முறைந் தெனக் கமலம் பூத்த, தீம்புனற் றடத்துள்' என்றார். இது, 'குறிகள் வச்சிரத்தி னோடு கோகனஞ் சுவத்தி, மறுபுள்ளி யமுத விந்து' என்னுஞ் சித்தியாரை அநுசரித்தது.

நாட்டுப் படலத்திலே ககக-ல், 'பரவுசிவ ஞானமுண ரடியார் செங்கைப் படுத்தபொருள் பெரும் பயனைப் பயக்கு மாபோல்' என்றார். இது, 'சிவஞானச் செயலுடையோர் கையிற்றானந் திலமளவே செய் திடினும் நிலமலைபோற் றிகழ்ந்து, பவமாயக் கடலிலழுந் தாதவகை யெடுத்துப் பரபோகந் துய்ப்பித்து' என்னுஞ் சித்தியாரை அநு சரித்தது.

நந்தியுபதேசப் படலத்திலே கரு-ல், 'இழிவினைக டீர்வு செய்யினு நுகர்ந்தன்றி யிரிதரா முழுதுமிது விலையானு மியையும் பண்ணுமையும் பலிக்கும்.' என்றார். இது சிவப்பிரகாசத்திலே வரும், 'பற்றியது கழியுமிது விலையா லேற்கும் பான்மையுமாம் பண்ணுது பலிக்கு முன்னம்.' என்பதனை அநுசரித்தது.

நாட்டுப் படலத்திலே ருஉ-ல், 'வெளியிடை யொன்றாய் நின்ற வெளிமுதல் வெளியே போற்றி, வளியிடை யிரண்டாய் நின்ற வளிமுதல் வளியே போற்றி, ஒளியிடை மூன்றாய் நின்ற வொளிமுத லொளியே போற்றி, தெளிபுன ஞன்காய் நின்ற தெளிபுனன் முதலே போற்றி' என்றார். இது திருவாசகத்திலே போற்றித் திருவகவலிலே வரும், 'பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி, நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி, தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி, வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி' என்பது முதலியவைகளை அநுசரித்தது.

சுன்னுகம் - அ. குமாரசாமிப் பிள்ளை.



# தணிகைப் புராணம்

## செய்யுள் முதற் குறிப்பு.




| செய்யுள். | பக்கம். |
| --- | --- |
| **அ** | |
| அகத்திடுமுணவு | ௨௨௧ |
| அகத்துப்புக்கன | ௩௩௦ |
| அகப்போருடமக்கருளு | ௫௦ |
| அகவயிற்சென்றன | ௫௩௮ |
| அக்கங்கைசுமங் | ௨௭௫ |
| அங்கணப்படைய | ௨௮௨ |
| அங்கணீமுன் | ௪௧௧ |
| அங்கண்வீற்றருளு | ௧௪௬ |
| அங்கலுழ்மேனி | ௪௧௭ |
| அங்கிகாலுமட | ௯௨ |
| அங்கிமாப்படையை | ௩௩௨ |
| அங்கியங்கண்ணிற் | ௫௫௫ |
| அங்கியின்மேல்பா | ௫௪௪ |
| அங்஡னமணுக | ௧௦௩ |
| அசிதனுதியர்க | ௬௪ |
| அச்சுதன்முன்ன | ௫௪௫ |
| அஞ்சவலயஞ்ச | ௪௩௬ |
| அஞ்சனமேனி | ௫௬௫ |
| அஞ்சிறைப்பூவை | ௧௬௭ |
| அஞ்சிறைவாவ | ௪௭௧ |
| அஞ்ஞையிழந்த | ௩௭௧ |
| அடம்புதாதகி | ௩௯௧ |
| அடருயிர்கோலாமை | ௨௦௨ |
| அடர்ப்பவண்மிடின | ௯௩ |
| அடிகழனரல | ௩௦௨ |
| அடிகளாருருவங் | ௫௫௬ |
| அடிகோடுமதுவுந்த | ௩௦௯ |
| அடியர்தங்கவள | ௧௯௯ |
| அடியேனறிந்த | ௪௯௦ |
| அடிவரைத்தடமார்ப | ௯௯ |
| அடுக்கத்தனிநலம் | ௪௫௪ |
| அடுத்தகாரக | ௫௨௫ |
| அடுத்தகாவலயிற் | ௩௨௯ |
| அடுத்தமைக்கேயெதிர் | ௪௬௭ |
| அடுத்தவஃவேழம் | ௪௯௬ |
| அடுத்தனஞ்சீபரி | ௫௦௮ |
| அடுத்தாங்கழியுயிர் | ௪௬௮ |
| அடுத்துளோரிவளப் | ௩௭ |
| அடுவதுவன்பசி | ௪௭௮ |
| அடைக்கலம்புகுவிண் | ௩௭௮ |
| அட்டவன்வெகுளிமிக் | ௩௫௬ |
| அட்டுமமையெனவீர | ௩௨௫ |
| அணங்கோகடலி | ௪௭௬ |
| அணிபரித்தொழுகி | ௧௨௭ |
| அணியினும்பூசினு | ௪௯௬ |
| அணுவினுநுழைநுண் | ௨௩௮ |
| அண்டகோடிகள | ௯௨ |
| அண்டத்திடைவெளி | ௫௦௪ |
| அண்டமகட்டி | ௪௫௯ |
| அண்டமாரளவைக் | ௪௯ |
| அண்டமுற்று | ௪௦௯ |
| அண்டம்யாவையு | ௬௭ |
| அண்டம்விண்டெனத் | ௨௯௫ |
| அண்டர்பூத | ௩௫௮ |

அண்டர்போற்று கஉசு
அண்ணமுடேழ உககா
அண்ணலாரருளிச் எஉ
அதுதெரிந்தாண்டகைச் ஙககா
அத்தகுசெவ்விய அஅ
அத்தகுதிருத்தமங் கஙரு
அத்தகுநாரத ருஎக
அத்தகுமயிலைக் சகரு
அத்தகுமுடிவோன் ருஎசு
அத்தகுவரைப்பினேழ அங
அத்தகுவரைப்பின் க0எ
அத்தகுவேடற் ருஉகூ
அத்தகையசிவபுரி உ0உ
அத்தலந்தன்வனயா ககாஎ
அத்தியுங்கோடியு ஙஅரு
அந்தணுளர்கள் ககூஅ
அந்தணிர்மாய ஙஅகூ
அந்தரத்தில்விண்ணவர் சரு
அந்தவுலகமழ் கஎகா
அந்தாமரைமல சுஉக
அந்திப்பிறைசூடிய கூ0
அந்தோவிதுநாஞ் கககா
அபயமுசலம் கஎங
அப்பதிக்கோரு சு0கூ
அப்பொழிற்சாரற் சருஎ
அமரர்சற்பக ஙசகூ
அமரர்வியந்தா ஙருஎ
அமராபதீச ஙகூ0
அமலநாயகனங் ஙங0
அமலனடிக்கன்பிலார் உ00
அமலனுரருளிற் க0ங
அமிழ்தமேயாகப் உகக
அமிழ்திவணநஞ்ச ங0க
அம்பலுமோங்க சஎகா
அம்பினக்கதை ஙகூ0
அம்புயஞ்சுதையா ககூ0
அம்மைத்தவமாற்றும் ஙஉஎ
அம்மைநற்றவங்கள் சு0அ
அம்மைப்பிறப்பி சுஙஎ
அம்மையிலெண்ணில் ஙஎஎ
அம்மையினுரத் சகாசு
அயர்ந்துநின்றதுவேழ ஙசரு
அயனுர்பகற்க உகஅ
அயிர்த்திரளாலடர் சஅஅ
அயிலுந்தொழும்விழி சுஙஎ
அயினுதிப்பரல்கா உகரு
அரக்கர்பட்டிமைபுரிந் ஙகூகூ
அரங்கும்வினைகள் கஎஅ
அரணமாகிய ருகஎ
அரணியின்ஞெலிந்த ருசச
அரத்தகக்சுவடுமிக் ருஙசு
அரம்புசெய்பிணி ககஅ
அரம்புபுரியாணவ ருகாகூ
அரம்புமுற்றிய ஙகூ0
அரம்பையரல்குற் ருருரு
அராத்தவமாற்றி ஙகூஅ
அராவுரியேனத்திரை சஉஎ
அரிக்குமவர்தமைக் சகாஎ
அரிக்குரற்கிண்கிணி ருஙஎ
அரிதாம்பிறப்பு உககூ
அரிமுகத்தவன் ஙஎஉ
அரிமுகன்றமைய ங0க
அரியவணமீது ககூ0
அரியயனமரரு ருஎங
அரியலார்ந்த உஉ
அரிவைகுந்தமு ருருசு
அரிறபுனாவலத் உகாகூ
அருகியநோக்க சஎசு
அருக்கர்பதினுயிரவ ஙஅக
அருக்கனுமாரமுற் ரு0ரு
அருச்சவனநிரப்பித் ருசச
அருச்சவனப்பணி ஙகூசு
அருச்சவனயாதி ககூ0
அருடகுதீக்கை சு0க
அருடருமாறெழுத் ககாகூ
அருட்கடைக்கணு ருகஎ
அருந்தவப்பயனு ருசகா
அருந்தவரைத்தா உஉகூ
அருந்திறலரசன ருஙக
அருப்பிளம்பொழி கஎ0
அருமறைமுதலி ங0க
அருமறைமுறையிட் கஅங
அரும்பியமாவலயி ஙககா
அரும்பிற்றிலமுவலத் சகூங

அரும்புமுலையி ௪௫௭
அருவிகொண்டுவிழ் ௩௮௫
அருவிதோட்டவ ௬௧௭
அருவித்தடம்புன ௫௦௯
அருவிமும்மதத்த ௫௨௩
அருவுருத்திறத் ௧௫௦
அருவென்றுருவென் ௮௯
அருளதாய்விடி ௫௧௬
அருளாகியமாதிட ௫௮௨
அருளியகுரவன் ௮௨
அருளிற்கடுத்ததன் ௪௩௯
அருளிற்கலந்துறி ௪௩௧
அருளினல்வர ௫௮௩
அருளுந்திறத்தினள் ௪௫௫
அருளுமருளு ௪௫௦
அருள்செய்வனபுரி ௧௨௨
அருள்புரிதல்கேட்ட ௪௦௫
அருள்பொழிமுகங் ௩௯௪
அருள்பொழிவிழியி ௧௫௯
அருள்வளங்கொழிக்கு ௫௪
அருள்வளர்நந்தி ௪
அருள்விழிசேர்த்த ௩௭௭
அலகில்பல்லுயிரு ௫௫
அலகையாதியாச் ௨௦௪
அலங்குகதிர்ச்செழுஞ் ௩௮
அலத்தகமணிந்தழ ௩௮௦
அலத்தகமலர்ந்த ௪௨௬
அலத்தகமெழுதக் ௫௪௧
அலக்கமுற்றிய ௩௫௪
அலைத்திடுநாண் ௩௭௧
அல்யாப்பவிழ்க்கும் ௧௭௪
அல்லகாத்திரியென ௧௬௮
அல்லதூஉம்வர ௨௯௮
அல்லார்களத்தவ ௪௮௭
அல்லாவெனப்போரு ௫௦௨
அல்லும்பகலுங்கரு ௧௬
அல்வேறுபடுக்கு ௫௮௧
அவணடைவல்லா ௪௧௪
அவலெறியுலக்கை ௪௨
அவற்றினுட்புத்தி ௭௪
அவுணர்கோனகர ௩௭௯
அவுணவன்படை ௩௪௭
அவ்வயிற்சேறு ௧௦௨
அவ்வயின்வாழ்சரு ௧௬௫
அவ்வரமுங்கொடுத் ௩௮௯
அவ்வரைசூழ்நெடுங் ௫௬௪
அவ்வுழியவ்வரை ௪௨௫
அவ்வையர்வாடின ௫௧௧
அழகினினிளமைக் ௫௪௨
அழத்திவணவேட்டு ௫௦௧
அழலுநெடுவேல் ௧௭௪
அழல்சுழித்தார்க்கு ௪௪௩
அழல்போலுயிர்முழு ௧௨௧
அழன்றுநின்னுயிர் ௩௩௦
அழிந்ததுசாய ௪௭௦
அழிந்தவுணர்ச்சி ௨௮௬
அழுக்கில்வீரர்தே ௩௪௯
அழுக்குளத்தினு ௨௦௨
அழுந்தவலவேவல ௪௭௩
அழுவக்கடற்கழி ௪௬௫
அழுவப்புனலம ௨௭௮
அளந்தவவைதா ௨௦௬
அளப்பரும்போகந் ௨௩௫
அளமகுபிறப்புக ௨௨
அளம்படுவார்துரும் ௪௭௯
அளித்தநல்லருவ ௩௮௫
அளித்தநல்வர ௨௯௮
அளிநரம்புளர ௧௭
அளிப்பான்புகுந்தவந் ௪௬௯
அளியனிங்குநவி ௧௩௨
அளியாகியொளியாகி ௧௧௨
அளியேனிவணதற்கு ௪௯௩
அவாதோறுமவுண ௨௯௧
அள்ளலழுந்தும் ௨௨௭
அள்ளற்பரப்பி ௨௨௦
அறந்தலையெடுத்திடு ௩௯௮
அறந்தாம்பலவாற் ௫௬௬
அறமனைதோறு ௧௯௨
அறமுனிந்தவன் ௩௪௬
அறம்பாவங்கள் ௨௨௭
அறன்மறந்தல்ல ௪௨௦
அறுப்புனற்கால் ௧௭
அறிதராதியற்றும் ௫௫
அறிதராவகையிற் ௧௫௪

அறிந்தாலலரன்வண ௪அ௪
அறிந்தானெதிர்படை ௯உஎ
அறிந்திறைவன்பூசை உ௪௯
அறிந்துயிர்க்கறி க௪௬
அறியாப்பொருளின்றி ௪௬௫
அறியுமறிவுக் ௪௯௬
அறிவிரண்டுமாய ௯அஅ
அறிவினிற்பெரிய க௦௯
அறுசுவையூண்விசிறி உ௫எ
அறுத்துநூறுகோல் ௯௯௪
அறுத்துவிழுஞ்சர ௯௫எ
அற்பகத்திமை ககஅ
அற்றபாணிமண் ௯௫உ
அற்றேனினதார்வங் கஉஉ
அற்றைஞான்றவ ௫உஎ
அற்றைநாள்வடசார் ௯௯க
அற்றையிராப்புலர் ௫எஉ
அறுதிபந்தமோ க௫௦
அறுதியாகிய கஉ௦
அறுதியேயமலன் உ௯௯
அன்பிணந்திணக் க௯
அன்றுடங்கவணந்தோர் க௦எ
அன்றுபோய்வழிநா கஉ௫
அன்றையிரவுப்பொழுது ௯அக
அன்றேழியவழிநாளா ௪௦௫
அன்றேழிவெய்த ௯௬எ
அன்னகோட்டகம் கஅ௦
அன்னணமமுத ௪௦எ
அன்னத்தோடக உ௯
அன்னநல்கினு க௫௬
அன்னநீர்செருத்தலா உக௯
அன்னபோய்கை கஅஉ
அன்னமுமோரோ உ௫௬
அன்னவணயேசரண க௯௪
அன்னவூர்திய க௪அ
அன்னவைதெரித்ததி க௯௪
அன்வணதனிக்கஞ் ௪௬௬


## ஆ


ஆக்கங்கருதித்துவண க௫
ஆக்கியபடைப்புக் ௬௬
ஆக்கும்பொழுதாக் உ௫
ஆங்கசைந்தோளி உஎ௯
ஆங்கதுகண்டவுணர்க் ௯எ௦
ஆங்கவனமதுசத்தி உஎ௪
ஆங்கவனெனவிண் ௯௦௦
ஆங்கவன்படைப்பி க௦க
ஆங்கவன்போல க௫௦
ஆங்குடங்கம ௯௯௫
ஆங்குநாதன கஉ௦
ஆங்குபதேச க௫௯
ஆங்குப்படர்ந்து கஎஎ
ஆங்குப்புறவிடை கஉ௯
ஆங்குமாநகா ௯அ௪
ஆடகங்கொண்டான் உ௪௫
ஆடகத்தகடுக கக௦
ஆடலம்மண ௪உ
ஆடவர்க்குமிக் ௫௫௪
ஆடவர்திலக ௫௪க
ஆடவர்மகடூஉ உக௯
ஆடிடநோக்கி ௪௫௬
ஆடிப்பூசியுண்ட ௯௫௪
ஆடியகூத்தன் ௪க௬
ஆடிவைகாசித் க௬உ
ஆடிஞர்பலரரங் ௫௯உ
ஆடுபோர்க்கொருவ உஅக
ஆடுமெல்வலயில் ௯க௪
ஆடுவேல்வல ௪க௦
ஆடைதீரவதள் ௫எ௯
ஆட்டுகலசந்தவறித் உ௪௪
ஆணடிநிழலோம்பி ௬அ
ஆணவத்தன்றே க௫அ
ஆணவப்பிணி ககஎ
ஆணவமாயை கஅஎ
ஆணவமுல க௪௪
ஆண்டகைவீரன் ௯௯க
ஆண்டிலிங்க கஉ௪
ஆண்டுசெல்லவி ௯௬க
ஆண்டுவேண்டு கஅஉ
ஆதலாலவர்பா க௬௫
ஆதலாலன்னங் உக௪
ஆதலாலானி கஅஅ
ஆதலாற்றேவருஞ் உ௬உ
ஆதலாற்றேவர் உஉ௫

ஆதலானவண் ௩௯௩
ஆதலினல்வறியோரு ௨௬௬
ஆதலினற்குமரன் ௧௬௫
ஆதனத்திடையி ௬௫
ஆதியீறமைந்த ௫௩
ஆதியீறில்லா ௮௩
ஆதிரைநாளிற் ௧௮௬
ஆமானினந்திரி ௪௬௩
ஆம்பலுற்பல ௧௦௯
ஆயகாவலயில் ௨௭௩
ஆயதோல்விகண் ௩௧௧
ஆயத்தவர்புரி ௫௦௨
ஆயபல்படை ௩௭
ஆயவேவலயி ௫௧௫
ஆயிரங்கவணவிடுத் ௨௮௧
ஆயிரங்கர ௨௯௫
ஆயிரத்திரட்டிச் ௫௭௪
ஆயிரத்தோரேட் ௧௩௯
ஆயிரந்தூண்வயி ௫௨௦
ஆயிரம்வாளியிற் ௩௨௩
ஆயிரவெள்ளஞ்சேவண ௩௩௪
ஆயிரவெள்ளம்பகடு ௩௩௯
ஆயுநான்மறை ௧௬௯
ஆயுந்தொறுந் ௪௨௪
ஆய்தவடிவிற்கனைரு ௪௩௦
ஆய்ந்தவர்க்கன்ன ௧௯௩
ஆரக்குரல்க ௪௬௯
ஆரடுதிகிரிச் ௨௯௩
ஆரடுத்தமணி ௨௮௧
ஆரணத்தனுநகர ௩௫௦
ஆரணன்றுயர்க் ௯௭
ஆராதகாத ௪௮௧
ஆராவமுதவண ௪௧௯
ஆரியற்பணியா ௨௦௭
ஆரியவணயெளிய ௨௨௮
ஆருயிரளிக்கும்வர ௫௬௯
ஆருயிர்மயங்க ௨௧௧
ஆர்ங்கதிர்வேணிய ௩௮௯
ஆர்த்தவோங்காரப் ௧௮௭
ஆர்த்தனபணில ௫௪௫
ஆர்த்தனபூதவெள்ள ௨௮௩
ஆர்த்துநின்றுடும் ௧௦௬
ஆர்த்துவீரவாகுப் ௩௪௫
ஆர்ந்தபன்மணி ௪௧௩
ஆலங்கனல்கூளிக் ௩௨௭
ஆலங்கனிந்தவிழ் ௪௫௩
ஆலங்கோதித்தட ௪௩௩
ஆலயநுழைந்துமுறை ௩௮௧
ஆவணவீதி ௪௮௬
ஆவயிற்குழவிபோற் ௨௭௪
ஆவயிற்புகுந் ௩௯௩
ஆவயினகன்று ௧௪௧
ஆவயினும்மையா ௫௬௧
ஆவயின்முன்பே ௪௦௭
ஆவாவிதுவென்ன ௪௮௨
ஆவிபோன்றினனென ௩௪௬
ஆவியுங்கண்ணுத ௫௦௮
ஆவிணயினத்தி ௨௧௨
ஆழியுளிலங்கை ௨௯௧
ஆழ்ந்தநீரல ௧௩
ஆழ்ந்தநீர்ச்சுவண ௯
ஆழ்ந்துகிடந்துங் ௩௯
ஆளிக்கொடியேந்திய ௧௫
ஆறுதாரமு ௧௪௨
ஆறுப்பெருந்துயர ௩௫௦
ஆறிருகோடி ௧௨௬
ஆறுகொளச்சேங் ௩௫௮
ஆறுமாமுகமாறி ௨௭௩
ஆறுமோருருவதாக ௨௭௪
ஆற்றலிலனைய்த்தளரு ௩௩௭
ஆற்றுவுளத்திவண ௪௭௧
ஆற்றுந்திறமிவட் ௪௮௭
ஆனநேய்பளிதத் ௫௪௭
ஆனந்தந்தவலசிறப்ப ௫௬௪
ஆனவுணப்படை ௩௭௧
ஆன்வழிக்கொள்ளும் ௧௦௧
ஆன்றவலப்போடித் ௫௧௫


## இ


இகந்துரைசேட்ட ௨௯௩
இகன்மிகுத்தகோடி ௬௬
இகுதற்கியைந்த ௩௫௧
இக்காவளையையேந் ௨௭௬
இக்குன்றுகாண்கடி ௫௦௮

| | | | |
|---|---|---|---|
| இங்கணலனேய்துநர்க | சகூ | இந்திரனுயிர்த்த | ருஎ௦ |
| இங்கிதுநந்தி | எரு | இந்திரன்பாங்க | ச௦எ |
| இச்சாஞானகிரியை | கஎக | இந்திரன்பிரமன் | அ௦ |
| இச்சைஞானந்தோ | ககக | இந்திரன்பிறனில் | உஉச |
| இடங்கழிகோண்டுயி | ருகஅ | இந்திரன்மனைவி | ருசகூ |
| இடந்தவலப்பட்டிவ்வா | சஉரு | இந்திரன்வாகனமிது | ரு௦ரு |
| இடந்தவலப்பாட்டினுற்ற | ருருக | இந்திரன்வேட்ட | ருகூரு |
| இடர்தபுமதிநுற் | சஅ | இந்துகாந்தக்கலி | ருஉ௦ |
| இடித்துத்தடித்து | சருகூ | இந்நாள்வரையு | சஉ௦ |
| இடித்துத்தடித்துத்திசை | சகூச | இந்நிலதனக்கு | கருகூ |
| இடுகிடைமிடைந்த | சஉஅ | இப்பிழைபொறுத்துள | சருக |
| இடும்பையங்கடலுட் | க௦க | இப்பிவாலிடம் | உகூ |
| இடைப்பாலதுபெறின் | சகூஎ | இப்புறவரைத்தலை | சஉகூ |
| இடையினுதரவு | ககூஎ | இப்பெருவருடங் | உருஅ |
| இட்டிடைநோவ | சஎரு | இமையாரியல்பிணை | சஅஉ |
| இட்டிடைவெஃகி | சசஅ | இமையார்க்கிறையவன் | சககூ |
| இட்டிமுதன்மகவிண | உகூச | இம்பர்முற்றினி | ருகஎ |
| இணங்கவினமல்லாரை | உசக | இம்மலரணியுங் | ருகூரு |
| இணங்குவதின்றி | ருகச | இம்மாதர்பின்னர்த் | சருரு |
| இதண்மிசையிவர்ந்து | ச௦அ | இம்மைப்பிறப்பிற் | கஎரு |
| இதயநாண்மல | உருகூ | இயக்கமிரண்டிழிந்த | உசஉ |
| இதுபொழுதென்று | ருருரு | இயக்கமோரிரண்டாய் | உஉக |
| இதுமுறைபிறழின் | உருஎ | இயங்குந்திறனுடைங் | சஉஉ |
| இத்தகுகாசி | ககூரு | இயல்புவேறுடைமை | கருஎ |
| இத்தகுதீவின் | உருகூ | இயவுளாகிய | ருஉஎ |
| இத்தகுபூசை | கஅகூ | இரணவல்லவு | ருகூஉ |
| இத்தகுவளஞ்சால் | கூகூ | இரணியத்தவரு | உருஎ |
| இத்தகையமாதரினி | ரு௦ | இரண்டறப்பண்டே | உருஉ |
| இத்தகையாவிண | உகூச | இரணடற்ருேளிர்சிவ | கசரு |
| இத்தகையோர்புறஞ்சூழ | உகூஉ | இரண்டாயிரவேள் | உஎரு |
| இத்தலந்தன்னிற் | கஅரு | இரண்டியக்கமுதலான | உருகூ |
| இத்தலப்படுதி | கருக | இரதமாதியூர்ந்து | உகரு |
| இத்திறத்தமர்விளந்த | ரு௦எ | இரதமாயிரத் | உகூகூ |
| இத்திறத்தினர்கண் | உஉகூ | இரதமென்றபெய | ரு௦கூ |
| இந்தவான்பிலத்தின் | உருச | இரந்தவவ்வர | ருஅரு |
| இந்திரச்சிலை | ருஉரு | இரந்தாருலகோரேழினு | கஉக |
| இந்திரஞாலம்விடுத் | ருஎரு | இரந்துபாங்கியைத் | ரு௦கூ |
| இந்திரதீர்த்த | ருகூகூ | இரந்துமாணுக்க | ககூக |
| இந்திரற்கரசு | க௦௦ | இரப்பதுங்கொடுப்பது | ருருக |
| இந்திரற்காக்கம் | கஅ | இரவவணிருந்து | உகூ௦ |
| இந்திரனுதிய | ககூஉ | இரவிசெங்கதிர | கூச |
| இந்திரனுமறுவிகந்த | ருருரு | இரவியைவெண்மதியை | உ௦உ |

| | | | |
|---|---|---|---|
| இரவினும்பலிக | ௧௯௧ | இலக்கர்வீரர்கை | ௫௪௮ |
| இரவேலாங்கணவன் | ௧௯ | இலக்கர்வேரினுதித்த | ௨௭௩ |
| இராயிரந்தண்டங் | ௨௫௨ | இலக்கவாளியெம் | ௩௭௫ |
| இரிதராவுடலின் | ௧௫௬ | இலக்கவீரருமமை | ௩௪௫ |
| இரித்தபடைமீண்டு | ௩௧௫ | இலக்கவீரர்கள் | ௨௯௪ |
| இரிந்தசேவனயுங் | ௩௪௭ | இலங்கைபுகுந்தரக்க | ௪௦௫ |
| இரிந்தனர்பூதர்வீர | ௩௩௩ | இலங்கைபுக்கனன் | ௨௯௭ |
| இருகையாற்கல | ௫௫௪ | இலிற்றுமழைமும்மத | ௫௬௮ |
| இருசுடர்க்கிரண | ௧௦௯ | இலைப்புரைகிளைத்து | ௫௬௯ |
| இருடபுங்கமக்கர | ௧௩௫ | இலைமுகப்பசும் | ௧௨௦ |
| இருட்பிழம்பினூடு | ௩௭௬ | இலையவேற்படை | ௫௨ |
| இருண்மலமிரித்தலி | ௧௬௮ | இல்லறத்திருப்பினுங் | ௩௯௮ |
| இருண்மலமோன்றே | ௧௫௭ | இல்லறந்துறந்தேற் | ௨௬௮ |
| இருதிறத்தேங்கள் | ௩௭௮ | இவனுறுகங்கை | ௧௬௪ |
| இருதுணிசெய்குவ | ௨௮௮ | இவரிழைக்குப்பை | ௫௩௪ |
| இருந்தபூமசடவ் | ௩௪௯ | இவர்மனமோருக்கு | ௫௦ |
| இருந்தவம்பல | ௬௯ | இவறிமாதர்குங்கும | ௧௭௯ |
| இருந்தவாறுபல | ௩௮௬ | இவற்றின்வழியீங்கேவரு | ௨௬ |
| இருந்தனமாயினின்னு | ௩௩௩ | இவ்வாய்மடந்தையஞ் | ௫௧௨ |
| இருந்தைக்குவை | ௧௫ | இவ்விரண்டிலக்க | ௨௬௦ |
| இருபத்தேழுமாதரை | ௫௮௦ | இழிகுலவண்ணத்தி | ௨௪௧ |
| இருபுடைக்கணி | ௧௧௯ | இழிக்கினருணிழி | ௨௪௨ |
| இருபெருமைந்தரும் | ௩௨௪ | இழிஞரேயாக | ௧௪௯ |
| இருமையுமளிக்கு | ௫௪ | இழிவுளாருளூ | ௨௮ |
| இரும்புசேர்ந்தெரி | ௧௫௦ | இழிவுற்றடுத்த | ௧௨௮ |
| இருவகைத்தாகு | ௨௨௬ | இழுக்கிப்படுசாங் | ௫௨௬ |
| இருவகைமாயை | ௧௩௮ | இழைத்துவிட்டரத்தை | ௫௪௩ |
| இருவகையியக்கங் | ௨௨௪ | இளகுகாழகிற் | ௧௨ |
| இருவராயிருந்து | ௧௨௭ | இளகுநெய்த்தோரு | ௨௨௩ |
| இருவருநேர்ந்தம | ௩௧௯ | இளமழையூடு | ௫௩௯ |
| இருவர்கன்னிய | ௫௫௧ | இளையவனேனுமுரு | ௪௨௭ |
| இருவான்சுடர்க்கு | ௨௧௮ | இளையனுந்தானிவண | ௫௧௦ |
| இருவியிடந்தோறும் | ௪௮௦ | இளையோனலனென் | ௨௭௬ |
| இருவினைச்சமத்தி | ௧௬௧ | இறகெழுந்துபறக்கு | ௨௭௭ |
| இருவினையென்ப | ௧௫௩ | இறப்பவுங்காமப் | ௨௦௯ |
| இருளத்துலப்பி | ௧௨௯ | இறப்போடுபிறப்பிற் | ௨௨௨ |
| இருளனுக்கியோளி | ௧௧௪ | இறுதியிற்கிளந்த | ௭௯ |
| இருள்கால்சீக்கு | ௧௭௨ | இறைகதித்த | ௩ |
| இருள்குடிகொண்ட | ௫௦௭ | இறைவனின்வியங்கோ | ௨௧௫ |
| இலக்கணமுழுதமை | ௧௧௦ | இறைவனமர்புரிதனக்கு | ௧௯௫ |
| இலக்கத்தொன்பதின் | ௫௧௭ | இறைவனல்கிய | ௩௬௪ |
| இலக்கம்வண்டரை | ௨௦௫ | இற்றதோநமதிரும் | ௩௪௭ |

இற்றிஃதேனு ௨௫௮
இற்றைநாள்காறு ௫௫௮
இற்றைநாள்பயன் ௫௬௪
இறுதநூலின ௧௪௯
இனியசெய்கையர் ௧௧௮
இனியன்னவனருளுக் ௧௨௨
இனையபல்வளத்தி ௧௪௭
இனையவாறுபல் ௩௪
இனையவெண்பூதி ௪௦௩
இன்பமேபயக்கும் ௧௫௪
இன்றுகோல்யாம்பிறங் ௫௩௧
இன்றுவையகமூன்றும் ௨௭௮
இன்னணஞ்சகச ௧௬௦
இன்னணஞ்சிறந்த ௮௨
இன்னணமணச்சிறப் ௫௩௫
இன்னணமாகப்பூச ௩௩௩
இன்னணமிறைவன் ௨௮௫
இன்னணம்படையெழுங் ௩௧௮
இன்னணம்பாச ௧௫௫
இன்னணம்பூசை ௧௯௨
இன்னணம்போர்க்கள ௩௨௦
இன்னணம்விழைந்திவரி ௩௮௧
இன்னதன்மையா ௯௩
இன்னதானவ ௨௭௭
இன்னதானையிரு ௩௦௫
இன்னதுன்கருத்தே ௨௯௪
இன்னபல்வரமு ௧௮௬
இன்னவனைவாளியினி ௩௧௫
இன்னவாய ௬௩
இன்னவாறமராடுழி ௩௬௨
இன்னவாறிய ௨௭௭
இன்னவாறுநாலா ௨௯௬
இன்னவாறெலா ௯௪
இன்னற்கடனடுவெட்படி ௧௨௧
இன்னனநிகழ்ந்தபின்றை ௨௭௫
இன்னுமறைபலகாலிங் ௪௬
இன்னும்பொருள்சென் ௫௦௪
இன்னுழைகதிரி ௨௫௨

ஈ

ஈங்கிவர்களோடுபுண ௫௦
ஈங்கிவள்சென்றது ௫௬௨
ஈங்குறுகங்கை ௧௬௪
ஈசனளித்தருண் ௩௭௩
ஈசனுதியர்க் ௧௯௯
ஈட்டலுமடுத்தலு ௫௩௨
ஈட்டியதவத்தாற் ௧௮௫
ஈட்டும்பூசனை ௧௮௯
ஈண்டியவான்குள ௪௬௩
ஈண்டிறும்போதி ௧௬௩
ஈண்டுநாற்பிறப்பி ௧௫௪
ஈண்டுப்போந்தவ ௧௧௯
ஈண்டுவிளங்க ௧௭௫
ஈண்டைவிளம்பு ௮௬
ஈதலாவது ௧௯௭
ஈதுபுரிவன்மைய ௩௬௦
ஈரம்வறலநுழை ௫௩௮
ஈரவான்மதி ௪

உ

உக்கதேவர்கண்முடி ௫௩௩
உச்சிப்பின்னேரு ௨௩௬
உடங்கியமெய்யுயி ௪௩௮
உடங்குசேட்பவர்கட் ௧௮௯
உடங்குசெல்பவர்க் ௧௪
உடங்குலகனைத்துங் ௫௭௬
உடங்குறைகமலப் ௧௯௬
உடம்பிடியன்ன ௪௫௪
உடம்புபிணியாலிறவு ௫௦
உடலினைக்கரணங் ௨௩௪
உடலினைவளர்த்த ௨௧௪
உடல்கருவிபுவனமுறு ௨௫
உடற்பயனளிக்கு ௭௬
உடன்முழுதும்பல ௨௪
உடுக்கவொள்ளிணர்த் ௧௨
உடுநிரந்தமண்டிலம் ௧௭௯
உடுவொளிக்குயர்ந்த ௨௮௪
உடைதல்கண்டார்த்த ௨௮௩
உட்கியோர்கதை ௨௮௧
உட்குநாணின்றி ௪௨௫
உட்டுகண்முழுதும் ௧௦௭
உணங்குகுலாவிய ௪௪௯
உணர்வெழாச்செயிர் ௧௫௦
உண்டபாற்சுவை ௯

உண்டுகோலில்லகோ ௫௨௦
உண்ணலாகுமிது ௨௧௬
உண்ணினுமழக்கோடா ௧௬௭
உதரபந்தனவோ ௧௨௭
உத்தாலகவா ௧௧௬
உமையாள்விழிமூட ௫௮௦
உம்பரினண்டப் ௨௬௧
உம்பரைத்தாங்க ௨௯௩
உயங்கப்பிணிக்கும் ௧௨௯
உயங்கிநீலனவன் ௩௦௮
உயங்கியவண்புல ௪௫௩
உயங்கும்பவமோரேழினு ௧௨௩
உயங்குவாரல ௧௩
உயிர்க்குயிராய்நின் ௫௭௭
உயிர்நீத்ததேகமு ௪௨௦
உயிர்படுகருவோர் ௨௨௨
உய்த்தசரம்புய ௩௬௬
உரகத்துநாடு ௫௧௨
உரத்திற்பல்சர ௩௪௮
உரத்தினப்பிய ௫௪௯
உரனிகழ்ஞாஞ ௭௭
உருகிநெஞ்சழி ௨௭௮
உருகிமாழையும் ௩௩௫
உருகியசிந்தையி ௫௧௮
உருகுவெஞ்சின ௮
உருட்டித்திசைதிசை ௫௦௪
உருத்தகவாக்கி ௪௫௧
உருத்திரர்வடிவங் ௩௩௨
உருத்திரன்சத்து ௨௩௫
உருத்திரன்மன்ற ௨௨௪
உருத்தெதிர்தான்வ ௫௬௫
உருப்பவிர்தீக்கதிர் ௪௮௫
உருமினமார்த்துத் ௫௧௩
உருமினார்த்துடன் ௧௨
உருவம்வேறன்றி ௧௦௨
உருவாயுருவப் ௬௩௪
உருவிளக்கூர்நுதற் ௪௨௨
உருவினெஞ்ஞான்று ௧௦௬
உருவெளியருகு ௫௫௫
உரைத்தநிறத்தன ௨௪௮
உரைத்தபன்னிரு ௬௧௮
உரைத்தமொழி ௬௩௦
உரைத்தவவரோ ௨௪௬
உரைத்தனவற ௩௯௯
உரையுணர்வாக்கை ௪௯௭
உலைமாக்கிடு ௯௭
உலகமேலாங்தொழிற் ௪௦௪
உலகம்யாங்கணு ௬௬
உலகருக்குரிய ௪௦௦
உலகிருளுருவத் ௨
உலகின்முச்சுடர் ௪௧௧
உலகுயிர்ப்பதி ௯௪
உலகுளார்தமை ௨௦௩
உலகுறுகாரிய ௩௬௮
உலைபடுமிளவெங் ௩௩௩
உலைவறுமறைகளு ௪௨௫
உவகைபொங்கினள் ௫௨௭
உழலைத்தொழுவானிரை ௧௬
உழாலிற்பொலிவண் ௫௨௭
உழிஞைப்படை ௨௭௯
உழுநர்களோருபா ௨௦
உளங்கொளாத ௩௭௬
உளரியமென்னரம் ௪௫௭
உளையவளாயுயிர் ௪௪௬
உளையவேற்றவ ௯௫
உள்ளடித்துணை ௨௧௭
உள்ளமடங்கிய ௪௦௬
உள்ளமணையக்கடிது ௪௨௯
உறுதிபயக்குங் ௧௫௧
உறுப்பிறுப்பவொரு ௨௧௭
உறுப்பினுக்கின ௨௩
உறுப்பினுட்சிறந்த ௫௫௬
உறும்பலாயிர ௧௧௭
உற்பலவோடைக ௫௨௧
உற்றமாயையோ ௧௫௦
உற்றூர்க்குரியவர் ௪௯௭


## ஊ


ஊடிமுன்னுமின் ௪௩
ஊட்டியதென்ன ௪௫௫
ஊர்கொண்டதுமதி ௪௯௮
ஊர்தங்கிச்சென்னேறி ௪௪௦
ஊர்திமஞ்ஞையான ௩௭௭
ஊர்விழவாயினு ௪௭௯

